|| श्रीः ||

|| श्रीमद्भगवद्गीता ||

# ஸ்ரீமத் பகவத்கீதை

ஸ்ரீ ஞானேசுவரர் இயற்றிய
பாவார்த்ததீபிகை என்னும் ஞானேச்வரியின்
தமிழ் அநுவாதத்துடன் கூடியது

**(முதல் பாகம்)**

★




தமிழாக்கம் :

**கோமதி ராஜாங்கம்,**
ஸ்ரீவைகுண்டம்.

★

அகிலபாரத சங்கர ஸேவா ஸமிதியால்
வெளியிடப்பட்டது.

ஸ்ரீ வாணீ விலாஸ் பிரஸ், ஸ்ரீரங்கம்.
1977

தபால் செலவு 0—50 விலை ரூ. 10—00

9-6

# பதிப்பாளர் முன்னுரை

ஸ்ரீ வியாஸ மகரிஷி மகாபாரதத்தை இயற்றினார். பாரத: பஞ்சமோ வேத: என்று நான்கு வேதங்களுக்குள்ள பெருமை இந்த மகாபாரதத்துக்கு உண்டு. இதில் இரண்டு ரத்தினங்களை வைத்திருக்கிறார். அவை விஷ்ணு ஸஹஸ்ர நாமம், ஸ்ரீ பகவத் கீதை. இந்த இரண்டு ரத்தினங்களின் சோபையை உலகுக்கு நன்கு எடுத்துக்காட்ட பல மகான்கள் வியாக்யானங்கள் எழுதி இருக்கிறார்கள். அவைகளுள் முக்கியமானது ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாதாளின் பாஷ்யங்களாகும்.

ஸ்ரீ பகவத்கீதைக்கு பலர் உரை எழுதியுள்ளார்கள். வெவ்வேறு கோணங்களிலிருந்து பார்க்கிறார்கள் இது நிஷ்காமிய கர்ம யோக சாஸ்திரம், பக்தி கிரந்தம், ஸகுணோபாஸன கிரந்தம், விசிஷ்டாத்வைதமத கிரந்தம், த்வைதமத கிரந்தம், அத்வைத மத ஸ்தாபன கிரந்தம், தர்ம சாஸ்திரம் என்று எல்லாம் எடுத்துக் கொண்டு வியாக்கியானங்கள் செய்திருக்கிறார்கள். ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாதாள் தன் வியாக்கியானத்தில் மேலே சொன்ன எல்லா அம்சங்களையும் ஆங்காங்கு எடுத்துக்காட்டி அந்த மதங்களை நிராகரித்து தன்னுடைய அத்வைத மதத்தை ஸ்தாபனம் செய்து சித்தாந்தம் செய்துள்ளார் இதனால் இது விசேஷமானது.

வியாக்யானம் எழுதுபவர்களின் ஆத்மீக வளர்ச்சியை ஒட்டியேதான் வியாக்கியானத்தின் போக்கு அமையும். படிப்பவர்களின் ஆத்மீக நிலையை அனுஸரித்தே உத்ஸாகம் ஏற்படும். நாம் அதில் குற்றம் சொல்வது தவறாகும்.

ஞானேஸ்வரி வியாக்யானம் மிகவும் சிறந்தது. இதை எழுதியவர் மகாராஷ்டிர தேசத்தியவர். ஞானேஸ்வரர் என்பவர் பிறக்கும்போதே ஞானியாகத் தோன்றினார். ஆனால் வாழ்க்கையில் வர்ணாசிரம தர்மங்களைத் தவறாமல் அனுஷ்டித்தவர். கர்மாவைச் செய்யாமல் இருக்கவில்லை அதை நிஷ்காமியமாய்ச் செய்து தன் ஞான நிலைக்கு அது பாதகமில்லாமல் ஸாதகமாகவே இருக்கும்படிச் செய்தவர். இவர் இவ்வுலகில் வாழ்ந்தது 21 வருஷங்கள் தான். ஆனால் அதற்குள் இவர் கிரந்தங்கள் பிரக்யாதி அடைந்துவிட்டன இவருடைய ஞானம் படிப்பினால் கிடைத்ததில்லை. பிறவியிலேயே பூர்ண ஞானியாகப் பிறந்திருக்கிறார். இது இவருடைய வியாக்கியானத்துக்குப் பெருமை தருகிறது.

ஸ்ரீ பகவத் கீதையின் உபதேச லக்ஷியத்தைக் காட்டி சர்ச்சை செய்பவர்களில் கேவலம் கர்மாவை மட்டும் எடுத்து வியவஹரிப்பவர்களை விட்டு விட்டு பக்தி மார்க்கம், ஞான மார்க்கம் இவைகளை ஸ்ரீ பகவத் கீதையில் காண்பவர்களை எடுத்துக்கொள்வோம். இவ்விரண்டு வழிகளும் மிகவும் நெருங்கி உள்ளவையாதலால் வாசகர்களுக்குப் பல சந்தேகங்கள் எழக் கூடும்.

ஸ்ரீ சங்கரபகவத்பாதர் இதை அவருடைய பாஷ்யங்களில் பல இடங்களில் விளக்கியுள்ளார்.

स्वस्वरूपानुसन्धानं भक्तिरित्यभिधीयते

விவேக சூடாமணி (சு. 32)

இங்கு பக்தி என்பது அவசியம்தான்; ஆனல் அதற்கு சரியான அர்த்தம் என்ன என்பதை குறித்துள்ளார். கர்மாவும், ஞானமும் சேர்ந்திருக்க முடியாது. அது ஒன்றுக்கொன்று முறணானவை. கர்மா சித்த சுத்தியைக்கொடுக்கும்.

चित्तस्य शुद्धये कर्म न तु वस्तूपलब्धये ।
वस्तुसिद्धिर्विचारेण न किञ्चित्कर्मकोटिभिः ॥ (சு. 33)

என்று விவேகசூடாமணியில் சொல்லி இருக்கிறார். ஆகவே பக்தி என்பது எந்த அளவுக்கு ஞானஸாதனமாகும என்பது சிந்திக்க வேண்டிய இடம் இங்குதான் ஞானேஸ்வரரின் வியாக்யானத்தின் பெருமை விளங்குகிறது.

இவருடைய வியாக்கியானம் அத்வைத பிரதிஷ்டாபனசாரி யாளான ஸ்ரீ ஆதிசங்கரரின் வியாக்கியானத்தைத் தழுவியது. பக்தி அவசியம என்பதையும் அது எவ்விதம் ஞான ஸாதன மாகும் என்பதையும் ஞானேசுவரியில் ஆங்காங்கு தெளிவாக விளககி இருக்கிறார் இதுமட்டுமல்ல யோக மார்க்கமும் எப்படி ஞான ஸாதனமாகும் என்பதை கீதை ஆறும் அத்தியாயத்தின் வியாக்யானத்தில் நன்கு தெரிவித்திருக்கிறார்

ஸ்ரீ பகவத்பாதர் 'ஷட்பதீ' என்ற ஸ்தோத்திரத்தில் பக்தியின் நிலைகளைக்காட்டியிருக்கிறார்

सत्यपि भेदापगमे नाथ तवाहं न मामकीनस्त्वम् ।
सामुद्रो हि तरंगः क्वचन समुद्रो न तारंगः ।। (சு. 3)

இந்த தாத்பர்யத்தையும் ஞானேஸ்வரர் விளக்கியுள்ளார்.

ஸகுணோபாசனை அவசியமில்லை என்று அத்வைதாச்சாரியாள் சொல்லவில்லை. கிருஷ்ண ஸ்வரூபத்தை தியானித்தல் அவசியம் என்ற ஸ்ரீ பாகவத தத்துவத்தை ஸ்ரீ பகவத்பாதாள் தன் கிரந்தங்களில் பல இடங்களில் குறித்திருக்கிறார். அதே ஸகுணபக்தி எப்படி நிர்குண பக்தியாக மாறும் என்றும் காட்டி இருக்கிறார். ஞானேஸ்வரியில் இவைகள் தெளிவாகச் சொல்லப்படுகிறது. ஆகவே இந்த வியாக்யானம் எல்லோருக்கும் உபயோகமானது. கடினமில்லாமல் கதை சொல்வதுபோல பல கடினமான சந்தேகங்களை விளக்கும் நோக்குடன் எழுதியிருக்கிறார். ஸ்ரீ பகவத்பாதாளின் கீதா வியாக்யானத்துடன் இந்த வியாக்யானத்தையும் சேர்த்துப் படித்தல் மிகுந்த பிரயோஜனத்தைக் கொடுக்கும்.

மூலம் மராட்டி பாஷையில் இருக்கிறது. இது மகாராஷ்டிர தேசத்தில் மிகுந்த பிரக்யாதி பெற்றுள்ளது. அதன் ஹிந்தி மொழிபெயர்ப்பை ஆதாரமாகக்கொண்டு ஸ்ரீமதி கோமதி ராஜாங்கம் அவர்கள் எளிய முறையில் கருத்துக்களை விளக்கி, தமிழில் மொழிபெயர்த்து உலகுக்குத் தந்திருக்கிறார்கள்.

மொழிபெயர்த்தவர் ஆங்கிலம், ஸம்ஸ்கிருதம், ஹிந்தி ஆகிய பாஷைகளில் நல்ல பாண்டித்யம் பெற்றவர். நல்ல வேதாந்த ஞானி. அவருடைய கட்டுரைகள் தொடர்ந்து ஸ்ரீ சங்கர கிருபா பத்திரிகையில் வெளிவந்துள்ளன. மூலத்தின் வேதாந்த முக்ய தாத்பர்யத்தை ஸ்வாத்மானுபவ ரூபமாக உணர்ந்தாலொழிய அதை வேறு பாஷையில் எழுத முடியாது. இந்த அபூர்வ சக்தி இந்த அம்மையாருக்கு இருக்கிறது. ஆகவே, ஞானியான ஞானேசுவரரின் ஞானேசுவரி என்ற ஞான கிரந்த வ்யாக்யானத்துக்கு ஞானியான ஓர் அனுபூதிமணி நமக்குக் கொடுத்துள்ள இந்தப் பேருதவிக்கு உலகத்தார் என்றும் கடமைப்பட்டவர்களாவார்கள். அன்னாருக்கு ஸமிதியின் சார்பில் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

ஸ்ரீ அகிலபாரத சங்கரஸேவா ஸமிதியின் மூலம் 'ஜகத்குரு கிரந்தமாலா' என்ற தொடர் பிரசுரத்தில் ஸ்ரீ ஆதிசங்கரரின் பிரகரணங்களையும் ஸ்தோத்திரங்களையும் பிரசுரித்து வருகிறோம். 40 புத்தகங்களில் இவை அடங்கும். 30 புத்தகங்கள் இதுவரை வெளிவந்துள்ளன. மீதியும் சீக்கிரம் வெளிவரும் இந்த தொடர் பிரசுரங்களைப் படிப்பவர்கள் ஸ்ரீ பகவத்கீதைக்கு நல்ல வியாக்யானத்தை சமிதியின் மூலம் பிரசுரிக்கலாமே என்று தெரிவித்தார்கள். கீதைக்கு ஆசாரிய பாஷ்யத்தின் தமிழ் அனுவாதத்தை திருக்கோவிலூர் ஸ்ரீ ஞானனந்த தபோவனத்தார் வெளியிட்டுள்ளார்கள். ஆகவே அதற்கு உபயோகமாக ஞானேஸ்வரி அமையும். ஸமிதியின் இப்பிரசுரத்தை எல்லோரும் வாங்கி வாசித்து பக்திப் பெருக்கால் ஞான நிலையை அடைந்து ஜன்ம லக்ஷ்யத்தைப் பெறுவதற்கு ஸ்ரீ பகவத் பாதாளைப் பிரார்த்திப்போமாக.

இந்தப் பிரசுரத்தை நல்ல முறையில் அச்சிட்டு உதவிய ஸ்ரீரங்கம் ஸ்ரீ வாணீ விலாஸ் அச்சகத்தாருக்கும் பிழை இல்லாமல் திருத்தி அமைத்துக்கொடுத்த வியாகரண வேதாந்த வித்வான் பிரும்மஸ்ரீ K. S. வெங்கடரும சாஸ்திரிகள் அவர்களுக்கும் எமது நன்றி.

இந்த பிரசுரத்தை அச்சடிக்க பல அன்பர்கள் திரவிய ஸகாயம் செய்துள்ளார்கள். அவர்கள் பிரகடனத்தை விரும்பாதவர்கள் இருந்தபோதிலும் அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றி உரித்தாகுக.

ஸமிதியின் எல்லாக் காரியங்களுக்கும் சிருங்கேரி ஸ்ரீ சாரதா பீடத்தை அலங்கரிக்கும் ஸ்ரீ மகாஸந்நிதானம் ஜகத்குரு ஸ்ரீமத் அபிநவவித்யாதீர்த்த மகாஸ்வாமிகளின் விசேஷ அனுக்ரகமே காரணமாகும். அம்மகானின் திவ்ய பாதாரவிந்தங்களில் இம்மலரை மிகுந்த பக்தி, சிரத்தை, வணக்கத்துடன் ஸாஷ்டாங்க பிரணமங்களுடன் சமர்ப்பிக்கிறோம்.

*K. V. சுப்பரத்னம்,*
*பொதுக்காரியதரிசி,*
*அகிலபாரத் சங்கர ஸேவா ஸமிதி.*

ஸ்ரீஸத்குரு சரணங்களே கதி

# இரண்டு வார்த்தைகள்

ஸ்ரீஞானேசுவரியைத்தமிழில் மொழி பெயர்க்கத்தொடங்கியது துணிச்சலான செய்கைதான். இத்தனை மகத்தான கிரந்தத்தை மொழிபெயர்க்க எனக்கு என்ன தகுதியிருக்கிறது? ஆனால் "தத் கீர்த்தி: ஆகத்ய ஆகத்ய" என்பதுபோல் அது என் காதுகளில் வந்து 'என்னைத் தமிழாக்கு, ஆக்கு' என்று இடைவிடாமல் கூறிக்கொண்டிருந்ததால் உலக நிந்தையைக் கண்டு மிரளாமல் இதை எழுதிவிடுவது என்று துணிந்துவிட்டேன். வாசக ஸஹோதர ஸஹோதரிகள் குற்றம் நீக்கிக் குணங்கொள்ள வேண்டுமென்று தாழ்மையுடன் இறைஞ்சுகிறேன். என் மனதில் ஆனந்தமும் சாந்தியும் ஏற்படுவதற்காகத்தான் இதை மொழி பெயர்த்தேன். இவை எல்லோருக்கும் ஏற்படவேண்டும் என்பது என் பேராசை. ஆகையால் இப்புத்தகம் கையில் கிடைத்தவர்கள் பெரியமனதுடன் ஒரு முறை படித்துப் பார்த்தார்களானால் அதுவே எனக்கு இதை மொழிபெயர்த்ததற்கு வெகுமதி.

கீதைக்குக் கணக்கற்ற உரைகள் வெளிவந்துள்ளன. ஹிந்தியில் "ஸ்ரீஜயதயால்ஜி கோயந்தகா" என்னும் மகான் "தத்வவிவேசனி" என்ற தமது உரையில் கண்ணபிரானிடம் ஆத்ம ஸமர்ப்பணம் செய்திருக்கிறார். நமது பகவத்பாதர் அவர்களோ அத்வைதாம்ருதவர்ஷிணியாகிய கீதையை வாய்க்கால்களாக வகுத்து அத்யாத்மப் பயிரைத் தழைக்கச் செய்து இருக்கிறார்கள். அரவிந்தமகான் தனது பிரசித்த உரையில அதிமானுஷ்யயோகமே கீதை என்று விஸ்தரித்திருக்கிறார். மகராஜ் லோகமான்ய பாலகங்காதரதிலகர் கர்மயோகமே கீதை என்று ஸிம்மகர்ஜனை செய்திருக்கிறார். தத்காலத்து சின்மயானந்தா கடல்மடை திறந்ததுபோல தனது ஆங்கில உரையில் ஒரு அத்வைதப் பூஞ்சோலையில நம்மைகொண்டு விட்டு உலாவ வைத்திருக்கிறார். ஸ்ரீ ராமகிருஷ்ண சிஷ்யர் ஸ்ரீ அண்ணா அவர்கள் 'ராமகிருஷ்ண தீபம' என்ற தனது கீதா கருத்துரையில ராமகிருஷ்ண தர்மத்துக்காகவே கீதை எழுதப்பட்டதுபோல அத்தனை நிர்தேசமாக எடுத்துக்காட்டியிருக்கிறார்கள். இவர்களுக்கு மத்தியில் 'ப்ராம்சுலப்யே பலே லோபாத உத்பாஹு: இவ வாமன:' என்றபடி நானும் ஏதோ எழுதத் துணிந்தது எனக்கே ஆச்சர்யமாக இருக்கிறது.

ரிஷிகேசத்து ஸ்ரீ சிவானந்த மகராஜ் கூறுவதுபோல கீதை ஒரு ஸித்தடிக் யோகமாக அமைந்துள்ளதுபோலும் அதில் இல்லாதது எது? யோகமா ஞானமா பக்தியா கர்மமா ஆக்ஞையா அறிவுரையா எதுதான் இல்லை? என்கிறார் அவர். எந்தக் கோணத்தில் பார்த்தாலும் அதுவாகவே காணப்படுகிறது அது. தத்வமஸி என்ற லக்ஷணமே இதுதானே. ஸ்ரீ ஞானேசுவரர் பக்தியையும் ஞானத்தையும் ஊடும்பாவுமாக கீதை என்ற நூலினால் உரைஎன்ற வஸ்திரத்தை நெய்திருக்கிறார். இது எனது தாழ்மையான அபிப்ராயம். இதைப்பற்றி மகானான ஹிந்தி கவி ஸ்ரீ துளஸீதாஸர் கூறும் சில மொழிகளைப் பின்பற்றி எனது கருத்தை எழுதிவிட்டுக் கட்டுரையை பிரும்மார்ப்பணம் பண்ணுகிறேன்.

கேள்வி என்னவென்றால் ஞானத்துக்கும் பக்திக்கும் என்ன வித்யாஸம் என்பதே. பதில் என்னவென்றால் இரண்டுக்கும் வித்யாசமில்லை என்பதுதான் இரண்டும் பவசாகரத்தைத் தாண்டவைக்கும் ஓடங்களே. எப்படியானால் என்ன? நமது ஸம்ஸாரத் துன்பம விலகவேண்டும். இதுதான் ஜன்மம் எடுத்த நமது எல்லோருடைய பிரார்த்தனைகளும். ஸம்ஸாரிகளாகிய நாம ஜனன மரணத்தினால் ஏற்படும் சரீர மன விகாரங்களை துக்கம என்று எண்ணுகிறோம். இவை விலகவேண்டும் என்று பலவிதங்களிலும் முயற்சிக்கிறோம். ஆத்யாத்மிகம், ஆதிதைவிகம், ஆதிபௌதிகம் என்னும மூன்றுவித துக்கங்களில் ஆத்யாத்மிக துக்க நிவிருத்தியைப்பற்றி வேதாந்தம கூறுகிறது. ஸாதக ஜீவர்களுடைய ஐந்து கிலேசங்களாகிய அவித்யை, அஹங்காரம, ராகம், துவேஷம், அபிநிவேசம், பற்றுதல் இவைகளை விலக்க வழி கூறுகிறது. இந்த துக்கங்களில் எல்லாம் பெரிய துக்கம் அவித்யையே. இதனால் நமமை நாம் ஸம்ஸாரி என்று எண்ணி அஹந்தை என்னும் பவஸாகரத்தின் அலைகளில் சிக்கிதவிக்கிறோம்.

எல்லாத்துன்பங்களுக்கும் வேரே இந்த அகந்தை. இதை எளிதில கண்டு பிடிக்கமுடியாது. இதுவே மனிதனை முன்னேறுவதற்கும் ஏவுகிறது. நீ இன்னும் பூரணமாகவில்லை. நீ பூர்ண புருஷனாவதற்கு முன்னால் இன்னும் முன்னேறவேண்டும் என்று ஊக்கிக்கொண்டே இருக்கிறது. இதிலேயே பூர்ண்த்வம், விசாரம், கற்பனை, அநுபூதி, லக்ஷ்யம் (குறிகோள்) எல்லாம் அடங்கி இருக்கின்றன. இந்த அபூர்ணத்தின் துக்கமே இலக்கிய

பாஷையில் நம்முடைய யதார்த்தவாதம். பவஸாகரத்திலிருந்து பூர்ணத்தை நோக்கி முன்னேறுவது நமது ஆதர்ச வாதம். இதுவே நமது மோக்ஷ ஸுகம் கைவல்ய பதவி. பகவத் ஸாக்ஷாத்காரம். அபூர்ணத்வம் என்பது நமது கேவலபிரமை. பூர்ணத்வமே நமக்கு முக்காலங்களிலும் உள்ள ஸத்யம் இது ஞானமார்கமாகும். நாம் நம் குறையான அபூர்ணம் என்பது உண்மையா பொய்யா என்ற சர்ச்சையில் இறங்காமல் அதைப் பூர்ணம் என்று நினைத்து அதைப் பூர்ணத்வத்தில் ஸமர்ப்பணம் செய்வதே பக்திமார்க்கம். இவ்விரண்டு வழிகளினாலும் நமது துன்பம் நீங்குகிறது. அதனால் இந்த இருமார்க்கங்களும் நமக்கு ஸமமே.

பக்தி ஹூம் ஞான ஹூம் குச் நஹிபேதா

உபய ஹூஹூபவஸம்பவகேதா

இதைத்தவிர மூன்றாவது மார்க்கமும் ஒன்று உள்ளது. அது கர்ம மார்க்கம். ஜீவனே ஒரு கர்மி. அவன் ஞானியானாலும், பக்தனானாலும் உயிருடன் இருக்கும்வரை ஏதாவதொரு கர்மம் செய்துகொண்டேயிருப்பான். இந்த மார்க்கத்தில் தனது குறையை பிரமை என்று எண்ணவேண்டிய அவசியமில்லை. அது பரம தர்மம். பரமார்த்தத்தின் ஒரு அம்சமே என்று நினைக்கலாம். கர்மம், யோகம் இரண்டும் முன்னேறுவதற்கு அஸ்திவாரமே. யமமும் ஏகாக்ரமும் ஒவ்வொரு அடியிலும் முன்னேறுவதற்கு அவசியமானவையே. கர்மத்தின் அவசியத்தை ஒப்புக்கொண்டு மூளையையும் இதயத்தையும் ஒன்றுபடுத்தி, புத்தியையும் பாவனையையும் ஒன்றாக இணைத்து ஸாதனா மார்க்கத்தை ஞான பக்தி மார்க்கமாகவே ஸாதகன் பார்க்கிறான். அப்பொழுது அவன் இரண்டையும் ஆராய்கிறான்.

ஒரு கலையில் நிபுணத்வம் அடைந்தவனுக்கு அந்தக் கலை எளிது. மற்றவருக்கு அது மலையைத் தாண்டுவதுபோல் கடினம். துளஸிதாசர் உவமை கூறுகிறார். கங்கை பிரவாகம் பெரிய பாறைகளையும் யானைகளையும் கூட உருட்டிக்கொண்டு வந்து விடுகிறது. ஆனால் சிறிய மீன் இருந்த இடத்திலேயே ஆனந்த மாகத் துள்ளிவிளையாடுகிறது. மணலில் சர்க்கரை கலந்திருந்தால் பெரிய பெரிய நிபுணர்களானாலும் பூதக்கண்ணாடியின் உதவியால் சிறிதே எடுக்கமுடியும். ஆனால் ஒரு சிறு எறும்பு மிக எளிதாக

மணலிலிருந்து சர்க்கரைக் கனுக்களை எடுத்துவிடுகிறது. ஞானிகளுடையவும், பக்தர்களுடையவும் நிலை இதுபோல்தான்.

நன்றாக நிர்மலமாக தீட்டப்பட்ட புத்திக்கூர்மையுள்ளவர்களும், பரவைராக்யமுள்ளவர்களும் ஞான மார்க்கத்தில் எளிதாகச் செல்லுகிறார்கள். ஆனால் சிரத்தை, கருணை, பிரேமை முதலிய மெல்லிய நுண்ணிய குணங்களுடையவர்கள் பக்தி மார்க்கத்தைத்தான் எளிதில் விரும்புகிறார்கள். அதனால் எந்த மார்க்கம் சிறந்தது என்று எப்படிக்கூறமுடியும்? அஹங்காரம், மமகாரம் ஒழிந்தவர்கள் இரண்டு மார்க்கங்களிலும் இருக்கிறார்கள் பூர்ண நிலையை அடைய இரண்டு மார்க்கங்களாலும் முடியும் பிறகு எவன் பெரியவன் எவன் சிறியவன்?

ராமகிருஷ்ணபரமஹம்ஸர் தனது இரு சிஷ்யர்களான விவேகானந்தர், ராமகிருஷ்ணானந்தர் இருவரிடமும் கேட்கிறார். 'மகாமாயை வலையை விரித்தால் என்ன செய்வீர்கள்' என்று. விவேகானந்தர் கூறுகிறார் வலையின் நுண்ணிய கண்ணிகளைவிட என்னைப் பெரிதாக்கிக்கொள்வேன். அவள் கண்ணிகளைப் பெரிதாக்க ஆக்க என்னை அதற்கும் பெரிதாக்கி இவ்வுலக முழுவதுமே நிறைந்துவிடுவேன் என்கிறார். மற்றவர் கூறுகிறார். மகாமாயையின் வலைக்கண்ணிகளைவிட என் உருவைச் சிறியதாக்கிக்கொண்டு அதிலிருந்து நழுவிவிடுவேன். அவள் இன்னும் சிறியதாக்குவாள். நான் அதற்கும் சிறியதாக ஆவேன். இவ்விதம் கண்ணிகள் சுருங்கச் சுருங்க என்னையே சுருக்கி இல்லாமலேயே ஆகிவிடுவேன் என்று இரண்டு விவேசனங்களும் ஞானம் பக்திக்கு எத்தனை அழகாகப் பொருந்துகிறது?

கீதையின் விளக்கம் என்ன? பிரும்மவித்தையை எளிதாக எடுத்துக்கூறுவது. யோக சாஸ்திரத்தை விரிவாகக்கூறுவது இதுதானே. முதல் வித்யாஸம் என்னவென்றால் ஞான விஞ்ஞான யோக வைராக்யங்கள் புருஷ ஜாதியைச் சேர்ந்தவைகள். பெண் இனத்தைச் சேர்ந்த மகாமாயை இவைகளை மயக்கத் தயங்கமாட்டாள். பக்தி பெண் இனம் அதை மற்றொரு பெண் இனமான மாயையால் மயக்கமுடியாது.

மற்றொரு வித்தியாசம் ஞானம் தீபம் போன்றது. ஒளிர்விடச் செய்வது விசேஷயத்னத்தைப் பொறுத்துள்ளது. பக்தி மணியைப் போன்றது. அதாவது ரத்ன வகைகளைச் சேர்ந்தது. அது

கிடைப்பது தெய்வ அருளைப்பொறுத்தது. தீபம் பிரகாசத்தை ஒரு குறிப்பிட்ட நேரம்வரைதான் கொடுக்கமுடியும். அதுவும் ஒளி ஒன்றைத்தான் அது கொடுக்கும். அந்த வெளிச்சத்தின் உதவியால் நம் பிராரப்த முடிச்சை நமது புத்தியின் உதவி கொண்டு நாமேதான் அவிழ்க்க பிரயாசைப்படவேண்டும். அப்பொழுதுதான் முடிச்சு அவிழ்ந்து சிக்கல் நேராகும். ரத்னம் எப்பொழுதும் ஒளிவிடக்கூடியது. அதுமாத்ரமல்ல ஆதி வியாதி துக்கம் தாரித்ர்யம் இவைகளைப் போக்கக்கூடியது. அதன் பிரகாசத்தில் புத்திக்கு வேலையே இல்லை. அதன் வெளிச்சம் எக்ஸ்ரேபோல் எல்லா முடிச்சுகளையும் நெகிழ்த்திவிடும். பவ ஸம்பந்தமான இருட்டு, அது இருக்குமட்டும் நம்மைப்பற்றவே பற்றாது. இந்த வித்யாசத்தை கோஸ்வாமி துளசிதாஸர் தனது ராமசரித்ரமானஸமென்னும் ஹிந்தி ராமாயணத்தில் மிகவும் அழகாகச் சித்தரிக்கிறார்.

விஞ்ஞானதீபம், பக்திமணி இவற்றின் வர்ணனை மிகச் சுவையுள்ளது. ஞான மார்க்கம் ஆத்மாவையே நம்பி முன்னேறுவது. பக்திமார்க்கம் பரமாத்மாவை நம்பி தன்னை ஆத்ம ஸமர்ப்பணம செய்வது ஆத்ம நம்பிக்கை உள்ளவன் ஞானதீபம் ஏற்றுவதற்கு முதலாவது தந்நம்பிக்கை என்னும் நேர்த்தியான நெய்யை சேகரித்து வைத்துக்கொள்ளவேண்டும். பிறகு முக்குணங்களான மூன்று திரியையும் ஒன்றாய் சுற்றி முறுக்கித் தீபத்தில் இடவேண்டும். ஸமத்வம் என்னும் நெருப்புக் குச்சியின் உதவியால் அத்தீபத்தை ஏற்றவேண்டும். அப்பொழுது ஸ்திர சித்தமென்னும் காற்றில்லாத இடத்தில் அந்த யோகாக்னி தீபம் ஒளிர்விடும். அதாவது முதலாவது ஸாத்விக குணமுள்ள சித்தம்வேண்டும். ஸமதை என்னும் ஸமதளமான இடம் வேண்டும். பிறகு துரியாவஸ்த்தை என்னும் விருத்தியில் ஞானத்தின் மென்மையான வழவழப்பு யோகமாகிய கிரியை இவைகளுடன் கூடவேண்டும். பிறகு ஸோஹமஸ்மி என்னும் அகண்ட விருத்தி ஒளிர்விடவேண்டும். அப்பொழுது புத்திக்கு இப்பிரகாசம் தெரியவரும். அதன் ஒளியில் பவபந்தனம் என்னும் சிக்கலான முடிச்சை அவிழ்க்கலாம். அந்த முடிச்சு லேசுப்பட்டதல்ல. அவிழ்ப்பது இருக்கட்டும். மோகமடைந்த ஜனங்களுக்கு அம்முடிச்சு கண்களுக்குத் தெரியாது.

விஞ்ஞான தீபத்தைக் கொளுத்திவைப்பது என்பது இடக்கை விளையாட்டல்ல. முதலாக ஸாத்விக குணம் தெய்வபலம்

பொருந்தியதாக அமையவேண்டும். அதனால் ஞானமார்க்கத்தின் வேரும் ஈசுவர கிருபையே என்று அறியவேண்டும். ஆனால் தன்னம்பிக்கை கொண்ட ஒருவன் தெய்வபலத்தில் நம்பிக்கை வைக்கமாட்டான். அதனால் அவன் அப்பிரயத்தினத்தில் பூர்ண வெற்றியடையமாட்டான். ஆனால் பாடுபட்டு ஏற்றி வைத்தானானாலும் மாயையென்னும் காற்றுத் தயாராக வீசி அணைத்துவிடும். துச்ச தேவதைகளாகிய எலிகள் எண்ணெயைக் குடிக்கத் திரியைக் கொண்டுபோகத் தயாராக இருக்கும். இந்திரியங்களாகிய ஜன்னல்கள் திறந்து மாயையாகிய காற்றை வா வா என்று அழைக்கும்.

ஞானமார்க்கத்தில் செல்வது வாள்முனையில் நடப்பது போன்றது மிக சிரமப்பட்டு முக்தி கிடைத்தாலும் பக்தியில்லாமல் அது நிலைத்துநிற்காது. ஏன் என்றால் மோக்ஷமென்பதே ஒரு பாவனை பாவனையே ஆனந்தத்தை அளிக்கிறது. அதனால் மோக்ஷத்தின் பாவனுபக்ஷம் ஆனந்தபக்ஷமானதும் இல்லை. சிந்தனையே ஆனந்தத்தைச் சுவை என்பதால் அது சிந்தனை பக்ஷமும் இல்லை. ஞானபக்ஷமும் இல்லை. அது அனுபவத்தி லிருந்து மெல்லமெல்லப் படியேறிவந்த அநுபூதியின் பக்ஷமாகும். எதுவரை பவசாகரம் இருக்கிறது என்ற அறிவோ, பவக்கடலைக் கடக்க வேண்டுமென்ற துடிப்போ உள்ளதோ அதுவரை துவைத பாவம் இருந்தேதீரும். துவைதபாவம் இருக்குமட்டும் ஸேவ்ய ஸேவக ஸாதனையில்லாமல் கிருதார்த்தனை முடியாது. இதுவே ஸித்தாந்ததத்வம். அதனால் வியவகாரம் உள்ளவரை ஞானியின் ஸோஹமஸ்மி பாவம் வீணேயாகும்.

ஞானமாகிய நெய்யும் எளிதாகக்கிடைக்குமா? முதலாவது ஸாத்விக சிரத்தையே தெய்வ கிருபையால் கிடைக்கவேண்டும். அதை சுப தர்மாசாரங்களினால் போஷிக்கவேண்டும். பக்திபாவத் துடன் அதை உருக்கவேண்டும் நிவிருத்திமார்க்கத்தால் அதை ஸ்திரப்படுத்தவேண்டும். மாடு காலை எறிந்தால் பின் கால்களை இணைக்கவேண்டும். பிறகு மனரூபமான ஆஸ்திக பாவத்துடன் சிரத்தை என்னும் பாத்திரத்தில் நம்பிக்கை என்னும் பாலைக் கறக்கவேண்டும். அப்படிக்கறந்தெடுத்த பாலின்பெயர் அஹிம்ஸா விருத்தி. அதை மைத்ரீ, கருணை முதிதை உபேக்ஷை என்னும் விறகுகளினால் காமனை என்னும் புகை இல்லாத அடுப்பில் காய்ச்சவேண்டும். ஸமத்வம் என்னும் மோரை அதில் பிரைகுத்த

வேண்டும். அது உறைந்ததும் ஸந்தோஷம் எனும் பானையி
விட்டு ஸத்விசாரம் என்னும் மத்தினல் ஸத்கார்யம் என்னும்
கயிற்றைச் சுற்றிக் கடையவேண்டும். தமமெனும் ஆதாரத்துடன்
அம்மத்தும் கயிறும் இணைக்கப்படவேண்டும். அப்பொழுது
நிர்மலமான வைராக்யம் என்னும் வெண்ணை தோன்றும்.
வைராக்யமென்ற வெண்ணையை விசாரமான நெருப்பிலிட்டுக்
காய்ச்சினல் ஞானமாகிய நெய் வரும். சுப கர்மங்களாகிய
ஆஹுதியினல் அறிவென்னும் அக்னிகுண்டத்தில் அதை
ஹோமம் செய்தால் யோகாக்னி ஜ்வலித்து மேலெழும் அது
மமதை எனும் அழுக்குகளை எரிக்கும். வைராக்யம ஞான
மாகிய நெய் ஆகாததுவரை அக்ஞான அகங்காரமாகிய குப்பை
கூளங்கள் சேர்ந்துதான் இருக்கும்.

ஸாமான்ய புத்தி முதலில் ஒரு சொல்லாத கதையை
சொல்லிற்று. அதை அறியவும் முடியாது சொல்லவும் முடியாது.
கதை இதுதான். ஜீவன் ஈசுவராம்சம். அது கிளி குரங்குகளைப்
போல் மாயை என்னும் கயிற்றினல் கட்டப்பட்டது. அதாவது
ஜடசேதனத்தின் மத்தியில் சிக்கல் நிறைந்த பிரமை என்னும்
முடிச்சு விழுந்துவிட்டது. பிறகு ஸாதனை என்னும் புத்தி
இம்முடிச்சுகளை அவிழ்க்கப் பெரும்பாடுபட்டது. அக்ஞான
மாகிய இருட்டில் ஞான விளக்கை ஏற்ற சிந்தனை எனும்
உபகரணங்களைத்தேட அரும்பாடுபட்டது. பிறகு விக்ஞான
புத்தி என்பது இவ்விளக்கைப் பொருத்தியது. அதுவும இரவும்
பகலும எரியவேண்டுமே என்ற கவலையில் தீபத்துக்கு உபகரணங்
களைச் சேர்த்தவண்ணம இருந்தன. இவ்வளவும் இருந்தும் அந்த
முடிச்சு அவிழவேண்டுமே என்ற ஸந்தேக நிலையே நிலைத்து
நின்றது. இந்த தத்வத்தையே கோஸ்வாமி ஞானதீபம் என்ற
உவமையின் மூலம் விளக்குகிருர்.

இப்பொழுது அவருடைய பக்தியைப்பற்றிச் சற்றுக்
கேட்போம். இதற்கு புத்தியின் அவசியம் தேவை இல்லை.
அறியாத கதையைக் கேட்கவும ஞானமாகிய நெய்யைச்
சேகரிக்கவும் விக்ஞானமாகிய விளக்கை ஏற்றவும் அவசியமில்லை.
ஸமதவமாகிய தீபம திரி குச்சி இவைகளைச் சேகரிக்கவேண்டிய
அவசியம் இல்லை. திருப்தியுடனும் பொறுமையுடனும் ஆனந்தத்
துடனும் இதை அனுபவிக்கவேண்டும் என்பதும் இல்லை.
உணவைப்போன்றது இது தமது முயற்சி சாப்பிடவேண்டியது
ஒன்றுதான். பிறகு ஜாடராக்கினியால் அதை ஜீரணமாக்கி

நமக்குப் புஷ்டியைக்கொடுப்பது ஜகந்நியந்தாவின் வேலை. நமது தமோகுணமான அவித்தையே நம் நாசத்துக்குக்காரணம். பவதுக்கத்துக்குத் தாய். அது நிர்மூலமாக நாசமடைகிறது. மோகரூபமான தரித்ரம் நமது பக்கத்தில்கூட தலைகாட்டாது. லோபம் என்னும் காற்று அதை அணுக்கவே அணுக்காது. மன விகாரங்களெல்லாம் ஓடிவிடும். கனவிலும் துக்கம் நம்மை அணுகாது.

இவ்வுலகில் இந்த பக்தி மணியை அடைவது ஸர்வஸுலபம். பவித்ர தர்மகிரந்தங்களில் இம்மணியை அடைய வழி கூறப் பட்டிருக்கிறது. பக்தியை வளர்க்க இவைகளை சிரவணம் செய்வது மனனம் பண்ணுவது நிதித்யாசிப்பது கீர்த்தனம் பஜனை இவைகளை ஸாதனமாகக் கொள்ளலாம். ஸாது மகாத்மாக்கள் இம் மகா களஞ்சியத்தின் காவலாளிகள் நாம் செய்யவேண்டியது என்னவென்றால் நம் ஞானம் வைராக்யம் எனும் இரு கைகளால் ஸுமதி எனும் குத்துவாளால் தோண்டி எடுக்கவேண்டும். எல்லா ஸுகத்துக்கும் ஸுகமான இந்த பக்திமணி நமக்கு அவசியம் கிட்டும்.

பக்திக்கு முதல் ஒப்பந்தம் சரணாகதி, இதற்குக்கூட துளஸி தாஸர் ஞான வைராக்யக்கண்கள் வேண்டும எனகிறார். இதற் கெல்லாம முடிவு இறைவன் திருவருள் வேண்டும், பிறகு ஸாதுக்கள் கிருபைவேண்டும். பக்தி கிருபாஸாத்யமேயொழிய கிரியாஸாத்யம இல்லை. பிரபு கிருபை எப்பொழுது வரும்? இதற்கு உறுதி கூறமுடியாது. ஸாது கிருபை அப்படி அலல முயற்சித தால எளிதல் கிடைக்கும. அதனால ஸத்ஸங்கமே பக்தி எளிதில கிடைக்கும் மார்க்கம் மர்மம் தெரிநத ஸாதுக்களுடைய ஸங்கத்தை அடைய பிரயதனம் செய்யவேண்டும். நம ஞான வைராக்யக்கண்கள் தெளிவடைந்து பக்தி கிடைக்கும் மார்க் கத்தை நமக்கு எளிதாகக்காட்டும. நம் ஸுமதி எனும் குத்துவாள் கூருக இருக்கவேண்டும். சுருங்கக கூறுமிடதது நாம பிரபு கிருபைக்குப் பாத்திரமாகவேண்டும். அப்பொழுது நமக்கு பக்தி எனனும சிந்தாமணி கிட்டும்.

எவர் பிரயத்னப்படுகிறாரோ அவரே ஸாதுசிரோமணி. பிரயதனம் ஞானமார்க்கததையடையவும செய்யவேண்டியது தான். பக்திமார்க்கத்துக்கும் வேண்டியதுதான். சிரத்தை விசுவாசம் இரண்டுக்கும் வேண்டும். ஞானமார்க்கத்திலும்

பாவனை அவசியமே. பக்திமார்க்கத்திலும் விவேகம் வைராக்யம் வேண்டும். ஆனால் ஞானமார்க்கத்தில் அஹம் எனும் பிரமை ஒழிவதுவரை அதில் முன்னேறுவது கஷ்டமே. பிரம்மத்தை அடையும்வரை அஹம் இருந்துகொண்டுதான் இருக்கும். ஆனால் பக்திமார்க்கத்தில் அஹம் இறைவனுடைய அஹமாகிவிடுகிறது. அதனால் அது இடையூறு செய்யாது இதுவே சிறிது வித்யாசம். இதுவே நிறைவு குறைவுகளை எடுத்துக்காட்டுகிறது. விக்ஞான தீபமும் பக்திமணியும் இதையே நமக்கு எடுத்துக்காட்டுகின்றன.

ஸ்ரீ ஞானதேவர் இதையே தனது கீதார்த்த தீபிகையில் வர்ணித்திருக்கிறார். மேற்கூறிய உதாரணங்களினால் கோஸ்வாமி பக்தி ஞானத்தைவிட எளிதான மார்க்கம் என்று கூறினார். ஆனால் ஞானதேவர் எது பக்தி எது ஞானம் என்றே புரிந்து கொள்ள முடியாதபடி இரண்டையும் ரஸமாகவும் சரளமாகவும் சொல்லுகிறார். சுருங்கக்கூறினால் அவருடைய கீதை உரை பக்தி ஞானம் என்னும் நூல்களினால் ஊடும்பாவுமாக நெய்த ஒரு வஸ்திரமேயாகும். எளிய நமது வாழ்க்கையுடன் பொருந்தி நமக்கு உதவும் பொருள்களைக்கொண்டு உவமையணியை அவர் பின்னியிருப்பது ஆச்சர்யப்படக்கூடிய விஷயம். நான் பெற்ற இன்பம் வையம் பெறுக என்று நான் வாசக சகோதர சகோதரி களுடன் இந்தப்பேரின்பத்தைக் கலந்து உண்கிறேன். குற்றம் நீக்கி குணம் கொள்ளுமாறு பிரார்த்திக்கிறேன். பொதுவாகக் கூறுமிடத்து இதில் பாஷையும் நடையுமதான் என்னுடையதே தவிர விஷயங்களும் ஸாரங்களும் ஸாது மகாத்மாக்களுடையதே. அவர்களுடைய கிருபை இந்த தீனைக்குக்கிடைக்க வேண்டு மென்று ஆசீர்வதியுங்கள்.

## ‘ஞானேசுவரர்’

ஸ்ரீ ஞானேசுவரருடைய பாவார்த்ததீபிகை என்னும் கீதா வியாக்யானம் புராதனமான மராட்டி பாஷையிலுள்ளது. இதை அவர்கள் மிகவும உன்னதமான கிரந்தம் என்று கொண்டாடு கிறார்கள். இலக்கிய திருஷ்டியிலும் ஸித்தாந்த திருஷ்ட்டியிலும் இது உவமை கூறவொண்ணாதது. ஒவ்வொரு சுலோகத்துக்கும பாவார்த்தத்துடன் அத்வைதம் பக்தி இரண்டையும் இணைத்து வ்யாக்யானம செய்திருக்கிறார். இதுவே இந்த கிரந்தத்தின் விசேஷத்தன்மை. இதில் சங்கர மதானுஸார அத்வைதத்தை ஒட்டி பக்தியையும் ரஸமாகவும் பிரேமையுடனும் ஹ்ருதயத்தைத்

தொடும்படி வர்ணித்திருக்கிறார். ஸம்ஸ்கிருதத்தில் ஸ்ரீமத் விஷ்ணு பாகவதத்தைப்போலவும், ஹிந்தியில் லலிதமான துளசி ராமாயணத்தைப் போலவும் இது மனோஹரமானது. இவரை மகாராஷ்ட்ர வால்மீகி என்று கூறலாம். இதை இவர் தமது சிறு வயதிலேயே எழுதியதாகக் கூறப்படுகிறது. இதிலிருந்தே அவரது பாஷஞானமும் பலபாஷை பரிசயமும், உலகானுபவமும் கற்பனையின் விரிவும் நமக்குப் புலப்படுகிறது.

ஞானேசுவரருடைய பிதா விட்டல்பந்த் மிகவும் வைராக்ய சீலர். அவர் அடிக்கடி தமது பத்நியிடம் சந்யாசம் வாங்கிக் கொள்ள அனுமதி கேட்பார். ஆனால் அச்சமயம் அவருக்குக் குழந்தைகள் இல்லாதபடியால் அந்த அம்மையார் அவருக்கு ஸந்யாசத்துக்கு அனுமதி கொடுக்கவில்லை. ஒரு சமயம் அவர் ' நான் காசிக்குப் போய் கங்கா ஸ்னானம் செய்து வருகிறேன் ' என்று கூறினார். மனைவி 'போங்கள்' என்று கூறியதை ஸந்யாசத்துக்கு அனுமதி கொடுத்ததாக நினைத்துக் கொண்டு விட்டார். விட்டல் பந்த் காசிக்குச் சென்றார். அங்கு ராமானந்த ஸ்வாமி(கபீரின் குரு)யிடம் உபதேசம் பெற்று அவருடைய சிஷ்யரானார் ராமானந்த ஸ்வாமி காசியில் பிரசித்தமானவர்.

ஒருசமயம் ராமானந்த ஸ்வாமிகள் ராமேஸ்வர யாத்திரைக்காக வரும்வழியில் ஆலந்தி என்னும் மகாராஷ்டிர சிற்றூரில் முகாம் இட்டார். அங்கு மற்ற ஸ்திரீகளுடன் விட்டல்பந்தின் மனைவியும் சென்று அவரை நமஸ்கரித்தாள். ஸ்வாமிகள் ' புத்திரர்கள் பிறப்பார்கள் ' என்று ஆசீர்வதித்தார். இதைக்கேட்டு அவள் சிரித்தாள், பிறகு தன் கதையைக் கூறினாள். அவள் சொல்வதிலிருந்து விட்டல்பந்த்தான் அவளுடைய கணவன் என அவர் ஊகிததுக்கொண்டார். அவளை அழைத்துக்கொண்டு காசிக்குப் போய் விட்டல்பந்தைக் கூப்பிட்டு மனைவியிருக்கும்போது புத்ரனும் இல்லாமல் மனைவியிடம் சம்மதியும் பெறுமல் சந்யாஸம் வாங்கிக் கொள்வது உசிதம இல்லை. அதனால் கிருஹஸ்தாச்ரமத்தை ஏற்றுக்கொள் ' என்று வற்புறுத்தினார். குருவின் ஆக்ஞைக்குக் கீழ்ப்படிநது விட்டல்பந்தும் கிருஹஸ்தாச்ரமததைை மேற் கொண்டார். அவருக்கு நான்கு குழந்தைகள் பிறந்தன. முதல் புதல்வன் நிவிருத்திநாதன். இரண்டாவது புதல்வன் ஞானேஸ்வரன். மூன்றுவது புதல்வர் ஸோபானதேவர். நான்காவதாக முக்தாபாயி என்னும் பெண் குழந்தை. இக் குழந்தைகள் பால்யத்திலிருந்தே ஞானயோக பக்திக்கு இருப்பிடமாக விளங்கினார்கள்.

ஒரு சமயம் நிவிருத்திநாதன் எனும் மூத்தபுதல்வர் அஞ்சனி பர்வதத்தில் சுற்றிக் கொண்டிருக்கும்போது வழிதவறிப் போகவே ஒரு குஹையை அடைந்தார். அக்குகையில் கைனிநாதர் தவம் செய்து கொண்டிருந்தார். நிவிருத்திநாதர் அவருடைய பாதங்களில் விழுந்தார் கைனிநாதரும் இப்பாலகனைப் பார்த்து ஸந்தோஷமடைந்தார். அத்துடன் அவன் பிரும்மோபதேசத் துக்கு அதிகாரி என்று கண்டுகொண்டு தீக்ஷையை அளித்தார். நிவிருத்திநாதர் தனக்குக் கிடைத்த உபதேசத்தை ஞானேஸ் வரர் ஸோபானதேவர் முக்தாபாய் மூவருக்கும் அளித்து அவர் களையும் கிருதார்த்தர்களாகச் செய்தார்.

விட்டல் பந்த் ஸந்யாசியாக இருந்து பிறகு கிருகஸ்தராகி இக்குழந்தைகள் பிறந்துள்ளபடியால் இது சாஸ்திர விதிக்குப் புறம்பானது என்று கூறி இந்தக் குழந்தைகளுக்கு உபநயனம் செய்வதற்கு பிராம்மணர்கள் ஆக்ஷேபித்தனர். விட்டல்பந்த் இதற்குத் தான் பிராயச்சித்தம் செய்துகொள்வதாகக் கூறினார். ஆனால் பிராம்மணர்கள் இந்த தோஷத்துக்குப் பிராயச்சித்தமே கிடையாது என்றும் தேகத்தை விடுவதுதான் பிராயச்சித்தம் என்றும் கூறினார்கள். இதைக்கேட்ட பந்த் பிரயாகை சென்று மனைவியுடன் திரிவேணியில் தேகத்தை விட்டார். சந்யாசியாகிப் பிறகு குருவின் ஆக்ஞையால் கிருஹஸ்தாச்ரமத்தை எப்படி ஏற்றுக்கொண்டாரோ அப்படியே பிராம்மணோத்தமர்களுடைய ஆக்ஞையைத் தன் சிரமேற்கொண்டு தன் உயிரையும் விட்டார். அப்பொழுது நிவிருத்திநாதருக்குப் பத்து வயது இருக்கும்.

தகப்பனுடன் பிரயாகை சென்ற குழந்தைகள் தன்னந் தனியாக ஊர் திரும்பினார்கள். அவர்களுடைய சுற்றத்தார்கள் அவர்களை வீட்டில் நுழையக்கூடாது என்று கூறிவிட்டார்கள். அதனால் அவர்களுக்குப் பிக்ஷைஎடுத்து வயிறு வளர்க்க வேண்டி வந்தது. நிவிருத்திநாதர் சிறுவயதிலிருந்தே வீதராகியாகையால் பூணூல் போட்டுக் கொள்வதைப் பற்றி அத்துணை உத்ஸாகம் கொள்ளவில்லை. அவர் விரக்தர் பிரும்மஸ்வரூபி ஆனால் ஞானேஸ்வரர் வர்ணாசிரம தர்மங்களை அநுஷ்டிக்கவேண்டுமென் பதில் அதிதீவிரமாக இருந்தார். பிராம்மணர்களுக்கு உபநயனம் அவசியமானது அதனால் சாஸ்த்திரப்படி உபநயனம் செய்து கொள்ளத்தான்வேண்டும் என்றார். ஆனால் பிராம்மணர்கள் ஸந்யாசியின் பிள்ளைகளுக்கு உபநயனத்தை சாஸ்திரம் விதிக்க வில்லையே என்று கூறிவிட்டனர். அப்பொழுது ஞானேஸ்வரர்

யோகசக்தியால் அநேக ஸித்திகளைச் செய்து காண்பித்தார். அந்தணர்கள் எங்கும் காணாத இந்த ஸாமர்த்யத்தைப் பார்த்து விட்டு இந்த நான்கு குழந்தைகளும் அவதார புருஷர்கள் இவர்களுக்குப் பிராயச்சித்தம் தேவை இல்லை. என்று தீர்மானித்து உபநயனம் நடத்திவைத்தார்கள் ஞானேஸ்வரரின் யோகஸித்திகளில் எருமை வேதம் சொன்னதும், சிராத்தத்துக்கு பித்ருக்கள் நேரில் வந்து போஜனம் செய்ததும் மிகவும் பிரஸித்தமானது.

அதன் பிறகு நான்கு குழந்தைகளும் வேதாந்த சர்ச்சை செய்வதிலும் பஜனை, புராணம் முதலிய கர்மாக்களில் ஈடுபடுவதுமாக இருந்தார்கள் பாகவதம், கீதை, யோகவாஸிஷ்டம் இவைகளை பிரசாரம் செய்தார்கள். சுருங்கச்சொன்னால் பரமார்த்த தத்வஞானமடைவதற்கு உலகிற்கு ஒரு வழிகாட்டியாக விளங்கினார்கள். அச்சமயம் அவர் எழுதிய கீதாபாஷ்யமே ஞானேசுவரி என்று பிரசித்தமாக விளங்கும் பாவார்த்ததீபிகை. இதை எழுதும்போது அவருக்கு வயது பதினெட்டு என்று கூறப்படுகிறது. அவருடைய யோக ஸித்திகளை விட்டுத்தள்ளுங்கள். இந்த ஒரு விஷயமே போதுமே. இந்த வயதில் எத்துணை புத்திசாலியாக இருந்தாலும் ஸாதாரண விஷயத்தையே சிந்தித்து சரியான தீர்மானம் கூறமுடியாது. இந்நிலையில் அத்யாத்ம விஷயம் பற்றி ஒரு விவேசன புஸ்தகம் எழுதுவதென்றால் அதுவும் 600 வருஷங்களுக்குப் பிறகு இப்பொழுதும் சிரோபூஷணமாக விளங்குகிறதென்றால் இதைவிட வேறு என்ன ஸித்தியிருக்கமுடியும்?

ஞானேஸ்வரிக்கு ஸமமாகவோ, உயர்ந்ததாகவோ உள்ள வேறொரு இலக்கியம், மேதா விலாஸமுள்ள ஆத்மாநுபவ ஒளியினால் பிரகாசிப்பதும் பிரேமையும் பக்திரஸமும் நிறைந்தது கிடைப்பது கடினம் என்று கூறுகிறார்கள். காவ்ய திருஷ்டியிலும் பாஷை நடையிலும் ஞானேஸ்வரிக்கு ஸமமான கிரந்தங்கள் சிலவாவது இருக்குமோவென்பது ஸந்தேகம் தான் ஞானேஸ்வரிக்குப்பிறகு அவர் அமிருதாநுபவம் எனும் நூலை எழுதினார். அதில் அத்யாத்ம சாஸ்த்ரத்தைப்பற்றி அவருடைய சொந்த அபிப்ராயம் நிரம்பி இருக்கிறது. இது மிகவும் உயர்ந்த நூலாகக் கருதப்படுகிறது. இதைத் தவிர இன்னும் அநேக நூல்களும் அநேக பதங்களும் அபங்கங்களும் இயற்றி இருக்கிறார். அவைகளும் அலௌகிக ஞானத்தாலும் அலௌகிக ஸாமர்த்யத்தாலும்

ஆச்சர்யமான பக்தியினுலும் அவரை மிஞ்சியவர் ஒருவரும் இல்லை என்பதைக் காண்பிக்கின்றன.

இதை எழுதியபிறகு அவர் தீர்த்தயாத்திரைக்குக் கிளம்பிய தாகக் கூறப்படுகிறது. ஒவ்வொரு இடத்திலும் அவர் காட்டிய ஸித்திகள் அளவுக்கடங்காதது. இவர் காசிக்குச் சென்றசமயம் முக்தலாசார்யார் என்ற மகான் ஒரு பெரிய யாகம் செய்து கொண்டிருந்தார். அநேக பிராமணோத்தமர்கள் அங்கு கூடியிருந் தார்கள். அப்பொழுது யாகத்தில் அக்ரபூஜை யாருக்களிப்பது என்பது பற்றி விவாதம் நடந்துகொண்டிருந்தது. கடைசியில் முக்தலாசார்யார் ஒரு யானையின் துதிக்கையில் ஒரு மலர் மாலையைக்கொடுத்து யானை யார்கழுத்தில் அதைப்போடுகிறதோ அவரே அக்ரபூஜைக்குரியவர் என்று தீர்மானித்தார். யானை பிராம்மணக் கூட்டத்திலிருக்கும் சிறுவரான ஞானேஸ்வரருடைய கழுத்தில் மாலையைப்போட்டது. ஞானேஸ்வரருக்கு அக்ரபூஜை நடந்தது அந்த யாகத்தில் பகவான் விசுவேசுவரர் பிரத்யக்ஷமாகி யக்ஞஹவிஸை அவர் தன் கையில் வாங்கிக்கொண்டார்.

அதன்பின் ஞானேஸ்வரர் உத்தரதேசத்திலுள்ள எல்லா தீர்த்தங்களையும் ஸேவித்துக்கொண்டு துவாரகை வழியாக மார்வாருக்கு வந்தார். அங்கிருந்து பண்டரிபுரம் வந்துசேர்ந் தார். இந்த யாத்திரையிலும் ஞானேஸ்வரர் காட்டிய ஸித்தி களும் ஞானோபதேசங்களும் கணக்கிலடங்காது. விட்டலநாதரை தரிசித்துக்கொண்டு நால்வரும் ஆலந்தி வந்து சேர்ந்தார்கள். கடைசிக் காலம்வரை அங்கேயே தங்கினுர்கள்.

ஒரு சமயம் சாரங்கதேவர் என்ற ஸித்தர் புலியின் மேல் ஏறி வேகமாக வந்துகொண்டிருந்தார். அவருடைய கர்வத்தை அடக்கவேண்டுமென்று ஞானதேவர் சகோதரர்களுடன் ஒரு குட்டிச் சுவற்றில் உட்கார்ந்துகொண்டு அதை ஏவினுர். சாரங்க தேவர் இதைக்கண்டு வெட்கமடைந்தார்.

ஞானேஸ்வரர் சமாதியடையும்போது அவருக்கு வயது இருபத்தி ஒன்று அவர் உயிருடனேயே ஜீவ சமாதிக்குழியில் ஆழ்ந்தார் இந்திராயணி நதிக்கரையில் அவர் உத்தரவின்பேரில் ஒரு குழி வெட்டப்பட்டது. கார்த்திகை ஏகாதசியன்று எல்லா மகாத்மாக்களுமாக பஜனை செய்தார்கள். துவாதசியன்று பாரணை செய்தார்கள். திரயோதசியன்று ஞானேஸ்வரர் துளஸி இதழ்களி

ளுலும் வில்வபத்ரங்களினுலும் ஒரு ஆசனம் தயார் செய்தார். அதில் அமர்ந்து ஸமாதி ஆவதற்க்குத் தயாரானுர். விட்டல பாண்டுரங்கன் நேரில் வந்து தர்சனம் கொடுத்து கழுத்தில் மலர்மாலையை அணிவித்தார். ஞானேஸ்வரர் அவரை வணங்கினுர் மற்ற மகாத்மாக்களும் அவரை வணங்கினுர்கள் ஞானேஸ்வரர் ஸமாதிஸ்தானத்தை வணங்கிவிட்டு அதனுள் சென்று அமர்ந்தார். விட்டலநாதரும் நிவிருத்திதேவரும் கைகொடுத்து அவரை ஆஸனத்தில் இருத்தினுர்கள். அவர் கண்களை மூடித் தன் அவதார கார்யத்தை முடித்தார் நித்ய சமாதியில் ஆழ்ந்தார் அவர் மகிமை உலகில் ஒலிக்கிறது. உலகை ஸத்ய மார்க்கத்தில் திருப்பப் பாடுபட்ட இம் மகானுடைய நாமத்தை பிராதஸ்மரணம் செய்வோமாக.

ஞானேசுவரி நமக்கு அளித்த உபகாரம் கொஞ்சநஞ்சமல்ல இதில் உத்தமமான விவகார நீதி, தர்மம், ஞானம் இவை நிரம்பி இருக்கின்றன. இதன் நடையும் பாஷையும் இணைபிரியாத் தோழிகள் இதைப் படித்துவிட்டு அத்யாத்ம விசாரம் செய்யும் மாணவன் எத்துணை ஸுகத்தை அடைகிருன், இதில் உள்ள அத்யாத்ம தத்வங்களால் ஒரு முமுக்ஷு எவ்வித பலனை அடைகிருன் என்பது அந்நிலையில் உள்ளவர்களுக்கே தெரியும் உபமான உபமேயங்கள் அலங்காரங்கள் பழமொழிகள் இவைகளை பிரேமி பாடகர்கள் நாக்குச் சுவைத்து ரஸிப்பார்கள். அவர்கள் இதயம் ஆனந்தத்தால் நிறம்பிவழியும்.

இந்த கிரந்தத்தில் எந்த அத்யாயத்தில் எதை வர்ணித்திருக்கிறது என்பதை அநேக இடங்களில் விளங்கவைத்திருக்கிருர். கீதை மூன்று காண்டங்களுடன் கூடிய வேதம் என்று அவர் கூறுகிருர். முதல் அத்யாயத்தில் அர்ஜுனனின் துக்கம் இரண்டாவதில் பிரகிருதி புருஷவர்ணனை. மூன்ருவது அத்யாயத்தில் கர்மகாண்ட நிருபணம் நான்கிலிருந்து பன்னிரெண்டு வரை தேவதாகாண்டம். அதிலிருந்து பதினைந்தாம் அத்யாயம் கடைசிவரை ஞான காண்ட வர்ணனம். இந்த ஸம்யக் ஞானத்தை திடப்படுத்தும் பொருட்டு பதினுருவது அத்யாயத்தில் தேவாஸுர ஸம்பத்து விஸ்தரிக்கப்பட்டிருக்கிறது. இதையொட்டிய விஷயமாக பதினேழாவதில் மூன்றுவித சிரத்தைகளைப் பற்றி கூறப்பட்டிருக்கிறது. பதினெட்டாவது அத்யாயம் உபஸம்ஹாரத்துடன் முடிகின்றது.

ஞானேஸ்வரியிலிருந்து நாம் புரிந்துகொள்வது என்ன வென்றால் ஞானேசுவரர் இந்த கிரந்தத்தை சங்கரபாஷ்யத்தை அநுசரித்தே எழுதியிருக்கிறார் என்பதாகும். ஆனால் அத்வைத தத்வஞானம் ஏற்படுவதற்கு வழி பக்தி என்பதைத் தீர்மான மாகக் காட்டியிருப்பதாகத் தெரிகிறது. இதன் விசேஷத்தன்மை இதுவேயாகும். பதினெட்டாவது அத்யாயத்தில் இதை ஸ்பஷ்ட மாகக் கூறுகிறார். அதாவது சந்தனத்தில் ஸுகந்தம் இருப்பது போலவும், சந்திரனில் நிலவு இருப்பதுபோலவும் அத்வைத ஞானத்துடன் பக்தி இணைந்திருக்கிறது. 7-வது அத்யாயம் 16, 17-வது சுலோகங்களில் நான்கு விதமான பக்தர்களில் ஞானியே எனக்கு அதிக ப்ரியமானவன் என்று கூறி இருக்கிறார். ஞானி தனது சரீரத்தாலும் கர்மத்தாலும் பக்தியை வெளிப்படையாகக் காண்பித்துக்கொள்கிறான். ஆனால் ஆத்மானுபவத்தால் அவன் தானே பிரும்ம ஸ்வரூபமென்று உணருகிறான். இங்கு ஒருகேள்வி, ஞானத்தினால்தான் மோக்ஷம் ஸித்திக்கும் என்றால் இங்கு பக்திக்கு என்ன பிரயோஜனம். ஆனால் சுருதி ஸித்தாந்தமாக என்ன கூறுகிறதென்றால் பக்தியின்றி அகண்ட பரமானந்தம் ஏற்படாது.

यस्य देवे परा भक्तिः यथा देवे तथा गुरौ ।
तस्यैतेकथिता हि अर्थाः प्रकाशन्ते महात्मनः ॥

ஞானத்தினால் ஸச்சிதானந்த ஸ்வரூபத்தின் ஸத்து சித்தத் தில் வெளிப்படுகிறது. ஆனால் அதனால் ஆனந்தம் ஏற்பட வேண்டுமானால் அதற்கு பக்தி அவசியமாகிறது ஞானத்தினால் முக்தி கிடைக்கின்றது என்பது உண்மையே. ஞானத்தினால் உபாதி நாசமடைவதில்லை. அதனால் உபாதி நாசமடைவதின் பொருட்டு பக்தி அவசியமாகிறது. சிரவண மனன நிதித்யா ஸனங்களால் ஞானம ஸ்திரமடைகின்றது. நிதித்யாஸனம் யோகத்தினால் ஸித்திக்கிறது ஆனால் யோகத்திலும் ஸமாதியின் ஞானம் அவசியமாகிறது. ஸமாதி நிலையை அநுபவிப்பதற்கு பக்திநிலை அவசியமே.

பக்தியின் ஸ்வரூபம் சுத்த ப்ரேமை நாரதர் கூறுகிறார். 'सा त्वस्मिन् परमप्रेमरूपा' என்று. அதாவது ஈடில்லாத அன்பு செலுத்துவதே பரமபக்தியாகும். பிரேமையின் ஸ்வரூபம அநிர்வசநீயம். ஞானேஸ்வரர் கூறுகிறார் ஈசுவரனிடம் ஸகஜ ஸ்திதியில் லயமடைவதே பக்தி என்பது. எந்த அகண்ட பிரகாசத் தினால் உலகம் தோன்றுகிறதோ, மறைகிறதோ, எந்த அகண்ட

பிரகாசத்தினுல் அந்தரங்க வாசனையை அநுசரித்து ஜகத்தின் ஸ்வரூபம் தோன்றுகிறதோ அது பக்தி சந்திரனிடமிருந்து நிலவு வேருனதல்ல. அதுபோல் பக்தி பிரும்ம ஸ்வரூபத்திலிருந்து வேருனதல்ல. சந்திரனிடத்திலிருந்து நிலவு வேருனதாகத் தோன்றுவதைப்போல் ஸ்வரூபத்திலிருந்து பக்தியும் வேருனதாகத்தோன்றுகிறது. ஆருவது அத்யாயத்தில் பத்தாவது சுலோகத்தை வியவகரிக்கும்போது ஞானேசுவரர் பிரும்ம ஸ்வரூபத்திலிருந்து வேருனதுபோல் தோன்றும் பக்தியை வர்ணித்திருக்கிருர்.

பக்தி மூன்று விதமாகக் கூறப்பட்டிருக்கிறது. ஒன்று தஸ்யைவாஹம் அதாவது அநுமாஜைப்போல் தன்னை ஈசுவரனின் தாஸன் என்று நினைப்பது. இரண்டாவது "மமைவாஸௌ யசோதை முதலியவர்களைப்போல ஈசுவரனிடத்தில் வாத்ஸல்யம் முதலிய குணங்களை வைப்பது. மூன்ருவது ஸ ஏவாஹம் அதாவது கோபிகைகளைப்போல் ஈசுவரனிடம் லயிப்பது, ஆத்ம ப்ரேமை. இது எல்லாவற்றையும்விட உயர்ந்தது ஆத்ம ஸ்வரூபமான பரமாத்மாவினிடம் அநிர்வசநீயமான ப்ரேமையை வைப்பதே மிகவும் சிரேஷ்டமான பக்தியாகும் ஞானேஸ்வரர் கீதை நெடு கிலும், முக்யமாக 18-வது அத்யாயம் 54-வது சுலோகத்தின் வியாக்யானத்திலும் இந்த பக்தியை வர்ணித்திருக்கிருர். அதைப் பூரணமாக அறிந்து வர்ணிப்பதற்கு அற்பமதியுள்ள எனக்கு ஸாமர்த்யம் ஏது? இந்த மொழிபெயர்ப்பு மூலம் எப்படி இருக் கிறதோ அப்படியே இருப்பதாகத்தான் எனது எண்ணம் இது எனது முதல் அநுபவமானதால் இதில் அநேக குறைகள் மலிந்திருக்கும் சகோதர சகோதரிகள் மன்னிக்கவேண்டும் இந்த அல்பகாணிக்கையை ஞானேஸ்வர மகராஜின் பாதங்களில் ஸமர்ப்பிக்கிறேன்.

ரகுநாத மாதவ பகாடே என்ற மகாநுபாவருடைய ஹிந்தி மொழிபெயர்ப்பிலிருந்து அடியாள் ஆசை வெட்கம அறியாது என்ற காரணத்தால் தமிழில் முடிந்த மட்டும தெளிவாக மொழி பெயர்த்திருபபதாக நினைத்துககொண்டிருக்கிறேன். இந்நூலை எழுத மிகவும சிரமப்பட்டு உதவி செய்த செல்வி ஸ்ரீமதி ஜயா நீலகண்டனுக்கும், தன் தள்ளாத வயதிலும் எங்களுடன் கலந்து கொண்டு தமிழாக்கத்துக்கு உதவிய சகோதரி பகவதி அம்மாளுக்கும் எனது ஆயுள் உள்ளவரை அன்பும் ஆசியும் சிரத்தையும் உரித்தாகுக.

கோமதி ராஜாங்கம்.

॥ श्रीः ॥

# ஸ்ரீமத் பகவத்கீதை

## ஸ்ரீ ஞானேசுவரர் இயற்றிய பாவார்த்த தீபிகை (ஞானேசுவரீ)

தமிழ் அநுவாதத்துடன் கூடியது.

## முதலாவது அத்யாயம்

### *விநாயகர் ஸ்துதி*

ஓம்கார ஸ்வரூபமே! வேதங்களாலேயே வர்ணிக்கத் தக்க ஆதிரூபமே, உமக்கு நமஸ்காரம். உம்மை நீரேதான் அறிவீர். உமக்கு ஜயம் உண்டாகட்டும். நிவிருத்தி தாஸரின் தாஸனான நான் சொல்லுகிறேன். ஸகல அர்த்தத்தையும், புத்தியையும் பிரகாசிக்கச் செய்பவர் கணேசர். வேதங்களே அவர் உருவம். வேதாக்ஷரமே அவர் சரீரம். ஸ்ம்ருதி சாஸ்திரங்களே அவயவங்கள். அர்த்தத்தின் அழகே லாவண்யத்தின் பிரகாசம். பதினெட்டு புராணங்களும் அவருடைய ஆபரணங்கள். சுலோகங்களே ரத்தினங்கள். பதரசனைகளே அதில் உள்ள ஸ்வர்ணம். உத்தம பதச் சேர்க்கைகளே அவருடைய பீதாம்பரம். இலக்கிய ரசனைகளே அவ்வஸ்திரத்தின் ஊடும் பாவும். பாருங்கள்! காவியங் களையும், நாடகத்தையும்! அவைகள் ஜில் ஜில்லென்று சப்திக்கும் சலங்கைகள். காவிய நாடகங்களின் அர்த்தங்களே மணிகளின் நாதம். தத்வார்த்தங்களும், கூடார்த்தங்களும் மணிகளின் நடுவில் ஜ்வலிக்கும் ரத்தினங்கள் ஆகின்றன. வியாசர் முதலிய ரிஷிகளின் புத்தியே அவருடைய மேகலா பரணத்தின் விளிம்பு. பாருங்கள்! வேதாங்கங்கள் ஆறு உண்டல்லவா? அது அவருடைய புஜங்கள். அவைகளைப் பற்றி எத்தனை வித அபிப்ராயங்கள் உண்டோ அவைகளே அவருடைய ஆயுதங்கள். தர்க்கசாஸ்திரம் அவருடைய பரசு. நியாய சாஸ்திரம் அங்குசம். வேதாந்த சாஸ்திரம் அவர் கையில் உள்ள மோதகம்.

தானே தன் கொம்பை ஒடித்துத் தன் கையில் வைத்திருக் கிறார் அல்லவா? அதை என்னவென்று நினைக்கிறீர்கள்? பல வார்த்திககாரர்களால் கண்டனம் பண்ணப்பட்ட புத்த

தர்மத்தின் சங்கேதங்கள். வரத்தைக் கொடுக்கும் கரங்கள் ஸத்கார்ய வாதத்தையும் தர்ம பிரதிஷ்டையையும் குறிக்கின்றது. பரம சுகத்தையும் ஆனந்தத்தையும் அளிக்கும் நிர்மலமான விவேக புத்தியே அவருடைய துதிக்கை. உத்தமசர்ச்சைகளே சமமாகவும் வெண்மையாகவும் இருக்கும் அவருடைய பற்கள். ஹே தேவ தேவ! விக்னராஜா! ஞான திருஷ்டி உம்முடைய சூக்ஷ்மநேத்ரம். பூர்வ உத்தர மீமாம்ஸைகள் உம்முடைய காதுகள். ஞானம்ருதம் உம்முடைய மதஜலம். ஞானிகளான மகான்கள் அம்மதஜலத்தைப் பருகும் வண்டுகள். தத்வார்த்தங்கள் பிரகாசமான பவழமாலை. த்வைதமும் அத்வைதமும் இரண்டு கொம்புகள். இவை இரண்டும் எங்கு சேர்கிறதோ அதே உங்கள் மஸ்தகமாகத் திகழ்கின்றது. வேதமும் உபநிஷத்தும் சந்தனம் தெளித்த புஷ்பங்களைப் போல ஞானம்ருதத்தில் நனைந்து வஸ்திரத்தின்மேல் மாலையாகத் திகழ்கின்றன. அகாரம் உம்முடைய இரு சரணங்கள். உகாரம் உம்முடைய வயிறு. மகாரமே மஸ்தக உருவமான மஹா மண்டலம். இவை மூன்றும் எங்கு ஒன்று சேர்கின்றனவோ அதுவே வேதத்தின் இருப்பிடம். அதன் முதல் பீஜமான ஓம்காரத்தை நான் குருகிருபையால் வந்தனம் செய்கிறேன்.

## ஸரஸ்வதி துதி

பிறகு அபூர்வ வாக்விலாசத்தில் விளையாடுகிறவளும், சாதுர்யமான அர்த்தத்திலும், அறுபத்திநான்கு கலைகளிலும் பிரசித்திபெற்றவளும் விஸ்வமோகினியுமான ஸரஸ்வதியை நமஸ்காரம் செய்கிறேன். அவளாலேயே இந்த ஸம்ஸார ஸாகரமாகிய ஜலத்தைத் தாண்டினேன்.

## குருஸ்துதி

என் குரு என் ஹ்ருதயத்தில் வீற்றிருக்கிறார். அதனால் விவேகத்தில் எனக்கு பிரேமை. கண்ணில் அஞ்சனம் தடவியதும் திருஷ்டி கூர்மையாகி பூமியில் புதைந்திருக்கும் புதையலும் தெரிவதுபோலவும், அல்லது சிந்தாமணி கையில் கிடைத்ததும் ஸமஸ்த மனோரதங்களும் பூர்த்தியடைவது போலவும் எனது குருவான நிவ்ருத்தி தேவரால் எனது எல்லா மனோரதங்களும் பூர்த்தியாகிவிட்டது. நான் சொல்கிறேன். புத்திமான்களே! குரு சேவை செய்யுங்கள்.

கிருதார்த்தராவீர்கள். வேரில் தண்ணீர் விட்டால் கிளைகள் தழைப்பது போலவும், சமுத்திரத்தில் ஸ்நானம் செய்தால் மூவுலகத்தில் உள்ள நதிகளில் ஸ்நானம் செய்தது போலவும் அமிருத ரஸத்தை சாப்பிட்டால் எல்லா ரசங்களையும் சாப்பிட்டதுபோலவும், நான் என் குருவை வந்தனை செய்து சகல அபிலாஷைகளையும் பூர்த்தி செய்துகொள்கிறேன்.

## முன்னுரை

இப்பொழுது நான் சொல்லும் ஆழ்ந்த கதையைக் கேளுங்கள். அதுவே சகல கதைகளுக்கும் இருப்பிடம். விவேகமாகிய விருக்ஷங்கள் நிரம்பிய அழகான தோட்டம். சகல சுகத்திற்கும் அஸ்திவாரம். சித்தாந்தங்களாகிற ரத்னங்களின் களஞ்சியம். நவரசரூப அமிருதத்தால் நிரம்பிய சமுத்திரம். இதுவே திறந்த பரமபதம். எல்லா வித்தைகளுக்கும் இருப்பிடம். எண்ணிக்கையில்லாத சாஸ்திரங்களுக்கு ஆதாரம். எல்லா தர்மங்களுக்கும் ஜன்மபூமி. ஸஜ்ஜனங்களின் பிரேமைக்கு இருப்பிடம் ஸரஸ்வதியின் லாவண்யத்தின் களஞ்சியம். அல்லது இப்படியும் வைத்துக்கொள்ளுங்கள். ஸரஸ்வதி தானே வியாசரின் புத்தியில் பிரவேசித்து மூன்று உலகங்களிலும் கதாரூபமாக தன்னை வெளிப்படுத்திக்கொண்டிருக்கிறாள். அதனால் இக்கதை எல்லா காவ்யங்களுக்கும் சிகரம். எல்லா கிரந்தங்களின் மகிமைக்கு மூலம். இதிலிருந்தே எல்லா ரஸங்களுக்கும் ரஸத்தன்மை கிடைக்கிறது.

மேலும் கேளுங்கள், சப்தலக்ஷ்மி இதனால் சாஸ்திரவதி ஆனாள். ஆத்மஞானத்தின் மிருதுத்தன்மை இருமடங்கு பெருகியது. சாதுர்யத்தன்மை இதிலிருந்தே சாதுர்யத்தை கற்றுக்கொண்டது. சிந்தாந்தம் இதிலிருந்தே ருசி உள்ளதாக ஆகி ஸௌபாக்யத்துடன் கூடியதாயிற்று. மாதுர்யத்தின் இனிப்பு, அலங்காரத்தின் அழகு, யோக்யதையின் மேன்மை, இக்கதையின் மூலமாக வெளிப்படுகின்றன. கலைகளுக்கு இதிலிருந்தே யுக்தி கிடைக்கின்றது. புண்யத்தின் பிரதாபம் இதிலிருந்தே பெருகிவந்தது. இதன் காரணமாகவே ஜனமேஜயன் விளையாட்டாகவே பாபங்களிலிருந்து விடுபட்டான்.

இதை ஒரு க்ஷணம் கேளுங்கள். வர்ண ஸங்க்ரஹங்கள் இதிலிருந்தே பெருகியது. குணங்களுக்கு நற்தன்மை இதி

யிருந்து கிடைக்கிறது. சூரியனால் எப்படி மூன்று உலகங்களும் பிரகாசிக்கின்றதோ அதுபோல் வியாசமுனியின் புத்தியால் இஜ்ஜகம் சோபை அடைகின்றது. அல்லது நல்ல வயலில் விதைக்கப்பட்ட தான்யம் நல்ல விளைச்சலைக் கொடுப்பதுபோல் இப்பாரதக்கதை எல்லா விஷயங்களிலும் சோபை அடையச் செய்கிறது. நகரங்களில் வசிப்பவர்கள் எப்படி புத்திசாலிகளாக இருக்கின்றனரோ அதுபோல் வியாசமுனியின் வாணியால் இஜ்ஜகம் ஞானமயமாக பிரகாசிக்கின்றது. ஆனால் இப்படியும் எடுத்துக்கொள்ளுங்கள். யௌவன ஸ்திரீயின் லாவண்யத்தைப்போல் அல்லது வஸந்த ருதுவில் அரண்யம் சோபிப்பதுபோல் அல்லது தங்கக்கட்டி பார்க்க சாதாரணமாக இருந்தபோதிலும் விதவிதமான நகைகளாகி அழகை வெளிப்படுத்துவதுபோலும் வியாசமுனியின் வார்த்தைகளால் அலங்காரம் செய்யப்பட்ட இந்த மகத்தான கதை உத்தமமாக விளங்குகின்றது. இதனாலேயே இலக்கியம் இதற்கு முதல் ஸ்தானம் கொடுத்திருக்கிறது. இல்லை, இல்லை. அப்படியில்லை. பூரணமான கீர்த்தி அடையும் பொருட்டு எல்லா புராணங்களும் இந்த மகா பாரதத்தை ஆச்ரயித்து ஜகத்தில் பிரசித்தி அடைந்திருக்கிறது. அதனால் எந்த விஷயம் மகாபாரதத்தில் இல்லையோ அது மூவுலகிலும் இல்லை. மூவுலகங்களிலும் உள்ள எல்லா விஷயங்களும் இதில் உள்ளது அதனால் மூவுலகங்களும் வியாசரின் எச்சில் என்கிறோம். இவ்விதமாக ஜகத்தில் ரஸமான கதையாகவும், பரமார்த்தத்திற்கு ஜன்ம பூமியாகவும் உள்ள கதையை வைசம்பாயனர் ஜனமேஜயருக்கு கூறுகிறார். இந்த உத்தமமான, இணையற்ற, உவமை கூறமுடியாத, மங்களகரமான கதையைக் கேளுங்கள்.

கிருஷ்ணார்ஜுன ஸம்வாதமான இந்த கீதை பாரதரூபமான கமலத்தின் மகரந்தம். அல்லது வேதரூபமான பாற்கடலில் வியாசராகிய மத்தால் கடைந்து எடுக்கப்பட்ட வெண்ணெ, அல்லது ஞானாக்னியில் எரியும் விசாரமாகிய ஜ்வாலையில் காய்ச்சிய நெய். விரக்தர்களும், மஹாத்மாக்களும் ஸோஹம்பாவத்துடன் கூடிய கனவான்களும் இதைப் பஜிப்பார்கள். பக்தர்கள் இதை கேட்பார்கள். பரம பூஜ்யமான இந்த கதை பீஷ்மபர்வத்தில் கூறப்பட்டுள்ளது. ப்ரும்மாவும், சங்கரரும் இதை புகழ்கிறார்கள். ஸனகாதிகள் இதை சேவிக்கின்றனர், சகோரபக்ஷி சரத்காலத்தின் சந்திர

னுடைய அமிர்த கிரணத்தையே தேர்ந்து எடுப்பதுபோல ச்ரோதாக்களாகிய சகோரபக்ஷிகள் சந்திரனை கீதையின் பாவமாகிய அமிருதகணங்களை பருகுகிறார்கள். இக்கதையின் விவாதத்தை வார்த்தைகள் இல்லாமல் செய்யவேண்டும். இந்திரியங்களுக்கு தெரியாமல் அனுபவிக்க வேண்டும். சப்த உச்சாரணை இல்லாமலே இதனுடைய சித்தாந்தத்தை அறிய வேண்டும். வண்டுகள் எவ்விதம் பூவின் இதழ்களுக்கு பங்கம் வராமல் மகரந்தத்தை சாப்பிடுகிறதோ அதுபோல பதச்சேதம் இல்லாமல் நாம் கீதார்த்தத்தைப் பருகவேண்டும். அல்லி மலர் தன் இடத்தைவிட்டு நகர்வதில்லை. இருந்த இடத்திலேயே மலர்வதான தன் ஆலிங்கனத்தைச் செய்கிறது. அதுபோல் எவர் ஒருவர் கம்பீரமாக ஆழ்ந்து தன்னிடத்தே நோக்கு கின்றாரோ, அவ்ரே கீதையை அறிய முடியும்.

சகோதரர்களே! கேட்பதற்கு நீங்கள் எல்லோரும் அர்ச்சுனனுக்கு ஒப்பாக ஆகுங்கள். உங்கள் சரணங்களில் பணிந்து நிர்பயமாக இதை சொல்லுகிறேன். ஏனென்றால் உங்கள் ஹ்ருதயம் கம்பீரமானது. குழந்தைகளின் மழலையை மாதா பிதாக்கள் ரஸிக்கவில்லையா? அதேபோல் நீங்களும் என்னைக் குழந்தையாக்கி என்னை தன்னுடையவனுக்கிக் கொண்டீர்கள் அதனால் என்னை மன்னியுங்கள் என்று சொல்ல வேண்டிய அவசியமில்லை. என்னுடைய அபராதம் வேறு விதமாக உள்ளது. நான் கீதார்த்தத்தை விரிவாக சொல்ல விரும்புகிறேன். அதைக்கேட்க உங்களை பிரார்த்திக்கிறேன். இவ்விஷயம் எவ்வளவு கடினமானது என்று தெரியாமல் வீணாகத் தைரியம் கொள்கிறேன். கதிரவனின் ஒளிக்கு முன்னால் மின்மினி பூச்சியின் சோபை எம்மட்டு? கீதையின் மகத்துவத்தை அறியாமல், ஒரு குருவி தன் அலகினால் சமுத்திர ஜலத்தை வற்ற அடிக்க நினைப்பது போலிருக்கிறது என் செய்கை! ஆகாயத்தை மறைக்க விரும்பினால் அதை விட ஒரு பெரிய பொருளின் சாதனம் வேண்டியிருக்கிறது. அதைப்போல என்னுடைய இந்த விசாரம் எவ்வளவு துச்ச மாக இருக்கிறது!

இந்த கீதையை சங்கரபகவான் வர்ணித்திருக்கிறார். பார்வதி தேவி இடை இடையே உத்சாகத்துடன் கேட்கிறாள். அப் பொழுது சங்கரர் கூறுகிறார். "தேவி, உன் அழகு எப்படி தினம் தினம் நவீனமாக் காண்கிறதோ அப்படியே கீதார்த்த

மும் எப்பொழுதும் புதிதாக இருக்கிறது" இந்த கீதையாகிய வேதாந்த சமுத்திரமானது நித்திரை செய்யும் விராட புருஷனின் குறட்டைக்கு சமானம். அந்த சர்வேச்வரனே இதை விவேசனம் செய்கிருர். எது ஆழமானதோ, எதைப் பார்த்து வேதம் மௌனமாகிறதோ அதைக் கூற நான் எம்மட்டு? கதிரவனின் ஒளியை மேலும் பிரகாசமாக்க முடியுமா? கொசுவின் கைப்பிடிக்குள் ஆகாசம் அடங்குமா? ஆனால் நான் தைரியம் அடைய ஒரு ஆதாரம் இருக்கிறது. அது என்னவென்ருல் என் குரு எனக்கு அருள் புரிகிருர் இல்லாவிட்டால் நான் முட்டாள் அல்லவா? நான் அவிவேகமென்ற இருட்டில் இருந்தாலும் மஹாத்மாக்களான உங்களுடைய கிருபையாகிற விளக்கில் இருக்கிறேன். பரிசவேதி கல்லிற்கு இரும்பை தங்கமாக்கும் குணம் உண்டல்லவா? மிருத சஞ்சீவியால் இறந்தவனை உயிர்ப்பிக்கலாமல்லவா? ஸரஸ்வதியின் கிருபையால் ஊமையும் பேசுவானல்லவா! இதில் என்ன ஆச்சரியம்? காமதேனு யாரின் தாயோ அவருக்கு எது துர்லபம்? அதனுலேயே இந்த கிரந்தத்தை விவரிக்க சாகசம் கொள்கிறேன்.

தங்களிடம் நான் வேண்டுவது இதுதான். இதன் குறைகளைப் பூரணமாக்குங்கள். அதிகப்படியாக உள்ளதை விட்டு விடுங்கள். பொம்மை எப்படி சூத்திரதாரியின் கைத்திறனுல் ஆடுகிறதோ அதுபோல் உங்கள் தைரியத்தால் நான் சொல்கிறேன். நான் இப்படி கூறும் பொழுதே என் குரு சொல்கிருர். "போதும் அப்பா, இவ்வளவு சொல்வதற்கு அவசியமில்லை. புஸ்தகத்தைப் பார். விஷயத்திற்கு வா." இந்த ஆக்ஞையை கேட்டதுமே நிவிருத்தி தாஸ தாஸனுன நான் ஆனந்தத்துடன் சொல்கிறேன். மனதை ஒருமைப் படுத்திக் கேளுங்கள்.

धृतराष्ट्र उवाच —

**धर्मक्षेत्रे कुरुक्षेत्रे समवेता युयुत्सवः ।**
**मामकाः पाण्डवाश्चैव किमकुर्वत सञ्जय ॥ १ ॥**

த்ருதராஷ்ட்ர உவாச :—

தர்மக்ஷேத்ரே குருக்ஷேத்ரே ஸமவேதா யுயுத்ஸவ: ।
மாமகா: பாண்டவாஸ்சைவ கிமகுர்வத ஸஞ்ஜய ॥

புத்திரப் பிரேமையால் மோஹமடைந்த த்ருதராஷ்டிரன் ஸஞ்ஜயனிடம் கேட்கிறான் — குருக்ஷேத்ர சம்பவத்தைச் சொல்லு. தர்ம க்ஷேத்ரமான அங்கு என் புத்திரர்களும், பாண்டவர்களும் யுத்தத்திற்கு சென்றிருக்கிறார்கள். இச்சமயம் அவர்கள் என்ன செய்துகொண்டிருக்கிறார்கள்? (1)

सञ्जय उवाच —

दृष्ट्वा तु पाण्डवानीकं व्यूढं दुर्योधनस्तदा ।
आचार्यमुपसङ्गम्य राजा वचनमब्रवीत् ॥ २ ॥

पश्यैतां पाण्डुपुत्राणामाचार्य महतीं चमूम् ।
व्यूढां द्रुपदपुत्रेण तव शिष्येण धीमता ॥ ३ ॥

த்ருஷ்ட்வா து பாண்டவாநீகம் வ்யூடம் துர்யோதநஸ் ததா I
ஆசார்யமுபஸங்கம்ய ராஜா வசநமப்ரவீத் II

பச்யைதாம் பாண்டுபுத்ராணாமாசார்ய மஹதீம் சமூம் I
வ்யூடாம் த்ருபத புத்ரேண தவ சிஷ்யேண தீமதா II

ஸஞ்ஜயன் கூறுகிறான் — முதலில் பாண்டவர்களின் சேனை மிகவும் உத்ஸாஹத்துடன் கிளர்ந்து எழுந்தது. மஹா பிரளய காலத்தில் காலன் தன் வாயைத் திறந்ததுபோல் இருந்தது. இடமில்லாமல் நெருங்கி இருந்த அந்த சேனை கொதித்து எழுந்தது. காலகூட விஷத்தை பலவந்தமாக அமுக்கினால் அது எவ்வளவு தூரம் பரவும்? அதை யாரால் அடக்கமுடியும்? வடவாக்னி ப்ரளயகால வாயுவினால் வளர்ந்து சமுத்திரத்தை வற்ற அடிக்கும் பொழுது அதன் ஜோதி ஆகாயம் வரை ஒளி வீசும். அந்த அடக்க முடியாத சேனை அநேகவித வ்யூகங்களால் வகுக்கப்பட்டு பயங்கரமாக காட்சி அளிக்கிறது. ஆனாலும் அதைப் பார்த்து துரியோதனன் யானைக் கூட்டத்தை கண்ட சிம்மம் போல் லக்ஷியம் செய்யவில்லை. பிறகு அவன் துரோணரிடம் வந்தான். "பாருங்கள். பாண்டவர் சேனை எப்படி கொதித்து எழுகிறது! புத்திமானான த்ருஷ்டத்யும்னன் இச்சேனையை நாலாபுறமும் அநேக வித வ்யூகங்களாக வகுத்திருக்கிறான். அது நடமாடும் பர்வதம் போல் அல்லவா இருக்கிறது! பாருங்கள்! தங்களுடைய

பிரிய சிஷ்யனே! எவனை உங்களுடைய சகல வித்தைக்கும் இருப்பிடமாக்கினீர்களோ, அவன் இந்த சேனையாகிற சமுத்திரத்தை விரிவு படுத்தியிருக்கிறான். (2-3)

अत्र शूरा महेष्वासा भीमार्जुनसमा युधि ।
युयुधानो विराटश्च द्रुपदश्च महारथः ॥ ४ ॥

धृष्टकेतुश्चेकितानः काशिराजश्च वीर्यवान् ।
पुरुजित्कुन्तिभोजश्च शैब्यश्च नरपुङ्गवः ॥ ५ ॥

युधामन्युश्च विक्रान्त उत्तमौजाश्च वीर्यवान् ।
सौभद्रो द्रौपदेयाश्च सर्व एव महारथाः ॥ ६ ॥

அத்ர சூரா மஹேஷ்வாஸா பீமார்ஜுந ஸமா யுதி ।
யுயுதாநோ விராடஸ்ச த்ருபதஸ்ச மஹாரத: ॥

த்ருஷ்டகேதுஸ் சேகிதாந: காசீராஜஸ்ச வீர்யவான் ।
புருஜித் குந்திபோஜஸ்ச சைப்யஸ்ச நரபுங்கவ: ॥

யுதாமந்யுஸ்ச விக்ராந்த உத்தமௌஜாஸ்ச வீர்யவான் ।
ஸௌபத்ரோ த்ரௌபதேயாஸ்ச ஸர்வ ஏவ மஹாரதா:॥

இப்பொழுது இங்கு அநேக அஸ்திர சஸ்திரம் அறிந்தவர்களும்க்ஷத்திரிய தர்மத்தில் நிபுணர்களும் பெரிய வில்லாளிகளுமான பல வீரர்கள் வந்திருக்கின்றனர். அவர்கள் பலத்திலும் சண்டையிடுவதிலும் பீமார்ஜுனர்களுக்கு ஒப்பானவர்கள். நான் அவர்களின் பெயரை மட்டும் கூறி உங்களுக்கு அறிமுகப் படுத்துகிறேன். யுயுதானர், விராடர், துருபதன், மற்றும் திருஷ்டகேது, சேகிதானன், காசிராஜன் உத்தமௌஜா, சைப்யன், இவர்களும் இருக்கிறார்கள். மேலும் குந்திபோஜன், யுதாமன்யு, புருஜித், இருக்கிறார்கள். மேலும் பாருங்கள். சுபத்ரையின் மனதிற்கு ஆனந்தத்தைக் கொடுக்கக் கூடிய அபிமன்யு இருக்கிறான். அவன் மற்றொரு அர்ச்சுனனாகவே காண்கிறான். மற்றும் த்ரௌபதி புத்ரர்களுமுள்ளனர். இவர்கள் எல்லோருமே மகாரதர்கள் எல்லோரும் ஒன்று சேர்ந்திருக்கிறார்கள். (4-6)

**अस्माकं तु विशिष्टा ये तान्निबोध द्विजोत्तम ।**
**नायका मम सैन्यस्य संज्ञार्थं तान्ब्रवीमि ते ॥ ७ ॥**

**भवान्भीष्मश्च कर्णश्च कृपश्च समितिंजयः ।**
**अश्वत्थामा विकर्णश्च सौमदत्तिर्जयद्रथः ॥ ८ ॥**

**अन्ये च बहवः शूरा मदर्थे त्यक्तजीविताः ।**
**नानाशस्त्रप्रहरणाः सर्वे युद्धविशारदाः ॥ ९ ॥**

அஸ்மாகம் து விசிஷ்டா யே தான் நிபோத
த்விஜோத்தம I
நாயகா மம ஸைன்யஸ்ய ஸம்ஞார்த்தம் தான்
ப்ரவீமி தே II

பவான் பீஷ்மஸ்ச கர்ணஸ்ச க்ருபஸ்ச ஸமிதிஞ்ஜய: I
அச்வத்தாமா விகர்ணஸ்ச ஸௌமதத்திர் ஜயத்ரத: II

அந்யே ச பஹவ: சூரா மதர்த்தே த்யக்த ஜீவிதா: I
நாநா சஸ்த்ர ப்ரஹரணு: ஸர்வே யுத்த விசாரதா: II

இப்பொழுது நம் தளத்தில் உள்ள முக்கிய வீரர்களேயும், சூரர்களேயும் அறிமுகப் படுத்துகிறேன். தாங்கள் சேனுதிபதி அல்லவா ! முக்கியமானவர்களேத் தங்களிடமே குறிப்பிடு கிறேன். கங்கை மைந்தன் பீஷ்மர் இருக்கிருர். பிரதாபத்தில் சூரியனுக்கு ஒப்பானவர் இவர். சத்துருக்களாகிய யானைகளே அழிக்கும் சிம்மத்திற்கு ஒப்பான கர்ணன் இருக்கிருன். இங்கு கூடியிருக்கும் ஒவ்வொருவரும் மனதில் நினைத்த மாத்திரத்தி லேயே லோகஸம்ஹாரத்தையோ, உற்பத்தியையோ செய் வதற்கு வல்லவர்கள். கிருபாசாரியர் இருக்கிருர். அவரைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள் ! இதோ விகர்ணன், அஸ்வத் தாமா இருவர் இருக்கின்றனர். யமனும் இவர்களேப் பார்த்து பயப்படுகிருன். ஸமிதிஞ்சயன், ஸௌமதத்தி முதலானவர் களின் பலத்தை ப்ரும்மாவாலும் ஊகிக்க முடியாது. சஸ்திர வித்தையில் சூரர்கள், மந்திர வித்தையிலோ அதன் அவதாரமேதான் ! எல்லா ஆயுதங்களும் இவர்களாலேயே பிரசித்தமாயிற்று. மல்ல வித்தையில் இவர்களுக்கு நிகர் இவர்களேதான். இவர்கள் தங்கள் பிராணனை கையில்

பிடித்துக்கொண்டு என்னைப் பின்பற்றுகிருர்கள். பதிவிரதை யின் ஹ்ருதயம் பதியைத்தவிர மற்றவரை நாடாததுபோல் இந்த வீரர்களின் மனம் என்பால் இழுக்கப்பட்டு இருக்கின்றது. இவர்களுடைய நன்றியை என்னவென்று கூறுவது? எனக் காகப் பிராணனையும் துச்சமாக மதிக்கிருர்கள். இவர்கள் யுத்தம் செய்து எதிரிகளின் கீர்த்தியை ஜெயிக்கிருர்கள். வேறு என்ன சொல்ல? க்ஷத்திரியதர்மம் இவர்களாலேயே பிரசித்தி அடைந்தது. நம் தளத்திலுள்ள இத்தகைய வீரர்களை எண்ணத்தான் முடியுமா? (7-9)

अपर्याप्तं तदस्माकं बलं भीष्माभिरक्षितम् ।
पर्याप्तं त्विदमेतेषां बलं भीमाभिरक्षितम् ॥ १० ॥

அபர்யாப்தம் ததஸ்மாகம் பலம் பீஷ்மாபிரக்ஷிதம் I
பர்யாப்தம் த்விதமேதேஷாம் பலம் பீமாபிரக்ஷிதம் II

இவர்களைத் தவிர க்ஷத்திரிய சிரேஷ்டரும் உலக சிரேஷ் டரும் மஹாவீரருமான பீஷ்ம பிதாமஹர் நம் தளத்தில் சேனாதிபதியாக இருக்கிருர். இவர் பலத்தை ஆச்ரயித்து இந்த சேனை கோட்டையைப்போல் பரவியிருக்கிறது. இதற்கு முன்னல் மூன்று லோகங்களும் அற்பமாகத் தெரிகிறது. பாருங்கள்! சமுத்திரமே பயங்கரமானது. இதனுடன் வடவாக்னியும் கூடச்சேர்ந்தால்? பிரளயகாலத்து அக்னியும், சுழற்காற்றும் சேர்ந்தால்? கங்கை மைந்தர் சேனாதிபதியாக இருப்பதால் அவ்விதமே தோன்றுகிறது. இப்பொழுது அவரை யார் எதிர்க்க முடியும்? இவரைப் பார்க்கும் பொழுது பலவானுன பீமனின் தலைமையில் உள்ள பாண்டவ சேனை துச்சமாகக் காண்கிறது. இவ்விதம் கூறி விட்டு அவன் வாளாவிருந்தான். (10)

अयनेषु च सर्वेषु यथाभागमवस्थिताः ।
भीष्ममेवाभिरक्षन्तु भवन्तः सर्व एव हि ॥ ११ ॥

அயநேஷு ச ஸர்வேஷு யதாபாகமவஸ்த்திதா: I
பீஷ்மமேவாபிரக்ஷந்து பவந்த: ஸர்வ ஏவ ஹி II

சற்றுப் பொறுத்துப் பின்னும் கூறலானுன். சேனாதிபதி களே! தங்கள் தங்கள் சேனையைத் தயார் செய்யுங்கள்.

அக்ஷௌகிணிகளை யுத்த களத்தில் நிறுத்துங்கள். மகாரதர்களுக்கு அவரவர் சேனைகளை பங்கீடு செய்யுங்கள்: இவர்கள் எல்லோருடைய ஆதிக்கமும் பீஷ்மரின் ஆக்ஞைக்குள் இருக்க வேண்டும். இவ்வளவு கூறிவிட்டு பின்னும் துரோணரைப் பார்த்துக் கூறுகிறான். தாங்கள் நம் சேனையைச் சற்று சுற்றிப் பாருங்கள். பீஷ்மருக்குப் பாதுகாப்பு செய்யுங்கள். அவரை என் போன்று நினையுங்கள். நம் சேனையின் பலம் அவரைப் பொறுத்து இருக்கிறது. (11)

**तस्य संजनयन्हर्षं कुरुवृद्धः पितामहः ।**
**सिंहनादं विनद्योच्चैः शङ्खं दध्मौ प्रतापवान् ॥ १२ ॥**

தஸ்ய ஸஞ்ஜநயன் ஹர்ஷம் குருவ்ருத்த: பிதாமஹ: ‌।
ஸிம்ஹநாதம் விநத்யோச்சை: சங்கம் தத்மௌ
ப்ரதாபவான் ॥

ராஜாவின் வார்த்தைகளைக் கேட்டதும் சேனாதிபதி பீஷ்மருக்கு சந்தோஷம் உண்டாயிற்று. சிம்மத்தைப்போல் கர்ஜித்தார். இரு தரப்பாரின் மத்தியில் கர்ஜித்த இந்த சிம்ம நாதத்தின் எதிரொலி எல்லைக்கு அப்பாலும் கேட்டது: இந்நாதத்தைக் கேட்டு மூவுலகமும் செவிடாயிற்று எனலாம். ஆகாயம் இடிந்து விழும் போல் ஆயிற்று. வாயுமண்டலம் உறுமிற்று சமுத்திரம் பொங்கிற்று, சராசரங்கள் நடுங்கியது. இம்மஹாகோஷத்தின் கர்ஜனை மலைகளின் குகைகளில் எதிரொலித்தது. உடனே சங்கத்மானமும் செய்தார். (12)

**ततः शङ्खाश्च भेर्यश्च पणवानकगोमुखाः ।**
**सहसैवाभ्यहन्यन्त स शब्दस्तुमुलोऽभवत् ॥ १३ ॥**

தத: சங்காஸ்ச பேர்யஸ்ச பணவாநக கோமுகா: ‌।
ஸஹஸைவாப்யஹன்யந்த ஸ சப்தஸ்துமுலோzபவத் ॥

இதற்குள் யுத்த பேரிகை முழங்கியது. எத்தனை வித வாத்யங்கள் ! பயங்கரமானதும், கடூரமானதும் ஆன வாத்யங்களைக் கேட்ட பலவான்களுக்கே பிரளயகாலம் வந்ததுபோல் தோன்றியது. கொம்பு, மேளம், பூரி, தம்பட்டை, சங்கம் இவைகளின் நாதங்களுடன்கூட யுத்த வீரர்களின் ஜய கோஷங்களும் கலந்தன. ஆவேசத்துடன் தோள்களைத்

தட்டிக்கொண்டு வேகமாக ஒருவர்க்கொருவர் வசைச் சொற்களைக் கூறவும் ஆரம்பித்தனர். யானைகள் கட்டுக்கடங்காமல் போயின. இந்த வீரபூமியில் பயங் கொள்ளிகளுக்கு என்ன காரியம்? அவர்கள் கோவேரி கழுதைகளைப்போல் ஓடினர். இந்தக் காட்சியைப் பார்த்து யமனுக்கும் பயத்தால் நா உலர்ந்தது. அநேகம் பேர்களுக்கு நின்ற நிலையிலேயே உயிர் போயிற்று. மகா வீரர்களுக்கும் பற்கள் கிட்டின. பெரிய பெரிய வீர விருது பெற்றவர்களும் பயத்தால் நடுங்கினர். வாத்திய கோஷத்தின் ஒலியை கேட்டு பிரும்மாவும் வியாகூலமடைந்தார். தேவர்கள் பிரளயகாலம் வந்துவிட்டதோ என்று கூறிக்கொண்டார். (13)

ततः श्वेतैर्हयैर्युक्ते महति स्यन्दने स्थितौ ।
माधवः पाण्डवश्चैव दिव्यौ शङ्खौ प्रदध्मतुः ॥ १४ ॥

पाञ्चजन्यं हृषीकेशो देवदत्तं धनंजयः ।
पौण्ड्रं दध्मौ महाशङ्खं भीमकर्मा वृकोदरः ॥ १५ ॥

अनन्तविजयं राजा कुन्तीपुत्रो युधिष्ठिरः ।
नकुलः सहदेवश्च सुघोषमणिपुष्पकौ ॥ १६ ॥

தத: ச்வேதைர் ஹயைர் யுக்தே மஹதி ஸ்யந்தநே
ஸ்திதௌ ।
மாதவ: பாண்டவஸ்சைவ திவ்யௌ சங்கௌ
ப்ரதத்மது: ॥

பாஞ்சஜன்யம் ஹ்ருஷீகேசோ தேவதத்தம் தநஞ்ஜய: ।
பௌண்ட்ரம் தத்மௌ மஹாசங்கம் பீமகர்மா
வ்ருகோதர: ॥

அநந்த விஜயம் ராஜா குந்தீ புத்ரோ யுதிஷ்டிர: ।
நகுல: ஸஹதேவஸ்ச ஸுகோஷ மணிபுஷ்பகௌ ॥

இந்த கோலாகலத்தை பார்த்து சுவர்க்கத்திலேயே இந்நிலைமை ஏற்பட்டது என்றால் பாண்டவர்களின் தளத்தில் என்ன ஆயிற்று தெரியுமா? அவர்களின் சேனை விஜயலெக்ஷ்மியின் சைதன்யம். சூரிய தேஜஸின் களஞ்சியம். அங்கு ஓர்

ரதம் காண்கிறது. அதில் கருடனுக்கு சமானமான நான்கு குதிரைகளைப் பூட்டியிருக்கிறது. மேருபர்வதமே உருண்டு வருகிறதோ என்று தோன்றுகிறது. யார் அந்த ரதத்தின் சாரதி என்று எண்ணுகிறீர்கள்? வைகுண்டாதிபதி! அவன் குணங்களை என்னவென்று வர்ணிப்பேன்! அந்தத் தேரின் த்வஜஸ்தம்பத்தில் ஹனுமாரே உட்கார்ந்து இருக்கிறார். அர்ச்சுனன் மற்றொரு சங்கர பகவானைப்போல் விளங்குகிறான். ஸ்ரீ கிருஷ்ணன் அவனுடைய சாரதி. பக்தபராதீனனான அவன் பார்த்தனுக்கு சாரத்யம் செய்கிறான். தன் சேவகனை ரதத்தில் இருத்தி தான் வெளியில் நிற்கிறார். அவர் விளையாட்டாகவே பாஞ்ச ஜன்யத்தை ஊதுகிறார். அவருடைய மகா கோஷம் கம்பீரமாக உதிக்கிறது. சூர்யோதயம் ஆனதும் நட்சத்திரங்கள் சோபை இழப்பதைப்போல இதுவரை கோலாகலப்பட்ட கௌரவ சேனையின் ரண வாத்யங்கள் இருந்த இடம் தெரியாமல் போயின. பிறகு அர்சுனனின் தேவதத்தம் என்ற சங்கு ஒலித்தது. இரண்டு சங்கங்களின் ஒலியினால் ப்ரும்மாண்டம் துண்டு துண்டாகப் போய்விடுமோ என்றிருந்தது. இதைக் கண்ட பீமசேனன் மகாகாலனைப் போன்ற ஆவேசத்துடன் பௌண்ட்ரம் என்ற தன் சங்கை ஊதினான். அது பிரளயகால மேகத்தைப்போல் கர்ஜித்தது. இதற்குப் பிறகு யுதிஷ்டிரர் அனந்த விஜயம் என்ற தன் சங்கை ஊதினார். நகுல ஸஹதேவர்கள் ஸுகோஷம், மணி புஷ்பகம் என்ற தங்கள் சங்கை ஊதினார்கள். அதன் நாதத்தைக் கண்டு யமனும் திகிலடைந்தான். (14-16)

**काश्यश्च परमेष्वासः शिखण्डी च महारथः ।**
**धृष्टद्युम्नो विराटश्च सात्यकिश्चापराजितः ॥ १७ ॥**

**द्रुपदो द्रौपदेयाश्च सर्वशः पृथिवीपते ।**
**सौभद्रश्च महाबाहुः शङ्खान्दध्मुः पृथक्पृथक् ॥ १८ ॥**

**स घोषो धार्तराष्ट्राणां हृदयानि व्यदारयत् ।**
**नभश्च पृथिवीं चैव तुमुलो व्यनुनादयन् ॥ १९ ॥**

காச்யஸ்ச பரமேஷ்வாஸ: சிகண்டீ ச மஹாரத: ।
த்ருஷ்டத்யும்நோ விராடஸ்ச ஸாத்யகிஸ்சாபராஜித: ॥

த்ருபதோ த்ரௌபதேயாஸ்ச ஸர்வச: ப்ருதிவீபதே ।
ஸௌபத்ரஸ்ச மஹாபாஹு: சங்கான் தத்மு: ப்ருதக்
ப்ருதக் ॥
ஸ கோஷோ தார்தராஷ்ட்ராணும் ஹ்ருதயானி
வ்யதாரயத் ।
நபஸ்ச ப்ருதிவீம் சைவ துமுலோ வ்யநுநாதயன் ॥

த்ருபதனும், த்ரௌபதி புத்திரர்களும், மகாபாஹுவான காசிராஜனும், அர்சுனபுத்திரன் அபிமன்யுவும், யாராலும் ஜயிக்க முடியாத சாத்யகியும், த்ருஷ்டத்யும்னன், சிகண்டி, விராடன் முதலிய ராஜாக்களும் தங்கள் சங்கை முழங்கினர். இந்த மகா சப்தத்தின் எதிரொலியால் தாக்குண்டு பூமியைத் தாங்கும் சேஷனும் கூர்மமும் திகிலடைந்து பூமி பாரத்தை விட்டு ஓட ஆரம்பித்தனர். அதனுல் மூன்று உலகமும் நடுங்கின. மேருகிரியும், மந்தர பர்வதமும் அசைந்தன. சமுத்திர ஜலத்தின் அலைகள் கைலாச பர்வதத்தில் தெரிந்தது. பூமி தலைகீழானதுபோல் தெரிந்தது. ஆகாயம் வெடித்து நட்சத்திரங்கள் உதிர்வதுபோல் தெரிந்தது. சத்ய லோகத்தில் ஒரே குழப்பம். சிருஷ்டித் தொழில் இருந்த இடம் தெரியவில்லை. தேவர்கள் ஆதாரமின்றித் தவித்தனர். பிரளயகாலம் வந்து மூடிவிட்டதைப்போல சூரியன் பகலிலேயே மறைந்தான். இவ்விதம் மூன்று உலகங்களும் ஹா ஹா என்று அலறியது. இதைப் பார்த்து ஆதிநாராயணர் ஆச்சரியத்துடன் கூறினர். "என்ன முடிவே வந்துவிட்டதா?" என்று. பிறகு அவர் அந்த அற்புத ஆவேசத்தை தன்னுள் இழுத்துக்கொண்டார் உலகம் பிழைத்தது. இல்லாவிட்டால் கிருஷ்ணன் முதலியவர்களின் சங்கத்வனியால் ஆரம்பத்திலேயே பிரளயம் வந்திருக்கும். கோஷங்கள் என்னவோ ஓய்ந்தன. ஆனுல் அதன் பிரதித்வனி கௌரவ சேனைகளை த்வம்ஸம் செய்தது எனலாம். யானைக் கூட்டங்களில் மத்தியில் விழுந்த சிங்கம் எளிதாக அந்த கூட்டத்தை சிதைவு செய்வதுபோல இந்த பிரதித்வனி கௌரவர்களின் ஹ்ருதயத்தை சிதறச் செய்தது. சப்தத்தைக் கேட்டு அவர்கள் நின்ற நிலையிலேயே கீழே விழுந்தனர். ஒருவர் மற்றொருவரை தைரியமாக இருக்கச் சொன்னார்கள்.

अथ व्यवस्थितान्दृष्ट्वा धार्तराष्ट्रान्कपिध्वजः ।
प्रवृत्ते शस्त्रसंपाते धनुरुद्यम्य पाण्डवः ॥ २० ॥

அத வ்யவஸ்திதான் த்ருஷ்ட்வா தார்தராஷ்ட்ரான்
கபித்வஜ: I
ப்ரவ்ருத்தே சஸ்த்ர ஸம்பாதே தநுருத்யம்ய
பாண்டவ: II

இதற்குள் மிக்க தைரியவான்களான மகாரதர்கள் சேனையை ஒழுங்கு படுத்தினர். சரியானபடி ஒழுங்கு செய்து இரட்டிப்பு ஆவேசத்துடன் எதிர்ப்பிற்குத் தயாராயினர். அந்த சேனையால் மூன்று உலகங்களும் கொதித்து எழுந்தது. வில்லாளிகள் இடைவிடாமல் வர்ஷித்த பாணங்களால் பிரளய காலத்தில் வர்ஷித்த மேகம்போல் இருந்தது. அர்ச்சுனனுக்கு மிக்க குதூகலம் உண்டாயிற்று. பார்வையை ஆவேசத்துடன் நான்கு பக்கமும் செலுத்தினான். எல்லா கௌரவர்களும் யுத்தத்திற்கு தயார் செய்வதைப் பார்த்து அவனும் விளையாட்டாக காண்டீவத்தை வளைத்தான். (20)

हृषीकेशं तदा वाक्यमिदमाह महीपते ।

अर्जुन उवाच —

सेनयोरुभयोर्मध्ये रथं स्थापय मेऽच्युत ॥ २१ ॥

यावदेतान्निरीक्षेऽहं योद्धुकामानवस्थितान् ।
कैर्मया सह योद्धव्यमस्मिन्रणसमुद्यमे ॥ २२ ॥

योत्स्यमानानवेक्षेऽहं य एतेऽत्र समागताः ।
धार्तराष्ट्रस्य दुर्बुद्धेर्युद्धे प्रियचिकीर्षवः ॥ २३ ॥

ஹ்ருஷீகேசம் ததா வாக்யமிதமாஹ மஹீபதே I

அர்ஜுந உவாச:—

ஸேநயோருபயோர் மத்யே ரதம் ஸ்தாபய மேऽச்யுத II

யாவதேதான் நிரீக்ஷேऽஹம் யோத்துகாமான்
அவஸ்திதான் I

கைர் மயா ஸஹ யோத்தவ்யமஸ்மின் ரணஸமுத்யமே II

யோத்ஸ்யமாநாநவேக்ஷேZஹம் ய ஏதேZத்ர
ஸமாகதா: I
தார்தராஷ்ட்ரஸ்ய துர்புத்தேர் யுத்தே ப்ரியசிகீர்ஷவ: II

அர்ஜுனன் ஸ்ரீ கிருஷ்ணனிடம் கூறினன்:—

ஹே தேவ! ரதத்தை சீக்கிரமாக முன்னே செலுத்தி இரு சேனைகளின் மத்தியில் நிறுத்துவாயாக. யுத்தத்திற்குத் தயாராக நிற்கும் வீரர்களை ஒரு க்ஷணம் பார்க்கிறேன். எல்லோரும் தான் இங்கு வந்திருக்கிருர்கள். ஆனல் என்னுடன் யுத்தம் செய்ய யார் யார் லாயக்கானவர் என்று பார்க்கலாம் அல்லவா? ஏனென்ருல் கௌரவர்கள் எப்பொழுதும் பரபரப்பும், கெட்ட சுபாவமும் உள்ளவர்கள், பராக்கிரமம் இல்லாமலேயே யுத்தத்தில் ஜயிக்க விரும்புவர். அவர்களுக்கு யுத்தத்தில் ஆசை என்னமோ இருக்கிறது. ஆனல் யுத்தம் செய்ய தைரியம் இல்லை. (21-23)

संजय उवाच —

एवमुक्तो हृषीकेशो गुडाकेशेन भारत ।
सेनयोरुभयोर्मध्ये स्थापयित्वा रथोत्तमम् ॥ २४ ॥

भीष्मद्रोणप्रमुखतः सर्वेषां च महीक्षिताम् ।
उवाच पार्थ पश्यैतान् समवेतान् कुरूनिति ॥ २५ ॥

तत्रापश्यत्स्थितान् पार्थः पितॄनथ पितामहान् ।
आचार्यान् मातुलान् भ्रातॄन् पुत्रान् पौत्रान् सखींस्तथा ॥

श्वशुरान् सुहृदश्चैव सेनयोरुभयोरपि ।
तान्समीक्ष्य स कौन्तेयः सर्वान्बन्धूनवस्थितान् ॥ २७ ॥

ஸஞ்ஜய உவாச:—

ஏவமுக்தோ ஹ்ருஷீகேசோ குடாகேசேந பாரத I
ஸேநயோருபயோர் மத்யே ஸ்தாபயித்வா ரதோத்தமம் II

பீஷ்மத்ரோண ப்ரமுகத: ஸர்வேஷாம் ச மஹீக்ஷிதாம் I
ஊவாச பார்த்த பச்யைதான் ஸமவேதான் குரூனிதி II

த்ராபச்யத் ஸ்திதான் பார்த்த: பித்ருனத
பிதாமஹான் ।
ஆசார்யான் மாதுலான் ப்ராத்ருன் புத்ரான்
பௌத்ரான் ஸகீம்ஸ்ததா ॥
ச்வசுரான் ஸுஹ்ருதஸ்சைவ ஸேநயோருபயோரபி ।
தான் ஸமீக்ஷ்ய ஸ கௌந்தேய: ஸர்வான்
பந்தூநவஸ்திதான் ॥

இவ்வாறு திருதராஷ்ட்ரரிடம் ஸஞ்ஜயன் கூறிவிட்டு மேலும் கூறினன். அர்ஜுனன் இவ்வாறு கூறியதும் கிருஷ்ணன் ரதத்தை முன் செலுத்தி இரு சேனைகள் மத்தியில் நிறுத்தினன். எங்கு பீஷ்மர் த்ரோணர் முதலிய உறவினர்கள் நின்றுகொண்டிருந்தார்களோ, எங்கு மற்ற அரசர்கள் குழுமி இருந்தனரோ அங்கு ரதத்தை நிறுத்திவைத்து கிருஷ்ணன் "அர்ஜுன, உன்னுடன் கூட சண்டையிடுவதற்காக இங்கு கூடியுள்ள கௌரவர்களை நன்கு கவனித்துப்பார்" என்றுன். அர்ஜுனன் பரபரப்புடன் அச்சேனையை பார்வையிட்டான். அதே பரபரப்பில் சொல்லலானுன் "ஹே தேவ! பாருங்கள், இவர்கள் எல்லோரும் என் குலத்தில் பிறந்தவர்கள். இவர்கள் மிகவும் மேன்மையானவர்கள் அல்லவா?" இப்படிச் சொல்லவே ஸ்ரீ கிருஷ்ணனின் கண்கள் ஆச்சரியத்தினுல் விரிந்தன. மனம் துணுக்குற்றது. "என்னடா இது, இவன் மனதிற்கு என்ன வந்தது? இதில் ஆச்சரியத்திற்கு என்ன இருக்கிறது". சட்டென்று அவருக்கு நடக்கவேண்டிய விஷயம் ஞாபகத்திற்கு வந்தது. அவர் எளிதாக அர்ச்சுனனின் அந்தராத்மாவை அறிந்தார். ஆனுலும் மௌனமாக இருந்தார். இங்கு அர்ச்சுனன் திரும்பவும் பிதாக்கள், பிதாமஹர்கள், குரு, சகோதரர்கள், மாமன்கள் எல்லோரையும் பார்த்தான். இஷ்ட மித்திரர்களையும், பிள்ளைகளையும் பார்த்தான். இவர்கள் யாவரும் யுத்தத்திற்கு வந்தவர்களுடன் சேர்ந்திருந்தார்கள். மித்திரர்கள், மாமனுர்கள், சம்பந்திகள், பிள்ளைகள், பேரன்கள் எல்லோரையும் பார்த்தான். அவன் யாருக்கெல்லாம் உபகாரம் செய்திருக்கிருனே, எவர்களை மகத்தான ஆபத்திலிருந்து காப்பாற்றி இருக்கிருனே, அவர்கள் மட்டுமல்ல. சிறுவர்களும் குமாரர்களும் உடன் இருக்கக் கண்டான். சுருங்கச்சொன்னுல் கோத்திர தாயாதிகள் அனைவரும் யுத்தத்தில் உற்சாகமாக இருக்கக்கண்டான். (24-27)

कृपया परयाविष्टो विषीदन्निदमब्रवीत् ।

अर्जुन उवाच —

दृष्ट्वेमान्स्वजनान्कृष्ण युयुत्सून्समुपस्थितान् ॥ २८ ॥

सीदन्ति मम गात्राणि मुखं च परिशुष्यति ।
वेपथुश्च शरीरे मे रोमहर्षश्च जायते ॥ २९ ॥

गाण्डीवं स्रंसते हस्तात्त्वक्चैव परिदह्यते ।
न च शक्नोम्यवस्थातुं भ्रमतीव च मे मनः ॥ ३० ॥

க்ருபயா பரயாவிஷ்டோ விஷீதந்நிதமப்ரவீத் ।

அர்ஜுந உவாச :—

த்ருஷ்ட்வேமான் ஸ்வஜநான் க்ருஷ்ண யுயுத்ஸூன் ஸமுபஸ்திதான் ॥

ஸீதந்தி மம காத்ராணி முகம் ச பரிசுஷ்யதி ।
வேபதுஸ்ச சரீரே மே ரோமஹர்ஷஸ்ச ஜாயதே ॥

காண்டீவம் ஸ்ரம்ஸதே ஹஸ்தாத் த்வக் சைவ பரிதஹ்யதே ।
ந ச சக்நோம்யவஸ்த்தாதும் ப்ரமதீவ ச மே மந: ॥

அவன் மனம் குழம்பியது. தன்னையறியாமல் இரக்கம் தோன்றியது. அவமானத்தால் தலை குனிந்தான். வீரலக்ஷ்மி அவனை விட்டு விலகி நின்றாள். எப்படி என்றால், உத்தமகுலப் பெண்கள், நல்ல குணமும் சௌந்தர்யமும் உள்ள பதிவிரதைகள், தங்கள் பதிக்கு அன்னிய ஸ்திரீ சம்பந்தம் ஏற்படுவதை சகியார்கள். புதுப் புது ஸ்திரீகளை விரும்பும் காமிகள் தங்கள் மனைவிகளை மறந்து விடுகிறார்கள். புது ஸ்திரீகளுக்குத் தாங்கள் யோக்யர்களாக இல்லாவிட்டாலும்கூட மோஹத்தால் அவர்களைத் தொடர்கிறார்கள். இது ஒரு உவமை அல்லது தபோபலத்தால் சம்பத்து சேர்ந்தவுடன் புத்தி மழுங்கி விடுகிறது. பின்பு தவம் செய்தாலும் வைராக்யமும், சித்தியும் ஏற்படுவதில்லை. அதைப்போலவே அர்ச்சுனனின் ஸ்திதி இருந்தது. அந்தக்கரணத்தில் புதுப்பெண்ணாகிய தயைக்கு

இடம் கொடுத்தவுடன் அவனுடைய பௌருஷம் அவனை விட்டு விலகி நின்றது. மந்திரவாதி ஒருவனுடைய மந்திரத்தில் பிழை ஏற்பட்டால் அவனை பூதம் பிடித்தாட்டும். அதைப்போல அர்ச்சுனனை மஹாமோஹம் என்ற பூதம் பிடித்துக்கொண்டது. இதனால் அவனுடைய தைரியம் இருந்த இடம் தெரியாமல் போய்விட்டது. சந்திர காந்தக் கல்லில் சந்திர கிரணங்கள் பட்டால் எப்படி இளகுமோ அப்படி அர்ஜுனனின் ஹ்ருதயம் கருணையால் இளகியது.

மிகுந்த தயையாலும் கருணையாலும் மோஹமடைந்த அர்ச்சுனன் கிருஷ்ணனைப் பார்த்து கூறுகிறான் ''ஹே. தேவ, இந்த சமுதாயத்தில் என் கோத்திர தாயாதிகள் அல்லவா கூடியிருக்கிறார்கள்! இவர்கள் யுத்தத்திற்கு கூடியிருக்கிறார்கள் என்பது உண்மைதான். ஆனால் நான் இவர்களுடன் யுத்தம் செய்வது உசிதம் தானா என்ற எண்ணம் மனதில் எழுந்த உடன் என் நினைவு நிலை தடுமாறுகிறது. அறிவும், புத்தியும் மங்குகிறது. பாருங்கள் சரீரம் நடுங்குகிறது. நா உலருகிறது. அவயவங்கள் பரபரப்படைகின்றன. உடல் பூரும் மயிர் குத்திட்டு நிற்கின்றது. என் ஸந்தாபம் சொல்லத் தரமன்று. இப்படிச் சொல்லும் பொழுதே காண்டீவம் பற்றிய கை தளர்ந்தது. அவன் கைதளர்ந்ததும் அவன் அறியாமலே காண்டீபம் கீழே விழுந்தது. இந்த விதமாக மோஹம் அவன் ஹ்ருதயத்தில் வியாபித்தது. என்ன ஆச்சர்யம்! வஜ்ரத்திற்கு சமானமான கடினமான ஹ்ருதயம், எதிர்க்க முடியாத எதிரிகளுக்கு பயத்தைக்கொடுக்கும் ஹ்ருதயம்! அந்த ஹ்ருதயத்தை விட நேசம் வலுத்தது. எவன் யுத்தத்தில் பகவான் சங்கரரை தோல்வியடையச் செய்தானோ, நிவாத கவசர்களைப் பெயரே இல்லாமல் அழித்தானோ, அந்த அர்ச்சுனனை மோஹம் க்ஷணப் பொழுதில் விழுங்கி விட்டது! வண்டைப் பாருங்கள்! தேவ தாரு மரத்தைத் துளைத்து விடுகிறது. ஆனால் ஒரு மிருதுவான தாமரைமொட்டிற்குள் அகப்பட்டுக்கொண்டு விடுகிறது. அங்கேயே பிராணனை விடுகிறதே ஒழிய தாமரை இதழ்களை கிழித்துகொண்டு வெளியில் வர மனதில் எண்ணம் எழுவதில்லை. அதைப்போல கருணையினால் மிருதுவான, கருணையின் வசப்பட்ட ஹ்ருதயத்தினால் நேசத்தை அகற்ற முடியவில்லை. சஞ்சயன் கூறுகிறார் — ஹே ராஜா, கேளுங்கள். அந்த ஆதி புருஷனின் மாயையை ப்ரும்ம தேவராலும் விலக்க முடியாதன்றோ! அர்ச்சுனனுக்கு இந்த பிரேமை ஏற்பட்டதில் என்ன

ஆச்சரியம்? கேளுங்கள். பிறகு அர்ச்சுனன் தன் பந்துக்களுடன்கூட யுத்தம் செய்வதில் இருக்கும் தன் விருப்பத்தை விட்டு விட்டான். கருணையால் இளகிய இருதயத்துடன் கூறினான். ''ஹே கிருஷ்ணா, இனி இங்கு இருக்கவே கூடாது. இவர்களை எல்லாம் கொல்லவேண்டும் என்ற எண்ணம் தோன்றியவுடனே நா உலருகிறது. (28-30)

निमित्तानि च पश्यामि विपरीतानि केशव ।
न च श्रेयोऽनुपश्यामि हत्वा स्वजनमाहवे ॥ ३१ ॥

நிமித்தாநி ச பச்யாமி விபரீதாநி கேசவ ।
ந ச ச்ரேயோநுபச்யாமி ஹத்வா ஸ்வஜநமாஹவே ॥

இந்த கௌரவர்களைக் கொல்ல வேண்டும் என்றால் இந்த யுதிஷ்டிராதிகளை ஏன் கொல்லக்கூடாது? அவர்களும் நம் தாயாதிகள் தானே? அதனால் இந்த யுத்தம் நாசமாகப் போகட்டும். இது எனக்குப் பிடிக்கவில்லை இந்த மகா பாபத்தை செய்து எனக்கு வரப்போவதென்ன? பலவிதமாக யோசித்துப் பார்த்தால் இந்த யுத்தத்தால் கெடுதலே சம்பவிக்கும். இதை நீக்குவதே நன்மை என்று எனக்குத் தோன்றுகிறது. (31)

न काङ्क्षे विजयं कृष्ण न च राज्यं सुखानि च ।
किं नो राज्येन गोविन्द किं भोगैर्जीवितेन वा ॥ ३२ ॥

येषामर्थे काङ्क्षितं नो राज्यं भोगाः सुखानि च ।
त इमेऽवस्थिता युद्धे प्राणांस्त्यक्त्वा धनानि च ॥ ३३ ॥

ந காங்க்ஷே விஜயம் க்ருஷ்ண ந ச ராஜ்யம் ஸுகாநி ச ।
கிம் நோ ராஜ்யேந கோவிந்த கிம் போகைர் ஜீவிதேந வா ॥

யேஷாமர்த்தே காங்க்ஷிதம் நோ ராஜ்யம் போகா: ஸுகாநி ச ।
த இமே஽வஸ்திதா யுத்தே ப்ராணாம்ஸ்த்யக்த்வா தநாநி ச ॥

ஜயமடைவதால் எனக்கு ஒரு உபயோகமுமில்லை. இவ்வித மாக ராஜ்யத்தையடைந்து எனக்கு என்ன லாபம்? இவர்களை வதம் செய்து அனுபவிக்கும் ராஜபோகமும் பாழாகட்டும். இந்த சுகம் கிடைக்காமல் ஆபத்து வேண்டுமானாலும் வரட்டும். இந்த ஜனங்களுக்கு என் பிராணனை அர்ப்பணம் பண்ணும்படி வரட்டும். ஆனால் இவர்களைக் கொன்று ராஜபோகம் அனுபவிக்கவேண்டும் என்ற எண்ணம் எனக்கு சொப்பனத்திலும் உசிதமாகப் படவில்லை. இவர்களுக்கு கெடுதல் நினைக்கவே ஒரு ஜன்மம் என்றால் இந்த ஜன்மம் ஏன் எடுத்தேன்? யாருக்காக வாழவேண்டும்? ஒரு குலத்தில் குழந்தைக்காக தவம் செய்கிறார்களே தவிற அந்த குலம் நாசமடைய வேண்டும் என்று செய்கிறார்கள். இந்த எண்ணத்தை மனதில் எப்படி ஏற்றுக்கொள்ள முடியும்? என் மனம் வஜ்ராயுதத்தைப்போல் கல்லாக இல்லை. என்றால் முடிந்தால் இவர்களுக்கு நன்மையே செய்யவேண்டும். நாம் சம்பாதிப்பதை இவர்களுக்கு கொடுக்கவேண்டும். இவ் வாழ்வை இவர்களுக்கு உபகாரம் செய்வதற்கு அர்ப்பணிக்க வேண்டும். திக்விஜயம் செய்து எந்த குலத்தை சந்தோஷம் அடையச்செய்ய வேண்டுமோ, அந்த குலத்தைச் சேர்ந்தவர்கள் இவர்கள். ஆனால் கர்மத்தின் விபரீதத்தைப் பாருங்கள்! இவர்கள் யுத்தத்திற்கு தயாராக இருக்கிறார்கள். தங்கள் பெண்டு பிள்ளைகள், திரவிய சம்பத்தை விட்டுவிட்டு அம்பு முனையில் பிராணனை வைத்துக்கொண்டிருக்கிறார்கள். என் குடும்பத்தை எப்படிக்கொல்வேன். இவர்கள்மேல் எப்படி அம்பு தொடுப்பேன்? என் ஹ்ருதயத்தையே என் கையால் எப்படி நசுக்குவேன்?

**आचार्याः पितरः पुत्रास्तथैव च पितामहाः ।**
**मातुलाः श्वशुराः पौत्राः स्यालाः संबन्धिनस्तथा ॥ ३४ ॥**

ஆசார்யா: பிதர: புத்ராஸ் ததைவ ச பிதாமஹா: ।
மாதுலா: ச்வசுரா: பௌத்ரா: ஸ்யாலா: ஸம்பந்திநஸ் ததா ॥

உங்களுக்குத் தெரியாதா இவர்கள் யார் யாரென்று? அந்தப் பக்கம் பீஷ்ம துரோணர்கள். அவர்களால் எண்ணற்ற உபகாரங்களை அடைந்திருக்கிறோம். இந்தப் பக்கம்

மைத்துனர்கள், மாமனூர்கள், மாமன்கள், சகோதரர்கள், புத்திரர்கள், பேரன்கள் முதலியவர்கள் இருக்கிருர்கள். இவர்கள் எல்லோரும் என் உடன் பிறந்தவர்களுக்கும் மேலானவர்கள். அதனுல் இவர்களைக்கொல்ல வேண்டுமென்ற எண்ணமே தோன்றக்கூடாது.

**एतान्न हन्तुमिच्छामि घ्नतोऽपि मधुसूदन ।**
**अपि त्रैलोक्यराज्यस्य हेतोः किं नु महीकृते ॥ ३५ ॥**

ஏதான் ந ஹந்துமிச்சாமி க்நதோऽபி மதுஸூதந ।
அபி த்ரைலோக்ய ராஜ்யஸ்ய ஹேதோ: கிம் நு
மஹீக்ருதே ॥

இவர்கள் என்ன வேண்டுமோ செய்துகொள்ளட்டும். நம்மை இங்கேயே கொல்லட்டும் ஆனுல் மனதாலும் இவர்களுக்குக் கெடுதல் செய்ய எண்ணுவது நமக்குத் தகாது. திரிலோகாதிபத்யம் கிடைக்கட்டும் இந்த அனுசிதமான காரியம் செய்யமாட்டேன் இந்த காரியத்தை செய்வேனுனல் என் பெயரை எப்படிச் சொல்வார்கள்? ஹே கிருஷ்ண! தங்களுக்கே எந்த முகத்தைக் காண்பிப்பேன்?

**निहत्य धार्तराष्ट्रान्नः का प्रीतिः स्याज्जनार्दन ।**
**पापमेवाश्रयेदस्मान्हत्वैतानाततायिनः ॥ ३६ ॥**

நிஹத்ய தார்தராஷ்ட்ரான் ந: கா ப்ரீதி: ஸ்யாத்
ஜநார்தன ।
பாபமேவாச்ரயேதஸ்மான் ஹத்வைதாநாததாயிந: ॥

இந்த கோத்திர தாயாதிகளைக் கொன்ருல் நான் பாபத்தை அடைவேன். அதனுல் அரிதாகக் கிடைத்த தங்களை இழக்க நேரிடும். குலத்தைக்கொன்ற பாபம் வந்து சேரும். அப்பொழுது தங்களை நான் காண்பதேது? மாஞ்சோலை தீப்பற்றி எரியுமானுல் குயிலுக்கு அங்கு என்ன வேலை? தடாகம் சகதியால் நிரம்பியதைப் பார்த்து சகோரம் அங்கு வசிக்குமா? அதுபோல ஹே தேவா! என்னுடைய புண்ணியமாகிற ஜலம் வற்றும்பொழுது மாயா ஜாலத்தால்கூட தங்களை சிக்கவைக்க முடியாது.

तस्मान्नार्हा वयं हन्तुं धार्तराष्ट्रान्स्वबान्धवान् ।
स्वजनं हि कथं हत्वा सुखिनः स्याम माधव ॥ ३७ ॥

தஸ்மாத் நார்ஹா வயம் ஹந்தும் தார்தராஷ்ட்ரான் ஸ்பாந்தவான் ।
ஸ்வஜநம் ஹி கதம் ஹத்வா ஸுகிந: ஸ்யாம மாதவ ॥

அதனால் நான் இந்த காரியத்தைச் செய்யமாட்டேன். இந்த யுத்தத்தில் அஸ்திரத்தை எடுக்கமாட்டேன். எப்படிப் பார்த்தாலும் இந்த யுத்தம் கெடுதலாகவே காண்கிறது. தங்களை விட்டுப் பிரிவதென்றால் எனக்கு வேறு என்ன இருக்கிறது? தாங்கள் இல்லாமல் என் ஹ்ருதயமே துக்கத்தால் பிளந்து விடும். அதனால் கௌரவர்கள் வதம் செய்யப் படவேண்டும், நான் போகங்களை அனுபவிக்கவேண்டும் என்பது நடக்காது.

यद्यप्येते न पश्यन्ति लोभोपहतचेतसः ।
कुलक्षयकृतं दोषं मित्रद्रोहे च पातकम् ॥ ३८ ॥

कथं न ज्ञेयमस्माभिः पापादस्मान्निवर्तितुम् ।
कुलक्षयकृतं दोषं प्रपश्यद्भिर्जनार्दन ॥ ३९ ॥

யத்யப்யேதே ந பச்யந்தி லோபோபஹத சேதஸ: ।
குலக்ஷய க்ருதம் தோஷம் மித்ர த்ரோஹே ச பாதகம் ॥

கதம் ந ஜ்ஞேயமஸ்மாபி: பாபாதஸ்மாத் நிவர்திதும் ।
குலக்ஷய க்ருதம் தோஷம் ப்ரபச்யத்பிர் ஜநார்தந ॥

இவர்கள் நம்மிடம் சண்டைக்குத் தயாரானாலும் நாம் நம்முடைய ஹிதத்தை யோசிக்கத்தான் வேண்டும். நம் குடும்பத்தாரை நாமே கொல்வது எப்படி? வேண்டுமென்றே காலகூட விஷத்தை புசிப்பார்களா? ஐயா, வழியில் போய்க் கொண்டிருக்கும்பொழுது சிங்கம் எதிர்ப்படுமானால் நாம் விலகி போவதே சரி. பிரகாசத்தை விட்டு இருண்ட பாழடைந்த கிணற்றில் வசிப்பதால் என்ன லாபம்? காட்டுத்தீ எதிர்ப்படுமாகில் அதிலிருந்து தப்பாவிட்டால் நாற்புறமும் சூழ்ந்து பஸ்மமாக்கிவிடும். இவர்கள் பிரத்யக்ஷமாக பாபம் செய்ய

நம்மை அழைக்கிறார்கள். இதை அறிந்திருந்தும் நாம் ஏன் பிரவேசிக்கவேண்டும்? அச்சுதா, இது மட்டுமா, இன்னும் கூறுகிறேன்.

कुलक्षये प्रणश्यन्ति कुलधर्माः सनातनाः ।
धर्मे नष्टे कुलं कृत्स्नमधर्मोऽभिभवत्युत ॥ ४० ॥

குலக்ஷயே ப்ரணச்யந்தி குலதர்மா: ஸநாதநா: ।
தர்மே நஷ்டே குலம் க்ருத்ஸ்நமதர்மோऽபிபவத்யுத ॥

கட்டையோடு கட்டை உராயும்பொழுது அக்னி கிளம்புகிறது. அந்தத் தீ அந்த கட்டையையே எரித்து விடுகிறது. அதுபோல தாயாதிகள் சண்டை போடுவாராகில் அந்த பாபத்தால் குலமே நாசமடைகிறது. குலதர்மம் மறைந்து விடுகிறது. குலத்தில் அதர்மம் மேலோங்கி நிற்கிறது.

अधर्माभिभवात्कृष्ण प्रदुष्यन्ति कुलस्त्रियः ।
स्त्रीषु दुष्टासु वार्ष्णेय जायते वर्णसंकरः ॥ ४१ ॥

அதர்மாபிபவாத் க்ருஷ்ண ப்ரதுஷ்யந்தி குலஸ்த்ரிய: ।
ஸ்த்ரீஷு துஷ்டாஸு வார்ஷ்ணேய ஜாயதே வர்ண ஸங்கர: ॥

அப்பொழுது நன்மை தீமையைப்பற்றி எவன் யோசிப்பான்? எவன் எதைப் பின்பற்றுவது? விதி நிஷேதங்கள் மறைந்து விடுகின்றன. இருட்டில் கையில் விளக்குடன் செல்லும்பொழுது விளக்கு அணைந்தால் சமதள பூமியிலும் தடுமாற வேண்டும். அதுபோல் குலம் நாசமடையுமேயாகில் தொன்று தொட்டுவந்த தர்மம் தடுமாறும். பாபத்தைத்தவிர என்ன மிஞ்சும். யமநியமங்கள் இருந்த இடம் தெரியாமல் போகும். இந்திரியங்கள் சுதந்தரமாக சஞ்சரிக்கும். குலஸ்திரீகள் வியபிசாரம் செய்வார்கள். உத்தமர்கள் அதர்மத்தை ஆச்ரயிப்பார்கள். நான்கு வர்ணங்களும் ஒன்றோடொன்று கலந்துவிடும். ஜாதி தர்மம் வேரோடு பிடுங்கி எறியப்படும். நாற்சந்தியில் எறியப்பட்ட பலி அன்னத்தை காக்கை கொத்துவதைப்போல குலத்தில் நாற்புக்கங்களிலிருந்தும் பாவம் சூழ்ந்துகொள்ளும்.

संकरो नरकायैव कुलघ्नानां कुलस्य च ।
पतन्ति पितरो ह्येषां लुप्तपिण्डोदकक्रियाः ॥ ४२ ॥

ஸங்கரோ நரகாயைவ குலக்நாநாம் குலஸ்ய ச ।
பதந்தி பிதரோ ஹ்யேஷாம் லுப்த பிண்டோதக க்ரியா: ॥

பிறகு குலத்தையும், குலத்தை நாசமடையச் செய்தவர் களையும் நரகம் தானே வந்தடையும். இந்த விதமாக வம்ச விருத்தி வீழ்ச்சி அடையும்பொழுது சுவர்க்கம் சென்ற முன்னோர்கள் வீழ்ச்சியடைவார்கள். நித்ய ஸ்நானம், சந்தி முதலிய கிரியைகள் நடக்காது. வைச்வதேவம் முதலிய கிரியைகள் நடக்காது. பிறகு யார், யாருக்கு திலதர்ப்பணம் பண்ணுவது? பித்ருக்கள் என்ன பண்ணுவார்கள்? அவர் களும் தன் குலத்துடன் நாசமடைவார்கள். காலின் நுனியில் பாம்பு கடித்தாலும் தலை வரை விஷம் ஏறுவதுபோல் இந்த பாபம் ப்ரஹ்மலோகம் வரை பரவும். அங்கு உள்ள நம் முன்னோர்களும் வீழ்ச்சியடைவர். (42)

दोषैरेतैः कुलघ्नानां वर्णसंकरकारकैः ।
उत्साद्यन्ते जातिधर्माः कुलधर्माश्च शाश्वताः ॥ ४३ ॥

उत्सन्नकुलधर्माणां मनुष्याणां जनार्दन ।
नरके नियतं वासो भवतीत्यनुशुश्रुम ॥ ४४ ॥

अहो बत महत्पापं कर्तुं व्यवसिता वयम् ।
यद्राज्यसुखलोभेन हन्तुं स्वजनमुद्यताः ॥ ४५ ॥

தோஷைரேதை: குலக்நாநாம் வர்ணஸங்கர காரகை: ।
உத்ஸாத்யந்தே ஜாதிதர்மா: குலதர்மாஸ்ச சாச்வதா: ॥

உத்ஸந்ந குல தர்மாணும் மனுஷ்யாணும் ஜநார்தன ।
நரகே நியதம் வாஸோ பவதீத்யநுசுச்ரும ॥

அஹோ பத மஹத் பாபம் கர்தும் வ்யவஸிதா வயம் ।
யத் ராஜ்ய ஸுக லோபேந ஹந்தும் ஸ்வஜநமுத்யதா: ॥

ஹே தேவா, இதனுல் மற்ருெரு பாபமும் உண்டாகிறது. இந்த துஷ்டர்களின் ஸங்கத்தால் லோகாசாரமும் பிரஷ்டமடைகிறது, அகஸ்மாத்தாக தன் வீட்டில் பிடித்த தீ கிராமம் பூராவும் பரவுவதுபோல். அந்தந்த குலத்தின் சேர்க்கையால் யார் யார் சம்பந்தப்படுகிருர்களோ அவர்களும் இதன் நிமித்தமாக பீடிக்கப்படுகிருர்கள். இந்தவிதமாக உலகமே நரகத்தை அனுபவிக்கிறது. இந்த பாவத்திற்கு யுகமுடிவிலும் விடுதலே கிடையாது. இதுமாதிரி பாவங்களை இதுவரை காதினுல் மட்டும் கேட்டிருந்தோம் இப்பொழுது நேரில் அனுபவிக்கிருேம். இந்த ஹ்ருதயம் கல்லா என்ன? என்ன செய்வது? ராஜ்ய சுகத்தில் இச்சை வைத்து எல்லாம் ஒரு க்ஷணத்தில் நாசமாகிவிட்டது. இதை அறிந்திருந்தும் இந்த தோஷத்திற்கு ஆளானேன். இந்த சிரேஷ்ட ஜனங்களை கொல்லவே இவர்களை வரவழைத்து நிறுத்திவைத்திருக்கிருேம். ஐயோ! இனி நமக்கு வேறென்ன வேண்டும்? (43-45)

**यदि मामप्रतीकारमशस्त्रं शस्त्रपाणयः ।**
**धार्तराष्ट्रा रणे हन्युस्तन्मे क्षेमतरं भवेत् ॥ ४६ ॥**

***யதி மாமப்ரதீகாரம் அசஸ்த்ரம் சஸ்த்ர பாணய: |***
***தார்தராஷ்ட்ரா ரணே ஹந்யுஸ் தன் மே க்ஷேமதரம் பவேத் ||***

அதனுல் இவர்களை ஜெயித்து சுகித்திருப்பதைவிட அஸ்திரத்தை கீழே போட்டு இவர்களின் பாணத்தின் அடிகளைப் பொருத்துக்கொள்வேன். பிறகு என்ன வேண்டுமானுலும் வரட்டும். ஏன்? மரணமே வரட்டுமே! நான் இந்த பாவத்தைச் செய்ய விரும்பவில்லை. (46)

**संजय उवाच —**

**एवमुक्त्वार्जुनः संख्ये रथोपस्थ उपाविशत् ।**
**विसृज्य सशरं चापं शोकसंविग्नमानसः ॥ ४७ ॥**

***ஸஞ்ஜய உவாச: —***

***ஏவமுக்த்வார்ஜுந: ஸங்க்யே ரதோபஸ்த உபாவிசத் |***
***விஸ்ருஜ்ய ஸசரம் சாபம் சோக ஸம்விக்ந மாநஸ: ||***

சஞ்ஜயன் திருதராஷ்டிரனிடம் கூறுகிறார். "ரணபூமியில் அர்ஜுனன் இவ்வாறு கூறினான். வருத்தத்தாலும், விலக்க முடியாத சோகத்தாலும் மோகமடைந்து ரதத்திலிருந்து கீழே குதித்தான். ஒரு ராஜகுமாரன் ராஜ்யத்தை விட்டு விலகியதும் எப்படி மானத்தை இழக்கிறானோ அதுபோலவும், சூரியன் ராகுவால் விழுங்கப்பட்டவுடன் எப்படி பிரகாசஹீனனாக ஆகிறானோ, அதுபோலவும்; அல்லது இப்படியும் கூறலாம். மஹா சித்திகளின் மோஹத்தால், தபசில் வீழ்ச்சியடைந்த யோகி எப்பொழுது தன் ஸ்தானத்திலிருந்து வீழ்கிறானோ, அப்பொழுது காமம் அவனை அடைந்து மேலும் தீனனாக்குவது போலவும், அர்ச்சுனன் ரதத்திலிருந்து குதித்தான். தளர்ச்சி அடைந்தான். தனுஸ்பாணங்களை எறிந்தான். அவனுடைய தைரியம் அவனைவிட்டு விலகியது. கண்ணீர் ஆறாய்ப் பெருகியது. சஞ்ஜயன் கூறுகிறார். — ஹே ராஜா, கேளுங்கள். விஷயம் இதுதான். இந்த நிலையில் வைகுண்ட நாதனான ஸ்ரீ கிருஷ்ணன் துக்கத்தோடு கூடிய அர்ச்சுனனுக்கு எந்த விதமாக பரமார்த்தத்தைப் போதிக்கிறாரோ அந்த பூரண கதையை மேலே கூறுகிறேன். குதூகலத்துடன் கேளுங்கள்.

முதல் அத்யாயம் முற்றும்.

# இரண்டாவது அத்யாயம்

संजय उवाच —

तं तथा कृपयाविष्टमश्रुपूर्णाकुलेक्षणम् ।
विषीदन्तमिदं वाक्यमुवाच मधुसूदनः ॥ १ ॥

ஸஞ்ஜய உவாச;—

**தம் ததா க்ருபயாவிஷ்டம் அச்ரு பூர்ணாகுலேக்ஷணம் ।**
**விஷீதந்தமிதம் வாக்யம் உவாச மதுஸூதந: ॥**

ஸஞ்ஜயன் ராஜாவிடம் கூறினான்: கேளுங்கள். பார்த்தன் சோகத்தினால் வியாகூலமடைந்து அழ ஆரம்பித்தான். தன் குடும்பம் முழுவதையும் அங்கு பார்த்து அவனுக்கு அன்பு பெருகியது அதனால் அவன் உள்ளம் எவ்வாறு உருகியது தெரியுமா? உப்பை ஜலத்தில் போட்டது போலவும், மேகம் வாயுவினால் கலைவது போலவும் இருந்தது. அவன்

தைரியசாலிதான். இருந்தாலும் அவன் உள்ளம் உருகியது. ராஜஹம்ஸம் சகதியில் அகப்பட்டதுபோல இரக்கத்தினால் உள்ளம் மலின மடைந்தவனாகத் தோன்றினான். இவ்விதமாக பாண்டு புத்திரன் மோஹ வசப்பட்டவனாக இருப்பதைப் பார்த்து ஸ்ரீ கிருஷ்ணன் என்ன கூறினார் தெரியுமா? (1)

श्रीभगवानुवाच —

कुतस्त्वा कश्मलमिदं विषमे समुपस्थितम् ।
अनार्यजुष्टमस्वर्ग्यमकीर्तिकरमर्जुन ॥ २ ॥

ஸ்ரீபகவான் உவாச: —

குதஸ்த்வா கச்மலமிதம் விஷமே ஸமுபஸ்திதம் ।
அநார்யஜுஷ்டமஸ்வர்க்யமகீர்த்திகரமர்ஜுந ॥

பகவான் கூறுகிறார்: முதலாவது இங்கு பார். உனக்கு இந்த இடத்தில் இப்படிச் செய்வது உசிதமாகப்படுகிறதா? நீ எப்படிப்பட்டவன்! இங்கு என்ன செய்கிறாய்? உனக்கு என்ன வந்துவிட்டது இப்பொழுது? எந்தக் காரியத்தில் குறை ஏற்பட்டுவிட்டது? எதற்காக வருத்தமடைகிறாய்? நீயோ அனுசிதமான விஷயங்களை மனதாலும் நினைக்க மாட்டாயே! ஒருபொழுதும் தைரியத்தைக் கைவிட மாட்டாயே! உன் பெயரைக் கேட்ட உடனேயே அபகீர்த்தி ஓடிப்போய்விடுமே! நீ வீரத்தன்மைக்கு இருப்பிடமல்லவா? க்ஷத்திரியர்களுக்கு அரசன். உன் வீரம் மூன்று உலகங்களிலும் பிரஸித்தமடைந்திருக்கிறது. பகவான் சங்கரரை யுத்தத்தில் ஜெயித்திருக்கிறாய். நிவாத கவசர்களை இருந்த இடம் தெரியாமல் அழித்தாய். உன் கீர்த்தியைப் புகழ்ந்து இந்த ஸம்பவத்தை கந்தர்வர்கள் பாட்டாகப் பாடுகிறார்கள். மூன்று லோகமும் உன் பலத்திற்கு அற்பமாகத்தானே தோன்றுகிறது. அளவுகடந்த பௌருஷமுடைய அந்த நீ உன் வீரத்தன்மையை இழந்துவிட்டு முகத்தை தொங்கவிட்டுக்கொண்டு அழுதுகொண்டிருக்கிறாய். அர்ஜுனா, கருணையினால் பலவீனமடையலாமா? இருட்டு எங்காவது சூரியனை விழுங்குவது உண்டா? வாயு தேவன் மேகங்களைக்கண்டு பயப்படுவானா? அமிர்தம் எங்காவது மரணமடைந்தது உண்டா? விறகு எங்காவது நெருப்பை அணைத்ததுண்டா? உப்பினால் ஜலம்

உருகுமா? அன்னியப்பொருளின் சேர்க்கையால் காலகூட விஷம் இறந்ததுண்டா? தவளை பாம்பை விழுங்கியதுண்டா? எப்பொழுதாவது சிங்கத்துடன் நரி சண்டையிட்டு ஜெயித்தது உண்டா? உன்னுடைய இந்த நிலைமையைக் கண்டால் மேற்கூறியவைகள் உண்மை என்று எனக்குப்படுகின்றன. அதனால் அர்ஜுனா! உனக்குத் தகுதியில்லாத இந்த எண்ணத்தை மனதை விட்டு அகற்று. தைரியத்தைக் கச்சையாகக் கட்டிக்கொள். முட்டாள்தனத்தைவிடு. வில்லையும் அம்பையும் கையிலெடு. ரணகளத்தில் ஜீவகாருண்யம் எதற்கு? நீ அறிவாளியானால் யோசித்துப்பார். யுத்த பூமியில் தயைக்கு இடமில்லை. அது இதுவரை அடைந்த கீர்த்தியையும் நாசமடையச் செய்கிறது. இதனால் ஒரு வீரன் பரலோகத்தை இழக்கிறான். (2)

क्लैब्यं मा स्म गमः पार्थ नैतत्त्वय्युपपद्यते ।
क्षुद्रं हृदयदौर्बल्यं त्यक्त्वोत्तिष्ठ परंतप ॥ ३ ॥

**க்லைப்யம் மா ஸ்ம கம: பார்த்த நைதத்**
**த்வய்யுபபத்யதே ।**
**க்ஷுத்ரம் ஹ்ருதய தௌர்பல்யம்**
**த்யக்த்வோத்திஷ்ட பரந்தப ॥**

அர்ஜுனா, சோகமடையாதே. தைரியத்தை கைவிடாதே. மோகமடையாதே. இதுவரை சம்பாதித்த கீர்த்தியை நாசம் அடையச் செய்யாதே. உன்னுடைய நன்மையை நன்றாக யோசித்துப்பார். காருண்யம் யுத்த பூமியில் காட்டப்படத் தக்கதன்று. இன்று தான் இவர்கள் உங்கள் பந்துக்களானார்களா? இவ்விஷயத்தை நீ முன்பே யோசித்திருக்கவேண்டும். அல்லது இவர்கள் தான் உன்னை அறியாதவர்களா? வீணாக ஏன் குட்டை குழப்புகிறாய்? அல்லது இப்பொழுது தான் முதல் முதல் யுத்தத்திற்கு வருகிறாயா? உங்களுக்குள் வெகு நாளாக மூண்டு கொண்டிருந்த பகை நிமித்தம் தானே இது? இன்று உனக்கு என்ன வந்தது? இந்த இரக்கம் உனக்கு எப்படி வந்தது என்பது எனக்கு தெரியவில்லையே? ஆனால் அர்ஜுனா உனக்கு இது கெடுதல். இந்த மோஹத்தினால் உன் கீர்த்தி அழியும். இகலோக நன்மையுடன் பரலோக சுகமும் அழிந்து விடும். இதய பலவீனம் நன்மைக்குக் காரணமாகாது. அதுவும்

யுத்த சமயத்தில். இது க்ஷத்திரியர்களுக்கு பாதாள வீழ்ச்சி. இவ்விதமாக க்ருபாளுவான ஸ்ரீ கிருஷ்ணர் நானுவிதமாக அவனை அறிவுறுத்தினர். இதைக் கேட்டுவிட்டு அர்ஜுனன் கூறத்தொடங்கினன். (3)

अर्जुन उवाच —

कथं भीष्ममहं संख्ये द्रोणं च मधुसूदन ।
इषुभिः प्रतियोत्स्यामि पूजार्हावरिसूदन ॥ ४ ॥

அர்ஜுந உவாச —

கதம் பீஷ்மமஹம் ஸங்க்யே த்ரோணம் ச மதுஸூதந ।
இஷுபிः ப்ரதியோத்ஸ்யாமி பூஜார்ஹாவரிஸூதந ॥

ஹே தேவ இவ்வளவு சொல்லவேண்டிய அவசியமேயில்லை. முதலாவது நீங்களே இந்த யுத்தத்தைப்பற்றிச் சற்று சிந்தித்து பாருங்கள். இது யுத்தமல்ல. இது கொலைக்களம். இதில் முயற்சிப்பதே பாபம். இது நம் கையினலேயே பெரியோர்களை வெளிப்படையாகக் கொல்வதாகும். மாதா பிதாக்களை பூஜை செய்தல் வேண்டும். எல்லாவிதத்திலும் அவர்களை சந்தோஷப் படுத்துவார்களா? அல்லது கொல்வார்களா? ஸாது மஹாத்மாக்களை வணங்குவார்களா அல்லது நம் நாவினலேயே தூஷிப்பார்களா? பின் இவர்களோ நம் குலகுருக்கள். நம்மால் பூஜிக்கத்தக்கவர்கள். பீஷ்மரும் துரோணரும் எனக்கு கொஞ்சமாகவா உபகாரம் செய்திருக்கிருர்கள். எவர்களிடம் கனவிலும் பகை காட்டக்கூடாதோ அவர்களை பிரத்யக்ஷமாக எப்படிக் கொல்வது? இதைவிட இந்த உயிரே போய்விட்டால் என்ன? இன்று இவர்களுக்கு என்ன நேர்ந்துவிட்டது? இவர்களிடம் நான் கற்ற அஸ்திர வித்தையை இவர்களிடமேயா உபயோகிப்பது? துரோணரால் உருவகப்படுத்தப்பட்டவன் நான். அவரே எனக்கு தனுர் வேதம் கற்பித்தார். அவரைக் கொல்வதா அதற்கு பிரதியுபகாரம்? யாருடைய வரத்தால் லாபமடைந்தேனே அவரையே கொல்ல நான் என்ன பஸ்மாஸுரனு? (4)

गुरूनहत्वा हि महानुभावान् श्रेयो भोक्तुं भैक्ष्यमपीह लोके ।
हत्वार्थकामांस्तु गुरूनिहैव भुञ्जीय भोगान्रुधिरप्रदिग्धान् ॥

குருநஹத்வா ஹி மஹாநுபாவான்
ச்ரேயோ போக்தும் பைக்ஷ்மபீஹ லோகே ।
ஹத்வார்த்த காமாம்ஸ்து குருநிஹைவ
புஞ்ஜீய போகான் ருதிர ப்ரதிக்தான் ॥

ஹே தேவ, ஸமுத்ரம் கம்பீரமானது. அது மேல் பார்வைக்குத்தான். ஆனுல் துரோணரைப்பற்றி கேட்டால் என் மனதில் குழப்பமே கிடையாது. ஆகாசத்தை அளந்து முழம் போட்டு விடலாம். ஆனுல் துரோணரின் ஹ்ருதயத்தின் ஆழத்தையும், கம்பீரத்தையும் அளவிட முடியாது. அமிர்தம் கெட்டுவிடும். காலவசப்பட்ட வஜ்ராயுதமும் ஒடிந்து விடும். ஆனுல் துரோணரின் மனதைக்கலக்க முயற்சிப்பது வீணே. அன்பிற்கு மாதாவை உவமை கூறுகிருேம். ஆனுல் அன்புடன் க்ருபையும் உருவெடுத்து வந்தவர் துரோணர். கருணைக்கு இருப்பிடம். குணங்களின் சுரங்கம். வித்தைக்கு ஸாகரம். இதைத்தவிர நம்மிடம் அளவற்ற க்ருபையுடையவர். இப்பொழுது சொல்லுங்கள். இவரைக்கொல்ல மனதாலும் நினைப்பது எப்படி ? இவ்வித சிரேஷ்ட ஜனங்களை யுத்தத்தில் கொல்லுவதாவது ? பிறகு நாம் ராஜ்ய சுகத்தை அனுபவிப்பதாவது ? இந்த ஜென்மத்தில் இதை எண்ணமாட்டேன். இது மிகவும் சிக்கலான விஷயம் ஸ்வாமி. 'இதைவிடப் பெரிய ராஜ்ய போகம் கிடைக்கட்டும், அல்லது கிடைக்காமல் இருக்கட்டும். பிச்சை வாங்க நேரட்டும், நாட்டை விட்டு விலக நேரட்டும், பர்வத குகைகளில் வாசம் செய்ய நேரட்டும். ஆனுலும் இவர்கள்மேல் ஆயுதங்களைப் பிரயோகிப்பது என்பது முடியாது. ஹே தேவ, கூர்மையாகத் தீட்டப்பட்ட அம்புகளால் இவர்கள் இதயத்தைப் பிளந்து, அதிலிருந்து பெருகும் ரத்தத்தினுல் நனைந்த ராஜ்யபோகத்தைத் தேடுவதா ! வேண்டவே வேண்டாம். ரத்தத்தில் நனைந்த பொருளை எப்படி உபயோகப்படுத்துவது ? அதனுல் இந்த விஷயம் எனக்கு ஒத்து வராது. அர்ஜுனன் இவ்வாறு கூறி நிறுத்தினுன். ஆனுல் பகவானுக்கு இது பிடிக்கவேயில்லை. அர்ஜுனன் இதை ஊகித்து எழுந்தான். திரும்பவும் சொல்லத் தொடங்கினுன்— 'என்ன தேவா, என் வார்த்தைகளை நீங்கள் கவனித்ததாகவே தெரியவில்லையே ? (5)

न चैतद्विद्मः कतरन्नो गरीयो यद्वा जयेम यदि वा नो जयेयुः ।
यानेव हत्वा न जिजीविषामस्तेऽवस्थिताः प्रमुखे धार्तराष्ट्राः ॥

ந சைதத் வித்ம: கதரத் நோ கரீயோ
யத்வா ஜயேம யதி வா நோ ஜயேயு: ।
யாநேவ ஹத்வா ந ஜிஜீவிஷாம:
தேவஸ்திதா: ப்ரமுகே தார்தராஷ்ட்ரா: ॥

என் மனதில் உள்ளதைச் சொல்லிவிட்டேன். இதில் நன்மை எதுவோ அது தங்களுக்கே தெரியும். யாரிடம் பகை என்று சொல்வதைவிட பிராணனை விடுவது மேலோ அவர்கள் யுத்தத்தின் நிமித்தம் வந்து நிற்கிறார்கள். இப்பொழுது அவர்களைக் கொல்லவா அல்லது ஓடிவிடவா? இதைத் தாங்கள் தான் சொல்லவேண்டும். (௬)

कार्पण्यदोषोपहतस्वभावः पृच्छामि त्वां धर्मसंमूढचेताः ।
यच्छ्रेयः स्यान्निश्चितं ब्रूहि तन्मे शिष्यस्तेऽहं शाधि मां त्वां प्रपन्नम् ॥

கார்பண்யதோஷோபஹதஸ்வபாவ:
ப்ருச்சாமி த்வாம் தர்மஸம்மூடசேதா: ।
யச்ச்ரேய: ஸ்யாந்நிச்சிதம் ப்ரூஹி தந்மே
சிஷ்யஸ்தேऽஹம் சாதி மாம் த்வாம் ப்ரபந்நம் ॥

எப்படிச் செய்தால் நலம் என்று யோசித்துப் பார்த்தால் தெரியவில்லை. வியாகூலத்தால் மனம் குழம்பியிருக்கிறது. இருட்டு படரும்பொழுது எப்படி கண்களின் ஜோதி போய் விடுகிறதோ, பக்கத்திலிருக்கும் பொருள்களையும் காணமுடிய வில்லையோ, அப்படி என் நிலை இருக்கிறது. என் மனம் பிரமை அடைந்து இருக்கிறது. அதனால் தாங்கள் எது நன்மை என்று கருதுகிறீர்களோ அதைச்சொல்லுங்கள். தாங்களே என் நண்பர். தாங்களே என் குரு, சகோதரர், பிதா, தாங்களே என் இஷ்ட தெய்வம். ஆபத்காலத்தில் எப்பொழுதும் எங்களை ரக்ஷிப்பவர். குரு சிஷ்யனை விலக்குவது தகாது. சமுத்திரம் நதியைத் தியாகம் செய்ய முடியுமா? அன்னை தள்ளிவிட்டால் பின்னே துணை யார் வரமுடியும்? எனக்கு எல்லாவிதத்திலும் தாங்களே உற்றவர். நான் இதுவரை சொன்னது ஒன்றும்

த்ங்களுக்குப் பிடிக்கவில்லையாயினும் எது உசிதமோ, எது தர்மத்திலிருந்து விலகாததோ, அதைச் சொல்லுங்கள். (7)

न हि प्रपश्यामि ममापनुद्याद्यच्छोकमुच्छोषणमिन्द्रियाणाम् ।
अवाप्य भूमावसपत्नमृद्धं राज्यं सुराणामपि चाधिपत्यम् ॥ ८ ॥

ந ஹி ப்ரபச்யாமி மமாபநுத்யாத்
யச்சோகமுச்சோஷணமிந்த்ரியாணும் ।
அவாப்ய பூமாவஸபத்நம்ருத்தம்
ராஜ்யம் ஸுராணுமபி சாதிபத்யம் ॥

இதையெல்லாம் நினைத்து என் மனம் சோகத்தில் ஆழ்ந்திருக்கிறது. அது தங்கள் உபதேசத்தால்தான் தெளிவாகும். உலகம் முழுவதையும் ஆள்வதற்கு அதிகாரம் கிடைத்தாலும், இந்திர பதவி கிடைத்தாலும் இந்த மனமோஹம் என்னை விட்டொழியாது, நெருப்பில் வறுக்கப்பட்ட விதையை எத்தனை நல்ல வளமுள்ள பூமியில் விதைத்தாலும் சரி, எவ்வளவு தண்ணீர் பாய்ச்சினுலும் சரி அது முளைக்குமா? ஆயுள் முடிவடையும்பொழுது மருந்தால் என்ன பயன்? அப்பொழுது பகவந்நாமாம்ருதமே உபயோகப்படும், ராஜ்ய போகத்தில் என் மனம் செல்லவில்லை, ஹே க்ருபாநிதே! தங்கள் கருணையே என் வாழ்வின் ரகஸியம்.

அர்ச்சுனன் அப்படிச் சொல்லும்பொழுதே அவன் மனம் சற்று தெளிந்தது போலாயிற்று. ஆனுல் ஒரு கணத்தில் மோஹ லஹரியின் மூழ்கிவிட்டான். உஹூம், அது மோஹ லஹரியா? அல்ல. மஹாமோஹமான காலஸர்ப்பம், அவனைக் கடித்துவிட்டது. அந்த காலஸர்ப்பம் சமயம்பார்த்துக் கொண்டே இருந்தது. அர்ச்சுனனுடைய ஹ்ருதயகமலத்தில் கருணை நிரம்பியதைப் பார்த்துக்கொண்டே இருந்தது. உடனே மர்மஸ்தானத்தில் கடித்துவிட்டது. அதன் விஷ அலைகள் அல்லவா பரவிவிட்டது? இக்கட்டான இந்த சமயத்தைப் பார்த்து ஸ்ரீ ஹரி என்னும் மந்திரவாதி தன் பார்வையாலேயே விஷத்தை நீக்கவல்லவர், ஓடோடியும் வந்து சேர்ந்தார். வியாகூலமடைந்த அர்ச்சுனனுக்குப் பக்கத்தில் வந்து தன் க்ருபையினுலேயே அவனை ரக்ஷிக்கத் தொடங்குகிருர், இதை அறிந்துதான் அர்ச்சுனனை காலசர்ப்பம் கடித்தது என்று

வர்ணித்தேன். அச்சமயம் மேகம் சூரியனை மறைப்பதைப் போல் மோஹம் அர்ச்சுனனை மறைத்துவிட்டது. கோடை காலத்தில் பர்வதம் காட்டுத் தீயினால் வெந்து சாம்பலாவதைப் போல், அர்ச்சுனன் துக்கம் என்ற தீயினால் வெந்துகொண்டு இருந்தான். அதனாலேயே மேகம்போன்ற நீலமணிவண்ணன், கருணை என்ற அமிர்த ஜலத்தால் நிரப்பப்பட்டவரான ஸ்ரீ கோபாலன் என்ற மகாமேகம் அங்கு வந்துசேர்ந்தது. அவருடைய அழகிய புன்சிரிப்புள்ள பல்வரிசை மின்னலைப் போல் ஜ்வலித்தது. கம்பீரமான வாக்கு மேகத்தைப்போல் முழங்கிற்று. எப்படி அந்த உதார மேகம் வர்ஷித்தது என்பதையும், அதனால் அர்ச்சுனன் என்னும் பர்வதம் எப்படி சீதளமடைந்தது என்பதையும், பிறகு அர்ச்சுனன் என்னும் பர்வதத்தில் ஞானம் என்னும் தளிர் எப்படி முளைத்தது என்பதையும் உங்கள் மனம் சாந்தமடையும் பொருட்டுக் கேளுங்கள். (8)

सञ्जय उवाच —

एवमुक्त्वा हृषीकेशं गुडाकेशः परंतपः ।
न योत्स्य इति गोविन्दमुक्त्वा तूष्णीं बभूव ह ॥ ९ ॥

ஸஞ்ஜய உவாச :—

ஏவமுக்த்வா ஹ்ருஷீகேசம் குடாகேச: பரந்தப: ।
ந யோத்ஸ்ய இதி கோவிந்தமுக்த்வா தூஷ்ணீம்
பபூவ ஹ ॥

இப்பொழுது சஞ்ஜயர் திருதராஷ்டிரனைப் பார்த்துக் கூறுகிறார், ஹே அரசனே! பிறகு அர்ஜுனன் சோகத்தினால் வியாகூலமடைந்து என்ன கூறினான் என்பதைக் கேளுங்கள், அவன் துக்கத்தோடு கூறுகிறான் — "தாங்கள் என்னை கட்டாயப் படுத்தாதீர்கள். நான் நிச்சயம் இவர்களுடன் யுத்தம் செய்ய முடியாது." இப்படிக் கூறிவிட்டு அசையாமல் இருந்த அர்ஜுனனைப் பார்த்து ஸ்ரீ கிருஷ்ணனுக்கு மிகுந்த ஆச்சரியம் உண்டாயிற்று. (9)

तमुवाच हृषीकेशः प्रहसन्निव भारत ।
सेनयोरुभयोर्मध्ये विषीदन्तमिदं वचः ॥ १० ॥

தமுவாச ஹ்ருஷீகேச: ப்ரஹஸந்நிவ பாரத ।
ஸேநயோருபயோர் மத்யே விஷீதந்தமிதம் வச: ॥

பகவான் தனக்குத்தானே கூறிக்கொண்டார்— "இச்சமயம் இவன் என்ன செய்யப்போகிறுன். ஒன்றும் தெரியவில்லையே, என்ன செய்வது? எப்படி இவனுக்கு அறிவுறுத்துவது? இவன் எப்படி தைரியம் அடைவான்" என்று. மாந்திரீகன் க்ரஹ நிலையை பரீக்ஷிப்பது போலவும், முற்றிய நோய் குணமடையாதது கண்டு வைத்தியன், இந்த இக்கட்டான நிலையில் அமிர்தத்தைப்போன்ற எந்த மருந்தால் நோயை குணப்படுத்த முடியும் என்று யோசிப்பதுபோலவும் இந்த இரண்டு சேனைகளுக்கு மத்தியில் ஸ்ரீகிருஷ்ணன் அர்ஜுனனின் மனப்பிராந்தியைப் போக்குவதற்கு யோசிக்கத் தொடங்கினுர், அவருக்கு மிக்கக் கோபம் வந்தது. ஆனுல் தாயின் கோபத்திலும் பிரேமை நிரம்பியிருக்குமல்லவா? மருந்தின் கசப்பிலும் அமிர்தத்தன்மை இருக்குமல்லவா? அதைக் குணத்தினுல் தான் அறியமுடியுமே தவிர மேல் பார்வையினுல் அறியமுடியாதல்லவா? அதேபோல கிருஷ்ணர் மேல் பார்வைக்கு கோபித்துக்கொண்டதுபோல் தோன்றினுலும் இதயத்தில் அன்பு ரஸம் பெருகும் சொற்களைச் சொல்லத் தொடங்கினுர். (10)

श्रीभगवानुवाच —

अशोच्यानन्वशोचस्त्वं प्रज्ञावादांश्च भाषसे ।
गतासूनगतासूंश्च नानुशोचन्ति पण्डिताः ॥ ११ ॥

ஸ்ரீ பகவான் உவாச:—

அசோச்யாநந்வசோசஸ்த்வம் ப்ரக்ஞாவாதாம்ஸ்ச பாஷஸே ।
கதாஸூநகதாஸூம்ஸ்ச நாநுசோசந்தி பண்டிதா: ॥

என்ன நீ இப்படி நடுவில் ஆட்டம் ஆடத் தொடங்குகிறுய்? உன்னை ஞானி என்று சொல்லிக்கொள்கிறுய்? ஆனுல் அக்ஞானம் விட்டபாடில்லை. ஏதாவது கூறலாமென்றுல், எனக்கு நீதி கற்பிக்கத் தொடங்குகிறுய். பிறவிக்குருடனுக்கு பைத்தியமும் பிடித்துவிட்டால் இஷ்டப்படி ஓடுவதைப்போல் இருக்கிறது உன் செய்கை, நீ உன்னையே நன்றுக அறியு

வில்லையே. எல்லாமறிந்ததுபோல் இந்த கௌரவர்களைப்பற்றி பிரமாதமாகப் பேசுகிறாயே. இதைப்பார்த்தால் எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது.

இதைச்சொல் அர்ஜுனா, இந்த மூன்று உலகங்களையும் நீயா ரக்ஷிக்கிறாய்? அநாதிகாலம் தொட்டு உலகம் செயல்படுகிறது என்பது பொய்யா? ஒரே பொருள் ஸகல ஜீவராசிகளையும் உற்பத்தி செய்ய வல்லது என்பதை நீ அறியாயா? உண்மையில் நீயா உலகை சிருஷ்டி செய்திருக்கிறாய்? நீயே இதை அழிக்க வல்லவன் என்று நினைக்கிறாயா? நீ பிரமையடைந்து அகங்காரத்துடன் நினைக்கிறாய், இந்த கௌரவர்களை நாம் கொல்லாவிட்டால் சிரஞ்ஜீவிகளாக அவர்கள் இருப்பார்கள் என்று. இந்த ஜகம் பூராவும் மரணமடைகிறதென்றும் நீ ஒருவனே கொல்பவன் என்றும் நினைக்கிறாயா? இம்மாதிரியான முட்டாள் தனத்தை மனத்திலிருந்து அகற்று இந்த உலகம் அநாதிகாலம் தொட்டு இருக்கிறது உற்பத்தியும் அழிவும் இதன் இயற்கை குணம். அப்படியிருக்க இவ்விஷயத்தில் ஏன் சோகப்பட வேண்டும்? மடத்தனத்தினால் இது உன் அறிவிற்கு எட்டவில்லை. எதைப்பற்றி கவலை வேண்டாமோ அதைப்பற்றி கவலை கொள்கிறாய். எனக்கு நியாயத்தை எடுத்துச்சொல்கிறாய். விவேகிகள் உற்பத்தி நாசங்களைக்கண்டு ஒருபோதும் சோகத்தையடைய மாட்டார்கள். இது வீண் பிராந்தி. (11)

न त्वेवाहं जातु नासं न त्वं नेमे जनाधिपाः ।
न चैव न भविष्यामः सर्वे वयमतः परम् ॥ १२ ॥

**ந த்வேவாஹம் ஜாது நாஸம் ந த்வம் நேமே ஜநாதிபா:।**
**ந சைவ ந பவிஷ்யாம: ஸர்வே வயமத: பரம் ॥**

அர்ச்சுனா, கேள்! இந்த உலகத்தில் நீ, நான், இவர்கள் யாவரும் இப்படியே இருப்போம். இல்லாவிடில் அழிவோம், இவ்விரண்டும் சரியல்ல. மாயையினாலேயே பிறப்பதுபோலவும், அழிவது போலவும் தோன்றுகிறது, ஆனால் எது உண்மையில் பரம்பொருளோ அது அழியாது. காற்றினால் தண்ணீர் அசைகிறது. அலைகள் கிளம்புகின்றன. இதில் எங்கு உற்பத்தி, எங்கு நாசம்? காற்று நின்றதும் தண்ணீர் ஸ்திரமாகிவிடுகிறது. அப்பொழுது எது லயமடைகிறது? யோசித்துப்பார். (12)

देहिनोऽस्मिन्यथा देहे कौमारं यौवनं जरा ।
तथा देहान्तरप्राप्तिर्धीरस्तत्र न मुह्यति ॥ १३ ॥

தேஹிநோऽஸ்மின் யதா தேஹே கௌமாரம்
யௌவநம் ஜரா ।
ததா தேஹாந்தர ப்ராப்திர் தீரஸ் தத்ர ந முஹ்யதி ॥

கேள்! சரீரம் ஒன்றே. ஆனாலும் அதில் அநேக பேதங்கள் உள்ளன. இது நாம் கண்கூடாகப் பார்க்கும் விஷயம், முதலாவது பாலபருவம். பிறகு யௌவனம். பிறகு மூப்பு, என்று ஒவ்வொரு பருவமாக வந்து நாசமடைகிறது. ஆனால் பருவங்கள் மாறுவதால் தேகத்திற்கு நாசமில்லை, அதுபோல சரீரம் மாறிக்கொண்டே போனாலும் அதிலுள்ள சைதன்யத்திற்கு மாறுதலில்லை என்பதை எவன் அறிகிறானோ, அவன் இந்தப் பிரமையினால் ஏற்படும் துக்கத்தை அனுபவிக்கமாட்டான். (13)

मात्रास्पर्शास्तु कौन्तेय शीतोष्णसुखदुःखदाः ।
आगमापायिनोऽनित्यास्तांस्तितिक्षस्व भारत ॥ १४ ॥

மாத்ரா ஸ்பர்சாஸ்து கௌந்தேய சீதோஷ்ண
ஸுகதுக்கதா: ।
ஆகமாபாயிநோऽநித்யாஸ் தாம்ஸ்திதிக்ஷஸ்வ பாரத ॥

மனிதன் இந்திரியங்களுக்கு அடிமையாக இருப்பதுதான் இந்த அக்ஞானத்திற்குக் காரணம். இந்திரியங்கள் அந்தக்கரணத்தை ஆகர்ஷிக்கின்றன. அந்தக்கரணம் விஷயபோகங்களை விரும்புகின்றது. அதனால்தான் மோகமும் சுகதுக்கங்களும் ஏற்படுகின்றன. விஷயங்களின் சேர்க்கை சித்தத்தை மோகத்தில் மூழ்கடிக்கின்றது. விஷயங்கள் நிலையற்றவை. அதனால் அவைகளால் சில சமயம் துக்கமும், சில சமயம் சுகமும் ஏற்படுகின்றன.

நிந்தையும், புகழும் கேவலம் சப்தவிஷயம் அது காது ஆகிற இந்திரியத்தின் மூலமாக சித்தத்தில் பகையையும் மகிழ்ச்சியையும் உண்டாக்குகிறது. மிருதுத் தன்மையும், கடினத் தன்மையும் ஸ்பர்சத்தின் குணங்கள், அதனால் 'த்வக்' என்று கூறப்படும் தோல் இந்திரியம் இவைகளின் ஸ்பர்சத்

தினல் சுகத்தையும், வலியையும் அடைகிறது. அதைப் போலவே பயமும், அழகும் கண்ணைப் பொருத்த விஷயங்கள். அவை கண்களின் மூலமாக சுகத்தையும் துக்கத்தையும் உண்டாக்குகின்றன. மணமும் நாற்றமும் கந்தத்தின் விஷயங்கள். இதை நுகரும்பொழுது மூக்கிற்கு சுகமும் துக்கமும் உண்டாகிறது. அதைப்போலவே ரசமும் இரண்டு விதம். அதனல் நாக்கிற்குத் திருப்தியும், அதிருப்தியும் உண்டாகின்றன. ஆகவே விஷயங்களின் சேர்க்கை வீழ்ச்சிக்கு காரணமாகிறது. மனிதன் இந்திரியங்களுக்கு அடிமையாக இருப்பதால் அவனுக்குக் குளிர், வெப்பம் முதலியவைகளால் துக்கப்படவேண்டியிருக்கிறது. இந்திரியங்களின் சுபாவம் இப்படித்தான். அவைகளுக்கு விஷயத்தைத்தவிர வேறென்றும் ரசிக்காது. இந்த விஷயங்கள் கானல் ஜலத்தைப்போன்றும் ஸ்வப்னத்தில் தோன்றும் யானையைப் போன்றும் அநித்யம். அதனல் ஹே தனுர்தர! இவைகளின் சேர்க்கையைத் தியாகம் செய். (14)

यं हि न व्यथयन्त्येते पुरुषं पुरुषर्षभ ।
समदुःखसुखं धीरं सोऽमृतत्वाय कल्पते ॥ १५ ॥

யம் ஹி ந வ்யதயந்த்யேதே புருஷம் புருஷர்ஷப ।
**ஸமதுக்க ஸுகம் தீரம் ஸோऽம்ருதத்வாய கல்பதே ॥**

இந்த விஷய சுகத்திற்கு வசப்படாதவர்களுக்கு சுகதுக்கமும் அதனல் ஏற்படும் கர்ப்பவாசமும் கிடையாது' ஹே பார்த்தா! இந்த இந்திரியங்களின் வசப்படாதவர்கள் நித்யரூபர்கள் என்று எண்ணு. (15)

नासतो विद्यते भावो नाभावो विद्यते सतः ।
उभयोरपि दृष्टोऽन्तस्त्वनयोस्तत्त्वदर्शिभिः ॥ १६ ॥

**நாஸதோ வித்யதே பாவோ நாபாவோ வித்யதே ஸத: ।
உபயோரபி த்ருஷ்டோऽந்தஸ்த்வநயோஸ்
தத்வதர்சிபி: ॥**

ஹே அர்ஜுன புத்திமான்கள் எதை அறிகிருர்களோ, அந்த விஷயத்தை கூறுகிறேன் கேள். இந்த ஜகத் ரூபமான உபாதியில் எங்கும் நிறைந்த சைதன்யம் மறைந்து இருக்கிறது,

த்த்வஞானிகள் இதை அறிகிறார்கள். ஜலமும் பாலும் ஒன்று கலந்திருந்தால் ராஜஹம்ஸம் அதைப் பிரித்துவிடுகிறது. தட்டான் தங்கத்தை ஸ்புடம் வைத்து சுத்தத்தங்கத்தையும், அசுத்தத்தையும் வேறாக்குகிறான், கவனமாக தயிர் கடைவதால் வெண்ணெ கிடைக்கிறது. அதுபோல உமியுடன் கூடிய தானியத்தைப் புடைத்தால் கனபதார்த்தமான தானியம் தங்குகிறது. மெல்லியதான உமி பறக்கிறது. அதுபோல் சிந்தனை செய்யும் ஞானிகளுக்கு பிரபஞ்சம் லேசாகவும், வேறாகவும் தோன்றுகிறது. தத்துவம் ஒன்றே அவர்களின் மனதில் நிற்கின்றது. அதனால் அழியும் வஸ்துக்களை அவர்கள் உண்மை என்று நம்புவதில்லை. சத், அசத்தை பிரிக்கும் அறிவு அவர்களிடம் இருக்கிறது. (16)

**अविनाशि तु तद्विद्धि येन सर्वमिदं ततम् ।**
**विनाशमव्ययस्यास्य न कश्चित्कर्तुमर्हति ॥ १७ ॥**

**அவிநாசி து தத் வித்தி யேந ஸர்வமிதம் ததம் ।**
**விநாசமவ்யயஸ்யாஸ்ய ந கஸ்சித் கர்துமர்ஹதி ॥**

ஸாரத்தையும், அஸாரத்தையும் சிந்தனை செய்துபார்த்தால் ஸாரமில்லாதது பிரமை என்றும், ஸாரமே ஸத்யம் என்றும் அறிவோம். எந்த ஒரு தத்வத்தால் இம்மூவுலகமும் பரவி இருக்கின்றதோ, அந்த தத்துவத்திற்கு நாமம், ரூபம், சின்னம், வடிவம் ஒன்றும் கிடையாது. எது எங்கும் நிறைந்திருக்கிறதோ. ஜனனம், மரணம் அற்றதோ, அதை ஒருக்காலும் அழிக்கமுடியாது. (17)

**अन्तवन्त इमे देहा नित्यस्योक्ताः शरीरिणः ।**
**अनाशिनोऽप्रमेयस्य तस्माद्युध्यस्व भारत ॥ १८ ॥**

**அந்தவந்த இமே தேஹா நித்யஸ்யோக்தா: சரீரிண: ।**
**அநாசிநோऽப்ரமேயஸ்ய தஸ்மாத் யுத்யஸ்வ பாரத ॥**

இந்த ஸ்தூலசரீரம் அழியக்கூடியது. அதனால், ஹே பாண்டுகுமாரா! நீ யுத்தம் செய். (18)

**य एनं वेत्ति हन्तारं यश्चैनं मन्यते हतम् ।**
**उभौ तौ न विजानीतो नायं हन्ति न हन्यते ॥ १९ ॥**

ய ஏநம் வேத்தி ஹந்தாரம் யஸ்சைநம் மந்யதே ஹதம் ।
உபௌ தௌ ந விஜாநீதோ நாயம் ஹந்தி ந
ஹன்யதே ॥

நீ தேகத்தில் அபிமானம் வைத்து, ஸ்தூலக் கண்களால் பார்த்து நான் கொல்பவன், அவர்கள் என்னால் கொல்லப் படுபவர்கள் என்று எண்ணுகிறாய். ஆனால் அர்ச்சுனா! உனக்கு உண்மை தத்துவம் தெரியவில்லை. உண்மையை சிந்தித்துப் பார்த்தால் நீ கொல்பவனும் இல்லை, அவர்கள் கொல்லப் படுபவர்களும் இல்லை, (19)

न जायते म्रियते वा कदाचि-
न्नायं भूत्वा भविता वा न भूयः ।
अजो नित्यः शाश्वतोऽयं पुराणो
न हन्यते हन्यमाने शरीरे ॥ २० ॥

ந ஜாயதே ம்ரியதே வா கதாசித்
நாயம் பூத்வா பவிதா வா ந பூய: ।
அஜோ நித்ய: சாஸ்வதோऽயம் புராணோ
ந ஹந்யதே ஹந்யமாநே சரீரே ॥

वेदाविनाशिनं नित्यं य एनमजमव्ययम् ।
कथं स पुरुषः पार्थ कं घातयति हन्ति कम् ॥ २१ ॥

வேதாவிநாசிநம் நித்யம் ய ஏநமஜமவ்யயம் ।
கதம் ஸ புருஷ: பார்த்த கம் காதயதி ஹந்தி கம் ॥

கனவில் காண்பது கனவில்தான் உண்மையாக இருக்கிறது. நனவில் இல்லை. அதைப்போல மாயையை அறி. நீ வீணாக மோஹம் அடைகிறாய். எப்படி உன்னுடைய நிழலில் எய்த அம்பினால் தேகத்தில் காயம் ஏற்படாதோ, எப்படி தண்ணீர் நிரம்பிய இடத்தில் தெரியும் சூரிய பிம்பம் ஜலத்தை கவிழ்த்த பின்பு நஷ்டம் அடைந்தாலும் அதனால் சூரியனுக்கு அழிவு ஏற்படாதோ, எப்படி மடத்தை இடித்தாலும் அதிலுள்ள ஆகாசம் நாசம் அடைவதில்லையோ, அதுபோல சரீரம் நாசம் அடைந்தாலும் ஆத்மஸ்வரூபம் ஒருபோதும் நாசமடைவதில்லை.

அதனால் வீணாக மோஹ வசப்பட்டு இதை உண்மை என்று எண்ணாதே. (20-21)

वासांसि जीर्णानि यथा विहाय
नवानि गृह्णाति नरोऽपराणि ।
तथा शरीराणि विहाय जीर्णा-
न्यन्यानि संयाति नवानि देही ॥ २२ ॥

வாஸாம்ஸி ஜீர்ணாநி யதா விஹாய
நவாநி க்ருஹ்ணாதி நரோऽபராணி ।
ததா சரீராணி விஹாய ஜீர்ணா-
ந்யந்யாநி ஸம்யாதி நவாநி தேஹீ ॥

மலினமடைந்த வஸ்திரத்தை அவிழ்த்துவிட்டுப் புது வஸ்திரத்தை அணிவதுபோல ஆத்மா நோயில் மலினமடைந்த தேகத்தைவிட்டுப் புது தேகத்தையடைகிறது. (22)

नैनं छिन्दन्ति शस्त्राणि नैनं दहति पावकः ।
न चैनं क्लेदयन्त्यापो न शोषयति मारुतः ॥ २३ ॥

अच्छेद्योऽयमदाह्योऽयमक्लेद्योऽशोष्य एव च ।
नित्यः सर्वगतः स्थाणुरचलोऽयं सनातनः ॥ २४ ॥

நைநம் சிந்தந்தி சஸ்த்ராணி நைநம் தஹதி பாவக: ।
ந சைநம் க்லேதயந்த்யாபோ ந சோஷயதி மாருத: ॥

அச்சேத்யோயமதாஹ்யோயமக்லேத்யோசோஷ்ய ஏவ ச ।
நித்ய: ஸர்வகத: ஸ்தாணுரசலோயம் ஸநாதந: ॥

ஆத்மாவிற்கு உத்பத்தி கிடையாது. நித்யமானது. உபாதியில்லாதது மிகவும் சுத்தமானது, அதை ஆயுதங்களால் சேதிக்கமுடியாது. பிரளய ஜலத்தாலும் இதை நனைக்கவோ மூழ்கடிக்கவோ முடியாது. தீயால் எரிக்க முடியாது. வாயுவின் உலரவைக்கும் சக்தியும் இதன்

விஷயத்தில் வீணே. இது மூன்று காலங்களிலும் கொல்லப் படாதது. அசைவற்றது. நித்யமானது. எங்கும் நிறைந்தது. எப்பொழுதும் பூர்ணமானது. (23-24)

अव्यक्तोऽयमचिन्त्योऽयमविकार्योऽयमुच्यते ।
तस्मादेवं विदित्वैनं नानुशोचितुमर्हसि ॥ २५ ॥

**அவ்யக்தோயமசிந்த்யோயமவிகார்யோயமுச்யதே ।**
**தஸ்மாதேவம் விதித்வைநம் நாநுசோசிதுமர்ஹஸி ॥**

ஹே கிரீடி! தர்க்க சாஸ்திரத்தால் இதைக் காணமுடியாது. யோகிகள் த்யானத்தால் இதையறிய எப்பொழுதும் ஆவலுடன் இருக்கிறார்கள். அவர்களால் இதை மனதாலும் அடைய முடியாது. அன்ய சாதனைகளாலும் அடையமுடியாது. இது சிரேஷ்டமானது, எல்லையற்றது, மூன்று குணங்களும் அற்றது, அநாதி, விகாரமற்றது. ஆனால் எல்லா பொருள்களும் இதன் உருவமே. எங்கும் இருப்பது இந்த ஆத்மாதான் என்று நினைத்தாயானால் உன் எல்லா சோகமும் எளிதில் தீர்ந்துவிடும்.

अथ चैनं नित्यजातं नित्यं वा मन्यसे मृतम् ।
तथापि त्वं महाबाहो नैवं शोचितुमर्हसि ॥ २६ ॥

**அத சைநம் நித்யஜாதம் நித்யம் வா மந்யஸே ம்ருதம் ।**
**ததாபி த்வம் மஹாபாஹோ நைவம் சோசிதுமர்ஹஸி ॥**

அல்லது, உலகம் அழியக்கூடியது என்றே ஒப்புக் கொள்வோம். ஆனால் எதற்காக நாம் சோகப்படவேண்டும்? கங்கா ஜலப் பிரவாகம் போல் உத்பத்தி, ஸ்திதி லயம் எப்பொழுதும் நடந்துகொண்டே இருக்கிறது. கங்கா ஜலம் உத்பத்தி ஸ்தானத்தில் இருக்கிறது, சமுத்திரத்திலும் சேர்ந்துகொண்டே இருக்கிறது. மத்தியில் பிரவாகம் ஓடிக்கொண்டே இருப்பதைக் காண்கிறோம். அதைப்போல பிராணிகளிடத்தில் இம் மூன்று நிலைகளும் ஒன்றுக்குப்பின் ஒன்றாக தடங்கல் இல்லாமல் வந்துகொண்டே இருக்கின்றன. ஆனால் இந்த உலக விஷயங்களுக்கெல்லாம் நீ வருந்த வேண்டிய அவசியமில்லை. ஏனென்றால் அனாதி காலமாக ஸ்ருஷ்டிக் கிரமம் இவ்விதமே நடந்து கொண்டிருக்கிறது. ஜனன மரணத்திற்குட்பட்ட உலகைப்

பார்த்துவிட்டு நீ மேற்கூறியவாறு ஞான நோக்குடன் பார்க்க வேண்டாம். ஆனாலும் நீ சோக மடையக் காரணமில்லை. ஏனென்றால் ஜனன மரணத்தை நீக்க முடியாது. (26)

**जातस्य हि ध्रुवो मृत्युर्ध्रुवं जन्म मृतस्य च ।**
**तस्मादपरिहार्येऽर्थे न त्वं शोचितुमर्हसि ॥ २७ ॥**

**ஜாதஸ்ய ஹி த்ருவோ ம்ருத்யுர் த்ருவம் ஜந்ம ம்ருதஸ்ய ச ।**
**தஸ்மாதபரிஹார்யேர்த்தே ந த்வம் சோசிதுமர்ஹஸி ॥**

எது பிறக்கிறதோ அது அழிகிறது. எது அழிகிறதோ அது பிறக்கிறது. இந்த விதமாக இந்த உலகம் கடிகார முள் போல் சுற்றுகிறது. சூரிய உதயமும் அஸ்தமனமும் தானே ஏற்படுவதுபோல ஜனன மரணமும் தானே ஏற்படுகிறது. மஹா பிரளயகாலத்தில் மூவுலகமும் நாசமடைகிறது. ஆனால் சைதன்யத்தின் ஆதியும் அந்தமும் நாசமடைகிறதில்லை. இதை நீ ஒப்புக்கொண்டாயானால் ஏன் வருந்தவேண்டும்? ஹே தனுர்தரா, வேண்டுமென்றே அஞ்ஞானத்தை வரவழைத்துக் கொள்கிறாயா? இது வேறு விஷயம். இதை அநேக விதமாக சிந்தனை செய்து பார்த்தால் உனக்குத் துக்கப்படுவதற்கு அவகாசம் இல்லை என்று தெரியும். (27)

**अव्यक्तादीनि भूतानि व्यक्तमध्यानि भारत ।**
**अव्यक्तनिधनान्येव तत्र का परिदेवना ॥ २८ ॥**

**அவ்யக்தாதீநி பூதாநி வ்யக்த மத்யாநி பாரத ।**
**அவ்யக்த நிதநாந்யேவ தத்ர கா பரிதேவநா ॥**

உலகில் பிறக்கும் பிராணிகள் எல்லாம் பிறப்பதற்கு முன் வடிவம் இல்லாமல் இருக்கின்றன, பிறந்த பிறகே உருவை அடைகின்றன, இவைகள் நாசமடையும்பொழுது மற்றொன்றாக ஆவதில்லை, தன் பழைய நிலையையே அடைகின்றன. இந்த பிறப்பாகிய நடுவில் இருக்கும் ஸ்திதி நித்திரை செய்பவனின் கனவுபோலாகும். இந்த எல்லா வடிவமும் பிரும்மஸ்வரூபத்தில் மாயையால் தோற்றமளிக்கிறது. காற்றின் மோதலால் ஜலத்தில் அலைகள் ஏற்படுவதுபோலவும், தங்கம் மணிதனின் கைத்

திறனுல் நகைகளாக உருவெடுக்கப்படுவது போலவும் மாயையால் இந்த ஸம்ஸாரம் ஏற்படுகின்றதென்றறி. ஆகாயத்தில் தோன்றும் மேகபடலத்திற்கு சமானமான இதற்கு மூலமே கிடையாது. இதற்காக நீ ஏன் வருந்துகிருய்? அக்ஷயமான சைதன்ய வஸ்துவை நினை. அதில் ஆசை வைப்பதால் சாது மஹாத்மாக்கள் விஷயத்திலிருந்து விடுபடுகிருர்கள். இதற்காகவே இவர்கள் வீட்டைத் துறந்து வனவாசிகளாகிருர்கள், இதை அறிவதற்கே ரிஷி முனிகள் பிரம்மசர்யம் முதலிய தவங்களைச் செய்கிருர்கள். (28)

आश्चर्यवत्पश्यति कश्चिदेन-
माश्चर्यवद्वदति तथैव चान्यः ।
आश्चर्यवच्चैनमन्यः शृणोति
श्रुत्वाप्येनं वेद न चैव कश्चित् ॥ २९ ॥

ஆஸ்சர்யவத் பச்யதி கஸ்சிதேன-
மாஸ்சர்யவத் வததி ததைவ சான்ய: ।
ஆஸ்சர்யவச்சைநமந்ய: ச்ருணோதி
ச்ருத்வாப்யேனம் வேத ந சைவ கஸ்சித் ॥

அந்தக்கரணத்தை நிர்மலமாக்கி உள்நோக்குடன் பார்க்கும் பொழுது சம்சாரத்தின் குழப்பம் மறைந்துவிடும். எதனுடைய கீர்த்தியைப் புகழ்ந்து புகழ்ந்து சித்தத்தில் அன்பு பெருகி எப்பொழுதும் எல்லையில்லாத கம்பீரமான பதத்தை அடைகிருர்களோ, எதைக் கேட்டுக் கேட்டு சாந்தி அடைகிருர்களோ, எதனுல் தேகாபிமானம் விடப்படுகிறதோ, எதை அனுபவித்தால் அந்த உருவாக ஆகிருேமோ அதைச் சிந்தனை செய். நதிப் பிரவாகம் முழுவதும் சமுத்திரத்தில் விழுகிறது. ஆனுல் சமுத்திரத்தில் லயமாகாமல் திரும்பிவருவதில்லை. அதுபோல எந்த ஸ்வரூபத்தில் லயமானதும் யோகீஸ்வரர் புத்தி அதே ரூபமாகிறதோ, எதைச் சிந்தனைசெய்தால் புனர்ஜென்மம் அடைகிறதில்லையோ அதை நினை. (29)

देही नित्यमवध्योऽयं देहे सर्वस्य भारत ।
तस्मात्सर्वाणि भूतानि न त्वं शोचितुमर्हसि ॥ ३० ॥

**தேஹீ நித்யமவத்யோ ऽயம் தேஹே ஸர்வஸ்ய பாரத ।**
**தஸ்மாத் ஸர்வாணி பூதாநி ந த்வம் சோசிதுமர்ஹஸி ॥**

இது எல்லா தேகத்திலும் இருக்கிறது. எதனாலும் காயப் படுத்த முடியாததாக இருக்கிறது. இந்த ஜகத் ரூபத்தை தியானம்செய், எல்லா சம்பவங்களும் அதன் இயற்கையாலேயே நடக்கின்றன. சோகமடைவது உசிதம் தானா என்று இப் பொழுது சொல். பார்த்தா! ஏனோ உன் சித்தத்தில் இந்த வார்த்தைகள் பிடிபட மாட்டேனென்கிறது? எந்த விதமாக யோசித்துப்பார்த்தாலும் உன் சோகம் அவசியம் என்று தோன்றவில்லை. (30)

**स्वधर्ममपि चावेक्ष्य न विकम्पितुमर्हसि ।**
**धर्म्याद्धि युद्धाच्छ्रेयोऽन्यत्क्षत्रियस्य न विद्यते ॥ ३१ ॥**

**ஸ்வதர்மமபி சாவேக்ஷ்ய ந விகம்பிதுமர்ஹஸி ।**
**தர்ம்யாத்தி யுத்தாச்ச்ரேயோ ऽந்யத் க்ஷத்ரியஸ்ய ந வித்யதே ॥**

இன்னும் ஏன் விசாரப்படுகிறாய்? இன்னும் என்ன யோசனை செய்கிறாய்? மனிதனுடைய அடிப்படை தத்வமான ஸ்வதர்மத்தை மறந்து விட்டாயா? இந்த கௌரவர்கள் நாச மடைந்தாலும் சரி, உனக்கு ஏதாவது நேர்ந்து விட்டாலும் சரி, இந்த யுகமே முடிந்து விட்டாலும் சரி, ஸ்வதர்மம் கட்டாயம் பிழைத்திருக்கும். அதை தியாகம் செய்யக்கூடாது. அதை விட்டு விட்டு உனக்கு இப்பொழுது ஏற்பட்டிருக்கும் இரக்கத் தினால் நீ மோக்ஷத்திற்குப் போவாயா? அர்ஜுனா! உன் னுடைய இந்த இரக்கம் யுத்த சமயத்தில் ஏற்பட்டது அனுசிதம். பசுவின் பால் பத்தியத்திற்கு எடுத்தது. ஆனால் ஒன்பதுநாட் காய்ச்சலில் விஷத்திற்கு சமானம், மற்றவர்களுடைய கர்மத்தை செய்வதால் தன் ஹிதம் நாசமடையும். அதனால் ஜாக்கிரதையாக இரு. வீணாக ஏன் வியாகூலமடைகிறாய்? உன் தர்மத்தைச்செய். அதனால் எக்காலத்திலும் உனக்கு தோஷம் ஏற்படாது. கையில் விளக்கை வைத்துக்கொண்டு இருட்டில் நடந்தால் இடறி விழவேண்டாம். உன் தர்மத்தை நீ அனுஷ்டித்தால் எல்லா விருப்பமும் பூர்த்தி அடையும். இதோ பார். க்ஷத்திரியர்களாகிய உங்களுக்கு யுத்தத்தை தவிர

வேறொன்றும் நல்லது அன்று. நிர்மல உள்ளத்துடன் எதிரும் புதிருமாக நின்று ஒருவரை ஒருவர் தாக்கி யுத்தம் செய்வதே உசிதம். பிரத்யக்ஷ அனுபவமான இந்த விஷயத்திற்கு வீண் வார்த்தை எதற்கு? (31)

यदृच्छया चोपपन्नं स्वर्गद्वारमपावृतम् ।
सुखिनः क्षत्रियाः पार्थ लभन्ते युद्धमीदृशम् ॥ ३२ ॥

யத்ருச்சயா சோபபந்நம் ஸ்வர்கத்வாரமபாவ்ருதம் ।
ஸுகிந: க்ஷத்ரியா: பார்த்த லபந்தே யுத்தமீத்ருசம் ॥

ஹே அர்ச்சுனா! இது யுத்தமல்ல. உன் பாக்யம் விழித்தெழுந்து இருக்கிறது என்று நினை. அல்லது எல்லா தர்மங்களுக்கும் முடிவு ஏற்பட்டிருக்கிறது என்று நினை இதை யுத்தம் என்று ஏன் கூறவேண்டும்? உன் பிரதாபத்தினால் ஸ்வர்க்கத்வாரமும் திறந்து வரவேற்கிறது என்று கொள்வாயாக அல்லது உன் குணங்களின் பெருமையைக் கேட்டு மிக்க ஆசையுடன் கீர்த்தி என்னும் பெண் ஸ்வயம்வர மாலையுடன் எதிரில் வந்திருக்கிறாள் என்று நினை. க்ஷத்திரியர்கள் மிகவும் புண்யம் செய்திருந்தால் தான் இதுபோல் யுத்தம் செய்யும் சந்தர்ப்பம் கிட்டும், வழியில் போய்க்கொண்டிருப்பவனுக்கு அகஸ்மாத்தாக சிந்தாமணி கிடைப்பது போலும், அல்லது கொட்டாவி விட வாய் திறந்ததும் அகஸ்மாத்தாக அமிர்தம் வாயில் விழுந்ததுபோலும் உனக்கு யுத்தம் செய்ய வாய்ப்பு கிட்டி இருக்கிறது. (32)

अथ चेत्त्वमिमं धर्म्यं संग्रामं न करिष्यसि ।
ततः स्वधर्मं कीर्तिं च हित्वा पापमवाप्स्यसि ॥ ३३ ॥

அத சேத் த்வமிமம் தர்ம்யம் ஸங்க்ராமம் ந கரிஷ்யஸி ।
தத: ஸ்வதர்மம் கீர்த்திம் ச ஹித்வா பாபமவாப்ஸ்யஸி ॥

இதை விட்டுவிட்டாயானால் நடக்காத விஷயத்தைப்பற்றி சிந்தித்துக் கொண்டிருந்தாயானால் உன் தீங்கை நீயே தேடிக் கொள்கிறாய். இன்று இந்த ரணகளத்தில் ஆயுதங்களைப் போட்டுவிட்டு ஓடினாயானால் முன்னோர்களால் சம்பாதித்து வைக்கப்பட்ட கீர்த்தியை இழந்துவிட்டாய் என்று உலகம்

உன்னைத் தூற்றும். இவ்விதமாக அடைந்த கீர்த்தி நாசமாகும். உலகம் நிந்திக்கும். மஹாபாபம் உன்னைத் தேடி வந்தடையும். பதியை இழந்த ஸ்திரீ எப்பொழுதும், எங்கும் அவமானம் அடைவதுபோல ஸ்வதர்மத்தை இழந்த உன் வாழ்க்கையும் இருக்கும். ரணகளத்தில் விழுந்த பிணங்களை நான்கு புறமும் கழுகுகள் கொத்துவதைப்போல் ஸ்வதர்மத்தை இழந்த மனிதனை மஹாபாபங்கள் சூழ்ந்துகொள்ளும். (33)

**अकीर्तिं चापि भूतानि कथयिष्यन्ति तेऽव्ययाम् ।**
**संभावितस्य चाकीर्तिर्मरणादतिरिच्यते ॥ ३४ ॥**

**அகீர்த்திம் சாபி பூதாநி கதயிஷ்யந்தி தேऽவ்யயாம் ।**
**ஸம்பாவிதஸ்ய சாகீர்த்திர் மரணாததிரிச்யதே ॥**

அதனால் ஸ்வதர்மத்தை இழந்தாயானால் பாபத்தை அடைவாய். கல்பகோடி காலம்வரை அபகீர்த்தி நிலைத்திருக்கும். அபகீர்த்திக்கு ஆளாகாதவரைதான் ஒரு ஞானி ஜீவித்திருக்க முடியும். இப்பொழுது சொல். யுத்தத்தை விட்டுச்செல்வாயா! உனக்குப் பொறுமை இல்லை என்பது எனக்குத் தெரியும். ஆனால் இளகிய மனதுடன் நீ பின்வாங்குவாயானால் இங்கு கூடியிருக்கும் இவர்களெல்லாம் என்ன நினைப்பார்கள்? உன்னைப் போகவிடுவார்களா? உன்னை நான்கு பக்கமும் சூழ்ந்துகொள்வார்கள். உன்மேல் அம்பு மழை பொழிவார்கள். அப்பொழுது ஏ பார்த்தா! இந்த ஜீவகாருண்யத்தாலும் உனக்கு விடிவு கிடையாது. பிராணனைப் பணயம் வைத்து இந்த கஷ்டத்தை விட்டு நீ ஓடினாலும்கூட அப்புறம் வாழ்வது மரணத்தைவிட இழிவு. (34)

**भयाद्रणादुपरतं मंस्यन्ते त्वां महारथाः ।**
**येषां च त्वं बहुमतो भूत्वा यास्यसि लाघवम् ॥ ३५ ॥**

**பயாத் ரணாதுபரதம் மம்ஸ்யந்தே த்வாம் மஹாரதா: ।**
**யேஷாம் ச த்வம் பஹுமதோ பூத்வா யாஸ்யஸி லாகவம் ॥**

நீ ஒரு விஷயத்தை யோசித்துப் பார்க்கவில்லை. நீ இங்கு யுத்தத்திற்கு தயாராக வந்திருக்கிறாய். இப்பொழுது ஜீவகாருண்யத்தால் பின்வாங்குவாயானால் ஹே, அர்ஜுனா, உன்

னுடைய இந்த இரக்கத்தை எதிரிகள் உண்மை என்றெண்ணு வார்களா? (35)

अवाच्यवादांश्च बहून्वदिष्यन्ति तवाहिताः ।
निन्दन्तस्तव सामर्थ्यं ततो दुःखतरं नु किम् ॥ ३६ ॥

हतो वा प्राप्स्यसि स्वर्गं जित्वा वा भोक्ष्यसे महीम् ।
तस्मादुत्तिष्ठ कौन्तेय युद्धाय कृतनिश्चयः ॥ ३७ ॥

**அவாச்யவாதாம்ஸ்ச பஹூன் வதிஷ்யந்தி தவாஹிதா:।**
**நிந்தந்தஸ் தவ ஸாமர்த்யம் ததோ துக்கதரம் நு கிம் ॥**

**ஹதோ வா ப்ராப்ஸ்யஸி ஸ்வர்கம் ஜித்வா வா போக்ஷ்யஸே மஹீம் ।**
**தஸ்மாதுத்திஷ்ட கௌந்தேய யுத்தாய க்ருதநிஸ்சய: ॥**

அவர்கள் அர்ஜுனன் பயந்து ஓடிப்போய்விட்டான் என்று சொல்வார்கள். என்ன இது மாதிரி குற்றம் சாட்டுவது நன்ருக இருக்கிறதா? தனுர்தரா! ஜனங்கள் மிக கஷ்டப்பட்டு பிராணனையும் அர்ப்பணித்து கீர்த்தியைப்பெற முயற்சிக்கிருர்கள், அந்தக் கீர்த்தி உன்னை அனுயாசமாக வந்தடைந்திருக்கிறது. இக்கீர்த்தி ஆகாயத்தைப்போல் உவமையற்றது. உன் கீர்த்தியை மூன்று உலகங்களிலும் எல்லா தேசங்களிலும் அரசர்கள் துதி செய்கிருர்கள். அதைக்கேட்டு யமன் முதலியவர்களும் பயப்படுகிருர்கள். உன்னுடைய இந்தக் கீர்த்தி கங்கா ஜலத்தைப்போல் அழகாக நிர்மலமாக இருக்கிறது. அதைப் பார்த்து ஜகத்தில் உள்ள மகா வீரர்கள் எல்லோரும் ஸ்தம்பித்து இருக்கிருர்கள். அப்படிப்பட்ட உன்னுடைய அபார சூரத்தன்மையை பார்த்துவிட்டு பிராண பயத்துடனேயே இந்த கௌரவர்கள் இங்கு கூடியிருக்கிருர்கள். சிம்மத்தின் கர்ஜனை, மதம் பிடித்த யானைக்கு கூட பிரளயகால சப்தத்தை போல நடுக்கம் கொடுக்கிறது. அதைப்போலவே இந்த கௌரவர்களும் உன்னைக்கண்டு பயப்படுகிருர்கள். மலைகள், இடிக்கு பயப்படுவது போலவும், பாம்பு கருடனுக்கு பயப்படுவது போலவும், கௌரவர்கள் உனக்கு பயப்படுகிருர்கள். நீ யுத்தம் செய்யாமல் பின் வாங்கினுயானல் உன் வீரத்தன்மை நீங்கி நீ கோழைத்தன்மை அடைந்ததாகவே கருதுவார்கள், இவர்கள்

உன்னை ஓடவிடுவார்கள் என்று நினைக்கிருயா? பிடித்துவந்து இழிவான சொற்களைக் கூறி உன் முகத்திற்கு எதிரிலேயே அவமானம் செய்வார்கள், அச்சமயம் இதயத்தைக் கசக்கும் வேதனையை அனுபவிப்பதைவிட இப்பொழுது பராக்ரமத்துடன் யுத்தம் செய்வதே மேல். இதில் ஜெயித்தால் உலகை ஆள்வாய். அல்லது சண்டைசெய்து உயிரிழந்தாலும் சொர்க்க சுகத்தை அடைவாய். அதனுல் இந்த விஷயத்தில் முன்பின் யோசிக்காதே. இப்பொழுது வில்லைக் கையில் எடு. சீக்கிரமாக யுத்தம் செய். இந்த தர்மத்தைச் செய்தால் முன்பு செய்த பாபங்களும் நாசமடைகின்றன. உன் மனதில் பாபத்தின் விஷயமாய் எழுந்த எண்ணம் வீண் பிரமை. படகில் ஏறிப் போகும்போது ஒருவன் எங்காவது மூழ்குவானு? ராஜ பாதையில் செல்பவனுக்கு வழி தவறுமா? நடக்கவே தெரியாதவனுக்கானுல் ஒரு வேளை இது ஏற்படலாம். விஷத்தைக் கலந்துகொடுத்த பாலால் மரணம் ஏற்படுவதுபோல, பலனில் ஆசைவைத்து ஸ்வதர்மத்தைச் செய்வாயானுல் தோஷம் ஏற்படும். அதனுல் ஹே பார்த்தா! பலனில் ஆசையை விட்டு, இது க்ஷத்திரிய தர்மம் என்று நினைத்து யுத்தம் செய்தால் ஒருபொழுதும் பாபம் ஏற்படாது. (36-37)

**सुखदु:खे समे कृत्वा लाभालाभौ जयाजयौ ।**
**ततो युद्धाय युज्यस्व नैवं पापमवाप्स्यसि ॥ ३८ ॥**

**ஸுகதுக்கே ஸமே க்ருத்வா லாபாலாபௌ ஜயாஜயௌ ।**
**ததோ யுத்தாய யுஜ்யஸ்வ நைவம் பாபமவாப்ஸ்யஸி ॥**

சுகமாய் இருக்கும்பொழுது மகிழ்ச்சியடையவும் வேண்டாம். துக்கப்படும்பொழுது வருந்தவும் வேண்டாம். லாப நஷ்டத்தை மனதில் எண்ணவே வேண்டாம். யுத்தத்தில் ஜயம் ஏற்படட்டும். அல்லது தேகம் விழட்டும். வரப்போகும் இந்த விஷயத்தைப்பற்றி இப்பொழுதே ஏன் சிந்திக்க வேண்டும்? ஸ்வதர்மத்தை அனுஷ்டிக்கும்பொழுது எந்தவிதமான பலன் ஏற்பட்டாலும் அதைச் சாந்தியுடன் சகித்துக்கொள்ளவேண்டும். மனது இத்துணை திடம் அடைந்தால் பாபம் ஏற்படாது. அதனுல் நீ மோஹத்தை விட்டு யுத்தம் செய். (38)

**एषा तेऽभिहिता सांख्ये बुद्धिर्योगे त्विमां शृणु ।**
**बुद्ध्या युक्तो यया पार्थ कर्मबन्धं प्रहास्यसि ॥ ३९ ॥**

ஏஷா தேऽபிஹிதா ஸாங்க்யே புத்திர் யோகே த்விமாம் ச்ருணு ।
புத்த்யா யுக்தோ யயா பார்த்த கர்மபந்தம் ப்ரஹாஸ்யஸி ॥

இதுவரை உனக்கு சுருக்கமாக ஞானயோகத்தைப்பற்றிக் கூறினேன். இப்பொழுது கர்மயோகத்தைப்பற்றிக் கூறுகிறேன். யாருக்குப் கர்மயோகம் ஏற்படுகிறதோ, அவனைக் கர்மபந்தம் அணுகாது. வஜ்ரகவசம் அணிந்துகொண்டவனை பாணவர்ஷங்கள் என்ன செய்யும்? (39)

नेहाभिक्रमनाशोऽस्ति प्रत्यवायो न विद्यते ।
स्वल्पमप्यस्य धर्मस्य त्रायते महतो भयात् ॥ ४० ॥

நேஹாபிக்ரம நாசோஸ்தி ப்ரத்யவாயோ ந வித்யதே ।
ஸ்வல்பமப்யஸ்ய தர்மஸ்ய த்ராயதே மஹதோ பயாத் ॥

இவ்விதமாக கர்மயோகத்தால் அவனுக்கு இகத்தில் உண்டாகும் சுகத்திற்குப் பங்கம் இல்லாமல் மோக்ஷம் கிடைக்கும். இந்த கர்மயோகத்தினுல் முன் செய்த கர்ம பலனும் ஒழியும். கர்மத்தை ஆதாரமாக வைத்து மனிதன் வ்யவகரிக்கிருன். ஆனுல் கர்மபலனை அவன் எண்ணமாட்டான், எங்காவது மந்திரவாதியை பேய் பிடிக்குமா? நல்ல புத்தியுடன் வாழ்பவனை ஒரு உபாதியாலும் வசப்படுத்த முடியாது. யாதொரு புத்தியில் புண்ய பாபங்கள் லவலேசமும் இராதோ, எது கூர்மையாகவும் சலனமில்லாமலும் இருக்குமோ, முக்குணமும் எந்தப் புத்தியை அணுகாதோ, அந்த புத்தி ஹே அர்ச்சுன! பூர்வ புண்ய வசத்தால் கொஞ்சமாவது ஹ்ருதயத்தில் ப்ரகாசிக்குமானுல் அவன் சம்சாரமாகிய பாவத்தை வேரோடு களைந்துவிடுகிருன், (40)

व्यवसायात्मिका बुद्धिरेकेह कुरुनन्दन ।
बहुशाखा ह्यनन्ताश्च बुद्धयोऽव्यवसायिनाम् ॥ ४१ ॥

வ்யவஸாயாத்மிகா புத்திரேகேஹ குருநந்தன ।
பஹுசாகா ஹ்யநந்தாஸ்ச புத்தயோऽவ்யவஸாயிநாம் ॥

தீப ஜோதி சிறியதாக இருந்தாலும் எவ்வளவு தூரம் ஒளி வீசுகிறது? அதைப்போல் நல்ல புத்தி அல்பமாக

இருக்கிறதென்று எண்ணுதே. ஹே பார்த்தா! சிந்தனையாளர்கள் எந்தவிதத்திலும் இந்த சத்புத்தியை உபேக்ஷிக்கக் கூடாது. சத்வாசனை என்பது சராசர ஜகத்தில் மிக துர்லபம். சாதாரண கூழாங்கற்களைப்போல் ஸ்பர்சவேதிக்கல் சுலபமாகக் கிடைப்பதில்லை. அமிர்தத் துளிகள் தைவயோகத்தால்தான் கிடைக்கும். அதைப்போல் பரமாத்மாவிடம் லயிக்கும் சாதாரண சத்புத்தி மிகவும் துர்லபம், கங்கைக்கு சமுத்திரத்தைத் தவிர அன்னிய ஜலாசயங்கள் எவ்விதம் லக்ஷ்யமில்லையோ அவ்விதமே ஈசுவரனைத் தவிர மற்றவைகள் ஒன்றும் நமக்கு லக்ஷ்யமல்ல, உலகில் இதுவே சத்புத்தி, மற்றபடி நானுவித விகாரங்களை உண்டுபண்ணுவது துர்புத்தி. அதில் அற்ப அறிவாளிகளே ரமிக்கிருர்கள். அதனுல் அந்த மந்தபுத்திகளுக்கு ஸ்வர்க்கம் என்றும், உலகம் என்றும், நரகம் என்றும் மாறி மாறி கதி கிடைக்கிறது, ஆத்மசுகம் ஒரு போதும் கிடைக்காது. (41)

**यामिमां पुष्पितां वाचं प्रवदन्त्यविपश्चितः ।**
**वेदवादरताः पार्थ नान्यदस्तीति वादिनः ॥ ४२ ॥**

**யாமிமாம் புஷ்பிதாம் வாசம் ப்ரவதந்த்யவிபஸ்சித: ।**
**வேத வாத ரதா: பார்த்த நாந்யதஸ்தீதி வாதிந: ॥**

அவர்கள் வேதத்தை ஆதாரமாகக் கொண்டு பேசுவார்கள், கர்மத்தின் மேன்மையை சித்தாந்தமாகக் கொள்கிருர்கள். ஆனுல் கர்ம பலனில் அவர்களுக்கு அளவற்ற ஆசை. உலகில் பிறக்கவேண்டும், யக்ஞம் முதலான சத்கர்மங்களைச் செய்ய வேண்டும், அதற்குப் பலனுக மனேகரமான சுவர்க்கசுகத்தை அனுபவிக்க வேண்டுமென்பதே அவர்கள் கொள்கை. ஹே அர்சுன! இந்த மந்த புத்திகளுக்கு உலகில் இதைவிட வேறு சுகமில்லை என்று எண்ணம். (42)

**कामात्मानः स्वर्गपरा जन्मकर्मफलप्रदाम् ।**
**क्रियाविशेषबहुलां भोगैश्वर्यगतिं प्रति ॥ ४३ ॥**

**காமாத்மாந: ஸ்வர்க்கபரா ஜந்மகர்ம பலப்ரதாம் ।**
**க்ரியா விசேஷ பகுளாம் போகைச்வர்ய கதிம் ப்ரதி ॥**

பார்! அவர்கள் இச்சை வசப்பட்டு சுகபோகங்களில் சித்தத்தை வைத்து கர்மம் செய்கிறார்கள். அநேக விதமாக கிரியைகளை அனுஷ்டிக்கிறார்கள். விதியை ஒப்புக்கொள்ளு கிறார்கள். மிக்க சாதுர்யத்துடன் தர்மாசரணங்களைச் செய்கிறார்கள். (43)

भोगैश्वर्यप्रसक्तानां तयापहृतचेतसाम् ।
व्यवसायात्मिका बुद्धिः समाधौ न विधीयते ॥ ४४ ॥

போகைச்வர்ய ப்ரஸக்தாநாம் தயாபஹ்ருத சேதஸாம் ।
வ்யவஸாயாத்மிகா புத்தி: ஸமாதௌ ந விதீயதே ॥

ஆனால் அவர்கள் மனதில் ஒரே கெட்ட எண்ணம் இருக் கிறது. மனதில் சுவர்க்கத்தில் இச்சை அதிகமாக இருக்கிறது. ஆனால் யக்ஞம் முதலான கர்மங்களின் பலனை அனுபவிப்பவர் ஈசுவரன் என்பதை மறக்கின்றார்கள். கற்பூரத்தைக் குவித்து வைத்து அதைக் கொளுத்துவது போலவும், சுவையான போஜனத்தில் சிறிது காலகூட விஷத்தைக் கலப்பதுபோலவும் தெய்வாதீனமாக கிடைத்த அமிர்தத்தைக் காலால் உதைத்து கொட்டுவது போலவும், இவர்கள் கையில் கிடைத்த கர்மத்தைப் பலனின் ஆசையினால் நாசமாக்கிக்கொள்கிறார்கள். மிக்க சிரமப்பட்டு புண்யத்தைச் சம்பாதிக்கிறார்கள். பின் ஏன் உலகில் விருப்பத்தை வைக்கவேண்டும்? ஆனால் என்ன செய்வது? இந்த விஷயம் அந்த அறைகுறை அறிவுள்ள ஜனங் களுக்கு புத்தியில் எட்டுவதில்லை. சுவையான சமையலைச் செய்து விலைக்கு விற்பவனைப்போல அந்த அவிவேகிகள் தர்மானுஷ்டானத்தைச் செய்து தர்மத்தை இழக்கிறார்கள். இவ்விதமாக ஹே பார்த்தா, வேதத்தின் அர்த்தத்தின் உட் பொருளை அறிவதில் ஆழ்ந்திருக்கும் இந்த ஜனங்களின் மனது எப்பொழுதும் துர்ப்புத்தியிலேயே ஆழ்ந்திருக்கிறது. (44)

त्रैगुण्यविषया वेदा निस्त्रैगुण्यो भवार्जुन ।
निर्द्वन्द्वो नित्यसत्त्वस्थो निर्योगक्षेम आत्मवान् ॥ ४५ ॥

த்ரைகுண்ய விஷயா வேதா நிஸ்த்ரைகுண்யோ பவார்ஜுந ।
நிர்த்வந்த்வோ நித்யஸத்வஸ்தோ நிர்யோக க்ஷேம ஆத்மவான் ॥

இவர்கள் முக்குணங்களிலும் புரளுகிறார்கள். உபநிஷத் முதலானவைகளே சாத்விக தர்மத்தைப்பற்றிக் கூறுகின்றன. ஹே தனுர்தரா! மற்றைய சாஸ்திரங்களெல்லாம் கர்மானுஷ்டானங்களையே வர்ணிக்கின்றன. சுவர்க்கத்தைச் சுட்டிக் காட்டுகிறது. அவைகள் ரஜஸ், தமோ குணம் நிரம்பியவை. அதனால் வேதம் சுக துக்கங்களுக்கே காரணம். அதனால் இதில் உன் சித்தத்தைச் செலுத்தாதே. மூன்று குணங்களையுமே தியாகம் செய். அகங்காரத்தையும், மமகாரத்தையும் விடு. அந்தர்யாமியான ஆத்ம சுகத்தை விடாதே. (45)

**यावानर्थ उदपाने सर्वतः संप्लुतोदके ।**
**तावान्सर्वेषु वेदेषु ब्राह्मणस्य विजानतः ॥ ४६ ॥**

**யாவாநர்த்த உதபாநே ஸர்வத: ஸம்ப்லுதோதகே ।**
**தாவான் ஸர்வேஷு வேதேஷு ப்ராஹ்மணஸ்ய**
**விஜாநத: ॥**

வேதங்கள் எத்தனையோ கூறியிருக்கின்றன, அநேகவிதமாக வேதங்கள் குறிப்பிட்டு இருக்கின்றன. அவைகளில் எது நமக்கு நன்மையைச் செய்கின்றதோ அதை எடுத்துக்கொள்ளவேண்டும். சூரியன் உதயமான உடனே எல்லா வழிகளும் தெளிவாகத் தெரிகின்றன. ஆனால் எல்லா வழிகளிலும் ஒரு மனிதன் ஒரே சமயத்தில் செல்ல முடியுமா? பூமி முழுவதும் ஜலத்தால் நிரம்பினாலும், மனிதன் தனக்கு வேண்டிய மட்டும் தானே அதிலிருந்து ஜலம் எடுத்துக்கொள்ள முடியும்? அதைப்போல் யார் ஞானியோ அவன் வேதாந்தத்தைப்பற்றிச் சிந்தித்து அவைகளிலிருந்து தனக்குப் பிரியமான சாஸ்வதமான ஒன்றைக் கிரஹிக்கிறான். (46)

**कर्मण्येवाधिकारस्ते मा फलेषु कदाचन ।**
**मा कर्मफलहेतुर्भूर्मा ते सङ्गोऽस्त्वकर्मणि ॥ ४७ ॥**

**கர்மண்யேவாதிகாரஸ்தே மா பலேஷு கதாசன ।**
**மா கர்மபல ஹேதுர்பூர்மா தே ஸங்கோऽஸ்த்வகர்மணி ॥**

ஆதலால் ஹே பார்த்தா, நீயும் உன் ஸ்வதர்மத்தைச் செய்வதே உசிதம். நன்றாகச் சிந்தித்துப் பார்த்த பிறகு கர்மத்தைச் செய்வதே உன் கடமை என்று எனக்குப் படுகிறது,

ஆனால் கர்ம பலனில் ஆசை வைக்காதே. நிஷித்தமான கர்மத்தைச் செய்யாதே. ஒருவித காரணமும் இன்றி சத்கர்மத்தைச் செய்ய முயலுவாயாக. (47)

योगस्थः कुरु कर्माणि सङ्गं त्यक्त्वा धनञ्जय।
सिद्ध्यसिद्ध्योः समो भूत्वा समत्वं योग उच्यते ॥ ४८ ॥

யோகஸ்த்த: குரு கர்மாணி ஸங்கம் த்யக்த்வா
தனஞ்ஜய ।
ஸித்த்யஸித்த்யோ: ஸமோபூத்வா ஸமத்வம் யோக
உச்யதே ॥

பலனில் இச்சை வைக்காமல் மனோநியமத்துடன் கர்மத்தைச் செய். ஆனால் நீ ஆரம்பித்த கர்மம் தெய்வச் சித்தத்தினால் நன்றாக பலித்துவிட்டால் அதைப்பற்றி மகிழ்ச்சி அடையாதே. ஆனால் எந்தக் காரணத்தினாலாவது கர்மசித்தி ஆகவில்லையென்றால் துக்கத்தால் சோகமடையாதே. கர்மம் செய்து செய்து அது சித்தியானால், சந்தேகமில்லை, அது நன்மைக்கே. ஒருக்கால் சித்தியாகவில்லை என்றால் ஆனதாகவே நினைத்துக்கொள்ளேன். எத்தனை விதமான கர்மங்களைச் செய்ய உன் மனதில் தோன்றுகிறதோ அவ்வளவையும் ஈசுவரனிடம் அர்ப்பணித்துவிட்டு சகஜமாக பரிபூரணமாகிவிட்டோம் என்று நினைத்துக்கொள். இதைப்போன்ற நல்லவை, கெட்டவை ஆகின்ற கர்ம விஷயத்தில் மனோதர்மம் சமத்வத்தை அடையும் பொழுது அதுவே யோகஸ்திதி என்று சாது ஜனங்கள் புகழ்கின்றார்கள். (48)

दूरेण ह्यवरं कर्म बुद्धियोगाद्धनञ्जय ।
बुद्धौ शरणमन्विच्छ कृपणाः फलहेतवः ॥ ४९ ॥
बुद्धियुक्तो जहातीह उभे सुकृतदुष्कृते ।
तस्माद्योगाय युज्यस्व योगः कर्मसु कौशलम् ॥ ५० ॥

தூரேண ஹ்யவரம் கர்ம புத்தியோகாத் தனஞ்ஜய ।
புத்தௌ சரணமன்விச்ச க்ருபணா: பலஹேதவ: ॥

புத்தியுக்தோ ஜஹாதீஹ உபே ஸுக்ருத துஷ்க்ருதே ।
தஸ்மாத் யோகாய யுஜ்யஸ்வ யோக: கர்மஸு
கௌசலம் ॥

ஹே அர்ஜுனா, எங்கு மனமும் புத்தியும் ஒன்று சேருகிறதோ, எங்கு சித்தம் சமத்வத்தை அடைகின்றதோ, அதுவே யோகநிலை. இந்த புத்தி யோகத்தை அநேக விதங்களாகப் பரிசீலனை செய்து பார்த்தால் கர்ம யோகத்தின் யோக்யதை எத்துணை குறைவு என்பது தெரியவரும். ஆனால் கர்மம் அவசியம் செய்யவேண்டும். அப்பொழுதே இந்த யோகசித்தி ஏற்படும். கர்மம் செய்துவிட்டு அதன்பின் ஏற்படும் நிலையே யோகஸ்திதி யாகும். அதனால் நீ புத்தி யோகத்தில் நிலைத்து நில். மனதில் ஏற்படும் பலனின் ஆசையை திரஸ்கரித்துவிடு. புத்தியோகத்தை அப்யசிக்கின்றவர்களே சம்சாரகடலைத் தாண்டுகிறார்கள். அவர்களே, உலகம் சுவர்க்கம் இவைகளில் சம்பந்தப்பட்ட பாபபுண்யங்களிலிருந்து விடுபடுகிறார்கள். (49-50)

कर्मजं बुद्धियुक्ता हि फलं त्यक्त्वा मनीषिणः ।
जन्मबन्धविनिर्मुक्ताः पदं गच्छन्त्यनामयम् ॥ ५१ ॥

**கர்மஜம் புத்தி யுக்தா ஹி பலம் த்யக்த்வா மனீஷிண: ।**
**ஜன்ம பந்த விநிர்முக்தா: பதம் கச்சந்த்யநாமயம் ॥**

ஆனால் அவர்கள் பின்னும் கர்மத்தைச் செய்கிறார்கள். பின்னும் கர்மபலத்தின் இச்சை அவர்களைத் தொடுவதுகூட இல்லை. அவர்களுடைய ஜனன மரணமும் நாசமடைகின்றன. இந்த புத்தி யோகத்துடன் கூடியவர்கள் ஆனந்தமாக அழிவில்லாத நிலையை அடைகிறார்கள். (51)

यदा ते मोहकलिलं बुद्धिर्व्यतितरिष्यति ।
तदा गन्तासि निर्वेदं श्रोतव्यस्य श्रुतस्य च ॥ ५२ ॥

**யதா தே மோஹகலிலம் புத்திர் வ்யதிதரிஷ்யதி ।**
**ததா கந்தாஸி நிர்வேதம் ச்ரோதவ்யஸ்ய ச்ருதஸ்ய ச ॥**

அதனால் ஹே பார்த்தா, நீ மோஹத்தை விட்டு விட்டு மனத்தை வைராக்யத்தில் செலுத்தினையானால் நீயும் இப்படியாவாய். அப்பொழுது பூரண ஞானம் வரும் உன் மனம் தானாகவே இச்சை இல்லாமல் ஆகிவிடும். ஒன்றை அறிய வேண்டும் என்றாவது கடந்த சம்பவங்களை நினைக்க வேண்டுமென்றாவது உன் மனதில் தோன்றாது. (52)

श्रुतिविप्रतिपन्ना ते यदा स्थास्यति निश्चला ।
समाधावचला बुद्धिस्तदा योगमवाप्स्यसि । ५३ ॥

ச்ருதி விப்ரதிபந்நா தே யதா ஸ்தாஸ்யதி நிஸ்சலா ।
ஸமாதாவசலா புத்தி: ததா யோகமவாப்ஸ்யஸி ॥

இப்பொழுது உன் மதி இந்திரிய கூட்டங்களின் சேர்க்கையால் சிதறி இருக்கின்றது. அது பிறகு ஆத்ம ஸ்வருபத்தில் ஸ்திரமாகும். எப்பொழுது உன் புத்தி ஸமாதி ஸ்திதியில் லயிக்குமோ, அப்பொழுது நீ சம்பூர்ண யோக நிலையை அடைவாய். (53)

अर्जुन उवाच—

स्थितप्रज्ञस्य का भाषा समाधिस्थस्य केशव ।
स्थितधीः किं प्रभाषेत किमासीत व्रजेत किम् ॥ ५४ ॥

அர்ஜுன உவாச :—

ஸ்திதப்ரக்ஞஸ்ய கா பாஷா ஸமாதிஸ்தஸ்ய கேசவ ।
ஸ்திததீ: கிம் ப்ரபாஷேத கிமாஸீத வ்ரஜேத கிம் ॥

அப்பொழுது அர்ஜுனன் கூறுகிறான் :— "ஹே தேவா, நான் இவ்விஷயத்தில் ஒன்று கேட்க விரும்புகிறேன்" ஸ்ரீ கிருஷ்ணன் :— "ஹே கிரீடி! நீ கேட்க விரும்பியதை ஆனந்தமாகக் கேள்". பார்த்தன் ;— "ஹே கிருஷ்ணா! ஸ்திதப் பிரக்ஞனின் லக்ஷணம் என்ன? அவனை எப்படி அறிவது? எதை ஸ்திரபுத்தி என்று கூறுகிறோமோ அகண்டமான ஸமாதி சுகத்தை அனுபவிக்கிறோமோ, அதை எந்த லக்ஷணத்தால் அறிவது? அவன் எந்த ஸ்திதியில் இருக்கிறான்? எந்த உருவத்தில் சோபிக்கிறான்? அதைக்கூறுங்கள்". அப்பொழுது பரப் பிரும்மத்தின் சொரூபமும் ஆறு குணங்களினால் பகவான் என்று பெயரெடுத்தவருமான நாராயணன் கூறுவரர். (54)

श्रीभगवानुवाच—

प्रजहाति यदा कामान्सर्वान्पार्थ मनोगतान् ।
आत्मन्येवात्मना तुष्टः स्थितप्रज्ञस्तदोच्यते ॥ ५५ ॥

ஸ்ரீ பகவானுவாச :—

ப்ரஜஹாதி யதா காமான் ஸர்வான் பார்த்த
மநோகதான் ।
ஆத்மன்யேவாத்மநா துஷ்ட: ஸ்தித ப்ரக்ஞஸ்
ததோச்யதே ॥

ஹே அர்ஜுனா! கேள். மனதில் யாதொரு அபிலாஷை ப்ரபலமாகிறதோ, அது ஆத்ம ஸ்வரூபத்திற்கு இடையூறு ஆகிறது. எவன் எப்பொழுதும் திருப்தியுடன் இருக்கிறானோ, எவனுடைய அந்தக்கரணம் ஞானத்தால் நிரம்பியிருக்கிறதோ, யாதொரு காமம் அவனிடம் தன் சேர்க்கையால் வீழ்ச்சி அடைகிறதோ, அவனிடமிருந்து இச்சையென்னும் காமம் முற்றும் அகன்றுவிடுகின்றது. அவன் மனம் ஆத்ம சந்தோஷத்தில் ஆழ்ந்து இருக்கின்றது. அவனே ஸ்திதப்ரஜ்ஞன் என்றறி.

दुःखेष्वनुद्विग्नमनाः सुखेषु विगतस्पृहः ।
वीतरागभयक्रोधः स्थितधीर्मुनिरुच्यते ॥ ५६ ॥

து:கேஷ்வனுத்விக்னமநா: ஸுகேஷு விகதஸ்ப்ருஹ: ।
வீதராகபயக்ரோத: ஸ்திததீர்முநிருச்யதே ॥

பலவித துக்கங்களை அனுபவித்தும்கூட அவன் சித்தம் வியாகூலமடைவதில்லை. அவன் சுகத்தின் மாய வலையில் சிக்கிக் கொள்வதில்லை. அவனைக் காமமும், குரோதமும் அணுகாது. அந்த உயர்நிலை அடைந்த புருஷனுக்கு, ஒரு பொழுதும் பயம் ஏற்படாது. இவ்விதம் இரட்டைகளின் எல்லைக்கு அப்பால் போனவனாய், சம்சாரத்தைத் தியாகம் செய்து பேதாபேதமற்றவனாக எவன் இருப்பானோ, அவனே ஸ்திதப் பிரக்ஞன் என்று அறி. (56)

यः सर्वत्रानभिस्नेहस्तत्तत्प्राप्य शुभाशुभम् ।
नाभिनन्दति न द्वेष्टि तस्य प्रज्ञा प्रतिष्ठिता ॥ ५७ ॥

ய: ஸர்வத்ராநபிஸ்நேஹ: தத்தத்ப்ராப்ய சுபாசுபம் ।
நாபிநந்ததி ந த்வேஷ்டி தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டிதா ॥

பூரண சந்திரன் எப்படி நல்லது கெட்டது என்று பாராமல் தன் கிரணங்களைச் செலுத்துகிறானோ, அதைப்போல் ஸ்திதப்

பிரக்ஞன் எப்பொழுதும் சம நிலையில் இருக்கிறான். எல்லாப் பிராணிகளிடத்தும் கருணை காட்டுகிறான். அவன் சித்தத்தில் லவலேசமும் வேற்றுமை கிடையாது. நல்லவை கிட்டினாலும் சந்தோஷ வசமாக மாட்டான் கெட்டவை நேர்ந்தாலும் துக்கத்தின் பிடியில் சிக்கமாட்டான், இவ்விதம் சந்தோஷமும் சோகமும் அற்று ஆத்ம ஞானத்தில் பூரணனாக இருப்பவனை ஸ்திதப்ரக்ஞன் என்றறி. (57)

**यदा संहरते चायं कूर्मोऽङ्गानीव सर्वशः ।**
**इन्द्रियाणीन्द्रियार्थेभ्यस्तस्य प्रज्ञा प्रतिष्ठिता ॥ ५८ ॥**

**யதா ஸம்ஹரதே சாயம் கூர்மோ ऽங்காநீவ ஸர்வச: ।**
**இந்த்ரியாணீந்த்ரியார்த்தேப்யஸ் தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டிதா ॥**

ஆமை சந்தோஷத்தில் தன் அவயவங்களைப் பரப்பிப் பின் தன் இச்சைப்படி சுருக்கிக் கொள்கிறது, அதுபோல இந்திரியங்கள் எவனுடைய ஆக்ஞைக்குக் கட்டுப்பட்டு கீழ் படுகின்றதோ அவனுடைய புத்தி ஸ்திரத்தன்மையை அடைகின்றது. (58)

**विषया विनिवर्तन्ते निराहारस्य देहिनः ।**
**रसवर्जं रसोऽप्यस्य परं दृष्ट्वा निवर्तते ॥ ५९ ॥**

**விஷயா விநிவர்த்தந்தே நிராஹாரஸ்ய தேஹிந: ।**
**ரஸவர்ஜம் ரஸோ ऽப்யஸ்ய பரம் த்ருஷ்ட்வா நிவர்ததே॥**

அர்ஜுனா, வேறு ஒரு விந்தையைக் கேள். யோகசாதனம் செய்பவர்கள் நியமத்தை சாதனமாகக் கொண்டு விஷயங்களைத் தியாகம் செய்கிறார்கள். ஞானேந்திரியங்களைக் கட்டுப்பாட்டிற்குள் வைத்துக் கொள்கிறார்கள். அப்படியிருந்தும் அவர்கள் நாவைக்கட்டுப் படுத்தாமல் இருப்பார்களானால் விஷயம் அவர்களை ஆயிரம் கைகளுடன் கவ்விக்கொள்ளும், ஒரு மரத்தை அழிக்கவேண்டுமென்றால் மேலெழுந்தவாரியாக இலைகளைப் பறித்துக்கொண்டு வேரில் தண்ணீர் ஊற்றினால் எப்படி அழியும்? தண்ணீரினால் அது கொஞ்சம் கூடப் படர்ந்து வளரும். அதைப்போல் மனதில் இச்சை மூலமாக விஷயம் புஷ்டியாகி விடும். மற்ற இந்திரியங்களின் விஷயங்கள் பலாத்காரமாக அகற்றப்படலாம். ஆனால் ரஸனையின் விஷயம்

ஒழுக்கத்தினுல் கட்டுப்படுத்த முடியாது. ஏனென்ருல் அது இல்லாமல் வாழ்வு இல்லை, ஆனுல் சாதகன் ஆத்ம சாக்ஷாத்காரத்தினுல் பரப்ரும்ம லக்ஷியத்தை அடைவானுனுல் அவனுடைய இந்த ரஸனையின் இச்சை தானுகவே கட்டுப்படும். அச்சமயம் ஸோஹம்பாவத்தின் அனுபவம் ஏற்படும். சரீரவ்யவஹாரம் அடங்கிவிடும். இந்திரியங்கள் விஷயத்தை மறந்துவிடும், (59)

यततो ह्यपि कौन्तेय पुरुषस्य विपश्चितः ।
इन्द्रियाणि प्रमाथीनि हरन्ति प्रसभं मनः ॥ ६० ॥

யததோ ஹ்யபி கௌந்தேய புருஷஸ்ய விபஸ்சித: ।
இந்த்ரியாணி ப்ரமாதீனி ஹரந்தி ப்ரஸபம் மந: ॥

அர்சுனு, சாதாரணமாக இந்த விஷயங்கள் அனவரதமும் முயற்சியுடன் சாதனம் செய்பவர்களுக்குக்கூட கையில் அடங்காது. அப்பியாசம் எவருக்கு மெய்க்காப்பாளனுன உதவுகிறதோ, யம நியமங்கள் எவர்களுக்கு லகானுக உதவுகின்றனவோ, எவர் மனத்தை எப்பொழுதும் கட்டுப்படுத்தி வைத்துக்கொண்டிருக்கிருர்களோ, அவர்களே இந்த இந்திரியங்களினுல் வியாகூலமடைகின்ருர்கள். இதன் பிரதாபம் அப்படிப்பட்டது, பூத பிசாசுகள் மந்திரவாதியை மயக்குகின்றன. அதுபோல சித்திகள் சாதகனை விஷயத்தில் சிக்கவைக்கின்றன. இந்திரிய ஸ்பர்சம் ஏற்பட்டவுடன் சாதகனை தன் வசமாக்கி விடுகின்றன. அப்பொழுது மனம் விஷயப் புதரில் சிக்கிக் கொள்கிறது. சாதகனின் அப்யாசம் நிர்பலமாகிறது. இந்திரியங்களின் சக்தி இவ்விதமானது. (60)

तानि सर्वाणि संयम्य युक्त आसीत मत्परः ।
वशे हि यस्येन्द्रियाणि तस्य प्रज्ञा प्रतिष्ठिता ॥ ६१ ॥

தாநி ஸர்வாணி ஸம்யம்ய யுக்த ஆஸீத மத்பர: ।
வசே ஹி யஸ்யேந்த்ரியாணி தஸ்ய ப்ரஜ்ஞா
ப்ரதிஷ்டிதா ॥

அதனுல் ஹே பார்த்தா! எல்லா விஷயங்களிலும் இச்சையை விட்டு விட்டு, இந்திரியங்களை எவன் அடக்குகிருனே, அவனுக்கே யோக நிஷ்டை கைகூடுமென்று அறி. அவனுடைய அந்தகரணம் விஷய சுகத்தில் சிக்காது. அவன்

எப்பொழுதும் ஆத்மஞானத்துடன் கூடினவனுகிருன், அவன் ஹ்ருதயத்தில் என்னை அனவரதமும் தியானிப்பான். ஆனுல் ஒருவன் வெளி வியவகாரத்தில் விஷயங்களை ஒழித்துவிட்டு மனத்துள் வைத்திருப்பானுனுல் அவனுக்கு எப்பொழுதும் சம்சாரமே சாரமாகத் தோன்றும். விஷத்தைத் துளி சாப்பிட்டாலும் அது சரீரம் பூராவும் பரவுவதுபோல விஷயமும் நிச்சயமாக வாழ்க்கையை நாசம் செய்யும். விஷய வாசனையை ஒரு கணம் நினைத்தாலும் அது நமது நற்சிந்தனைகளை நாசம் செய்துவிடுகிறது. (61)

ध्यायतो विषयान्पुंसः सङ्गस्तेषूपजायते ।
सङ्गात्सञ्जायते कामः कामात्क्रोधोऽभिजायते ॥ ६२ ॥

क्रोधाद्भवति संमोहः संमोहात्स्मृतिविभ्रमः ।
स्मृतिभ्रंशाद्बुद्धिनाशो बुद्धिनाशात्प्रणश्यति ॥ ६३ ॥

த்யாயதோ விஷயான் பும்ஸ: ஸங்கஸ்
தேஷூபஜாயதே ।
ஸங்காத் ஸஞ்ஜாயதே காம: காமாத் க்ரோதோ
ऽபிஜாயதே ॥

க்ரோதாத் பவதி ஸம்மோஹ: ஸம்மோஹாத்
ஸ்ம்ருதி விப்ரம: ।
ஸ்ம்ருதி ப்ரம்சாத் புத்தி நாச: புத்தி நாசாத்
ப்ரணச்யதி ॥

ஹ்ருதயத்தில் விஷயங்களின் ஸ்மரண மாத்திரத்தாலேயே வைராக்யமுள்ளவர்களுக்குக்கூட அதில் ப்ரீதி ஏற்படுகிறது. இந்த ப்ரீதி இச்சையை வளர்க்கின்றது. இந்த இச்சை வளர்ந்ததும் 'விரும்பிய பொருள் ஒருக்கால் பறி போய் விட்டால்!' என்ற எண்ணத்திலேயே கோபம் தன்னை வெளிப்படுத்திக்கொள்கிறது. கோபத்தினுல் மனிதன் சிந்தனை செய்யும் சக்தியை இழக்கிருன். இப்படி அவன் சிந்தனுசக்தியை இழந்ததுமே வாயுவினுல் தீபஜோதி அணைவதுபோல அவன் விவேகத்தை இழக்கிருன். சூரியாஸ்தமனம் ஆனதும் இரவு சூரிய ஒளியை விழுங்குவதைப்போல், ஜீவர்களின் புத்தியை அக்ஞானமென்னும் இருள் விழுங்குகிறது. இதனுல் அவன் புத்தி மழுங்கிப்

போகிறது. பிறவிக் குருடன் எங்காவது ஓட நினைத்தால் இங்குமங்கும் எப்படி சுற்றிச்சுற்றி வருவானோ, அவ்விதம் அவன் புத்தியும் சுழல்கிறது. இப்படிச் சுழலும் புத்தி தன் நினைவிழந்து மரத்துப்போகிறது. அப்பொழுது ஞானம் வேருடன் அழிந்துவிடுகிறது.

தாத்பர்யம் என்னவென்றால் ஜீவனை இழந்த சரீரத்திற்கு என்ன நிலை ஏற்படுகிறதோ, அந்நிலை புத்தி நாசம் அடைந்தவனுக்கும் ஏற்படுகிறது. எவ்விதம் ஒரு சிறு நெருப்புப் பொறி விறகுக் கூட்டத்தில் விழுந்தால் அது பெரிதாகி, மூன்று உலகங்களையும் எரிக்கப் போதுமானதாகிறதோ, அது போலவே இந்த மனம் விஷயத்தில் துளி ரமித்தாலும் போதும். மேற்கூறிய வீழ்ச்சி மனிதனைத் தேடி அடைகிறது. (62-63)

रागद्वेषवियुक्तैस्तु विषयानिन्द्रियैश्चरन् ।
आत्मवश्यैर्विधेयात्मा प्रसादमधिगच्छति ॥ ६४ ॥

ராகத்வேஷ வியுக்தைஸ்து விஷயாந்
இந்த்ரியைஸ்சரன் ।
ஆத்மவச்யைர் விதேயாத்மா ப்ரஸாதமதிகச்சதி ॥

அதனால் இவ்விஷயத்தை மனத்தினின்றும் வேருடன் களைந்து எறி. பிறகு ராகத்வேஷம் தானாகவே நசித்துவிடும். ராகத்வேஷங்கள் நாசமடைந்த பிறகு இந்திரியங்கள் விஷயங்களை அனுபவிப்பதினால் ஒருவித இடையூறும் நேராது. ஆகாயத்தில் பிரகாசிக்கும் கதிரவன் தன் கிரணங்களாகிற கைகளினால் பூமியைத் தொடுகிறான். அதனால் பூமியின் அழுக்கு அவனை ஒட்டிக்கொள்கிறதா? இல்லை. எவன் இந்திரியங்களின் விஷயத்தில் பராமுகமாக இருக்கிறானோ, ஆத்ம திருப்தியில் சூழ்ந்திருக்கிறானோ, காமக்ரோதங்களினின்றும் வேறுபட்டு இருக்கிறானோ, அவன் விஷயங்களிலும் ஆத்மாவையே காண்கிறான். பிறகு விஷயமேது? அதன் இடையூறு ஏது? ஜலம் ஜலத்தில் மூழ்குமானால், அக்னி அக்னியை எரிக்குமானால், ஆத்ம ஞானிகளையும் விஷயங்கள் அழிக்கும். அதனால் எவன் தன்னில் தானாக நிலைத்து நிற்கிறானோ, அவனுடைய புத்தி ஸ்திரமாக இருக்கும். (64)

प्रसादे सर्वदुःखानां हानिरस्योपजायते ।
प्रसन्नचेतसो ह्याशु बुद्धिः पर्यवतिष्ठते ॥ ६५ ॥

ப்ரஸாதே ஸர்வது:காநாம் ஹாநிரஸ்யோபஜாயதே ।
ப்ரஸந்நசேதஸோ ஹ்யாசு புத்தி: பர்யவதிஷ்டதே ॥

எவனுடைய சித்தத்தில் நிரந்தரமான மகிழ்ச்சி இருக்கிறதோ, அவனை சம்சார துக்கங்கள் பாதிக்காது. எவனுடைய வயிற்றில் அமிருத ஊற்று இருக்கின்றதோ, அவன் பசிக்கும், தாகத்திற்கும் ஏன் பயப்படவேண்டும்? சித்தத்தில் ஸதா மகிழ்ச்சி இருக்குமாகில் துக்கம் எப்படி அவனை அண்டமுடியும்? அச்சமயம் புத்தி பரமாத்ம சொரூபமாகவே ஆகிவிடுகிறது. காற்று இல்லாத இடத்தில் தீபம்போல புத்தி ஆத்மஸ்வரூபத்துடன் கூடி நிச்சலமாகிறது. (65)

नास्ति बुद्धिरयुक्तस्य न चायुक्तस्य भावना ।
न चाभावयतः शान्तिरशान्तस्य कुतः सुखम् ॥ ६६ ॥

நாஸ்தி புத்திரயுக்தஸ்ய ந சாயுக்தஸ்ய பாவநா ।
ந சாபாவயத: சாந்தி: அசாந்தஸ்ய குத: ஸுகம் ॥

எவனுடைய அந்தகரணத்தில் இந்த புத்தி யோகத்தின் எண்ணமே எழுவதில்லையோ, அவன் விஷய போகத்தில் சிக்கிவிடுகிறன். அவனுடைய புத்தி ஒருபோதும் சலியாமலிருக்காது. அந்த எண்ணமும் இருக்காது. சலியாமலிருக்க வேண்டுமென்ற எண்ணமே மனதில் எழாவிட்டால் அவனுக்குச் சாந்தி எவ்விதம் கிட்டும்? பாபிகளுக்கு மோக்ஷம் கிட்டாதது போல, சாந்தி எவனுக்கு இல்லையோ அவனுக்கு சுகமும் இல்லை. வறுத்தெடுத்த தானியம் முளைக்குமானல் சாந்தியற்ற மனிதனும் சுகமடைவான். மனதை அடக்காமலிருப்பதே எல்லா துக்கங்களுக்கும் மூலகாரணம். அதனுல் இந்திரிய நிக்ரஹத்தால் மனோ நியோகம் செய்யவேண்டும். (66)

इन्द्रियाणां हि चरतां यन्मनोऽनुविधीयते ।
तदस्य हरति प्रज्ञां वायुर्नावमिवाम्भसि ॥ ६७ ॥

இந்த்ரியாணும் ஹி சரதாம் யந்மநோऽநுவிதீயதே ।
ததஸ்ய ஹரதி ப்ரஜ்ஞாம் வாயுர்நாவமிவாம்பஸி ॥

எவன் இந்திரியங்களுக்குக் கட்டுப்பட்டு அவை சொல்வதையெல்லாம் செய்கிருனே, அவன் இந்த விஷயரூப சமுத்திரத்தைக் கடக்காதவனுகிருன். ஒருவேளை கரைக்கு அருகில் சென்றாலும் அங்கு நீரில் மூழ்கிவிடுவானே தவிர, கரையேறிச் செல்லமுடியாது. கரையின் சமீபம் சென்ற படகு கரையை அடையும்முன் திடீரெனப் புயற்காற்றில் சிக்கிக்கொள்ளுமானுல் ஆபத்து நீங்கவில்லை என்றுதான் அறியவேண்டும். அதைப்போல ஞானியும் குதூகலத்திற்காக இந்திரியங்களைப் போஷிப்பானேயானுல், அவனை சம்சார துக்கங்கள் சூழ்ந்துகொள்ளும். (67)

तस्माद्यस्य महाबाहो निगृहीतानि सर्वशः ।
इन्द्रियाणीन्द्रियार्थेभ्यस्तस्य प्रज्ञा प्रतिष्ठिता ॥ ६८ ॥

தஸ்மாத் யஸ்ய மஹாபாஹோ நிக்ருஹீதாநி ஸர்வச: ।
இந்த்ரியாணீந்த்ரியார்த்தேப்யஸ் தஸ்ய ப்ரஜ்ஞா
ப்ரதிஷ்டிதா ॥

ஹே தனஞ்ஜய! நமது இந்திரியங்கள் நம் வசமானுல் நாம் க்ருதக்ருத்யர்களாகிவிடுவோம். பார், ஆமை தன் இச்சையாலேயே அவயவங்களை சுருக்குகிறது, விரிக்கிறது. அதுபோல் இந்திரியங்கள் யாருக்கு வசப்பட்டு அவனுடைய உத்தரவிற்குக் கீழ்படிகின்றனவோ, அவனுடைய புத்தி ஸ்திரத்தன்மையை அடைந்துவிட்டது என்று அறி. இப்பொழுது ஒரு ஞானியின் மற்றொரு ரஹஸ்ய லக்ஷணத்தைக் கூறுகிறேன், கேள். (68)

या निशा सर्वभूतानां तस्यां जागर्ति संयमी ।
यस्यां जाग्रति भूतानि सा निशा पश्यतो मुनेः ॥ ६९ ॥

யா நிசா ஸர்வபூதானும் தஸ்யாம் ஜாகர்தி ஸம்யமீ ।
யஸ்யாம் ஜாக்ரதி பூதாநி ஸா நிசா பச்யதோ முநே: ॥

எந்த விஷயத்தில் சகல பிராணிகளும் அக்ஞானத்தில் மூழ்கி இருக்கின்றனவோ, அவ்விஷயத்தில் ஸ்திதப்ரக்ஞன் ஞானவானுக விழித்திருக்கிருன். எப்பொழுது உலக பிராணிகள் விழித்துக்கொண்டிருக்கிருர்களோ, அங்கு ஞானி

தூங்குகிருன். பார்த்தா, அந்த ஞானியை உபாதி அற்றவ னுகவும், ஸ்திரபுத்தியுள்ளவனுகவும், கம்பீரமான முனீஸ்வர னுகவும் அறி. (69)

**आपूर्यमाणमचलप्रतिष्ठं समुद्रमापः प्रविशन्ति यद्वत् ।**
**तद्वत्कामा यं प्रविशन्ति सर्वे स शान्तिमाप्नोति न कामकामी ।७०॥**

ஆபூர்யமாணமசலப்ரதிஷ்டம்
ஸமுத்ரமாப: ப்ரவிசந்தி யத்வத் ।
தத்வத்காமா யம் ப்ரவிசந்தி ஸர்வே
ஸ சாந்திமாப்நோதி ந காமகாமீ ॥

அவன் சமுத்திரத்தைப்போல் ஆழ்ந்து கம்பீரமாக இருக் கிருன். மழை காலத்தில் கடலில் எல்லா நதிகளும் பூரண வெள்ளத்துடன் போய் விழுகின்றன. ஆயினும் கடல் பெருகுகிறது இல்லை, தன் வரம்பைக் கடக்கிறதும் இல்லை. வேனிற்காலத்தில் நதிகள் வற்றினுலும் கடலில் ஜலம் குறைவ தில்லை. அதைப்போல ஸ்திதப்ரக்ஞன் அஷ்ட சித்திகளைப் பெற்ருலும் அவன் புத்தி சலிப்பதில்லை. அவைகள் கிடைப்ப தில்லையாஞலும் அதைரியமடைவதில்லை. சூரியனுடைய வீட்டில் விளக்கேற்றி வைத்துத்தான் வெளிச்சம் கொண்டுவர வேண்டுமா? அங்கு விளக்கு இல்லையெனில் அந்தகாரம் சூழ்ந்து விடுமா? அதுபோல, அணிமாதிசித்திகள் வருவது போவதையே அறியாத ஞானியின் மனம் பரமசுகத்திலேயே ஆழ்ந்துவிடும். எவன் தன் வீட்டிற்கு எதிராக இந்திர பவனத்தையும் துச்சமாகக் கருதுகிருனே, அவனுக்கு வேடர் களின் இறகினுல் வேயப்பட்ட குடிசையில் என்ன ஆனந்தம் ஏற்படும்? எவன் அமிருதத்தைப் பருகுகிருனே, அவனுக்கு ஓடை ஜலம் பிடிக்குமா? அதுபோல ஆத்ம சுகத்தை அனுபவிப்பவர்களுக்கு, சொர்க்க சுகத்தைத் துச்சமாகக் கருதுபவர்களுக்கு சித்திகள் எந்த மூலை? (70)

**विहाय कामान्यः सर्वान्पुमांश्चरति निःस्पृहः ।**
**निर्ममो निरहङ्कारः स शान्तिमधिगच्छति ॥ ७१ ॥**

விஹாய காமாந் ய: ஸர்வாந் புமாந் சரதி நி:ஸ்ப்ருஹ: ।
நிர்மமோ நிரஹங்கார: ஸ சாந்திம் அதிகச்சதி ॥

ஆத்மஞானத்தால் சந்தோஷமடைந்தவனே, பரமானந்தத்தால் திருப்தியடைந்தவனே ஸ்திதப்ரக்ஞன் என்று அறி. அவன் அகங்காரத்தை விட்டு, சகல மனோரதங்களையும் தியாகம் பண்ணிவிட்டு ஜகமே உருவாக சஞ்சரிக்கிறான். (71)

एषा ब्राह्मी स्थितिः पार्थ नैनां प्राप्य विमुह्यति ।
स्थित्वास्यामन्तकालेऽपि ब्रह्म निर्वाणमृच्छति ॥ ७२ ॥

ஏஷா ப்ராஹ்மீ ஸ்திதி: பார்த்த நைநாம் ப்ராப்ய விமுஹ்யதி ।
ஸ்தித்வாஸ்யாம் அந்தகாலேऽபி ப்ரஹ்மநிர்வாணம் ருச்சதி ॥

எல்லையில்லாத ப்ரும்மநிலையில் எந்த நிஷ்காம ஜனங்கள் ஆழ்கிறார்களோ, அவர்கள் கஷ்டமின்றி பரம ஸுகத்தை அடைகிறார்கள். இந்த ஸ்திதியில் நிலைபெற்றவர்களின் சித்தத்தில் தேகாந்த சமயத்திலும் வியாகூலமாகிற இடையூறு ஏற்படாது. இந்த ஸ்திதியை லக்ஷ்மீபதியான கிருஷ்ணன் அர்சுனனுக்கு விளக்கினான் என்று சஞ்சயன் திருதராஷ்ட்ரனுக்கு கூறினார். ஸ்ரீ ஹரியின் இந்த வார்த்தையைக் கேட்டு அவன் மனதிற்குள் இந்த யுக்தியே நமக்கு ஹிதமானதுதான் என்று கேட்டுக்கொண்டான். பகவான்தான் கர்மமே செய்ய வேண்டாம் என்று கூறிவிட்டாரே! அதனால் நான் யுத்தம் செய்யவேண்டாம். இப்பொழுது என் மனம் சந்தோஷம் அடைந்தது. இனி சந்தேகத்திற்கு இடமின்றி உத்தமமான கேள்விகளைக் கேட்பேன் என்று நினைத்தான். கிருஷ்ணார்ஜுனர்களின் இந்த அழகிய ஸம்வாதம் சகல தர்மங்களுக்கும் உற்பத்திஸ்தானம் விச்வகருபமான அமிர்தக்கடல். இந்த சம்வாதத்தை மேலும் தொடர்ந்து ஸ்ரீகிருஷ்ணன் வர்ணிப்பார். நிவ்ருத்திதேவரின் தாஸரான ஞானதேவர் அதை வர்ணிப்பார். (72)

இரண்டாவது அத்யாயம் முற்றும்.

## மூன்றாவது அத்யாயம்

अर्जुन उवाच—

ज्यायसी चेत्कर्मणस्ते मता बुद्धिर्जनार्दन ।
तत्किं कर्मणि घोरे मां नियोजयसि केशव ॥ १ ॥

அர்ஜுன உவாச—

ஜ்யாயஸீ சேத் கர்மணஸ்தே மதா புத்திர் ஜநார்தந ।
தத்கிம் கர்மணி கோரே மாம் நியோஜயஸி கேசவ ॥

அர்ஜுனன் கூறுவான் :— ஹே கிருபாநிதே! தங்கள் அறிவுரைகளை நன்றாகக் கேட்டேன். ஆத்ம எல்லையை அறிந்தவர்களுக்கு கர்மமும் கடமையும் கிடையாது என்று சொல்கிறீர்கள். தாங்கள் உண்மையாகவே கூறுகிறீர்களா? அது உண்மையானால் என்னை யுத்தத்தின் பொருட்டு ஏன் உற்சாகப்படுத்துகிறீர்கள்? இந்த மஹா கோர கர்மத்தில் என்னை ஈடுபடச் செய்ய தங்களுக்குக் கொஞ்சம்கூட தயக்கம் இல்லையா? எல்லா கர்மங்களையும் ஒதுக்குகிறீர்கள். என்னை மட்டும் இந்தப் பரமஹிம்சையான கர்மத்தை ஏன் செய்விக்கிறீர்கள்? ஹே ஸ்வாமி! நன்றாகச் சிந்தனை செய்து பாருங்கள். தாங்கள் கர்மத்தை அணுவளவேனும் நன்மை என்று கருதவில்லை. ஆனால் என்னை இத்தனை பெரிய ஹிம்சையைச் செய்யச் சொல்கிறீர்கள். (1)

व्यामिश्रेणेव वाक्येन बुद्धिं मोहयसीव मे ।
तदेकं वद निश्चित्य येन श्रेयोऽहमाप्नुयाम् ॥ २ ॥

வ்யாமிச்ரேணேவ வாக்யேந புத்திம் மோஹயஸீவ மே ।
ததேகம் வத நிஸ்சித்ய யேந ச்ரேயோऽஹமாப்நுயாம் ॥

ஹே தேவா! தாங்களே இவ்விதம் கூறினால் நாங்கள் அஞ்ஞானிகள் என்ன செய்வோம்? விவேகத்திற்கு முடிவு ஏற்பட்டுவிட்டது என்று நினைக்கிறேன். உபதேசமே இவ்வளவு சந்தேகாஸ்பதமாக இருக்கும்பொழுது விளக்கம் எப்படி இருக்கும்? இப்படி இருந்தால் நம் மனோரதம் பூரணமானாற் போல்தான்! வைத்தியன் மருந்தும் அளித்து பத்தியமும்

கூறிவிட்டு விஷத்தையும் கொடுத்தால் அந்த ரோகியின் கதி என்னவாகும்? குருடனுக்கு வழிகாட்டுகிறேன் என்று மேட்டிலும் பள்ளத்திலும் இழுத்துக்கொண்டுபோனுல்? குரங்கிற்கு மயக்கமருந்தைக் கொடுத்தால்? தங்களுடைய உத்தம உபதேசம் எனக்கு அப்படித்தான் இருக்கிறது. ஏற்கனவேயே நான் அக்ஞானி. இட்பொழுது மோஹமென்னும் மயக்க மருந்தை அருந்தியிருக்கிறேன். தங்கள் உபதேசம் என்னவோ தெளிவாக இருக்கிறது. ஆனுல் சில சமயம் புதிர் போல் இருக்கிறதே? சரணுகதியடைந்தவர்களுக்கு இந்த நிலை யானுல்! யார் உடல் மனம், உயிரினுல் தங்களை நம்பிக்கொண்டு இருக்கிருர்களோ, அவர்களை இப்படிச் செய்தீர்களானுல் எல்லாம் தீர்ந்தால்போல்தான். இவ்வித உபதேசம் நீங்கள் செய்வது நன்மைக்கா? இதில் ஞானத்திற்கு எங்கு இடம் இருக்கிறது? ஞானம் வருவது இருக்கட்டும். நேர் எதிரிடையாக இப்பொழுது என்ன ஆயிற்றென்ருல், இதுவரை யுத்தம் செய்யவேண்டுமென்ருவது என் மனம் ஸ்திரமாக இருந்தது. இப்பொழுது கலங்கி விட்டதே? ஹே கிருஷ்ணு! இவ்விதமாக என் மனதைப் பரீக்ஷித்துப் பார்க்கிறீர்களா? அப்படியானுல் தங்கள் லீலை தர்க்கத்திற்கு அப்பாற்பட்டது. யோசித்துப்பார்த்தால் தாங்கள் என்னை ஏமாற்றுகிறீர்களா? அல்லது பரமார்த்த பாஷையில் எனக்கு உபதேசம் செய்கிறீர்களா? எனக்குப் புரியவில்லை. அதனுல் இந்த ரஹஸ்யார்த்தங்கள் எனக்கு வேண்டாம். நன்ருகப் புரியும்படியான பாஷையில் ஞானத்தைக் கொடுங்கள். எனக்கோ மந்த புத்தி. பாருங்கள்! மருந்து வியாதியை நீக்கவும் வேண்டும். ஆனுல் அது ருசியாகவும், இனிப்பாகவும் இருக்க வேண்டும். அதனுல் அர்த்தம் பொதிந்த தெளிவான பாஷையில் தத்வத்தைப் போதியுங்கள் அதுவும் என் கலங்கிய சித்தம் தெளிவுறும்படி இருக்கவேண்டும். தங்களைப் போன்ற குரு இருக்கும்பொழுது என்னை நான் ஏன் திருப்தி செய்துகொள்ள முடியாது. நான் ஏன் லஜ்ஜையடைய வேண்டும்? தாங்கள் எனது அன்னை தெய்வ யோகத்தால் காமதேனுவின் பால் அருந்தக் கிடைக்கும்பொழுது நான் அதைக் குடித்து பசியாறக்கூடாதா? அகஸ்மாத்தாக சிந்தாமணி கையில் கிடைத்தால் நம் மனேவிருப்பத்தை பூர்த்தி செய்துகொள்வதில் என்ன சங்கடம் இருக்கிறது? அமிர்தக் கடலின் கரையில் இருந்துகொண்டு தன் தாகத்தைத்

தீர்த்துக்கொள்ள முடியாதவன் அங்கு ஏன் போகவேண்டும்? அதனால் ஹே கமலாபதே! ஜன்ம ஜன்மங்களாக தங்களை உபாசித்து தெய்வாதீனமாகத் தாங்கள் எனக்கு கிடைத்திருக் கிறீர்கள். அதனால் என் மனம் கொண்டமட்டும் தங்களிட மிருந்து வாங்கிக்கொள்வேன். இன்றைய தினம் என் மனதிற்கு சுபதினம். இன்று என் வாழ்க்கையும் என் மனோ ரதங்களும் பூர்த்தியாகும் நாள். இன்று தாங்கள் என் கையில் சிக்கியிருக்கிறீர்கள். தாயிடம் ஸ்தன்யபானம் செய்யும் குழந்தைக்கு அதைவிட தக்கசமயம் வேறென்ன இருக்கிறது? அதனால் என் அன்னையே, நான் தங்களிடம் என் இச்சைப்படிக் கேட்கிறேன். நிச்சயமாக ஒரு வார்த்தையைக் கூறுங்கள். அது பரலோகத்திற்கும் நன்மை செய்வதாக இருக்கவேண்டும். நடைமுறைக்கும் யோக்யமானதாக இருக்கவேண்டும். (2)

श्रीभगवानुवाच—

लोकेऽस्मिन्द्विविधा निष्ठा पुरा प्रोक्ता मयाऽनघ ।
ज्ञानयोगेन सांख्यानां कर्मयोगेन योगिनाम् ॥ ३ ॥

ஸ்ரீ பகவாநுவாச—

லோகே஽ஸ்மிந் த்விவிதா நிஷ்டா புரா ப்ரோக்தா மயாநக।
க்ஜாநயோகேந ஸாங்க்யாநாம் கர்மயோகேந யோகிநாம்॥

இதைக்கேட்டு ஸ்ரீ அச்சுதன் ஆச்சர்யமடைந்தார். ஆத்ம ஞானம் கர்மம் இவைகளின் உட்பொருளைச் சுருக்கமாகக் கூறினேனே! புத்தி மார்க்கத்தைக் கூறிக்கொண்டிருக்கும் பொழுதே சந்தர்ப்ப வசத்தில் ஞானமார்க்கத்தைக் கூறினேன். அதை நீ அறிந்துகொள்ளவில்லை. அதனால் வீணாகக் குழப்பம் ஏற்பட்டது. இப்பொழுது கேள். இவ்விரண்டு யோகங்களைப் பற்றியும் நானே கூறுகிறேன். ஹே வீர ச்ரேஷ்டா! இவ்வுலகில் இவ்விரண்டு அனாதி சித்தமார்க்கங் களும் என்னாலேயே வெளிப்படுத்தப்பட்டன. ஒன்றை ஞான யோகம் என்று கூறுவார்கள். இதை ஞானிகள் சாதனம் செய்வர். இதனால் அவர்களுக்கு ப்ரும்மஞானம் ஏற்படும். அவர்கள் ப்ரும்மத்துடனேயே கலக்கிறார்கள்; மற்றொன்றைக் கர்மயோகம் என்று கூறுகிறார்கள். கர்மத்தில் சாதகர்கள்

தகுந்த யோக்யதையை அடைந்து தக்க சமயத்தில் மோக்ஷத்தை அடைகிறார்கள். இவைகள் இரண்டு மார்க்கங்களாகத் தோன்றினாலும் கடைசியில் இரண்டும் ஒன்றாக முடிகின்றன. உணவைப் பலவித தினுசில் தயாரித்தாலும் உண்ணும் திருப்தி ஒன்றுதான். கிழக்கிலும் மேற்கிலுமாக ஓடும் நதிகள் வெவ்வேறு திசைகளில் ஓடும்பொழுது வெவ்வேறாகத் தோன்றினாலும் கடைசியில் கடலில் கலக்கும்பொழுது ஒன்றாகவே ஆகிறது. அதைப்போல் இவ்விரண்டு மார்க்கங்களும் ஒரே உத்தேசத்தைக் காட்டுகின்றன. ஆனால் இவைகளின் சாதனை, சாதகர்களின் யோக்யதாம்சத்தைப் பொறுத்திருக்கிறது. பார், பட்சி ஒருதரம் சிறகடித்துப் பறந்ததும் நேராகக் கிளையில் இருக்கும் பழத்தின்மேல் போய் உட்காருகிறது. ஆனால் மனிதனுக்கு அந்த வேகத்தில் பழத்தை அடையமுடியுமா? அவன் மெள்ள மெள்ள மரத்தில் ஏறிக் கிளைகளைப் பிடித்துக்கொண்டு ஜாக்கிரதையாகப் பழத்தைப் பறிக்கிறான். அதற்குச் சமயம் வேண்டும். உரிய காலத்தில்தான் பலனை அடையமுடியும். ஞானிகள் பட்சி மார்க்கத்தில் பறந்து சென்று ஞானத்தை ஆச்ரயித்து மோக்ஷ பலனை அடைகிறார்கள். கர்மயோகி கர்மத்தைத் துணைகொண்டு வேதத்தில் கூறியுள்ள ஸ்வதர்மத்தைச் செய்துகொண்டு உரிய காலத்தில் பலனை அடைகிறார்கள். (3)

**न कर्मणामनारम्भान्नैष्कर्म्यं पुरुषोऽश्नुते ।**
**न च संन्यसनादेव सिद्धिं समधिगच्छति ॥ ४ ॥**

ந கர்மணாமநாரம்பாத் நைஷ்கர்ம்யம் புருஷோऽச்நுதே ।
ந ச ஸம்ந்யஸநாதேவ ஸித்திம் ஸமதிகச்சதி ॥

உண்மையில் தனக்கு உசிதமான கர்மத்தை ஆரம்பிக்காமல் மோக்ஷ பலனை அடையமுடியாது. ஹே அர்ஜுந! நமக்கு விதிக்கப்பட்ட கர்மாக்களைச் செய்யாமல், கர்மஹீனர்களாகவே இருந்து நைஷ்கர்ம்ய பலனை அடையமுடியும் என்று சொல்கிறார்களே, அது வீண்வார்த்தை, முட்டாள்தனமும்கூட. நதியைக் கடக்க ஒரே தோணிதான் இருக்கிறது. அதில் ஏற எத்தனையோ சங்கடங்களும் இருக்கின்றன. அச்சங்கடங்களுக்குப் பயந்துகொண்டு தோணியையே கைவிட்டு விட்டால் எப்படி அக்கரை சேரமுடியும்? பசியில்லா

விட்டால் உணவை ஏன் தயாரிக்கவேண்டும்? அல்லது சமைத்து வைத்த உணவை ஏன் சாப்பிடவேண்டும்? மனதில் இச்சையில்லாமல் போகும்வரை நாம் கர்மங்களைச் செய்யத்தான்வேண்டும். திருப்தி ஏற்பட்டவுடன் கர்மங்கள் தானே நழுவிவிடும். அதனுல் ஹே பார்த்தா! கவனமாகக் கேள். நிஷ்காம்ய கர்மத்தினுல் பரமஹம்ஸ பதவியை அடைய விரும்புகிறவர்களுக்கு வேதவிஹிதமான உசித கர்மங்களைத் தியாகம் செய்வது முறையாகாது. கர்மத்தின் முறை இப்படிப்பட்டது. விருப்பப்பட்டு செய்தால்தான் கர்மம். இல்லாவிட்டால் இல்லை என்று சிலர் கூறுகிருர்கள். இச்சொல் தவருனது. தான்தோன்றித்தனமானதும்கூட. அனுபவித்துப் பார்த்தாயானுல் நாமாக விட்டாலும் கர்மம் நம்மை விடாது என்பதை அறிவாய். (4)

न हि कश्चित्क्षणमपि जातु तिष्ठत्यकर्मकृत् ।
कार्यते ह्यवशः कर्म सर्वः प्रकृतिजैर्गुणैः ॥ ५ ॥

ந ஹி கஸ்சித் க்ஷணமபி ஜாது திஷ்டத்யகர்மக்ருத் ।
கார்யதே ஹ்யவச: கர்ம ஸர்வ: ப்ரக்ருதிஜைர்குணை: ॥

மாயையின் வசப்பட்டிருக்குமட்டும் என்னுல் செய்ய முடியும் அல்லது விட்டுவிட முடியும் என்று நாம் நினைத்துக் கொள்ளுகிறேம். இது அக்ஞானம் ஏனென்ருல் இது குணங்களின் வசப்பட்டு நினைக்கும் எண்ணம். நமக்கு விதித்திருக்கும் கர்மங்களை எல்லாம் விட்டுவிடவேண்டும் என்று நினைத்தாலும் இந்திரியங்களின் சுபாவம் நாம் அவைகளை விட்டுவிட முடியாதவாறு இருக்கிறது. காதால் கேட்பதை நிறுத்த முடியுமா? கண்களை மூடிக்கொண்டால் பிரகாசம் மறைந்து விடுமா? மூக்கைப் பொத்திக்கொண்டால் முகருவது நின்று விடுமா? பிராணவாயுவையும், அபானவாயுவையும் நிறுத்த முடியுமா? புத்தி சங்கல்ப விகல்பத்தை நிறுத்திவிடுமா? பசி, தாகம் முதலிய விருப்பங்களை நிறுத்த முடியுமா? உறங்குவதையும், விழிப்பதையும் நிறுத்தமுடியுமா? காலால் நடப்பதை மறக்கமுடியுமா? ஜனன மரணங்களை நம்மால் நீக்கமுடியுமா? இவ்விஷயங்கள் ஒன்றையும் நிறுத்த முடியாவிட்டால் எதை, எங்கு எப்படி நாம் தியாகம் செய்வது? சாராம்சம் என்னவென்ருல் மாயை வசப்பட்ட மனிதர்களால்

கர்மத்தை ஒருபொழுதும் விடமுடியாது. இப்படி மாயா பராதீனமாக கர்மம் நடக்கும்பொழுது இயற்கைக் குணங் களுக்குக் காரணம் உற்பத்தியாகிறது. அதனால் நான் கர்மம் செய்கிறேன். நான் கர்மத்தை விட்டுவிடுகிறேன் என்பது வீண். பார்! நீ ரதத்தில் உட்கார்ந்துகொண்டிருக்கிறாய். சலனமின்றி சும்மா உட்கார்ந்துகொண்டிருக்கிறாய். ஆயினும் சாரதிக்குப் பராதீனமாகி ரதத்துடன்கூடச் சுற்றிச் சுழன்று கொண்டுதானே இருக்கிறாய்? காற்றினால் பறக்கடிக்கப்பட்ட இலை சில சமயம் சும்மா கிடக்கிறது. சில சமயம் காற்றினால் தன் வசமிழந்து சுழலுகிறது. அதைப்போல மனிதன் இயற்கையை ஆதாரமாகக் கொண்டுள்ளவரை அவன் நிஷ்காம புருஷனாக இருந்தும்கூட கர்மேந்திரிய வசப்பட்டு எப்பொழுதும் கர்மம் செய்துகொண்டேதான் இருக்கிறான். அதனால் இயற்கை வசப்பட்டிருக்கும்வரை மனிதன் கர்மத்தை விடமுடியாது. இதன் மேலும் என்னால் கர்மத்தைச் செய்ய முடியும், என்னால் கர்மத்தை விடமுடியும் என்று எண்ணுவது வீண் பிடிவாதம். (5)

**कर्मेन्द्रियाणि संयम्य य आस्ते मनसा स्मरन् ।**
**इन्द्रियार्थान्विमूढात्मा मिथ्याचारः स उच्यते ॥ ६ ॥**

கர்மேந்த்ரியாணி ஸம்யம்ய ய ஆஸ்தே மநஸா ஸ்மரந் ।
இந்த்ரியார்த்தாந் விமூடாத்மா மித்யாசார: ஸ உச்யதே ॥

உசிதமான கர்மங்களை யார் விடுகிறார்களோ, கர்மேந்திரி யங்களை அடக்கிவிட்டு வேண்டுமென்றே சும்மா இருக்கின்றார் களோ, அவர்கள் கர்மத்யாகம் செய்தார்கள் என்று அர்த்தமில்லை. ஏனென்றால் அவர்கள் மனதில் நாம் கர்மத்தைச் செய்யவில்லை என்ற எண்ணம் இருந்து கொண்டே இருக்கிறது. வெளிப் பார்வைக்குக் கர்மம் செய்யாததுபோல் இருந்துகொண்டால் அது வெறும் டம்பம். சந்தேகமில்லாமல் இவர்கள் எப்பொழுதும் விஷயவாஸனையில் ஈடுபட்டுக்கொண்டிருப்பார்கள். ஹே பார்த்தா! கவனமாகக் கேள். நான் இப்பொழுது இச்சையில்லாத மனிதர்களின் லக்ஷணங்களையும் கூறுகிறேன் கேள். (6)

**यस्त्विन्द्रियाणि मनसा नियम्यारभतेऽर्जुन ।**
**कर्मेन्द्रियैः कर्मयोगमसक्तः स विशिष्यते ॥ ७ ॥**

யஸ்த்விந்த்ரியாணி மநஸா நியம்யாரபதேऽர்ஜுந ।
கர்மேந்த்ரியை: கர்மயோகம் அஸக்த: ஸ விசிஷ்யதே ॥

யாருடைய அந்தக்கரணம் நிர்மலமாயிருக்கிறதோ, யார் பரமார்த்த ஸ்வரூபத்திலேயே ஆழ்ந்திருக்கிறார்களோ, அவர்கள் மேலெழுந்தவாரியாக உலக வியவகாரங்களை நடத்துகிறார்கள். அவர்கள் இந்திரியங்களை ஏவமாட்டார்கள். விஷயங்களில் அவர்களுக்குப் பயம் கிடையாது. உசிதமான கர்மங்களை அந்தந்த சமயங்களில் செய்யாமலிருக்க மாட்டார்கள். கர்மேந்திரியங்கள் தன் காரியங்களை நடத்திக் கொண்டு இருக்கும் அவர்கள் அதை ஏவமாட்டார்கள். அவைகளின் விகாரங்களுக்கும் உட்படமாட்டார்கள். இச்சை வசப்படமாட்டார்கள். மோஹமலத்தைப் பூசிக்கொள்ள மாட்டார்கள். தாமரை இலை தண்ணீரில் இருந்தும் அது நனையாததுபோல, தண்ணீரில் சூரிய பிம்பம் தெரிவதுபோல அவர்கள் உடலில் ஒட்டாமல் வாழ்வார்கள். எல்லாவற்றையும் சமமாகப் பார்ப்பார்கள். ஆனால் சாதாரணமாகப் பார்ப்பதற்கு மற்ற மனிதர்களைப் போலவே காணப்படுவார்கள். நன்றாக சிந்தனை செய்து பார்த்தாலும் அவர்களின் ஸ்திதியை அறியமுடியாது. இப்படிப்பட்ட லக்ஷணம் உடையவர்களை முக்தர்கள் என்றும், ஆசாபாசம் அற்றவர் என்றும் நினை. உலகில் அவர்களை யோகி என்று புகழ்வார்கள். அதனால் நான் உன்னிடம் கூறுகிறேன், நீ அவர்களைப்போல் யோகி ஆவாயாக. மனதை ஒழுங்குபடுத்து. அந்தக்கரணத்தை சலிக்கவிடாதே. பிறகு கர்மேந்திரியங்கள் சுகமாகத் தன் கர்மத்தை நடத்திக்கொள்ளட்டும். அதில் நமக்கு சம்பந்தம் இல்லை. (7)

नियतं कुरु कर्म त्वं कर्म ज्यायो ह्यकर्मणः ।
शरीरयात्रापि च ते न प्रसिद्ध्येदकर्मणः ॥ ८ ॥

நியதம் குரு கர்ம த்வம் கர்ம ஜ்யாயோ ஹ்யகர்மண: ।
சரீர யாத்ராபி ச தே ந ப்ரஸித்யேதகர்மண: ॥

ஆகையினால் எப்பொழுது கர்மம் செய்யாமலே இருக்க முடியாமல் போகிறதோ, அப்பொழுது நிஷித்தமான கர்மங்களை ஏன் செய்யவேண்டும்? சமயத்திற்குத் தகுந்தாற்போல உசிதமான கர்மங்களை, அக்கர்ம பலன்களின் ஆசையை

விட்டுவிட்டுச் செய்வாயாக. ஹே பார்த்தா! மற்றுமொரு வேடிக்கையைக் கேள். கர்மமே கர்மத்தில் முக்தியைக் கொடுக்கிறது. வர்ணாச்ரமங்களை அனுசரித்து எவர்கள் ஸ்வ தர்மத்தை அனுஷ்டித்துவருகிறார்களோ, அவர்கள் இதனாலேயே நிச்சயமாக க்ஷேமத்தை அடைகிறார்கள். (8)

यज्ञार्थात्कर्मणोऽन्यत्र लोकोऽयं कर्मबन्धनः ।
तदर्थं कर्म कौन्तेय मुक्तसङ्गः समाचर ॥ ९ ॥

**யக்ஞார்த்தாத் கர்மணோऽந்யத்ர லோகோயம்**
**கர்மபந்தந: ॥**
**ததர்த்தம் கர்ம கௌந்தேய முக்தஸங்க: ஸமாசர ॥**

ஸ்வதர்மத்தையே நித்ய யக்ஞமாக அறி. அதைச் செய்தால் பாபத்திலிருந்து விடுபடுவாய். இந்த ஸ்வதர்மத்தை விடுவதினால் உலகச்சிக்கல்கள் ஏற்படுகின்றன. அதனால் ஸ்வ தர்மமான இந்த யக்ஞத்தை எவன் செய்கிறானே, அவன் கர்மபந்தத்திலிருந்து விடுபடுகிறான். சம்சாரம் கர்மத்தால் கட்டுப்பட்டுள்ளது, அதனால் இயற்கையை மறந்துவிடுவதால் நித்ய யக்ஞங்கள் செய்யப்படுவதில்லை. இதுவிஷயமாக ஒரு சிறு கதையைச் சொல்கிறேன், கேள். (9)

सहयज्ञाः प्रजाः सृष्ट्वा पुरोवाच प्रजापतिः ।
अनेन प्रसविष्यध्वमेष वोऽस्त्विष्टकामधुक् ॥ १० ॥

**ஸஹயக்ஞா: ப்ரஜா: ச்ருஷ்ட்வா புரோவாச ப்ரஜாபதி: ।**
**அநேந ப்ரஸவிஷ்யத்வம் ஏஷ வோऽஸ்த்விஷ்ட**
**காமதுக் ॥**

ப்ரும்மதேவர் சிருஷ்டித்தொழிலைச் செய்ய ஆரம்பித்தார். அப்பொழுது பிராணிகளோடுகூட நித்ய யக்ஞத்தை ஸ்ருஷ்டி செய்தார், ஆனால் யக்ஞத்தின் காரியங்கள் மிக ரஹஸ்யமாக இருப்பதால் ஜீவர்கள் யக்ஞத்தின் ரஹஸ்யத்தை அறியவில்லை. எனவே சிருஷ்டிக்கப்பட்ட பிரஜைகள் விநயத்துடன் பிரும்மதேவரை கேட்டுக்கொண்டனர். "பகவானே நாங்கள் எதை ஆச்ரயித்து வாழ்வோம்" என்று. அப்பொழுது பிரும்மதேவர் கூறினார் — நாம் உங்களுடைய வர்ணாஸ்ரமங்களை அனுஸரித்து ஸ்வதர்மத்தை விதித்திருக்கிறோம்.

அதையே செய்து வாருங்கள். உங்கள் மனோரதம் எளிதாகப் பூர்த்தியடையும். நீங்கள் விரத நியமங்களைச் செய்யவேண்டாம். சரீரத்தை வருத்தவேண்டாம். தீர்த்த யாத்திரை செய்து அங்குமிங்கும் அலையவேண்டாம். யோக சாதனங்களைப் பழக வேண்டாம். எந்த விருப்பத்தின் பொருட்டும் ஒருவித ஆராதனையும் செய்யவேண்டாம். தாந்திரீக அனுஷ்டானங்களும் அந்நிய தேவதைகளின் பூஜையும் வேண்டாம். இவைகளைச் செய்யாமலேயே ஸ்வதர்மமான யக்ஞத்தைச் செய்துகொண்டு வாருங்கள். ஆனால் இதன் பலனை எதிர்பாராமல் செய்ய வேண்டும். பதிவிரதை பதிசேவை செய்வதுபோல் ஸ்வதர்மமான யக்ஞமே உங்களால் செய்யத்தகுந்தது, ஸ்வதர்மத்தை உபாசிப்பீர்களானால் அதுவே உங்களுக்கு காமதேனுவாகும். அது உங்களைத் தியாகம் பண்ணாது. (10)

देवान्भावयतानेन ते देवा भावयन्तु वः ।
परस्परं भावयन्तः श्रेयः परमवाप्स्यथ ॥ ११ ॥

**தேவாந் பாவயதாநேந தே தேவா பாவயந்து வ: |**
**பரஸ்பரம் பாவயந்த: ச்ரேய: பரமவாப்ஸ்யத ||**

இந்த ஸ்வதர்ம சேவையால் எல்லா தேவதைகளும் சந்தோஷமடைகின்றனர். அவர்கள் உங்கள் இச்சையைப் பூர்த்திசெய்கின்றனர். ஸ்வதர்மத்தை மரியாதையுடன் செய்வதால் தேவதைகள் உங்களுடைய யோகக்ஷேமங்களை வகிக்கிறார்கள். அதாவது கிடைக்கக்கூடாத வஸ்துவைக் கிடைக்கச்செய்கிறார்கள். கிடைத்ததைப் பாதுகாக்கிறார்கள். இதனால் தேவர்களுக்கும் உங்களுக்கும் பரஸ்பர ப்ரீதி உண்டாகிறது. அவர்களைப் பஜியுங்கள், அவர்கள் உங்களிடம் சந்தோஷமடைவார்கள். அப்பொழுது நீங்கள் செய்யும் காரியங்கள் யாவும் சித்திபெறும். மன விருப்பங்கள் பூர்ணமாகும். வாக் சாதுர்யம் ஏற்படும். பிறரிடம் ஆதிக்கம் செலுத்த வல்லவர்களாவீர்கள். ருத்தி சித்திகள் கைகூடும். வசந்தருதுவில் புஷ்பங்கள், பழங்கள் கொடிகளினால் வனத்தின் சோபை அதிகரிப்பதுபோல் நீங்களும் சோபையடைவீர்கள். (11)

इष्टान्भोगान्हि वो देवा दास्यन्ते यज्ञभाविताः ।
तैर्दत्तानप्रदायैभ्यो यो भुङ्क्ते स्तेन एव सः ॥ १२ ॥

இஷ்டாந் போகாந் ஹி வோ தேவா தாஸ்யந்தே
யக்ஞபாவிதா: ।
தைர்தத்தாந ப்ரதாயைப்யோ யோ புங்க்தே
ஸ்தேந ஏவ ஸ: ॥

தேவர்கள் உருவங்கொண்டு சுகமாக உங்களைத் தேடிக் கொண்டு வருவார்கள். இப்படி நிஷ்காம்யமாக ஸ்வதர்மத்தில் ஈடுபட்டுக்கொண்டிருந்தீர்களானல் எல்லா போகங்களும் கூடினவர்களாவீர்கள். அப்படியில்லாவிட்டால் சகலசம்பத்தும் கிடைத்தாலும், விஷயத்தில் ஈடுபட்டிருந்தீர்களானல் உன்மத்தம் பிடித்த இந்திரியங்களின் ஆக்ஞையே நடக்கும். எவர்கள் ஸ்வதர்ம யக்ஞத்தால் சந்தோஷமடைந்த தேவதைகளால் கொடுக்கப்பட்ட சம்பத்தை சர்வேஸ்வரனை ஸ்வதர்மத்தின் பூஜைக்கு உபயோகப்படுத்துவதில்லையோ, எவன் அக்னிக்கு ஆஹுதி செய்வதில்லையோ, தேவதைகளுக்குப் பூஜை செய்வதில்லையோ, உசித காலத்தில் பிராமணர்களுக்குப் போஜனமளிப்பதில்லையோ, குருபக்தி செய்யாதவனும், அதிதி சத்காரம் செய்யாதவனும், தன் குலத்தை சந்தோஷப்படுத்தாதவனுமான ஸ்வதர்ம கர்மத்தைச் செய்யாத அவன் சம்பத்தில் மூழ்கிக் கர்வத்துடன்கூட போகத்தில் ஆழ்ந்திருப்பானுகில் அவனுக்குப் பெரிய ஆபத்து வந்துவிடும். மூட்டையாகச் சேர்த்துவைத்த சம்பத்து ஒரு நிமிஷத்தில் போய்விடும், கிடைத்த போகங்களும் அனுபவிக்க முடியாமல் போகும். ஆயுள் முடிந்த சரீரத்தில் ஜீவாத்மா இருக்காததைப்போல் அந்த அபாக்யவான் வீட்டில் லக்ஷ்மி தங்கமாட்டாள், ஸ்வதர்மம் மறையும்பொழுது எல்லா ஆஸ்ரயங்களும் விடுபட்டுப் போகின்றன. விளக்கு அணைந்ததும் பிரகாசம் மறைவதைப் போல. இப்படியாகப் பிரும்மதேவர் கூறிப் பின்னும் கூறுவார். ஹே பிரஜைகளே! ஸ்வதர்மவ்ருத்தி விடுபடும்பொழுது அங்கு ஸ்வதந்திரமும் இருக்காது. ஸ்வதர்மத்தைத் தியாகம் பண்ணினல் காலன் தண்டிப்பான். அவனைக் கடமையை விட்டவனென்று அவனுடைய சகலசம்பத்தையும் அபகரிப்பான். பிறகு அவனை தோஷம் நான்கு புறமும் சூழ்ந்துகொள்ளும். இரவில் மயானத்தைப் பூதங்கள் சூழ்ந்துகொள்ளாதா! அதைப் போல, மூன்று உலகத்திலிருக்கும் துக்கங்களையும் நானுவிதமான பாவங்களையும், அஷ்ட தரித்திரத்தையும் உன்மத்த நிலையையும் அவர்கள் அனுபவிப்பார்கள். பிறகு கல்ப முடிவு

வரை அழுது புலம்பிக்கொண்டிருக்கவேண்டியதுதான். அதனுல் ஆத்ம கர்மத்தை விடாதீர்கள். இந்திரியங்களின் பாசாங்கிற்கு உள்ளாகாதீர்கள். ஜலத்தில் வாழும் பிராணிகள் தரையில் வந்தால் அந்தக்ஷணமே அவைகளுக்கு மரணம் வருவதுபோல ஸ்வதர்மத்தை விட்டவர்களும் அழிவார்கள். அதனுல் ஸ்வதர்மத்தை மறக்காதீர்கள். அவரவர் கர்மத்தில் ஆழ்ந்திருங்கள். இதையே நான் அடிக்கடி சொல்லிவருகிறேன். (12)

यज्ञशिष्टाशिनः सन्तो मुच्यन्ते सर्वकिल्बिषैः ।
भुञ्जते ते त्वघं पापा ये पचन्त्यात्मकारणात् ॥ १३ ॥

யக்ஞசிஷ்டாசிந: ஸந்தோ முச்யந்தே ஸர்வகில்பிஷை: ।
புஞ்ஜதே தே த்வகம் பாபா யே பசந்த்யாத்ம காரணாத் ॥

கிடைத்த செல்வத்தை நிஷ்காம புத்தியுடன், தனக்கு விதித்திருக்கும் கர்மானுஷ்டானப் பிரகாரம் யார் உபயோகப்படுத்துகிருர்களோ, எவர் குருவிற்கும். அக்னிக்கும் பூஜை செய்கிருர்களோ, எவர்கள் உரிய காலத்தில் பிராமணர்களை யக்ஞத்தாலும், யாகத்தாலும் சந்தோஷமடையச் செய்கின்றுர்களோ, ஹோமம் செய்ததுபோக மீதியிருக்கும் அன்னத்தையே எவர்கள் தங்கள் குடும்பத்துடன் சந்தோஷமாக புஜிக்கின்றுர்களோ, அவர்களுடைய எல்லா பாபங்களையும் யக்ஞ ஹவிஸ் நாசம் செய்கிறது. யக்ஞான்னத்தை உண்பவனின் பக்கத்திலேயே பாபம் அணுகாது. அமிர்தத்தை உண்பவனுக்கு மஹா ரோகம் அணுகுமா? பிரும்ம நிஷ்டனுக்குப் பிராந்தி ஏற்படுமா? அதைப்போல யக்ஞசேஷத்தைப் புஜிப்பவனை பாபம் தன் வசப்படுத்தாது. அதனுல் ஸ்வதர்மத்தைச் செய்து சேகரித்த செல்வத்தை ஸ்வதர்மம் கூறும் வழியிலேயே செலவழித்துவிட்டு மீதமிருப்பதையே சந்தோஷத்துடன் அனுபவிக்க வேண்டும். இதைத்தவிர வேறு எந்த வழியில் சென்றுலும் அது உசிதமில்லை. தேகத்தை ஆத்மா என்று எண்ணுகிறவரும், விஷயமே போக வஸ்து என்று எண்ணுகிறவரும், ஜகமே யக்ஞத்தின் சாமக்கிரி என்று நினைக்காமல் அதை பிரமையினுலும் அகங்கார புத்தியினுலும் உபயோகிக்கவிரும்புகிறவரும், இந்திரியங்களுக்கு திருப்தி அளிக்கும் விதமாக பலவிதமான உணவுகளைச் சமைப்பவரும், பாபத்தை அடைகிருர்கள். இவ்வுலகப் பொருள்கள் யாவும் யக்ஞத்துக்குரியவைகளே,

அவைகளை ஸ்வதர்மம் என்னும் யக்ஞத்தின் மூலமாக பரமேஸ்வரனுக்கு அர்ப்பணிக்கவேண்டும். இதையறியாமல் மூட ஜனங்கள் தங்களுக்காகவே விதவிதமான சுவைகளைத் தயாரிக்கின்றார்கள். எந்த அன்னத்தால் யக்ஞம் சித்தியாகிறதோ, எதனால் பரமேஸ்வரர் சந்தோஷமடைகிறாரோ அந்த அன்னம் சாமானியமானதா என்ன? அதனால் இதைச் சாதாரண அன்னம் என்று எண்ணாமல் பிரும்ம சொரூபம் என்றே எண்ணவேண்டும். ஏனென்றால், இது சகல ஜகத்திற்கும் பிராணாதாரமாகின்றதன்றோ? அன்னத்தால் சகல பிராணிகளும் வாழ்கின்றன. (13)

अन्नाद्भवन्ति भूतानि पर्जन्यादन्नसंभवः ।
यज्ञाद्भवति पर्जन्यो यज्ञः कर्मसमुद्भवः ॥ १४ ॥

அந்நாத் பவந்தி பூதாநி பர்ஜந்யாத் அந்நஸம்பவ: ।
யக்ஞாத் பவதி பர்ஜந்யோ யக்ஞ: கர்மஸமுத்பவ: ॥

அன்னத்தால் சகல பிராணிகளும் வாழ்கின்றன. அன்னத்தை மேகம் உத்பத்தி செய்கின்றது. மேகங்கள் யக்ஞத்தால் உண்டாகின்றன. யக்ஞத்தை கர்மம் வெளிப்படுத்துகின்றது. (14)

कर्म ब्रह्मोद्भवं विद्धि ब्रह्माक्षरसमुद्भवम् ।
तस्मात्सर्वगतं ब्रह्म नित्यं यज्ञे प्रतिष्ठितम् ॥ १५ ॥

கர்ம ப்ரஹ்மோத்பவம் வித்தி ப்ரஹ்மாக்ஷர
ஸமுத்பவம் ।
தஸ்மாத் ஸர்வகதம் ப்ரஹ்ம நித்யம் யக்ஞே
ப்ரதிஷ்டிதம் ॥

கர்மத்தின் உத்பத்தி ஸ்தானம் வேத ரூபமான பிரும்மம். வேதங்களை அழிவில்லாத பிரும்மம் உத்பத்தி செய்கின்றது. இந்த சராசர வஸ்துக்கள் எல்லாம் பிரும்மத்தின் அதீனம், ஆனால் ஹே சுபத்ராபதி! கர்மமே உருவெடுத்து வந்தால் போலுள்ள யக்ஞமே ஸ்ருதியின் நிரந்தர வாஸஸ்தானம். (15)

एवं प्रवर्तितं चक्रं नानुवर्तयतीह यः ।
अघायुरिन्द्रियारामो मोघं पार्थ स जीवति ॥ १६ ॥

ஏவம் ப்ரவர்த்திதம் சக்ரம் நாநுவர்த்தயதீஹ ய: ।
அகாயுரிந்த்ரியாராமோ மோகம் பார்த்த ஸ ஜீவதி ॥

ஹே தனுர்தரா! யக்ஞ சம்பந்தமான பரம்பரையை நான் சுருக்கமாகச் சொன்னேன். உலகத்தில் எப்பொழுதும் உசிதமான ஸ்வதர்மம் என்னும் யக்ஞத்தை எந்த உன்மத்தன் நிராகரிக்கிறானோ, இந்திரியங்களை கெட்ட வழிகளில் செலுத்துகிறானோ, அவனைப் பாதகங்களுக்கு இருப்பிடம் என்றும், பூமிக்கு பாரம் என்றுமறி. அவனுடைய ஜன்மமும் கர்மமும் நிஷ்பலமே. அகாலத்தில் சூழ்ந்த மேகம் போலவும் ஆட்டுத் தாடியைப் போலவும் அவனுடைய வாழ்வு வியர்த்தம் என்று அறி அப்பா, ஸ்வதர்மத்தை ஒருவரும் விடக்கூடாது. மனதை ஒருமைப் படுத்தி இது ஒன்றையே செய்யவேண்டும், சரீரம் இருக்கும்வரை கடமையும் உண்டு. அப்பொழுது தனக்கு உசிதமான கர்மத்தை ஏன் விடவேண்டும்? மனித தேகத்தை அடைந்து எவன் கர்மத்தைச் சோம்பலால் விடுகிறானோ அவனை மூடனென அறி. (16)

यस्त्वात्मरतिरेव स्यादात्मतृप्तश्च मानवः ।
आत्मन्येव च संतुष्टस्तस्य कार्यं न विद्यते ॥ १७ ॥

யஸ்த்வாத்மரதிரேவ ஸ்யாத் ஆத்மத்ருப்தச்ச மாநவ: ।
ஆத்மந்யேவ ச ஸந்துஷ்ட: தஸ்ய கார்யம் ந வித்யதே ॥

தேகத்துடன் இருக்கும்பொழுதே எவன் கர்மத்தினால் சூழப்பட்டவனாக இருக்கமாட்டானோ, அவனே நிரந்தரமாக ஆத்மானந்தத்தில் மகிழ்கிறான். அவனே கிருதக்ருத்யன், அவனே கர்மக்கூட்டத்திலிருந்து எளிதாக விடுபட்டவன். (17(

नैव तस्य कृतेनार्थो नाकृतेनेह कश्चन ।
न चास्य सर्वभूतेषु कश्चिदर्थव्यपाश्रयः ॥ १८ ॥

நைவ தஸ்ய க்ருதேநார்த்தோ நாக்ருதேநேஹ கச்சந ।
ந சாஸ்ய ஸர்வபூதேஷு கச்சிதர்த்த வ்யபாச்ரய: ॥

திருப்தியடைந்தவுடன் நம் காரியங்களெல்லாம் தானாகவே நின்றுவிடுகின்றன, அதுபோல ஸ்வரூபானந்தத்தை அடைந்தவுடன் கர்மங்களும் நின்றுவிடுகின்றன. மனதிற்கு

ஆத்மஞானம் பிடிபடாதவரை சாதனங்களைச் செய்வது மிக அவசியம். (18)

तस्मादसक्तः सततं कार्यं कर्म समाचर ।
असक्तो ह्याचरन्कर्म परमाप्नोति पूरुषः ॥ १९ ॥

தஸ்மாதஸக்த: ஸததம் கார்யம் கர்ம ஸமாசர ।
அஸக்தோ ஹ்யாசரந் கர்ம பரமாப்நோதி பூருஷ: ॥

அதனால் நீ ஒருவிதமான விருப்பமும் இல்லாமல் உசிதமான ஸ்வதர்மத்தைச் செய். பலனை விரும்பாத புத்தியுடன் ஸ்வதர்மத்தைச் செய்கிறவனுக்கு உலகில் உண்மையாகவே கைவல்ய பதவி கிடைக்கின்றது. ( 19 )

कर्मणैव हि संसिद्धिमास्थिता जनकादयः ।
लोकसंग्रहमेवापि संपश्यन्कर्तुमर्हसि ॥ २० ॥

கர்மணைவ ஹி ஸம்ஸித்திம் ஆஸ்திதா ஜநகாதய: ।
லோகஸங்க்ரஹமேவாபி ஸம்பச்யந் கர்த்துமர்ஹஸி ॥

இதோ பார்! ஜனகர் முதலிய ஸத்புருஷர்கள் கர்மத்தைத் தியாகம் செய்யாமலேயே மோக்ஷ பதவியடைந்திருக்கிறார்கள். இதனால் மற்றொரு விதமான உபயோகமும் உண்டு. அதாவது நாம் கர்மத்தைச் சரிவர அனுஷ்டிப்பது கண்டு உலகம் நம்மிடமிருந்து அதைக் கற்றுக்கொள்ளும். இதனால் எளிதாக அதன் துக்கம் நீங்கிவிடும். கிருதகிருத்யர்கள் ஆனவர்களும் நிஷ்காம பதத்தை அடைந்தவர்களும்கூட உலக ஜனங்களுக்காகக் கடமையைச் செய்யவேண்டும். குருடனுக்கு வழிகாட்டிச் செல்லும் கண்களை உடையவனும் அவனைப்போலவே மெல்ல நடந்து செல்கிறான். அதைப்போல அக்ஞானிகளுக்கு தர்மத்தை நாம் நடத்திக்காட்டியே உபதேசிக்கவேண்டும். அப்படியில்லா விட்டால் அக்ஞானிகள் எப்படிக் கடைத்தேறுவார்கள்? ( 20 )

यद्यदाचरति श्रेष्ठस्तत्तदेवेतरो जनः ।
स यत्प्रमाणं कुरुते लोकस्तदनुवर्तते ॥ २१ ॥

யத்யதாசரதி ச்ரேஷ்ட: தத்ததேவேதரோ ஜந: ।
ஸ யத் ப்ரமாணம் குருதே லோகஸ்ததநுவர்த்ததே ॥

உலகத்தில் சாது மஹாத்மாக்கள் எப்படி நடக்கிறார்களோ, அதையே சாமான்யமான ஜனங்கள் தர்மம் என்று நம்பு கிறார்கள். அதையே பின்பற்றுகிறார்கள். அதனால் சாது மஹாத்மாக்களும் கர்மத்தை விடாமல் நடத்திக் காட்ட வேண்டும். (21)

न मे पार्थास्ति कर्तव्यं त्रिषु लोकेषु किञ्चन ।
नानवाप्तमवाप्तव्यं वर्त एव च कर्मणि ॥ २२ ॥

**ந மே பார்த்தாஸ்தி கர்த்தவ்யம் த்ரிஷு லோகேஷு கிஞ்சந ॥**
**நாநவாப்தமவாப்தவ்யம் வர்த்த ஏவ ச கர்மணி ॥**

மற்றவர்களைப்பற்றிக் கூறுவானேன்? ஹே கிரீடி! நானும் இதே மார்க்கத்தில் செல்கிறேன். எனக்கு இப்பொழுது என்ன விபத்து வந்திருக்கிறது? நான் ஏதாவது மனதில் இச்சை வைத்துக்கொண்டு கர்மத்தைச் செய்கின்றேனா? நான் எத்துணை அறிவாளி என்பதையும் பூர்ணத்வம் வாய்ந்தவன் என்பதையும் நீ நன்றாக அறிவாய். நான் என்னுடைய குருவின் இறந்துபோன புத்ரனை உயிர்ப்பித்துக் கொடுக்கவில்லையா? என்னுடைய இந்தவிதமான பிரபாவத்தை நீ அறிவாய். இப்படிப்பட்ட நானே ஒரு இச்சையும் வைத்துக்கொள்ளாமல் கர்மத்தை நடத்திக் காண்பிக்கிறேன் அல்லவா? (22)

यदि ह्यहं न वर्तेय जातु कर्मण्यतन्द्रितः ।
मम वर्त्मानुवर्तन्ते मनुष्याः पार्थ सर्वशः ॥ २३ ॥

**யதி ஹ்யஹம் ந வர்த்தேயம் ஜாது கர்மண்யதந்த்ரித: ।**
**மம வர்த்மாநு வர்த்தந்தே மநுஷ்யா: பார்த்த ஸர்வச: ॥**

நான் ஸ்வதர்மத்தை எவ்விதம் நடத்திக்காட்டுகிறேன் தெரியுமா? உலக இச்சையுள்ளவர்கள் நடப்பதைப்போலவே நானும் நடத்திக்காட்டுகிறேன். ஏனென்றால், நம்மை ஆச்ரயித்து இருக்கும் ஜனங்களுக்குக் கர்மம் செய்வதில் பிழை ஏற்படாதிருக்கும் பொருட்டு அவ்விதம் நடத்திக் காண்பிக்கிறேன். (23)

उत्सीदेयुरिमे लोका न कुर्यां कर्म चेदहम् ।
संकरस्य च कर्ता स्यामुपहन्यामिमाः प्रजाः ॥ २४ ॥

உத்ஸீதேயுரிமே லோகா ந குர்யாம் கர்ம சேதஹம் ।
ஸங்கரஸ்ய ச கர்த்தா ஸ்யாம் உபஹந்யாமிமா: ப்ரஜா: ॥

நாம் பூரணத்வத்தையடைந்து பிரும்ம ஸ்திதியில் இருப்போமானால் நம் பிரஜைகளின் நிலைமை என்ன ஆகும்? நம்முடைய நடத்தையைக்கண்டு அதைப்பார்த்துக் கற்றுக்கொள்ளவேண்டும் என்ற விருப்பம் அதனால் போய்விடும். யார் உலகில் பூரணர்களாகவும் ஸர்வக்ஞர்களாகவும் இருக்கின்றார்களோ, அவர்கள் கர்மத்தை விடுவது உசிதமல்ல. (24)

सक्ताः कर्मण्यविद्वांसो यथा कुर्वन्ति भारत ।
कुर्याद्विद्वांस्तथाऽसक्तश्चिकीर्षुर्लोकसंग्रहम् ॥ २५ ॥

ஸக்தா: கர்மண்யவித்வாம்ஸோ யதா குர்வந்தி பாரத ।
குர்யாத் வித்வான் ததாऽஸக்த: சிகீர்ஷு:
லோகஸங்க்ரஹம் ॥

காமுகர்கள் பலனில் ஆசை வைத்தே கர்மத்தைச் செய்கிறார்கள். அதைப் போலவே இச்சையில்லாதவர்களும் கர்மத்தைச் செய்ய பிரியப்படவேண்டும், இந்த லோகானுஸரணத்தை சகல விதத்திலும் ரக்ஷிப்பது அவசியம். நாம் கர்ம மார்க்கத்தை அனுசரித்துச் செல்லவேண்டும். உலகத்திற்கும் வழிகாட்ட வேண்டும். அதே சமயம் நம்மையும் இந்த உலக திருஷ்டிக்கு அப்பாற்பட்டவர்கள் என்று காட்டிக்கொள்ள வேண்டும். (25)

न बुद्धिभेदं जनयेदज्ञानां कर्मसङ्गिनाम् ।
जोषयेत्सर्वकर्माणि विद्वान्युक्तः समाचरन् ॥ २६ ॥

ந புத்திபேதம் ஜநயேத் அஜ்ஞாநாம் கர்மஸங்கிநாம் ।
ஜோஷயேத் ஸர்வ கர்மாணி வித்வான் யுக்த:
ஸமாசரன் ॥

தாயிடம் பால் குடிக்கக் கஷ்டப்படும் ஒரு குழந்தை இத்ரான்னம் எப்படிச் சாப்பிடும்? அதனுல் ஹே தனுர்தரா, அக்குழந்தைக்கு அன்னம் கொடுப்பது உசிதம் ஆகாததுபோல எவனுக்குக் கர்ம விஷயத்திலேயே அதிகாரம் கிடையாதோ அவனுக்கு நிஷ்காம்ய கர்மத்தின் மேன்மையை உரைப்பது கேலிக்கிடமாகும், அதனுல் அவனுக்கு சத்கர்மத்தையே சொல்லவேண்டும். இதுமாத்திரமல்ல. சத்கர்மத்தை நடத்தியும் காட்டவேண்டும், மேலும் வர்ணுஸ்ரம தர்மத்தை ரக்ஷிக்கும் பொருட்டு கர்மத்தைச் செய்வதால் கர்ம பந்தம் அணுகாது, நாடகத்தில் நடிகர்கள் பதிபத்னியாக நடித்தாலும் அவர்களுக்கு மனதிற்குள் அந்த எண்ணம் இருக்குமா? (26)

प्रकृतेः क्रियमाणानि गुणैः कर्माणि सर्वशः ।
अहंकारविमूढात्मा कर्ताऽहमिति मन्यते ॥ २७ ॥

ப்ரக்ருதே: க்ரியமாணுநி குணை: கர்மாணி ஸர்வச: ।
அஹங்கார விமூடாத்மா கர்தாऽஹமிதி மந்யதே ॥

ஹே தனுர்தரா, மற்றவர்கள் சுமையை நம் தலையில் வைத்துக்கொண்டால் நமக்கு பாரமாகத்தான் இருக்கும். இயற்கை பல சத்கர்மங்களையும் துஷ்கர்மங்களையும் விளைவிக்கின்றது. ஆனுல் மூட ஜனங்கள் பிரமையினுல் தங்களையே அதன் கர்த்தாவாக எண்ணிக்கொள்ளுகிருர்கள், அகங்காரத்தால் நிரம்பின தேகத்தை ஆத்மாவாக நினைத்துக்கொள்கிற மூடர்களுக்கு கர்மத்தின் ஆழ்ந்த ரஹஸ்யங்களை வெளிப்படுத்துவது உசிதமல்ல. இப்பொழுது உனக்கு இதமாயிருக்கும் வார்த்தைகளைச் சொல்லுகிறேன். (27)

तत्त्ववित्तु महाबाहो गुणकर्मविभागयोः ।
गुणा गुणेषु वर्तन्त इति मत्वा न सज्जते ॥ २८ ॥

தத்வவித்து மஹாபாஹோ குணகர்ம விபாகயோ: ।
குணு குணேஷு வர்தந்த இதி மத்வா ந ஸஜ்ஜதே ॥

எதனுல் கர்மம் உண்டாகிறதோ அந்தத் தேகாபிமானம் தத்வஜ்ஞானிகளுக்கு நசித்துப்போகிறது, அவர்கள் தேகாபிமானத்தை விட்டுவிட்டு குணங்களுக்கும் கர்மாக்களுக்குமப்பால்

தேகத்தில் பிரக்ருதியின் குணங்களால் விளையும் காரியங்களுக்கு சாக்ஷி மாத்திரமாக இருக்கிருர்கள். நமது முயற்சியால் சூர்யனை மறைக்கமுடியாததைப்போல அவர்கள் சரீரத்துடன் கூடினவர்களாக இருந்தும், அவர்களைக் கர்மங்கள் கட்டுப்படுத்துவது இல்லை. (28)

प्रकृतेर्गुणसंमूढाः सज्जन्ते गुणकर्मसु ।
तानकृत्स्नविदो मन्दान्कृत्स्नविन्न विचालयेत् ॥ २९ ॥

**ப்ரக்ருதே: குண ஸம்மூடா: ஸஜ்ஜந்தே குண கர்மஸு ।**
**தாநக்ருத்ஸ்நவிதோ மந்தான் க்ருத்ஸ்நவித்**
**ந விசாலயேத் ॥**

குணங்களின் ஜாலத்தின் வசப்பட்டவனை பிரக்ருதி தன் ஆதீனத்திற்குள்ளாக்கிக் கர்மபந்தத்தால் கட்டிவிடுகிருள். இந்திரியக் கூட்டங்கள் தங்கள் குணங்களுக்கேற்ப தங்கள் கர்மங்களைச் செய்கின்றன. ஆனால் இவன் இந்த பரகர்மங்களைத் தான் செய்வதாக நினைக்கிருன். (29)

मयि सर्वाणि कर्माणि संन्यस्याध्यात्मचेतसा ।
निराशीर्निर्ममो भूत्वा युध्यस्व विगतज्वरः ॥ ३० ॥

**மயி ஸர்வாணி கர்மாணி ஸந்ந்யஸ்யாத்யாத்ம சேதஸா ।**
**நிராசீர் நிர்மமோ பூத்வா யுத்யஸ்வ விகதஜ்வர: ॥**

நீ அவ்வாறு செய்யாமல் உனக்கு விதித்த கர்மங்களைச் செய்துகொண்டு அவைகளின் பலனை எனக்கு அர்ப்பணித்துவிடு. ஆனால் சித்த விருத்திகளை ஆத்ம சொரூபத்தில் நிலை நிறுத்து. இது கர்மம் இதை நான் செய்கிறேன். ஒரு குறிப்பிட்ட பலனை அடைய நான் இந்த கர்மத்தைச் செய்கிறேன் என்ற கர்வத்திற்குச் சித்தத்தில் ஒருபோதும் இடம் கொடாதே. சரீரத்திற்கு அடிமையாகாதே. எல்லா விருப்பங்களையும் விட்டுவிடு. சமய சந்தர்ப்பத்திற்குத் தகுந்தபடி கிடைத்திருக்கும் போகங்களை அனுபவித்துவிடு. இப்பொழுது வில்லைக் கையிலெடு. ரதத்தில் ஏறு. சமாதானமாக வீரர்களுக்குரிய கடமையைச் செய், உலகத்தில் உன் கீர்த்தியைப் பரவவிடு. ஸ்வதர்மத்தின் மதிப்பைப் பெருக்கு. இவ்விதம் ஸ்வதர்மத்தை அனுசரித்து

உலகை இந்த சுமையிலிருந்து விடுவித்துவிடு. பார்த்தா, சந்தேகிக்காதே யுத்தத்தில் மனதைச் செலுத்து. இந்த சமயத்தில் இதைவிட உசிதமான காரியம் வேறொன்றும் இல்லை. (30)

ये मे मतमिदं नित्यमनुतिष्ठन्ति मानवाः ।
श्रद्धावन्तोऽनसूयन्तो मुच्यन्ते तेऽपि कर्मभिः ॥ ३१ ॥

யே மே மதமிதம் நித்யம் அநுதிஷ்டந்தி மாநவா: |
ச்ரத்தாவந்தோ அநஸூயந்தோ முச்யந்தே
தேऽபி கர்மபி: ||

என் அபிப்ராயம் மிக உறுதியானது, அதைக் கவனத்துடன் ஒப்புக்கொண்டு, சிரத்தையுடன் நடத்துவதாக. ஒரு கர்மயோகி கர்மங்களில் ஈடுபட்டு வியவகாரம் செய்தால்கூட அவனைக் கர்மத்திலிருந்து விடுபட்டவனாக நினை. என்னுடைய இந்த உபதேசம் நிச்சயமாக நீ பின்பற்றுவதற்குரியது. (31)

ये त्वेतदभ्यसूयन्तो नानुतिष्ठन्ति मे मतम् ।
सर्वज्ञानविमूढांस्तान्विद्धि नष्टानचेतसः ॥ ३२ ॥

யே த்வேததப்யஸூயந்தோ நாநுதிஷ்டந்தி மே மதம் |
ஸர்வஜ்ஞாந விமூடாம்ஸ்தாந் வித்தி நஷ்டாநசேதஸ: ||

எவர்கள் பிரக்ருதிவசப்பட்டவர்களாக இந்திரியங்களின் கொஞ்சல்களுக்கு அடிமையாகி என் அபிப்ராயத்தை அவமதித்து விட்டுவிடுகிறார்களோ, எவர்கள் இதை மிகவும் சாதாரணமென்றெண்ணி அவமரியாதை செய்கிறார்களோ, அல்லது இது வெறும் புகழ்ச்சிக்குரிய வார்த்தைகள் என்று உளருகிறார்களோ, அவர்களை மோஹம் என்னும் மதுவை அருந்தியவர்களாகவும், விஷயம் என்னும் விஷவேகம் ஏறினவர்களாகவும், அக்ஞானம் என்னும் சகதியில் அழுந்தினவர்களாகவும் எண்ணு. இறந்தவனின் கையிலிருக்கும் ரத்னமோதிரம் எப்படி வீணோ, சந்திரோதயம் எப்படிக் காக்கைக்கும் பிரயோஜனமில்லையோ, அதுபோல விவேக சூன்யர்களான மூடர்களுக்கு என்னுடைய இந்த வார்த்தை ஏறவே ஏறாது. இந்தப் பரமார்த்த தத்வத்தில் ஈடுபடாதவர்

களிடம் பேசுவதே தப்பு. அவர்கள் இதை ஒப்புக்கொள்ளவும் மாட்டார்கள். நிந்திக்கவும் செய்வார்கள். ஒளியை விட்டில் களால் சகிக்கமுடிகிறதா? விட்டில்கள் தீபத்தைத் தழுவு கின்றன. உடனே இறந்துவிடுகின்றன. அதுபோல் விஷயங் களில் ஈடுபட்டவர்கள் நரகத்தை அடைகிறார்கள். (32)

सदृशं चेष्टते स्वस्याः प्रकृतेर्ज्ञानवानपि ।
प्रकृतिं यान्ति भूतानि निग्रहः किं करिष्यति ॥ ३३ ॥

ஸத்ருசம் சேஷ்டதே ஸ்வஸ்யா: ப்ரக்ருதேர்ஞானவாநபி ।
ப்ரக்ருதிம் யாந்தி பூதாநி நிக்ரஹ: கிம் கரிஷ்யதி ॥

இந்திரியங்களுக்கு மதிப்புக் கொடுத்து மகிழ்வது ஞானி களுக்கு உசிதமில்லை, சர்ப்பத்துடன் எவனாவது விளையாடு வானா? சிங்கத்தின் குகையில் வசிக்க எவனாவது ஆசைப்படு வானா? விஷத்தை ஜீரணிக்க முடியுமா? தீக்கொழுந்து களுடன் நம்மால் விளையாடமுடியுமா? அதுபோல் இந்திரியங்களுடன் சொகுசு கொண்டாடுவது நமக்கு சரியல்ல. மேலும் பராதீனப்பட்ட இந்த சரீரத்திற்காக அநேகவிதமான விஷய போகங்களை ஏன் சம்பாதிக்கவேண்டும்? மிகவும் ஆயாசப்பட்டு இரவு பகல் பாராமல் உழைத்து சம்பாதித்து அதை நாம் தேகத்திற்காகவா செலவழிக்கவேண்டும்? அந்த சம்பத்து ஸ்வதர்மத்தை விட்டு சரீரத்தைப் போஷிப்பதற்கா உதவவேண்டும்? அப்படிச் செய்தாலும் கடைசியில் என்ன ஆகும்? இந்தப் பஞ்சபூதங்களின் சேர்க்கை பிரிந்தும் பஞ்ச தத்வங்களை அடைந்துவிடும். அப்பொழுது நாம் இவ்விதமாகக் கஷ்டப்பட்டு சம்பாதித்த முயற்சியின் பலன் பிறகு நமக்குத் தேடினாலும் கிடைக்குமா? அதனால் சரீரத்தைப்போஷிப்பது தீங்கு. இதில் மனதைச் செலுத்துவது உசிதமல்ல. (33)

इन्द्रियस्येन्द्रियस्यार्थे रागद्वेषौ व्यवस्थितौ ।
तयोर्न वशमागच्छेत्तौ ह्यस्य परिपन्थिनौ ॥ ३४ ॥

இந்த்ரியஸ்யேந்த்ரியஸ்யார்த்தே ராகத்வேஷௌ
வ்யவஸ்திதௌ ।
தயோர்ந வசமாகச்சேத் தௌ ஹ்யஸ்ய பரிபந்திநௌ ॥

சாதாரணமாக இந்திரியங்களின் இச்சைப்படி விஷய வாசனைகளை போஷித்துப் பெருக்கிக்கொண்டு போனால் சந்தோஷம் ஏற்படுகிறது வாஸ்தவம். ஆனால் அது பணக்கார வேஷம் போட்ட திருடர்களின் கூட்டத்தில் சேர்வதை ஒக்கும். அந்த நகர் எல்லையைத் தாண்டும்வரை தான் மனது சாந்தமாக இருக்கும். அப்பனே! விஷம் ஆரம்பத்தில் இனிக்கத்தான் செய்யும். மனதிற்கு சந்தோஷத்தை தரும். ஆனால் முடிவில் பிராணனை அபகரிக்கும். இந்திரியங்களின் வேலை என்னவென்றால், பேராசை காட்டி சுகத்திற்கு நம்மை அழைக்கும். தூண்டிலிலிருக்கும் மாமிசம் மீனை அழைப்பதைப்போல. இந்த மாமிசத்தின் நடுவில் முள் இருக்கும் என்பதை மீன்கள் அறியா. பேராசையில் ஈடுபட்டு இருக்கும் மனிதனின் நிலையும் இதுவே. விஷயத்தில் ஆசை வைத்த மனிதன் குரோதாக்னியில் எரிக்கப்படுகிறான். வேடன் மானைக் கொல்லவேண்டுமென்றே தன் குறிக்கு நேராக அதைச் சிக்கவைக்கிறான். அதைப்போல இந்த விஷயவாசனைகளும் விஷம் நிரம்பியவைகளாக இருக்கிறது. அதனால் இவைகளின் சேர்க்கை உனக்கு உசிதமல்ல. காமத்தையும், குரோதத்தையும் அபாயகரம் என்றறி அதை ஆச்ரயிக்காதே, மனத்தாலும் நினைக்காதே. ஆத்மோன்னதியில் இருக்கும் ஆர்வத்தை ஒருபோதும் நஷ்டப்படுத்தாதே. (34)

श्रेयान्स्वधर्मो विगुणः परधर्मात्स्वनुष्ठितात् ।
स्वधर्मे निधनं श्रेयः परधर्मो भयावहः ॥ ३५ ॥

ச்ரேயாந் ஸ்வதர்மோ விகுண: பரதர்மாத்
ஸ்வநுஷ்டிதாத் ।
ஸ்வதர்மே நிதநம் ச்ரேய: பரதர்மோ பயாவஹ: ॥

அப்பா! உன் ஸ்வகர்மம் எவ்வளவு கடினமானதாக இருந்தாலும் அதைத்தான் செய்யவேண்டும், மற்றவர்களின் தர்மம் எவ்வளவு நல்லதாகத் தோன்றினாலும் அதில் ஈடுபடக்கூடாது. பிறர் மனைவி எவ்வளவு அழகாயிருந்தாலும், குணவதியாயிருந்தாலும் அவளிடம் ஆசை கொள்வது தவறு அல்லவா? உசிதமில்லாத இந்தக் காரியங்களை ஏன் செய்யவேண்டும்? எப்பொருள் நமக்கு உதவாதோ அதில் ஏன் இச்சை வைக்கவேண்டும்? இச்சையாவது இருந்துவிட்டு போகட்டும்,

அதை ஏன் பூர்த்தி செய்யவேண்டும்? பணக்காரனின் மாளிகையைப்பார்த்து நம் வைக்கோல் குடிசையை ஏன் எரிக்க வேண்டும்? அதாவது இருக்கட்டும் உன் மனைவி அழகாக இல்லாவிட்டாலும் அவளுடன் சுகிப்பதே மேல். அதுபோல ஸ்வதர்மம் எவ்வளவு கடினமானாலும், அனுசரிப்பதில் இடையூறு இருந்தாலும் அதுவே பரலோகத்தில் சுகத்தைக் கொடுக்கும். கரும்பும், பாலும் இனிப்பிற்குப் பிரசித்தம். ஆனால் வயிற்றில் கிருமி இருப்பவர் அதை குடிக்கக்கூடாது என்று வைத்யர் சொல்வார், அவர்கள் மீறிக் குடித்தார்களானால் முடிவு நன்றாயிராது. நாம் நன்மையடைய விரும்புவோமானால் மற்றவர்களுக்கு விதித்திருப்பதும், நமக்கு அனுசிதமுமான கர்மங்களை ஒருநாளும் செய்யக்கூடாது. இந்த ஸ்வதர்மத்தைச் செய்து வாழ்நாள் நாசமானாலும் இது இரண்டு லோகங்களிலும் நன்மையே தரும். (35)

(அ) இவ்விதமாக தேவ சிகாமணியான சாரங்கபாணி கூறினார், அப்பொழுது அர்சுனன் கூறினான் - ஹே தேவா! ஒரு விண்ணப்பம். தாங்கள் கூறினதை எல்லாம் நன்றாகக் கேட்டுக் கொண்டேன். ஆனால் என் விருப்பப்படி சில வார்த்தைகளைக் கூறுகிறேன்:—

अर्जुन उवाच —

**अथ केन प्रयुक्तोऽयं पापं चरति पूरुषः ।**
**अनिच्छन्नपि वार्ष्णेय बलादिव नियोजितः ॥ ३६ ॥**

அர்ஜுன உவாச—

**அத கேன ப்ரயுக்தோயம் பாபம் சரதி பூருஷ: ।**
**அநிச்சந்நபி வார்ஷ்ணேய பலாதிவ நியோஜித: ॥**

ஹே தேவ! இதனால் ஞானிகளின் நிலைமையும் மோசமாகப் போகிறதே! அவர்களும் ஸன்மார்க்கத்தை விட்டு அன்னிய மார்க்கத்தில் செல்லுவதாகக் காணப்படுகிறதே! ஸர்வக்ஞர்களும், நித்யகர்மத்தை அறிந்தவர்களும்கூட தங்கள் ஸ்வதர்மத்தை விட்டுவிட்டு அன்னிய தர்மத்தில் ஈடுபடுகிறார்களே. உமி கலந்த தான்யத்தைக் குருடனால் சலிக்க முடியாததுபோல, நல்ல கண்களையுடையவர்களும் ஏன் இ

பிழையைச்செய்கிறார்கள் ? மிக்க நல்ல வழியில் சென்று, சத்சங்கத்தை அடைந்தவர்களும்கூட அதனால் ஏன் திருப்தி யுறுவதில்லை ? வனவாசிகளும் நகரில் வந்து வசிக்கிறார்கள். மறைவாக சகல பாபங்களையும் நீக்க முயற்சிக்கிறார்கள். ஆனால் மறுபடியும் பலவந்தமாகப் பாபங்களில் ஈடுபடுகிறார்கள். எந்த விஷயத்தை வெறுக்கிறோமோ, அவைகளே நம் உயிரை வாங்கு கின்றன. நாம் அதை வெளியே தள்ளினாலும் அவை நம்மைத் திரும்பவும் தேடிவருகின்றன. பலம் பொருந்திய தோஷத்தின் ஆக்ரமிப்பால் இப்படி நடப்பதைக் காண்கிறோம். இது என்ன தோஷம் ? இது என்ன விஷயம் ? ஹே ஹ்ருஷிகேசா ! இதைக் கூறுங்கள். (36)

(அ) அப்பொழுது ஹ்ருதய கமலவாசியும் ஆசையில்லாத யோகிகளுக்கும் விருப்பத்தைக் கொடுப்பவருமான புருஷோத்தமன் கூறுகிறார்:—

श्रीभगवानुवाच —

**काम एष क्रोध एष रजोगुणसमुद्भवः ।**
**महाशनो महापाप्मा विद्ध्येनमिह वैरिणम् ॥ ३७ ॥**

ஸ்ரீ பகவானுவாச—

**காம ஏஷ க்ரோத ஏஷ ரஜோகுண ஸமுத்பவ: ।**
**மஹாசநோ மஹாபாப்மா வித்த்யேநமிஹ வைரிணம் ॥**

கேளப்பா ! காமம் என்றும் க்ரோதமென்றும் இரண்டு இருக் கின்றன. அவைகளிடம் தயை என்னும் பொருள் மருந்திற்கு கூட இல்லை. இவைகளைக் காலனுக்கு இருப்பிடமாக அறி. இவைகள் ஞானமென்னும் தனத்தைக் காக்கும் ஸர்ப்பங்கள். விஷயமென்னும் குகையில் வாழும் புலிகள். பஜனை மார்க்கத் திற்கு இடையூறு விளைவிக்கும் சண்டாளர்கள். தேகமென்னும் கோட்டையில் பதித்திருக்கும் கற்கள். இந்திரியமென்னும் நகரின் கோட்டை. இவைகள் உலகில் அஞ்ஞானமென்னும் கலஹத்தை விளைவிக்கின்றன. மனத்தின் ரஜோகுணத்தினால் உற்பத்தியானவை. அவித்யை என்னும் செவிலித்தாய் இவை களை வளர்த்தாள். இவைகள் ரஜோகுணத்தினால் பிறந்தவை ஆயினும், தமோகுணத்தையே விரும்புகின்றன. இதனால்

சந்தோஷித்த தமோகுணம் தன் பதவியான மோகத்தையும், பிழைகளையும் பரிசாக அளித்தது மரணம் என்னும் நகரில் இவைகளின் செல்வாக்கு அதிகம். இவை உயிர்களின் சத்ரு. இவைகள் மாத்திரம் அதிகப் பசியை அடைந்து உண்ண விரும்பினுல் உலகம் இவைகளின் ஒரு கவளத்திற்குக் கூடவராது. ஆசை இவைகளின் தொழிலை நடத்துகிறது. எது பதினுன்கு உலகங்களையும் கைப்பிடியில் அடக்குவதற்கு போதுமானது அல்ல என்று நினைக்கிறதோ, அந்த பிராந்தி இவைகளின் இளைய சகோதரி. அச் சகோதரி மூன்று உலகங்களுக்கும் உணவைத் தயாரிக்கிறேன் என்று கூறிக கூறி இம் மூன்று உலகங்களையுமே விழுங்கி விடுகிருள். இவளுடைய சேவையினுலேயே பேராசை உயிருடன் வாழ்கிறது. மோகம இதைப் பெரிதும் மதிக்கிறது. அகங்காரம் இதைத் தழுவுகிறது. இவ்விரண்டின் உதவியினுல பேராசை இவ்வுலகை ஆட்டுவிக்கிறது. சத்யம் என்ற பழத்தின் உள் சதையை எடுத்துவிட்டு அசத்யம என்னும் உமியை இதனுள் அடைக்கும் டம்பத்தை இவைகள் உலகில் வாழவைக்கின்றன. இவைகள பதிவிரதையான சாந்தியைக் கடத்திச் சென்று பிச்சைக்காரியான மாயையை சிங்காரிக்கின்றன. அவளால் சாது மஹாத்மாக்களை நழுவி விழச் செய்கின்றன. இவைகள் விவேகத்தின இருப்பிடத்தை நாசமாக்குகின்றன. வைராக்யத்தின் தோலை உறிக்கின்றன. உபசாந்தியை கழுத்தைத் திருகி கொல்லுகின்றன. சந்தோஷம் என்ற வனத்தை அழிக்கின்றன. தைரியமாகிற கோட்டையை இடிக்கின்றன. ஆனந்தமாகிற முளையைக் கிள்ளி எறிகின்றன. ஞானமாகிற பயிரை நசுக்குகின்றன. சுகம் என்ற பெயரை அழிக்கின்றன. அந்தககரணத்தில் மூனறு விதமான தாபத்தைக் கொழுந்துவிட்டு எரியச்செய்கின்றன. இவைகள் உடலெடுத்ததிலிருந்தே இதயத்தோடு ஒட்டிக்கொண்டு தான் இருக்கின்றன. ஆனுல தேடினுல் பிரும்மாதி தேவர்களுக்கும பிடிபடுகிறதில்லை. இவைகள சைதன்யத்தின் அருகில் ஞானத்தின் வரிசையில் தான் உட்கார்ந்து கொண்டு இருக்கின்றன. மஹாப்ரளயத்தை உண்டாக்குவதில் ஈடுபட்டிருக்கின்றன. இவைகள் ஒருவராலும் தடுக்கமுடியாதவை. பிராணிகளைத் தண்ணீர் இல்லாமலேயே மூழ்கடித்து விடும். அக்னி இல்லாமலேயே எரித்து விடும. பேசாமலேயே விழுங்கிவிடும. ஆயுதம் இல்லாமலேயே கொன்றுவிடும், கயிறு இல்லாமலேயே கட்டிவிடும, ஞானிகளின் தைரியத்தை நாசம் செய்துவிடும,

சகதியில்லாமலேயே ஆழ்த்திவிடும். பாசம் இல்லாமலேயே சிக்கவைத்துவிடும். பலத்தில் இவர்களை ஒருவராலும் ஜெயிக்க முடியாது. (37)

धूमेनाव्रियते वह्निर्यथाऽऽदर्शो मलेन च ।
यथोल्बेनावृतो गर्भस्तथा तेनेदमावृतम् ॥ ३८ ॥

தூமேநாவ்ரியதே வஹ்நி: யதாதர்சோ மலேந ச ।
யதோல்பேநாவ்ருதோ கர்ப: ததா தேநேதமாவ்ருதம் ॥

சந்தன மரத்தில் பாம்பு சுற்றிக்கொண்டிருப்பதுபோலும் கருவை கர்ப்பப்பை மூடிக்கொண்டிருப்பதுபோலும் பிரகாசம் உள்ள நெருப்பை பிரகாசமற்ற புகை மூடுவதுபோலும் அழுக்கு கண்ணாடியில் முகம் தெரியவொட்டாமல் மறைப்பதுபோலும் காமம் ஞானத்தை மறைக்கிறது. இது இயற்கை புகையில்லாத நெருப்பையும், கருப்பப்பை இல்லாத கருவையும் எங்காவது காணமுடியுமா? தொலியால் மூடப்படாத விதையைப்போல ஆவரணம் இல்லாத ஞானத்தை நாம் பார்க்க முடியாது. (38)

आवृतं ज्ञानमेतेन ज्ञानिनो नित्यवैरिणा ।
कामरूपेण कौन्तेय दुष्पूरेणानलेन च ॥ ३९ ॥

ஆவ்ருதம் ஜ்ஞாநமேதேந ஜ்ஞாநிநோ நித்யவைரிணா ।
காமரூபேண கௌந்தேய துஷ்பூரேணாநலேந ச ॥

ஞானம் இயற்கையில் சுத்தமானது. ஆனால் காமக்ரோதத்தினால் மறைக்கப்பட்டு ஆழத்தில் கிடக்கிறது. முதலில் காமக்ரோதத்தை ஜெயிக்க வேண்டும். அப்பொழுது தான் ஞானம் கிட்டும். ஞானம் இன்றி ராகத்வேஷத்தை ஜெயிப்பது முடியாத காரியம். இவைகளை ஜெயிப்பதற்கு சரீரபலத்தால் பிரயோசனமில்லை, அப்படிச்செய்தாலும் அது தீயிலிட்ட விறகுபோல அதற்கு ஒத்தாசையாகவே ஆகும். (39)

इन्द्रियाणि मनो बुद्धिरस्याधिष्ठानमुच्यते ।
एतैर्विमोहयत्येष ज्ञानमावृत्य देहिनम् ॥ ४० ॥

இந்த்ரியாணி மநோ புத்தி: அஸ்யாதிஷ்டாநமுச்யதே ।
ஏதைர் விமோஹயத்யேஷ ஜ்ஞாநமாவ்ருத்ய தேஹிநம் ॥

மற்ற எவ்வித உபாயங்களும் இவைகளுக்கு உதவியாகவே இருக்கும். ஆகையால் அவைகள் உலகில் திடமான யோகிகளையும் ஜெயித்துவிடும். இத்தனை சங்கடங்களுக்கு மத்தியிலும் ஒரு உத்தமமான உபாயம் இருக்கிறது. அது உனக்கு அனுகூலமாக இருக்குமாஞல் சொல்கிறேன். (40)

तस्मात्त्वमिन्द्रियाण्यादौ नियम्य भरतर्षभ ।
पाप्मानं प्रजहि ह्येनं ज्ञानविज्ञाननाशनम् ॥ ४१ ॥

தஸ்மாத் த்வம் இந்த்ரியாண்யாதௌ நியம்ய பரதர்ஷப ।
பாப்மாநம் ப்ரஜஹி ஹ்யேநம் ஜ்ஞாநவிஜ்ஞாநநாசநம் ॥

இவைகள் புகுந்து இருக்கும் இடம் இந்திரியங்கள் வாழும் கூண்டு, இங்கிருந்தே இவைகளின் முயற்சிகள் உற்பத்தியாகின்றன. முதலில் இந்த இந்திரியங்களை ஜெயிப்பாயாக. (41)

इन्द्रियाणि पराण्याहुरिन्द्रियेभ्यः परं मनः ।
मनसस्तु परा बुद्धिर्यो बुद्धेः परतस्तु सः ॥ ४२ ॥

இந்த்ரியாணி பராண்யாஹு: இந்த்ரியேப்ய: பரம் மந:
மநஸஸ்து பரா புத்தி: யோ புத்தே: பரதஸ்து ஸ: ॥

இப்படிச்செய்வதால் மனதின் வேகம் அடங்கும். புத்தி விடுதலை அடைந்து தெளிவாகும். அப்பொழுது இப்பாபிகளின் கூட்டம் நாசமாகும். (42)

एवं बुद्धेः परं बुद्ध्वा संस्तभ्यात्मानमात्मना ।
जहि शत्रुं महाबाहो कामरूपं दुरासदम् ॥ ४३ ॥

ஏவம் புத்தே: பரம் புத்வா ஸம்ஸ்தப்யாத்மாநமாத்மநா ।
ஜஹி சத்ரும் மஹாபாஹோ காமரூபம் துராஸதம் ॥

இவையிரண்டையும் அந்தக்கரணத்திலிருந்து கிளப்பிவிடுவாயாஞல் நிச்சயமாக நாசமடைந்துவிடும். கதிரவன் கிரணங்கள் இல்லாவிட்டால் கானல் ஜலம் எவ்வாறு தென்படும்? ராகமும் த்வேஷமும் நாசமடைந்துவிட்டால் பிரும்மமாகிற ஸ்வராஜ்யம் கிடைத்துவிடும். மனிதன் நித்ய ஆத்மசுகத்தை

அனுபவிக்கலாம். இது குரு சிஷ்யன் இருவருக்குமே தெரிய வேண்டிய ரசஸ்யமான விஷயம். இதுவே ஜீவபிரும்மத்தின் ஐக்கியம். இவ்விடத்தையே ஸ்திரமாக்கிக்கொள். இங்கிருந்து விலகாதே. (43)

மூன்றாவது அத்தியாயம் முற்றும்.

# நான்காவது அத்யாயம்

ஸஞ்ஜயன் கூறுகிறான்:—ஹே ராஜனே, இவ்விதமாக சித்தர்களுக்கு அரசனும் லக்ஷ்மீகாந்தனுமான தேவதேவன் உபதேசம் செய்தான். பிறகு அனந்தன் ஒரு பழமையான கதையைக் கூறுவான். அதற்குமேல் அர்ஜுனன் சில கேள்விகள் கேட்பான். இந்த ஸம்வாதத்தை சுரோதாக்கள் கேட்டு சிரவண சுகத்தை அனுபவிப்பார்கள். நிவ்ருத்தி தேவனின் தாஸன் ஞான தேவராகிய நான் கூறுகிறேன்:—ஸாதுக்களே, உங்கள் புத்தியை நன்றாகத் தீட்டி விழிப்படையச்செய்யுங்கள். கிருஷ்ண பார்த்தர்களின் சம்வாதத்தை நன்றாக உபயோகப்படுத்திக் கொள்ளுங்கள்.

இந்த தினம் நாம் காதைப்படைத்ததற்கு நல்ல தினமாகும். ஏனென்றால் கீதை என்னும் ஸுநாதத்தை அது கேட்கத் தயாராக இருக்கிறது. கனவான இவ்வுலகம் உண்மையை விலை கொடுத்து வாங்கியதைப்போல இருக்கிறது. இக்கதையே விவேகத்தின் களஞ்சியம். ஜகத் சிரேஷ்டரான கிருஷ்ண பகவான் இதைக் கூறுகிறார். பக்தராஜனான அர்ஜுனன் கேட்கிறான். பஞ்சமஸ்வரம் இனிமையானது. அதில் நல்ல மணமும் ருசியும் சேர்ந்தால் எப்படி இருக்கும்? அதைப்போல இந்த கதை மனோரஞ்சகமானது. நமக்குத்தான் எத்தகைய பாக்யம்? அமிர்தமே கங்கையாக நமக்கு கிடைத்திருக்கிறது. கேட்பவர்களின் பூர்வ ஜன்ம பலனே நமக்கு கீதாரூபமாக வந்திருக்கிறது. எல்லா இந்திரியங்களும் ஸ்ரவணேந்திரியமான வீட்டில் பிரவேசித்து இந்த கீதாஸம்வாதமான சுகத்தை அனுபவிக்கிறது. நான் வீணாக வர்ணிக்க விரும்பவில்லை. ஸ்ரீ கிருஷ்ணனும் அர்சுனனும் எதைப் பேசுகிறார்களோ, அதையே சொல்லப் போகிறேன், சஞ்சயன் திருதராஷ்டிரனிடம் கூறுகிறார். "ஹே அரசே, அர்ஜுனன் மிகவும் பாக்யசாலி ஸ்ரீ மந்நாராயணன் தான் எவ்வளவு பிரேமையுடன் இவ்

விஷயத்தைச் சொல்கிருர்? அவர் தன் பிதா வசுதேவருக்கு இதைக் கூறியதில்லை மாதா தேவகிக்கும் கூறியதில்லை. சகோதரர் பலராமனிடமும் கூறியதில்லை. அதே ரகஸ்ய விஷயத்தை அர்ஜுனனுக்குக் கூறுகிருர். அவர்கள் இருக்கட்டும் லக்ஷ்மிதேவி எப்பொழுதும் மார்பில் உட்கார்ந்துகொண்டு இருக்கிருளே. அவளும் இந்த பிரேம சுகத்தை அனுபவிக்க வில்லை. இன்று அர்ஜுனனுக்குத் தான் இந்த பிரேம சுகம் கிடைத்திருக்கிறது. ஸனகாதிகளைப் பற்றி மிகவும் சிலாக்ய மாகக் கூறுவார்கள். அவர்களும் இவ்விஷயத்தில் வெற்றி பெறவில்லை. அர்சுனனிடம் ஜகதீசனுக்கு இருக்கும் பிரேமை இதற்கு சாக்ஷி. அவன் தான் எவ்வளவு புண்யம் செய்திருக் கிருன்? அவனிடம் இருக்கும் பிரியத்தினுல் தான் விதேஹமான பரப்ரும்மம் உருவம் எடுத்துக்கொண்டு அர்சுனனிடம் ஒன்று சேர்வதற்காகவே வந்திருப்பதாக எனக்குத் தோன்றுகிறது. யோகிகளின் மனதில் இவன் எட்டுவதில்லை. வேதாந்தி களின் அறிவிற்கும் இவன் எட்டுவதில்லை. த்யானத்தின் கூர்மையான மனோதிருஷ்டிகூட அவன் வரை எட்டாது.. அப்படிப்பட்ட இந்த ஆத்ம ஸ்வரூபம், அநாதியான பரம் பொருள், நிச்சலவஸ்து இன்று தயையினுல் உருவெடுத்து வந்திருக்கிறது. அர்சுனனின் பிரேமையில் சிக்கிக்கொண்டு கண்களுக்கு புலனுகியிருக்கின்றது. பகவான் கூறுகிருர் :—

श्रीभगवानुवाच —

इमं विवस्वते योगं प्रोक्तवानहमव्ययम् ।
विवस्वान्मनवे प्राह मनुरिक्ष्वाकवेऽब्रवीत् ॥ १ ॥

ஸ்ரீ பகவான் உவாச :—

இமம் விவஸ்வதே யோகம் ப்ரோக்தவாநஹமவ்யயம் |
விவஸ்வாந் மநவே ப்ராஹ மநு: இக்ஷ்வாகவேऽப்ரவீத் ||

ஹே பாண்டு ஸுத! இதே யோகத்தைப் பற்றி நான் விவஸ்வானுக்கு கூறினேன். ஆனுல் அது ரொம்ப காலத்திற்கு முன்னுல். அந்த விவஸ்வானுன சூரியன் இந்த யோகத்தைப் பற்றி மிக நன்ருக வைவஸ்வத மனுவிற்கு நிரூபித்துக் காட்டினுன். மனு தானே இந்த யோகத்தை அனுஷ்டித்து சித்திபெற்ருன். பிறகு இதை இஷ்வாகுவிற்கு உபதேசித்தான். இப்படியாக இந்த பரம்பரையான தொடர்பு. (1)

एवं परंपराप्राप्तमिमं राजर्षयो विदुः ।
स कालेनेह महता योगो नष्टः परंतप ॥ २ ॥

ஏவம் பரம்பரா ப்ராப்தம் இமம் ராஜர்ஷயோ விது: ।
ஸ காலேநேஹ மஹதா யோகோ நஷ்ட: பரம்தப ॥

அதற்குப் பிறகு இந்த யோகத்தை அநேக ராஜரிஷிகள் அறிந்திருக்கிறார்கள். ஆனால் அதன் பிறகு தற்காலம் வரை இதை ஒருவரும் அறியவில்லை. காரணம் என்னவென்றால் ஜீவர்களுக்கு விஷய போகங்களிலேயே ருசி ஏற்பட்டுவிட்டது. சரீரத்திலேயே பிரேமை ஏற்பட்டுவிட்டது. அதனால் அவர்கள் ஆத்மஞானத்தை மறந்துவிட்டார்கள். ஜனங்களின் ஆசையும் புத்தியும் கோணல் மாணலாகச் செல்லுகின்றன. விஷய சுகமே பரமபதம் என்று நினைக்கிறார்கள். மனம் விரும்பியதே மாளிகை என்று நினைக்கிறார்கள். நிர்வாண தேசத்தில் விலையுயர்ந்த வஸ்திரத்திற்கு என்ன மதிப்பு? பிறவிக் குருடனுக்கு சூரியனால் என்ன பிரயோஜனம்? செவிடர்களின் சபையில் ஸங்கீத கச்சேரி எதற்கு? திருடர்கள் நிலாவை எங்காவது விரும்புவார்களா? சந்த்ரோதயத்திற்கு முன்னாலேயே குருடாகும் காக்கைக்கு சந்திரனை எவ்வாறு அறியமுடியும்? அதுபோல வைராக்யத்தின் அஸ்திவாரத்தைப் பாராதவர்களுக்கு, விவேகமென்றால் என்னவென்று அறியாதவர்க்கு நான் எப்படி அறியக் கூடியவன் ஆவேன்? இந்த மோஹாந்தகாரமோ எங்கும் பரவிவிட்டது. வெகு காலம் வீணாகக் கழித்துவிட்டது. அதனால் இந்த உலகை விட்டு இந்த யோகமும் மறைந்துவிட்டது. (2)

स एवायं मया तेऽद्य योगः प्रोक्तः पुरातनः ।
भक्तोऽसि मे सखा चेति रहस्यं ह्येतदुत्तमम् ॥ ३ ॥

ஸ ஏவாயம் மயா தேऽத்ய யோக: ப்ரோக்த: புராதந: ।
பக்தோऽஸி மே ஸகா சேதி ரஹஸ்யம் ஹ்யேததுத்தமம் ॥

ஹே குந்திபுத்திரா! அந்த யோகத்தை உனக்கு நான் நன்றாக நிரூபிக்கிறேன். இதை மறந்துவிடாதே. நான் என் இதயத்தில் பொதித்து வைத்திருக்கும் பரம ரஹஸ்யம் இது. நீ எனக்கு மிக்க அன்பானவன் ஆதலால் உன்னிடம் இதை

நான் ஏன் ஒளிக்கவேண்டும்? நீயும் என்னிடம் மிக்க அன்புள்ளவன், பக்தியே உனது இருதயம் நட்பே உன் வாழ்வு. நம்பிக்கையே உன் இருப்பிடம். ஆகையால் உன்னிடம் மறைக்க முடியுமா? யுத்தத்திற்காக உறுதி பூண்டு நாம் இங்கு வந்திருந்த போதிலும் உன் மனம் குழப்பமடைந்திருப்பதால் உன் மனதில் உள்ள அக்ஞானத்தை விலக்குவதற்காக இதைக் கூறுகிறேன். (3)

अर्जुन उवाच —

अपरं भवतो जन्म परं जन्म विवस्वतः ।
कथमेतद्विजानीयां त्वमादौ प्रोक्तवानिति ॥ ४ ॥

அர்ஜுந உவாச: —

அபரம் பவதோ ஜந்ம பரம் ஜந்ம விவஸ்வத: ।
கதமேதத் விஜாநீயாம் த்வமாதௌ ப்ரோக்தவாநிதி ॥

அப்பொழுது அர்ஜுனன் கூறுவான் :— ஹரி! தாய் தன் குழந்தையை நேசிக்கிருள். அதில் ஆச்சரியம் என்ன இருக்கிறது? தாங்கள் சம்சார வாழ்வில் அத்ருப்தி அடைந்தவர்களுக்கு ஆச்ரயம், அனுதைகளுக்குத் தாய். உண்மையில் தங்கள் கிருபையினுலேயே நாங்கள் ஜீவித்திருக்கிறோம், தேவா, ஒரு தாய்க்கு விதிவசத்தால் அங்கஹீனமான ஒரு குழந்தை பிறக்குமானுல் வாழ்நாள் முழுவதும் அவள் அக் கஷ்டத்தை அனுபவிக்கத்தானே வேண்டும்? தங்களுடைய பெருமையை தங்களிடமே நானு வர்ணிக்கவேண்டும்? இப்பொழுது நான் கேட்பதைச் சற்று கவனிக்கவேண்டும், என் மேல் கோபமடையவேண்டாம், ஹே அனந்தா! இந்த பழமையான விஷயத்தைப் பற்றி தாங்கள் கூறினீர்களே, அது என் மனதிற்கு கொஞ்சமும் புரியவில்லை, இந்த விவஸ்வான் யார்? அவனுக்கு எங்கு எப்பொழுது தாங்கள் உபதேசித்தீர்கள்? விஷயமோ பழமையானது. தாங்களோ இக்காலத்தவர். இவ்வார்த்தை பரஸ்பரம் விரோதமாகத் தோன்றுகிறது. ஆனுல் தங்கள் சரித்திரத்தைப் பற்றி ஒன்றும் அறியாத நான் எவ்விதம் அதை பொய் என்று சொல்வது? அதனுல் இவ்விஷயத்தை என் சிற்றறிவிற்கு விளங்கும்படி கூறவேண்டும். தாங்களா சூரியனுக்கு உபதேசித்தீர்கள்? (4)

श्रीभगवानुवाच —

बहूनि मे व्यतीतानि जन्मानि तव चार्जुन ।
तान्यहं वेद सर्वाणि न त्वं वेत्थ परंतप ॥ ५ ॥

ஸ்ரீ பகவான் உவாச :—

பஹூநி மே வ்யதீதாநி ஜந்மாநி தவ சார்ஜுந ।
தாந்யஹம் வேத ஸர்வாணி ந த்வம் வேதத பரம்தப ॥

அப்பொழுது பகவான் கூறுவார் :— ஹே பாண்டு புத்ரா! அச்சூரியனுடன் நான் இருக்கவில்லை என்று எண்ணுகிறாயா? இது உன் அக்ஞானம். உனக்கும் எனக்கும் எத்தனையோ ஜன்மங்கள் கழிந்து விட்டன. தெரியுமா? உனக்கு அந்த ஜன்மங்களைப் பற்றி ஒன்றும் நினைவில்லை நான் எந்தெந்த காலத்தில் எந்தெந்த உருவில் இருந்தேனோ அதை அப்படியே நினைவில் வைத்திருக்கிறேன். (5)

अजोऽपि सन्नव्ययात्मा भूतानामीश्वरोऽपि सन् ।
प्रकृतिं स्वामधिष्ठाय संभवाम्यात्ममायया ॥ ६ ॥

அஜோऽபி ஸந்நவ்யயாத்மா பூதாநாமீச்வரோऽபி ஸந் ।
ப்ரக்ருதிம் ஸ்வாமதிஷ்டாய ஸமபவாம்யாத்ம மாயயா ॥

அதனாலேயே பழைய சம்பவம் எனக்கு நினைவிருக்கிறது. நான் ஜனன மற்றவன். ப்ரக்ருதியை ஸ்வீகரித்து ஜன்மம் எடுக்கிறேன். அதனால் என் அழிவற்ற நிலைக்கு ஒரு பங்கமும் ஏற்படாது. ஜனன மரணமென்று எவை தென்படுகிறதோ அவை மாயா வசமாக என்னிடமிருந்தே ப்ரதிபலிக்கிறது. அதனால் என் ஸ்வதந்திரத்தன்மை நஷ்டம் அடையவில்லை. என்னுடைய கர்மவசத்தினால் உண்டாவதாகத் தோன்றுவது புத்தி ப்ரமையே ஆகும். நான் உண்மையில் கர்மத்தின் வசப்பட்டவனில்லை. ஒரு பொருள் கண்ணாடியில் இரண்டாகத் தெரிகிறது, அது கண்ணாடியின் ஆதாரத்தாலேயே தெரிகிறது, உண்மையை கூறுமிடத்து அங்கு இரண்டாவது பொருள் ஏது? ஹே, கிரீடி, நான் வேண்டும் என்றே மாயை வசப்பட்டவனாகிக் கார்யவசத்தால் உருவம் பெற்று நடிகனைப்போலவே நடிக்கிறேன். (6)

यदा यदा हि धर्मस्य ग्लानिर्भवति भारत ।
अभ्युत्थानमधर्मस्य तदाऽऽत्मानं सृजाम्यहम् ॥ ७ ॥

யதா யதா ஹி தர்மஸ்ய க்லாநிர் பவதி பாரத ।
அப்யுத்தாநமதர்மஸ்ய ததாऽऽத்மாநம் ஸ்ருஜாம்யஹம் ॥

அனுதிகாலம் தொட்டு இயற்கையாகவே ஸம்பூர்ண தர்ம ஸமுதாயத்தை ஒவ்வொரு யுகத்திலும் நான் ரக்ஷிப்பது என் வழக்கம், எந்த ஸமயம் அதர்மம் தர்மத்தை வெல்கிறதோ அச்சமயம் நான் ஜன்மமில்லாதவன் என்பதை மறந்து விட்டு ஜென்மம் எடுக்கிறேன். (7)

परित्राणाय साधूनां विनाशाय च दुष्कृताम् ।
धर्मसंस्थापनार्थाय संभवामि युगे युगे ॥ ८ ॥

பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம் ।
தர்மஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே ॥

அச்சமயம் நான் என் பக்தர்களின் உதவிக்காக உருவமெடுத்து அவதரிக்கிறேன். அக்ஞானத்தை அழிக்கிறேன், அதர்மத்தின் எல்லையை அழிக்கிறேன். பாபக் கூட்டங்களைப் பறித்தெறிகிறேன். ஸாது மஹாத்மாக்களின் கொடியை உயர்த்திப் பிடிக்கிறேன். அஸுரகுலத்தை அழிக்கிறேன். ஸாதுக்களை வெகுமதிக்கிறேன். தர்மத்தை நீதியுடன் இணைத்து மணம் செய்விக்கிறேன், அவிவேகமாகிய குழப்பத்தைப் போக்கடித்து விவேகமாகிற தீபத்தைத் தூண்டிவிட்டு யோகிகளுக்கு தீப ஒளியைப் போன்ற ப்ரகாசத்தைக்கொடுக்கிறேன். இதனால் உலகம் ஆத்மசுகத்தை அடைகிறது. உலகில் தர்மம் குடிகொள்கிறது சாதுக்களுக்கு, பக்தர்களுக்கு சாத்விகமான திருப்தி ஏற்படுகிறது நான் உருவம் தரித்தவுடன் பாபமான இருள் விலகுகிறது, புண்யமான அருணோதயம் உண்டாகிறது. இதற்காகவே நான் ஒவ்வொரு யுகமும் அவதாரம் செய்கிறேன். எவன் இதை உண்மையாக அறிகிறானோ அவனே ஞானி. (8)

जन्म कर्म च मे दिव्यमेवं यो वेत्ति तत्त्वतः ।
त्यक्त्वा देहं पुनर्जन्म नैति मामेति सोऽर्जुन ॥ ९ ॥

**ஜந்ம கர்ம ச மே திவ்யம் ஏவம் யோ வேத்தி தத்வத: |**
**த்யக்த்வா தேஹம் புநர்ஜந்ம நைதி மாமேதி ஸோऽர்ஜுந ||**

நான் ஜன்மம் இல்லாதவனுகவே ஜன்மம் எடுக்கிறேன். எனக்கென கர்மம் இல்லாதவனுகவே கர்மத்தைச் செய்கிறேன். இந்த விஷயத்தை எவன் உண்மையில் அறிகிருனே அவனே பக்தன். அவன் உடலாகிய கூட்டிலிருந்து நடமாடிக்கொண்டிருந்தாலும் நடமாடவில்லை, அவன் தேகத்தில் இருந்துகொண்டே தேகவசப்பட்டவனில்லை. அவன் ஐம்பெரும் பூதங்களில் லயமாகும்பொழுது என் சொரூபத்தை அடைகிருன்.

**वीतरागभयक्रोधा मन्मया मामुपाश्रिताः ।**
**बहवो ज्ञानतपसा पूता मद्भावमागताः ॥ १० ॥**

**வீத ராக பய க்ரோதா மன்மயா மாமுபாச்ரிதா: |**
**பஹவோ ஜ்ஞாந தபஸா பூதா மத்பாவமாகதா: ||**

எவன் நடந்ததையும், நடக்கப்போவதையும் யோசிக்காமல் இருக்கிருனே, எவனுக்கு விருப்பு என்பது சூன்யமாக இருக்கிறதோ, எவன் குரோதமாகிற வழியில் ஒரு போதும் செல்லாதவனே, அவன் என்னை அடைகிருன். எனக்காகவே வாழ்கிறவன். ஒன்றிலும் இச்சை வைக்காமல் ஆத்மஜ்ஞானத்திலேயே சந்தோஷிப்பவன். அவன் தவக்குவியலின் பிரகாசப் புச்சம். ஞானத்தின் ஒரே இருப்பிடம். அவன் பவித்ர தீர்த்தம். அவனை அடையும் எல்லா தீர்த்தங்களும் பவித்ரமாகின்றன. அவன் எளிதில் என் உருவை அடைகிருன். அவனுக்கும் எனக்கும் ஒருவித வித்யாசமும் கிடையாது. பித்தளையுடன் கூடிய தங்கத்தை உருக்கும்பொழுது பித்தளையை எறிந்து விட்டால் தங்கம் ஒன்றே மீதி இருக்கும். எவர்கள் யமம், நியமம் ஆகிய அக்னியில் உருகித் தங்கம் ஆகிருர்களோ, அவர்களே நாளுக ஆகிருர்கள். (10)

**ये यथा मां प्रपद्यन्ते तांस्तथैव भजाम्यहम् ।**
**मम वर्त्मानुवर्तन्ते मनुष्याः पार्थ सर्वशः ॥ ११ ॥**

யே யதா மாம் ப்ரபத்யந்தே தாம்ஸ்ததைவ
பஜாம்யஹம் ।
மம வர்த்மானு வர்த்தந்தே மநுஷ்யா: பார்த்த ஸர்வச: ॥

யார் என்னிடம் பிரீதி வைக்கிறார்களோ, அவர்களிடம் நானும் பிரியமாய் இருக்கிறேன். பூரணமான மனிதன் இயற்கையிலேயே என்னை பஜிக்கிறான். ஆனால் ஞானமில்லாமல் பூரணமான நிலையை அடையமுடியாது. ஏனென்றால் அவனுடைய புத்தி பேதலிக்கிறது. ஒருவனான என்னை அவன் அநேக ரூபங்களில் கற்பனை பண்ணுகிறான். பேதரஹிதனான என்னைப் பேதத்துடன் பார்க்கிறான்., நாமரஹிதனான எனக்கு நாமத்தை கற்பிக்கிறான். வாக்குக்கு எட்டாத என்னை தேவன் தேவி என்று எத்தனையோ பெயர்களைச் சொல்லி அழைக்கிறான். நான் எங்கும் எப்பொழுதும் சமானமாக இருக்கிறேன். புத்தி பிரமையினால் மக்கள் எனக்கு அதமன் உத்தமன் என்ற பேதத்தைக்கற்பிக்கிறார்கள். (11)

काङ्क्षन्तः कर्मणां सिद्धिं यजन्त इह देवताः ।
क्षिप्रं हि मानुषे लोके सिद्धिर्भवति कर्मजा ॥ १२ ॥

காங்க்ஷந்த: கர்மணாம் ஸித்திம் யஜந்த இஹ தேவதா: ।
க்ஷிப்ரம் ஹி மாநுஷே லோகே ஸித்திர் பவதி கர்மஜா ॥

அநேக கற்பனைகளை மனதிற் கொண்டு அநேக விதங்களாக மனம் போனபடி அநேகவித உபசாரங்களால் அநேக தேவதைகளை பூஜிக்கிறார்கள். இதனால் அவர்கள் மனதில் இச்சித்த பலனைப் பெறுகிறார்கள். ஆனால் அது அவர்களுடைய கர்மபலன் என்று அறி. உண்மையில் பலனைக் கொடுப்பவனோ பலனைப் பெறுபவனோ ஒருவரும் கிடையாது. இந்த மனுஷ்ய லோகத்தில் கர்மமே பலனைக் கொடுக்க வல்லது. வயலில் எந்த நெல்லை விதைக்கிறோமோ அந்த நெல்லே நமக்குக் கிடைக்கும். கண்ணாடியில் எதைக் காட்டுகிறோமோ அதே நமக்கு பிரதிபலிக்கும். மலை தாழ்வரையில் நம்முடைய சப்தமே நமக்கு பிரதித்வனிக்கும். அதைப்போல நான் இந்த எல்லாவித பூஜைக்கும் சாக்ஷி மாத்திரமே. அவரவர் பாவனைக்குத் தகுந்தபடி பலன் கிடைக்கின்றது. (12)

चातुर्वर्ण्यं मया सृष्टं गुणकर्मविभागशः ।
तस्य कर्तारमपि मां विद्ध्यकर्तारमव्ययम् ॥ १३ ॥

சாதுர்வர்ண்யம் மயா ஸ்ருஷ்டம் குணகர்ம விபாகச: ।
தஸ்ய கர்த்தாரமபி மாம் வித்த்யகர்த்தாரமவ்யயம் ॥

இப்பொழுது இதை சொல்கிறேன். அதாவது மனிதனுடைய குணத்தையும், கர்மத்தையும் அனுசரித்தே நான் நான்கு வர்ணங்களை உற்பத்தி செய்திருக்கிறேன். இயற்கையின் அடிப்படை தத்வத்தை அனுசரித்து முக்குணங்களும் ஒன்றுடன் ஒன்று கலக்கின்றன. இக்குணங்களை அனுசரித்தே கர்மம் நிர்மாணிக்கப் படுகிறது. அர்ஜுனா ! இந்த ஜகம் முழுவதும் ஒன்றேதான். ஆனால் குணங்களை அனுசரித்து கர்ம பிரிவுகளின் திட்டப்படி நான்கு வர்ணங்களாக விவரிக்கப்பட்டு இருக்கிறது. அதனால் ஹே பார்த்தா, வர்ண பேதங்களினால் ஏற்பட்ட இந்த விஷயத்திற்கு நான் கர்த்தா அல்ல. (13)

न मां कर्माणि लिम्पन्ति न मे कर्मफले स्पृहा ।
इति मां योऽभिजानाति कर्मभिर्न स बध्यते ॥ १४ ॥

ந மாம் கர்மாணி லிம்பந்தி ந மே கர்மபலே ஸ்ப்ருஹா ।
இதி மாம் யோऽபிஜாநாதி கர்மபிர் ந ஸ பத்யதே ॥

இவ்விதமாக எவனறிகிறானோ, அதாவது இந்தப் பேதம் என்னுடைய காரணத்தினால் உண்டாகியிருக்கிறதென்றும், ஆனால் நான் இதை உத்பத்தி செய்யவில்லை என்றும் எவனறிகிறானோ அவன் கர்மத்திலிருந்து விடுபடுகிறான். (14)

एवं ज्ञात्वा कृतं कर्म पूर्वैरपि मुमुक्षुभिः ।
कुरु कर्मैव तस्मात्त्वं पूर्वैः पूर्वतरं कृतम् ॥ १५ ॥

ஏவம் ஜ்ஞாத்வா க்ருதம் கர்ம பூர்வைரபி முமுக்ஷுபி: ।
குரு கர்மைவ தஸ்மாத் த்வம் பூர்வை: பூர்வதரம் க்ருதம்॥

ஹே தனுர்தரா ! அக்காலத்தில் முமுக்ஷுக்கள் என்னை இவ்வாறு அறிந்து பூரணமான கர்மத்தைச் செய்துவந்தார்கள். வறுத்த பயறு முளைக்காததுபோல அவர்கள் கர்மபயன்களை

எரித்து மோக்ஷத்தை அடைந்தார்கள். ஹே அர்ஜுனா! இதில் ஒரு விஷயம் என்னவென்றால் அவர்கள் கர்ம அகர்மத்தை தன் இச்சைப்படிச் சிந்திக்கமாட்டார்கள். (15)

किं कर्म किमकर्मेति कवयोऽप्यत्र मोहिताः ।
तत्ते कर्म प्रवक्ष्यामि यज्ज्ञात्वा मोक्ष्यसेऽशुभात् ॥ १६ ॥

கிம் கர்ம கிமகர்மேதி கவயோऽப்யத்ர மோஹிதா: ।
தத்தே கர்ம ப்ரவக்ஷ்யாமி யத் ஜ்ஞாத்வா
மோக்ஷ்யஸேऽசுபாத் ॥

கர்மம் என்று சொல்கிறோமே, எதைக் கர்மம் என்று கூறுகிறார்கள்? அகர்மத்தின் லக்ஷணம் என்ன? இதைப்பற்றிச் சிந்திப்பது வித்வான்களுக்கே முடியாத காரியம், கள்ள நாணயமும் அசல் நாணயமும் ஒன்றுபோலவே இருக்கிறது. கண் பார்வை சந்தேகத்தையே கொடுக்கும். எவர்கள் சங்கல்பமாத்திரத்தினால் மற்றொரு சிருஷ்டியைச் செய்கிறார்களோ அவர்களை நிஷ்கர்மா என்ற உடையில் கர்மம் தேடிக் கொண்டுவருகிறது. இந்த விஷயத்தில் ஞானிகளும் மோஹம் அடைகிறார்கள். முட்டாள்களைப்பற்றி சொல்வதற்கு என்ன இருக்கிறது? (16)

कर्मणो ह्यपि बोद्धव्यं बोद्धव्यं च विकर्मणः ।
अकर्मणश्च बोद्धव्यं गहना कर्मणो गतिः ॥ १७ ॥

கர்மணோ ஹ்யபி போத்தவ்யம் போத்தவ்யம் ச
விகர்மண: ।
அகர்மணஸ்ச போத்தவ்யம் கஹநா கர்மணோ கதி: ॥

எதனால் உலகம் வெளியாகிறதோ அதை இச்சை என்று சொல்கிறோம். இதை நன்கு தெரிந்துகொள்ளவேண்டும். பிறகு அவரவர்கள் வர்ணாஸ்ரமங்களை அனுசரித்து விசேஷமாக விதிக்கப்பட்ட கர்மங்களையும், அவைகளின் உபயோக விதிகளையும் நிச்சயமாக அறிந்துகொள்ளவேண்டும். நிஷித்த கர்மங்களையும் அவைகளின் பலன்களையும்கூட தெரிந்துகொள்ள வேண்டும். இவ்வளவு அறிந்துகொண்டால் சித்தம் ஒன்றிலும் மலினமடையாது. உலகமே கர்மாதீனப்பட்டது. இதனுடைய

விரிவு மிகவும் கம்பீரமானது. சரி. இது இப்படி இருக்கட்டும், இப்பொழுது எல்லாவிதத்திலும் மேன்மையடைந்த சாது மஹாத்மாக்களின் லக்ஷணத்தைக் கேள். (17)

**कर्मण्यकर्म यः पश्येदकर्मणि च कर्म यः ।**
**स बुद्धिमान्मनुष्येषु स युक्तः कृत्स्नकर्मकृत् ॥ १८ ॥**

**கர்மண்யகர்ம ய: பச்யேதகர்மணி ச கர்ம ய: ।**
**ஸ புத்திமான் மனுஷ்யேஷு ஸ யுக்த: க்ருத்ஸ்ந கர்மக்ருத் ॥**

எல்லாவிதமான கர்மங்களையும் செய்துகொண்டு அவன் தன்னை நிஷ்கர்மாவாக அறிகிறான். கர்மத்தைச் செய்தாலும், பலனில் ஆசை வைப்பதில்லை. அவனுக்குக் கடமையென்பதே உலகில் இல்லை. இவ்விதமான உத்தமமான ஜ்ஞானம் எவனுக்கு இருக்கிறதோ, இத்தகைய ஜ்ஞானம் இருந்தும் எவன் எல்லாக் கர்மங்களையும் விடாமல் செய்கிறானோ, அவனை மேற்கூறிய லக்ஷணங்களிலிருந்து ஜ்ஞானி என்று அறி. ஜலக் கரையில் நிற்கும் குழந்தை ஜலத்தில் தன் பிரதிபிம்பத்தைப் பார்க்கிறது. அது தன்னுடையதானாலும் வேறாக நினைக்கிறது. படகில் அமர்ந்து செல்லும்பொழுது கரையில் இருக்கும் விருக்ஷங்கள் வேகமாக ஓடுவதாகப் பார்க்கிறோம். ஆனால் அதை உண்மையில் ஆராய்ந்து பார்த்தோமானால் விருக்ஷம் அசையாமல்தான் இருக்கிறது. படகுதான் ஓடுகிறது என்பது தெரியவரும். அதைப்போல் நாம் செய்யும் எல்லா வியவகாரங்களும் அஸத்யமானது என்று அறிந்து அவன் தன்னை நிஷ்கர்மியாக அறிகிறான். ஸூர்யன் ஸ்திரமாக இருந்தாலும், உதயாஸ்தமனத்தால் செல்பவனாகவே காண்கிறான். அதைப் போலவே கர்மத்தைச் செய்துகொண்டே நிஷ்கர்மத்தின் தத்வத்தை அறியவேண்டும். அப்படிப்பட்ட நிஷ்கர்மியாக இருப்பவன் மேலுக்கு ஸாதாரண மனிதனாகத் தோன்றினாலும் ஜலத்தில் தோன்றும் ஸூர்யபிம்பம் ஜலத்தில் மூழ்காதது போல் அவன் மனிதத்தன்மையினால் மலினமடையமாட்டான், அவன் கண்ணால் பார்க்காமலேயே உலகத்தைப் பார்க்கிறான். ஒன்றையும் செய்யாமலேயே எல்லாவற்றையும் செய்தவனாக இருக்கிறான். ஒன்றையும் அனுபவியாமலேயே போக்யவஸ்துக்களை அனுபவிக்கிறான். அவன் ஒரே இடத்தில் உட்கார்ந்து இருந்தாலும்கூட, எல்லா இடத்திலும் நிறைந்தவனாகக் காணு

கிருன். வேறென்ன சொல்வது? அவனுக்காக உலகம்இல்லை. உலகத்திற்காக அவன். (18)

यस्य सर्वे समारम्भाः कामसंकल्पवर्जिताः ।
ज्ञानाग्निदग्धकर्माणं तमाहुः पण्डितं बुधाः ॥ १९ ॥

யஸ்ய ஸர்வே ஸமாரம்பா: காமஸங்கல்ப வர்ஜிதா: ।
ஜ்ஞாநாக்நிதக்த கர்மாணம் தமாஹு: பண்டிதம் புதா:॥

எவன் கர்மவிஷயத்தில் கொஞ்சங்கூட வருத்தமடைய மாட்டானோ, எவன் பலனில் ஆசைவைக்கமாட்டானோ, நான் இந்தக் கர்மத்தைச் செய்கிறேன், நான் இந்த வேலையை ஆரம்பித்திருக்கிறேன். நான் இதைப் பூர்த்தியாக்குவேன் என்ற ஸங்கல்பம் எவனுக்குக் கிடையாதோ, எவன் கர்மபலன்கள் யாவற்றையும் ஜ்ஞானக்னியால் எரித்துவிடுகிருனோ அவனே மனிதருபத்தில் பரப்ரஹ்மம் என்று அறி. (19)

त्यक्त्वा कर्मफलासङ्गं नित्यतृप्तो निराश्रयः ।
कर्मण्यभिप्रवृत्तोऽपि नैव किंचित्करोति सः ॥ २० ॥

த்யக்த்வா கர்மபலாஸங்கம் நித்யத்ருப்தோ நிராச்ரய: ।
கர்மண்யபிப்ரவ்ருத்தோऽபி நைவ கிஞ்சித் கரோதி ஸ: ॥

அவன் சரீரத்தைப்பற்றி உதாஸீனமாகவே இருப்பான். போகத்திலும் அதன் பலத்திலும் இச்சை வைக்கமாட்டான். ஸந்தோஷமாகிற நடுவீட்டில் உட்கார்ந்துகொண்டு ஆத்மஜ்ஞானமாகிற உணவை உண்டு உண்டு எப்பொழுதும் திருப்தியுடன் இருப்பான். (20)

निराशीर्यतचित्तात्मा त्यक्तसर्वपरिग्रहः ।
शारीरं केवलं कर्म कुर्वन्नाप्नोति किल्बिषम् ॥ २१ ॥

நிராசீர் யதசித்தாத்மா த்யக்தஸர்வ பரிக்ரஹ: ।
சரீரம் கேவலம் கர்ம குர்வந்நாப்நோதி கில்பிஷம் ॥

यदृच्छालाभसंतुष्टो द्वन्द्वातीतो विमत्सरः ।
समः सिद्धावसिद्धौ च कृत्वापि न निबध्यते ॥ २२ ॥

**யத்ருச்சாலாப ஸந்துஷ்டோ த்வந்த்வாதீதோ விமத்ஸர:।**
**ஸம: ஸித்தாவஸித்தௌ ச க்ருத்வாபி ந நிபத்யதே ॥**

அவன் அஹங்காரத்தையும், ஆசையையும் தியாகம்செய்து அதிக ப்ரேமையுடன் நிரதிசய ஸுகத்தின் சுவையை அனுபவிக்கிறான். வியவஹாரத்தில் தெய்வாதீனமாகக் கிடைத்ததை வைத்து ஸுகிக்கிறான், அவனுக்குத் தனது, பிறருடையது என்ற பேதம் கிடையாது. எதைப் பார்க்கிறானோ அதாகவே ஆகிறான். எதைக் கேட்கிறானோ அதாகவே ஆகிறான். நடப்பதும் பேசுவதுமான எந்தச் செயல்களையும் தன்னை மறந்த நிலையிலேயே செய்கிறான். உலகம் முழுவதிலும் தன் ஆத்மாவையே காண்கிறான், பிறகு அவனுக்கு ஏது கர்மம்? ஏது இடையூறு? த்வைதபாவம் இருந்தால்தானே பொறாமை ஏற்படுவதற்கு? அவன் பொறாமை இல்லாமல் இருப்பதில் என்ன ஸந்தேஹம்? அவன் எப்பொழுதும் முக்தனே, கர்மம் அற்றவனே குணங்களோடு கூடியிருந்தும் குணங்களுக்கு அப்பாற் சென்றவனே. (21-22)

**गतसङ्गस्य मुक्तस्य ज्ञानावस्थितचेतसः ।**
**यज्ञायाचरतः कर्म समग्रं प्रविलीयते ॥ २३ ॥**

**கதஸங்கஸ்ய முக்தஸ்ய ஜ்ஞாநாவஸ்தித சேதஸ:।**
**யஜ்ஞாயாசரத: கர்ம ஸமக்ரம ப்ரவிலீயதே ॥**

அவன் தேஹத்தில் இருந்தும் பரப்ரஹ்மத்தையே காண்கிறான். பரப்ரஹ்மமான உரைகல்லில் உரைக்கப்பட்டு ப்ரஹ்மஜ்ஞானி மாசற்ற பொன்னாகிறான். அவன் குதூஹல வசத்தால் உலகத்தாரைப்போல யக்ஞாதி கர்மங்களைச் செய்தாலும் பலன்கள் அவனைப் பற்றுவதில்லை. காலமற்ற காலத்தில் ஏற்படும் மேகக்கூட்டங்கள் ஒரு நொடியில் பரவி மழை பெய்யாமலேயே மறைந்துவிடுவதுபோல அவன் யக்ஞம் முதலிய கர்மங்களைச் செய்தாலும் கர்மங்கள் அவனிடமே ஐக்யமாகிவிடுவதால் அவைகளின் பலாபலன்கள் அவனுக்கு ஏற்படுவதில்லை. (23

ब्रह्मार्पणं ब्रह्म हविर्ब्रह्माग्नौ ब्रह्मणा हुतम् ।
ब्रह्मैव तेन गन्तव्यं ब्रह्मकर्मसमाधिना ॥ २४ ॥

ப்ரஹ்மார்ப்பணம் ப்ரஹ்ம ஹவிர் ப்ரஹ்மாக்நௌ
ப்ரஹ்மணா ஹுதம் ।
ப்ரஹ்மைவ தேந கந்தவ்யம் ப்ரஹ்மகர்ம ஸமாதிநா ॥

ஏனென்றால், இது யக்ஞம், நான் யஜமானன் இது யக்ஞத்தினால் ஏற்பட்ட பலன் என்ற பேதபுத்தி அவனிடம் இருப்பதில்லை. எந்த இஷ்ட தேவதையைக் குறித்து யக்ஞத்தைச் செய்தாலும் அந்த ஹோமம், திரவ்யம், மந்திரம்-எல்லாமே ஆத்மரூபமென்றும், அழிவில்லாதது என்றும அவனுக்குத் தெரியும். ஆகையால் ஹே பார்த்தா! இப்படி ஸமபுத்தி உள்ளவனுக்குக் கர்மமும் ப்ரஹ்மமே. கடமையும் நிஷ்காமமே. அவன் அவிவேகமாகிய பாலபருவத்தைக் கடந்து விரக்தி என்னும் பெண்ணுடன் மணம்புரிந்துகொள்கிறான். பிறகு யோகாக்னி என்னும் பூஜையை ஆரம்பிக்கிறான். (24)

दैवमेवापरे यज्ञं योगिनः पर्युपासते ।
ब्रह्माग्नावपरे यज्ञं यज्ञेनैवोपजुह्वति ॥ २५ ॥

தைவமேவாபரே யக்ஞம் யோகிந: பர்யுபாஸதே ।
ப்ரஹ்மாக்நாவபரே யக்ஞம் யக்ஞேநைவோப
ஜுஹ்வதி ॥

அவன் இரவும் பகலும் பலதரப்பட்ட யக்ஞத்தைச் செய்கிறான், அவித்யையுடன் கூடிய மனதை குருவாக்யமாகிற அக்னியில் ஆஹுதி செய்கிறான் இந்த யோகாக்னிஹோத்ரிகள் செய்யும் யக்ஞம் தைவ யக்ஞம் என்று சொல்லப்படுகிறது. இதனால் ஆத்மசுகத்தின் இச்சை பூரணமடைகிறது. பிராரப்த கர்மத்தை அனுசரித்து அவன் சரீரம் ஜீவிக்கின்றதே ஒழிய சரீர போஷணையின் சிந்தை அவனிடம் இல்லை அவனே மகாயோகி, இன்னும் கேள், நான் இன்னும் சில பிரும்மாக்னி ஹோத்ரிகளைப் பற்றியும், அவர்கள் யக்ஞத்தின் மூலமாக பரமாத்ம உபாசனை செய்யும் விதத்தையும் கூறுகிறேன். (25)

श्रोत्रादीनीन्द्रियाण्यन्ये संयमाग्निषु जुह्वति ।
शब्दादीन्विषयानन्य इन्द्रियाग्निषु जुह्वति ॥ २६ ॥

ச்ரோத்ராதீநீந்த்ரியாண்யந்யே ஸம்யமாக்நிஷு ஜுஹ்வதி ।
சப்தாதீன் விஷயாநந்யே இந்த்ரியாக்நிஷு ஜுஹ்வதி ॥

சிலர் ஆத்ம ஸம்யமமாகிய யக்ஞத்தைச் செய்கிறார்கள். யுக்தித்ரயம் என்று கூறப்படும் வஜ்ராஸனம், ஜாலந்தர பீடம் ஒட்டியாணபீடம் ஆகிய ஸ்தானங்களில் மந்திரத்தினால் இந்திரியக் கூட்டங்களாகிய சாமக்ரிகளைக்கொண்டு யாகம் செய்கிறார்கள். சிலர் வைராக்யமாகிய சூரியோதயமானவுடன் ஸம்யமம் என்னும் இடத்தை சுத்திசெய்து இந்திரியங்களாகிய அக்னியை வளர்க்கிறார்கள். வைராக்யமாகிற அக்னி ஜ்வாலை வரும் பொழுது மனவிகாரமாகிற விறகுகள் எரியத் தொடங்குகின்றன. அந்தக்கரணப் பஞ்சகக்குண்டத்திலிருந்து ஆசையாகிற புகை கிளம்புகின்றது. அப்பொழுது இந்திரிய ரூபியான அக்னியில், விதித்திருக்கப்பட்ட மேலே கூறிய மந்திரங்களினால் மிகவும் சாதுரியத்துடன் விஷயக்கூட்டங்களை ஆஹுதிசெய்து ஹோமம் செய்கிறார்கள். (26)

सर्वाणीन्द्रियकर्माणि प्राणकर्माणि चापरे ।
आत्मसंयमयोगाग्नौ जुह्वति ज्ञानदीपिते ॥ २७ ॥

ஸர்வாணீந்த்ரிய கர்மாணி ப்ராண கர்மாணி சாபரே ।
ஆத்ம ஸம்யம யோகாக்நௌ ஜுஹ்வதி ஞாந தீபிதே ॥

சிலர் செய்யும் பாபசுத்தியைக் கேள், ஹ்ருதயரூபமான அரணிக்கட்டையில் விவேகமாகிய மத்தை இட்டுக் கடை கிறார்கள். அம்மத்தில் சாந்தி என்னும் கயிற்றைக் கட்டு கிறார்கள். தைரியம் என்னும் பலத்தால் அமுக்குகிறார்கள் குருவாக்யம் என்னும் மந்திரத்தைச் சொல்லிக் கடைகிறார்கள். இவ்விதம் மனது ஒருமைப்பட்டு கடைந்தவுடன் ஞானாக்னி கிளம்புகிறது. முதலாவது மோஹரூபமான சித்திகள் கிளம்பு கின்றன. அப்புகை கிளம்பியவுடன் சூக்ஷ்மரூபமான அக்னிப் பொறிகள் கிளம்புகின்றன. அதில் முன்னமேயே யமநியமங் களாகிய வெய்யிலில் உலர்த்தப்பட்ட மனம் என்னும் விறகை

எரிக்கிருர்கள். விறகுகள் பற்றிக்கொண்டு ஜ்வாலை வீசுகிறது. அப்பொழுது அநேகவிதமான வாசனைகளாகிற சமித்துக்களை வைராக்யமாகிற நெய்யில் தோய்த்து அதில் இடுகிருர்கள். யக்ஞகர்த்தா ஸோஹம் என்னும் மந்திரத்தினுல் தீக்ஷை செய்து கொண்டு இவ்விதமாக இந்திரிய கர்மங்களாகிய ஆஹுதியை அந்த ஞானக்னியில் செய்கிருன். பிறகு பஞ்சப்பிராணங்களாகிய அகப்பையினுல் அக்னியில் பூர்ணுஹுதி செய்துவிட்டு ஏகத்வ போதம் என்ற அவப்ருதஸ்நானம் செய்கிருர்கள். பிறகு இவ்வித யக்ஞத்திலிருந்து மிகுந்த ஆத்மஞான சுகம் என்னும் யக்ஞசேஷத்தை புஜிக்கிருர்கள். இவர்கள் இவ்விதமான யக்ஞத்தைச் செய்து சம்சாரத்திலிருந்து விடுபடுகிருர்கள். இவ்விதமாகச் செய்யும் யக்ஞங்கள் வெவ்வேறு விதமாகத் தோன்றினுலும் இவைகளின் பலன் ஒன்றே. (27)

द्रव्ययज्ञास्तपोयज्ञा योगयज्ञास्तथापरे ।
स्वाध्यायज्ञानयज्ञाश्च यतयः संशितव्रताः ॥ २८ ॥

த்ரவ்ய யஜ்ஞாஸ் தபோயஜ்ஞா யோகயஜ்ஞாஸ் ததாபரே ।
ஸ்வாத்யாய ஞாந யஜ்ஞாஸ்ச யதய: ஸம்சித வ்ரதா: ॥

இதைப்போல திரவ்ய யக்ஞம் என்று ஒன்று இருக்கிறது. மற்றும் தவமாகிய சாமக்ரியால் செய்யும் யக்ஞம் ஒன்று இருக்கிறது. மற்ருென்று யோகயக்ஞம். சப்தமாகிற குண்டத்தில் அர்த்தத்தையே ஹோமம் செய்யும் யக்ஞத்திற்குப் பெயர் வாக் யக்ஞம், ஞானத்தினுல் அறியவேண்டியதை அறியும் யக்ஞத்திற்குப் பெயர் ஞானயக்ஞம் என்கிருர்கள். இத்தகைய யக்ஞங்கள் யாவும் மிகவும் கடினமானவை. இவைகளை அனுஷ்டிக்கும் விதமும் பயங்கரமானது. ஆனுல் ஜிதேந்திரியர் களுக்கு அவரவர் யோக்யதையைப் பொறுத்து இது சுலபமாகிறது. அவர்கள் இந்த யக்ஞத்தைச் செய்வதில் சாதுர்ய வான்களாகிருர்கள். அதனுல் யோக்யதையையும், சாமர்த்தியத்தையும் அடைகிருர்கள். அதனுல் அவர்கள் ஆத்மாவில் தன்னையே ஹோமம் செய்கிருர்கள். (28)

अपाने जुह्वति प्राणं प्राणेऽपानं तथापरे ।
प्राणापानगती रुद्ध्वा प्राणायामपरायणाः ॥ २९ ॥

அபாநே ஜுஹ்வதி ப்ராணம் ப்ராணேऽபாநம் ததாபரே ।
ப்ராணாபாந கதீ ருத்த்வா ப்ராணாயாம பராயணா: ॥

சிலர் அபான வாயுவாகிற அக்னிஜ்வாலையில் அப்யாச யோகத்தினால் பிராண வாயுவை ஹோமம் செய்கிறார்கள். சிலர் பிராண வாயுவில் அபான வாயுவை ஹோமம் செய்கிறார்கள் சிலர் இரண்டையுமே லயப்படுத்துகிறார்கள். இதை பிராணாயாம யக்ஞம் என்று கூறலாம். (29)

अपरे नियताहाराः प्राणान्प्राणेषु जुह्वति ।
सर्वेऽप्येते यज्ञविदो यज्ञक्षपितकल्मषाः ॥ ३० ॥

அபரே நியதாஹாரா: ப்ராணான் ப்ராணேஷு ஜுஹ்வதி।
ஸர்வேப்யேதே யஜ்ஞவிதோ யஜ்ஞ க்ஷபித கல்மஷா: ॥

சிலர் ஹடயோகம் அப்யசித்து விஷயரூபமான ஆகாரங்களை ஒழுங்குபடுத்தி பிராணவாயுவாகிற அக்னியில் பஞ்சப்பிராணன்களையும் அர்ப்பணிக்கிறார்கள். இந்தவிதமாக எவர்கள் யக்ஞத்தினால் மன அழுக்கை சுத்தி செய்கிறார்களோ அவர்கள் மோக்ஷ சுகத்தை விரும்பும் யக்ஞ கர்த்தாக்கள். எல்லா அக்ஞானமும் நசித்தபிறகு எங்கு உண்மையில் நிஜ ஸ்வரூபமே மீதி இருக்குமோ, எங்கு அக்னி என்றும் யக்ஞம் என்றும் பண்ணுகிறவன் என்றும் பேதம் இருக்காதோ, எதனால் யக்ஞம் செய்ய வேண்டும் என்ற இச்சை பூரணமாகிறதோ, யக்ஞ கிரியைகளும் ஸமாப்தி ஆகி கர்ம ஸமூகங்களும் இல்லாமல் போகிறதோ, அங்கு யுக்தி பிரவேசிக்காது விருப்பம் அங்கு அண்டாது. த்வைதத்தின் தோஷம் அதைத் தொடவே தொடாது. (30)

यज्ञशिष्टामृतभुजो यान्ति ब्रह्म सनातनम् ।
नायं लोकोऽस्त्ययज्ञस्य कुतोऽन्यः कुरुसत्तम ॥ ३१ ॥

யஜ்ஞ சிஷ்டாம்ருத புஜோ யாந்தி ப்ரஹ்ம ஸநாதனம் ।
நாயம் லோகோஸ்த்யயஜ்ஞஸ்ய குதோऽந்ய:
குருஸத்தம ॥

இவ்விதம் அனாதி சித்தமான சுத்த யக்ஞத்தின் சேஷமாகிற ஆத்ம ஞானமான எது இருக்கிறதோ அதுவே அஹம் ப்ரும்ம

மாஸ்மி என்ற மந்திரம். அதை அவர்கள் யக்ஞ சேஷமாக புஜிக்கிறார்கள். அவர்கள் இந்த சேஷத்தால் திருப்தி அடைகிறார்கள். அதாவது அமரத்தன்மை அடைகிறார்கள். அனுயாசமாக அவர்கள் பிரும்மமாகவே ஆகிறார்கள். விரக்தி என்னும் பெண் அவர்களைத் தவிர மற்றவர்களுக்கு மாலையிட மாட்டாள். அவர்கள் ஸம்யமம் என்ற ஸாதனத்தைச் செய்ய வேண்டாம். வாழ்நாள் முழுவதும் யோகம் என்னும் யாகத்தையே செய்ய வேண்டாம். இகலோக சுகம் இருக்கட்டும், பரலோகத்தைப் பற்றிச் சொல்ல என்ன இருக்கிறது? அதனால் அதை விட்டு விடுவோம். (31)

एवं बहुविधा यज्ञा वितता ब्रह्मणो मुखे ।
कर्मजान्विद्धि तान्सर्वानेवं ज्ञात्वा विमोक्ष्यसे ॥ ३२ ॥

ஏவம் பஹுவிதா யஜ்ஞா விததா ப்ரஹ்மணோ முகே ।
கர்மஜான் வித்தி தான் ஸர்வாநேவம் ஞாத்வா
விமோக்ஷ்யஸே ॥

அநேகவிதமான யக்ஞங்களைப்பற்றி நான் உனக்கு கூறினது வேதத்தில் விஸ்தாரமாக நிருபணம் செய்யப்பட்டு இருக்கிறது. விஸ்தரிப்பதினால் லாபம் ஒன்றும் இல்லை. யக்ஞம் கர்மத்தினாலேயே சித்தி அடைகின்றது இவைகளால் கர்ம பந்தம் விடாது. (32)

श्रेयान्द्रव्यमयाद्यज्ञाज्ज्ञानयज्ञः परंतप ।
सर्वं कर्माखिलं पार्थ ज्ञाने परिसमाप्यते ॥ ३३ ॥

ச்ரேயான் த்ரவ்யமயாத் யஜ்ஞாத் ஞாநயஜ்ஞ: பரந்தப ।
ஸர்வம் கர்மாகிலம் பார்த்த ஞாநே பரிஸமாப்யதே ॥

ஹே அர்ஜுன, யக்ஞத்திற்கு வேதம் மூலம் கிரியைகள் பிரதானம். அவைகளின் பலன் ஸ்வர்க்க ஸுகம். இவைகள் திரவ்யங்களினால் செய்யப்படும் யக்ஞம். ஆனால் சூரியனுக்கு முன் நக்ஷத்திரங்கள் போல ஞானயக்ஞத்திற்கு சமமாக இவை ஆகுமா? பரமாத்ம சுகமாகிய நிதியை அடையும் பொருட்டு யோகிகள் கண்களில் இட்டுக்கொள்ளும் அஞ்ஜனமும், வர்த்தமானத்தில் செய்யும் கர்மங்களுக்கு அதீதமான ஆத்மபோதத்தின் சுரங்கமும், ஆத்ம சுகத்தை அடையும் பசி எடுப்பவர்களுக்கு

திருப்தியைக் கொடுக்கும் சாதனமும் எதுவோ, முயற்சி எங்கு முடமாகின்றதோ, தர்க்க த்ருஷ்டி எங்கு தீனமாகின்றதோ, இந்திரியங்கள் விஷயத்தின் உறவை எங்கு மறந்து போகின்றனவோ, மனமும் சப்தமும் எங்கு தன் தன்மையை இழக்கின்றனவோ, நம் லக்ஷியம் எங்கு பிரம்மத்தினுள் லயமான தாக காணப்படுகின்றதோ. எங்கு வைராக்யமும் ஒளியடைகின்றதோ, எங்கு விவேகத்தின் ஆவல் அடங்குகின்றதோ, எங்கு தேடாமலேயே ஆத்மதத்வம் எதிர்ப்படுகிறதோ. (33)

तद्विद्धि प्रणिपातेन परिप्रश्नेन सेवया ।
उपदेक्ष्यन्ति ते ज्ञानं ज्ञानिनस्तत्त्वदर्शिनः ॥ ३४ ॥

தத் வித்தி ப்ரணிபாதேந பரிப்ரச்நேந ஸேவயா ।
உபதேக்ஷ்யந்தி தே ஞானம் ஞாநிநஸ் தத்வதர்சிநஃ ॥

அந்த உத்தம ஞானத்தை அடைய உனக்கு இச்சை இருக்குமானால் எல்லாவிதத்திலும் சாது மஹாத்மாக்களுக்கு சேவை செய். அவர்களே ஞானமாகிற மாளிகை. சேவை அம்மாளிகையின் நிலை. சேவை செய்து அந்நிலையை அடைவாயாக. சரீரத்தாலும், மனத்தாலும், பிராணனாலும் சாது மஹாத்மாக்களின் சரணங்களை பற்றிக்கொள். அவர்கள் உனக்குப் பிரியமான கேள்விகளைச் செவிமடுத்து உனக்கு உபதேசம் செய்வார்கள். அந்த உபதேசங்களினால் தெளிவடைந்த அந்தக்கரணத்தில் கற்பனை எழாது. (34)

यज्ज्ञात्वा न पुनर्मोहमेवं यास्यसि पाण्डव ।
येन भूतान्यशेषेण द्रक्ष्यस्यात्मन्यथो मयि ॥ ३५ ॥

யத் ஞாத்வா ந புநர் மோஹமேவம் யாஸ்யஸி பாண்டவ ।
யேந பூதாந்யசேஷேண த்ரக்ஷ்யஸ்யாத்மந்யதோ மயி ॥

அவர்களுடைய வாக்யமாகிற ஒளியில் சித்தம் பயமற்று, சம்சயமற்று, பிரும்மத்தை அடையும் யோக்யதையை பெறுகிறது. அச்சமயம் உனக்கு நீ உள்பட ஜகத் பூராவும் என் உருவமாகவே காணப்படுகிறது. குருகிருபையிருந்தால் ஞான பிரகாசம் ஏற்படும். மோஹமாகிற அந்தகாரம் நசிக்கும். (35)

अपि चेदसि पापेभ्यः सर्वेभ्यः पापकृत्तमः ।
सर्वं ज्ञानप्लवेनैव वृजिनं संतरिष्यसि ॥ ३६ ॥

அபி சேதஸி பாபேப்ய: ஸர்வேப்ய: பாபக்ருத்தம: ।
ஸர்வம் ஞாந ப்லவேநைவ வ்ருஜிநம் ஸந்தரிஷ்யஸி ॥

நீ உணர்ச்சிச் சுரங்கமாக இருந்தாலும் சரி. பிரமையின் சமுத்திரமாக இருந்தாலும் சரி. மோஹமாகிய பர்வதமாக இருந்தாலும் சரி. ஞான சக்தியின் முன்னால் இதெல்லாம் வெகு அல்பமாகிவிடும். ஞானம் அத்தனை உத்தமமான பொருள். உலகமாகிற சொரூபம் நிராகாரத்தின் நிழலே. அதுவும் இந்த பிரகாசத்தின் முன் நில்லாது. அதற்கு முன்னால் மனதின் அக்ஞானத்தை பற்றிச் சொல்ல என்ன இருக்கிறது? உலகில் ஞானத்திற்கு சமானம் வேறு ஒன்றும் இல்லை. (36)

यथैधांसि समिद्धोऽग्निर्भस्मसात्कुरुतेऽर्जुन ।
ज्ञानाग्निः सर्वकर्माणि भस्मसात्कुरुते तथा ॥ ३७ ॥

யதைதாம்ஸி ஸமித்தோ ऽக்நிர் பஸ்மஸாத்
குருதேர்ஜுந ।
ஞாநாக்நி: ஸர்வகர்மாணி பஸ்மஸாத் குருதே ததா ॥

பிரளயகால கொடும் காற்றினால் மூவுலகங்களிலும் உள்ள புழுதி ஆகாயத்தில் எழும்பொழுது மேகம் அதன் எதிரில் நிற்குமா? கோபம் கொண்ட காற்றின் சகாயத்தால் ஜலத்தையே எரிக்கும் சக்தி வாய்ந்த பிரளயாக்னியில் விறகையும் புல்லையும் போடுவதால் பிரயோசனமில்லை; (37)

न हि ज्ञानेन सदृशं पवित्रमिह विद्यते ।
तत्स्वयं योगसंसिद्धः कालेनात्मनि विन्दति ॥ ३८ ॥

நஹி ஞாநேந ஸத்ருசம் பவித்ரமிஹ வித்யதே ।
தத் ஸ்வயம் யோக ஸம்ஸித்த: காலேநாத்மநி விந்ததி ॥

அதிகமாகச் சொல்ல என்ன இருக்கிறது? இவைகள் நடக்கவும் நடக்காது. யோசிப்பதும் வீண். ஞானத்தைத்

போன்ற பவித்ரமான வஸ்து வேறொன்றும் இல்லை. உலகில் சைதன்யத்திற்கு சமானமான வஸ்து வேறொன்றும் இல்லை. சூரியன் என்னும் தேஜஸை உரைக்கல்லில் உரைத்து மாற்றுப் பார்க்கமுடிந்தாலும், ஆகாயத்தைப் பாயாகச்சுருட்ட முடியுமானல், பூமியை அளந்து கணக்கிடமுடியுமானல், ஞானத்திற்கு உவமை கூறலாம். பற்பல விதமாக யோசித்துப் பார்த்தாலும் அறிவின் எந்தக் கோணத்தில் பார்த்தாலும் ஞானத்திற்கு உவமை ஞானம்தான். அமிர்தத்தின் ருசிதெரிய அமிர்தமே உவமைபோல. இதைப் பற்றி இன்னும் சொல்ல சமயம் தான் வேண்டும். அப்பொழுது அர்ஜுனன் கூறுவான். தாங்கள் கூறுவது உண்மையே, ஆனல் அந்த ஞானத்தை எவ்விதம் பெறுவது? அர்ஜுனன் கூறுவதற்கு முன்னமே அதை ஊகித்த கிருஷ்ணன் கூறுவான். ஹே கிரீடி, இப்பொழுது நான் உனக்கு ஞானத்தை அடைய உபாயத்தைக் கூறுகிறேன் கேள். (38)

श्रद्धावाँल्लभते ज्ञानं तत्परः संयतेन्द्रियः ।
ज्ञानं लब्ध्वा परां शान्तिमचिरेणाधिगच्छति ॥ ३९ ॥

ச்ரத்தாவான் லபதே ஞாநம் தத்பர: ஸம்யதேந்த்ரிய: ।
ஞாநம் லப்த்வா பராம் சாந்திம்சிரேணாதிகச்சதி ॥

எதனல் ஆத்ம சுகத்தை ருசித்த பிறகு விஷய வாசனைகள் அஜீர்ணமாக ஏப்பம் வருகிறதோ, எங்கு இந்திரியங்களின் செல்வாக்கு செல்லாதோ, மனதினல் சங்கல்பித்து ஒரு இச்சையை அடைய முடியாதோ, எப்பொழுது பிரக்ருதியின் கர்மத்தை தனது என்று எண்ண முடியாதோ, எங்கு ச்ரத்தையின் சம்போகத்தால் சந்தோஷம் அடைய முடியுமோ, எங்கு சாந்தி சம்பூர்ணமான நிலையில் நிற்குமோ, அத்தகைய மனிதனைத் தேடித் தேடி ஞானமே அவனை அடைகிறது. ஞானம் எப்பொழுது ஹ்ருதயத்தில் நிலையாக நிற்கிறதோ, அப்பொழுது சாந்தியின முளை எழும்புகிறது. ஆத்மபோதம் பரவுகிறது. பார்க்குமிடம் எங்கும் சாந்தி நீக்கமற நிற்கிறது. எத்தனை சிந்தித்துப் பார்த்தாலும் தன்னுடையது, பிறருடையது என்ற எண்ணம் எழாது இவ்விதமான ஞான விதையின் விஸ்தாரத்தை எத்தனை வர்ணிக்கிறோமோ அத்தனையும் அல்பமே. அது இருக்கட்டும். (39)

अज्ञश्चाश्रद्दधानश्च संशयात्मा विनश्यति ।
नायं लोकोऽस्ति न परो न सुखं संशयात्मनः ॥ ४० ॥

அஜ்ஞஸ்சாச்ரத்ததாநஸ்ச ஸம்சயாத்மா விநச்யதி ।
நாயம் லோகோऽஸ்தி ந பரோ ந ஸுகம் ஸம்சயாத்மந:॥

எந்த பிராணிகளுக்கு இந்த ஞானத்தில் ருசி இல்லையோ அவர்களைப்பற்றி என்ன சொல்வது ? அவர்கள் இறப்பதுதான் நல்லது. சூன்யமடைந்த வீட்டைப்போலவும், பிராணன் இல்லாதசரீரத்தைப்போலவும், ஞானம் இல்லா ஜீவன். ஞானம் நிச்சயமாக அடையவில்லை. ஆனாலும் அடைய வேண்டுமென்ற இச்சை இருந்தாலும் அடைய உபாயம் இருக்கிறது. ஆனால் ஞானம் இருக்கட்டும். அடையவேண்டும் என்ற ஆசையே எழுவதில்லை. அவ்விதமான மனிதர்கள் சம்சயமான அக்னியில் வாட்டப்படுகிறார்கள். ஒருவனுக்கு அமிர்தமே ருசிக்கவில்லை என்ற நிலை ஏற்படும்பொழுது நிச்சயமாக மரணம் அவனை சமீபிக்கிறது என்று அறியவேண்டும். அதனால் நிச்சயமாக அறிவாய். விஷய சுகத்தினால் எவன் திருப்தி அடைகிறானோ, ஞான விஷயத்தில் அலட்சியமாய் இருக்கிறானோ, அவன் சம்சயச்சுழலில் சிக்கிக்கொள்கிறான். சமசயச்சுழலில் சிக்கிக்கொண்டால் போதும். பிறகு இகலோகமும் பரலோகமும் அவனைப்பொறுத்த வரையில் கை கழுவவேண்டிய விஷயம். கால ஜ்வரத்தினால் பீடிக்கப்பட்ட மனிதனுக்கு சீதமும் உஷ்ணமும தெரியாது. அக்னியும் சந்திரனும் அவன் விஷயத்தில் சமானமம. அதுபோல சமசயத்தினால் பிரமையடைந்த மனிதன் சத்யம், அசத்யம அனுகூலம் பிரதிகூலம், நல்லவை, கெட்டவை என்று அறியமாட்டான். பிறவிக்குருடன் எப்படி இரவு பகல் என்ற விதயாசத்தை அறியமாட்டானோ அப்படியே சமசயமடைந்தவனும். அதனால் சமசயத்தை விட கொடூரமான பாபம் இலலை. ஜீவர்களுக்கு இது நாசவலை. அதனால் இதைத் தியாகம் செய்யவேண்டும். ஞானம் இல்லாவிட்டால இவ்வலையில் சிக்கவேண்டியதுதான். அதனால் இதை ஜெயிக்கவேண்டும். அக்ஞானமாகிற மாலை பரவுமபொழுது சம்சயமாகிற இருள் அதிகரிக்கிறது. இதனால சிரத்தை எனறு ஒரு வழி இருப்பதே தெரிவதில்லை. ஒன்றும் இதயத்தில் தங்குவதிலலை. அறிவையும் விழுங்கிவிடுகிறது. மூன்று உலகங்களும் சம்சயமாகவே படுகிறது. (40)

योगसंन्यस्तकर्माणं ज्ञानसंछिन्नसंशयम् ।
आत्मवन्तं न कर्माणि निबध्नन्ति धनञ्जय ॥ ४१ ॥

யோக ஸந்யஸ்த கர்மாணம் ஞாந ஸம்சிந்ந ஸம்சயம் ।
ஆத்மவந்தம் ந கர்மாணி நிபத்நந்தி தநஞ்ஜய ॥

சம்சயம் என்பது இவ்வளவு பெரிய விஷயமானாலும், இதை ஒரு விதத்தில் வசப்படுத்தலாம். அதற்குக் கையில் ஞானமாகிற வாள் இருக்கவேண்டும். இந்த கூர்மையான ஞானஸ்திரத்தினால் ஸம்சயம் மிச்சமின்றி அழிந்துவிடும். பிறகு மன துக்கமும் ஒழிந்துவிடும். (41)

तस्मादज्ञानसंभूतं हृत्स्थं ज्ञानासिनात्मनः ।
छित्त्वैनं संशयं योगमातिष्ठोत्तिष्ठ भारत ॥ ४२ ॥

தஸ்மாதஜ்ஞாந ஸம்பூதம் ஹ்ருத்ஸ்தம்
ஞாநாஸிநாத்மநః ।
சித்த்வைநம் ஸம்சயம் யோகமாதிஷ்டோத்திஷ்ட
பாரத ॥

அதனால் ஹே பார்த்தா, நீ மன சஞ்சலத்தை ஒழித்து விட்டு சீக்கிரமாக எழுந்து நில். சஞ்சயன் கூறுகிறான் :- ஹே அரசே! ஸர்வக்ஞர்களுக்கும் நாதனும் ஞான ஜோதியுமான ஸ்ரீ கிருஷ்ணன் தயையினால் அர்ஜுனனுக்கு இவ்வாறு கூறினான். இனி மேற்கூறிய விவேசனத்தை விஸ்தாரமாக அறிய வேண்டி பாண்டு புத்திரனான அர்ஜுனன் ஸமயோசிதமான கேள்விகளைக் கேட்பான். அந்த நல்ல கதை புண்யக் களஞ்சியம். ரஸத்தின் திரட்டு. இனி வர்ணிக்கப்படும் இதன் முன்னால் நவரசங்களும் ருசியற்றுப் போகும். இது, உலகில் ஸஜ்ஜனங்களின் அறிவிற்கு விஸ்ராமஸ்தலமாகும். இந்த பழமையானதைக் கேளுங்கள். இதில் சாந்த ரஸமே குடி கொண்டிருக்கும். அது ஸமுத்திரத்தைப்போல் ஆழமானது. அர்த்தம் நிரம்பியது. சூரியபிம்பம் சிறியதாக இருந்தாலும் அதன் பிரகாசத்திற்கு மூன்று உலகங்களும் போதவில்லை. அதைப்போல இந்த வாக்வைபவத்தை அறிந்துகொள்ளும்.

கல்பக விருக்ஷத்தை இச்சிப்பவர்களுக்கு மனம் விரும்பிய இச்சை பூர்த்தியாவதுபோல இந்த வாக் விஸ்தாரமும் ஆகும். தாங்கள் ஸர்வக்ஞர். எல்லாம் அறிந்தவர். ஆயினும் மனம் லயித்துக் கேளும் என்று தங்களை வேண்டிக்கொள்கிறேன். உயர்குலத்தில் பிறந்த பெண் ஸௌந்தர்யவதியாகவும், பதிவிரதையாகவும் இருப்பாளேயானுல்? அதைப்போல இந்த வாக் விலாசத்தில் அலங்காரமும் சாந்த ரஸமும் நிரம்பி இருக்கிறது. கற்கண்டு நமக்கு மிகவும் ருசிக்கும். அதை மருந்தில் கலந்து கொடுத்தால், ஆனந்தமாக ஏன் அடிக்கடி சாப்பிடமாட்டோம்? மலயமாருதம் ஏற்கனவேயே இழைந்து இழைந்து ஸுகந்தத்தைப் பரப்புகிறது. அதில் அமுதத்தின் ருசியும் கலந்து தேவ வாக்யத்தின் நாதமும் சேருமானுல் அக் காற்று ஸ்பர்சத்தினுல் உடம்பைக் குளிர்விக்கும். ருசியினுல் நாவைத் திருப்திப்படுத்தும். காதுக்கு இன்பமளிக்கும். விரதம் இருப்பவர்கள் வயிற்றுக்கு பாரணையின் போஜனம் போலும் இக்கதையைக் கேட்பது காதுக்குப் பாரணையாகும். ஒருவிதமான சிக்கலோ, விகாரமோ இல்லாமல் உலகத்தில் துக்கத்தை நிவர்த்திக்கும். கேவலம் மந்திரோச்சாரணத்தினுலேயே சத்ருவிற்கு மரணம் ஏற்படுமானுல் கட்டாரியின் உபயோகம் எதற்கு? பாலில் சர்க்கரை கலந்து சாப்பிடுவதனுல் ரோகம் நிவர்த்தியாகுமானுல் வேப்பிலையின் ரஸத்தைச் சாப்பிடவேண்டிய அவசியமென்ன? மனதை துக்கப்படுத்திக் கொள்ளாமல், இந்திரியங்களைக் கஷ்டப்படுத்திக்கொள்ளாமல் இக்கதையைக் கேட்ட மாத்திரத்தினுலேயே மோக்ஷம் கிடைத்துவிடுகிறது. அதனுல் நிவர்த்தி தேவனின் தாஸனுன ஞானதேவனுகிய நான் சொல்கிறேன். மன சமாதானத்தை அடைய விரும்பிய நீங்கள் இக்கதையைக் கேளுங்கள். (42)

நான்காவது அத்தியாயம் முற்றும்.

## ஐந்தாவது அத்யாயம்

अर्जुन उवाच —

संन्यासं कर्मणां कृष्ण पुनर्योगं च शंससि ।
यच्छ्रेय एतयोरेकं तन्मे ब्रूहि सुनिश्चितम् ॥ १ ॥

அர்ஜுந உவாச —

ஸந்யாஸம் கர்மணாம் க்ருஷ்ண புநர் யோகம் ச சம்ஸஸி |
யத் ச்ரேய ஏதயோரேகம் தன் மே ப்ரூஹி ஸுநிஸ்சிதம் ||

அப்பொழுது பார்த்தன் ஸ்ரீகிருஷ்ணனிடம் கூறுவான்:— நீங்கள் எனக்கு என்ன கூறுகிறீர்கள் என்றே விளங்கவில்லையே! ஒரு சமயத்தில் ஒரு விஷயத்தைத்தான் அந்தக்கரணத்தில் வைத்து யோசிக்கமுடியும். முதலாவது தாங்கள் தான் ஸகல கர்ம ஸந்நியாசத்தைப்பற்றி அநேகவிதமாக விஸ்தரித்தீர்கள். பிறகு இட்பொழுதும் கர்ம ஸந்நியாசத்தைப்பற்றி ஏன் கூறுகிறீர்கள்? ஹே அநந்தா, இப்படி இரண்டு அர்த்தத்தோடு உள்ள பாஷையில் பேசினீர்களானால் எங்களைப்போன்ற அக்ஞானிகளின் சித்தத்தில் சரியான அர்த்தம் எவ்வாறு புரியும்? ஒரு தத்துவத்தைப்பற்றி எனக்கு போதிக்க விரும்பினால் அதே தத்வத்தின் ஸ்திதியை வர்ணிக்கவேண்டும். அதைத் தங்களுக்கு மற்றவர் கூறித்தான் தெரிந்துகொள்ள வேண்டுமென்பதில்லை. அதனால் அந்த பரமார்த்த விஷயத்தை மேலெழுந்தவாரியாக வாய்ப்பேச்சினால் மட்டும் கூறுதீர்கள் என்று நான் விண்ணப்பித்துக்கொள்கிறேன். எத்தனையோ விஷயங்கள் கூறினீர்கள். அவைகளை விட்டுத்தள்ளுங்கள். இப்பொழுது கூறியது கர்ம ஸந்நியாசமா, கர்ம யோகமா? இவைகளில் எது நல்லது என்று நிர்ணயித்துக் கூறுங்கள். எந்த மார்க்கம் கடைசிவரை நிர்ணயிக்க சுலபம்? எதால் பூரண பலன் ஏற்படும்? எந்த மார்க்கத்தில் செல்வது எல்லா வற்றையும்விட சுலபம்? பல்லக்கில் ஏறிச் சென்றால் ஸுகமான நித்திரைக்குப் பங்கம் விளையாது. வழியையும் சுலபமாகக் கடக்கலாம். அப்படி எளிதாக இருக்கவேண்டும். அர்ஜுனன் வார்த்தையைக்கேட்டு ஸ்ரீகிருஷ்ணர் பரமானந்தம் அடைந்தார். ஸந்தோஷத்தோடு கூறினார். பாரப்பா, ஒரு பாக்யவான் காமதேனுவை மாதாவாக அடைந்தானானால்

அவன் விரும்பினால் அவனுக்கு விளையாட சாக்ஷாத் சந்திரனே கிடைக்குமல்லவா? ஸ்ரீ சங்கரபகவான் பாலுஞ்சாதத்திற்காக அழுத உபமன்யுவின் விருப்பத்தைப் பூர்த்தி செய்ய க்ஷீர சமுத்திரத்தையே அழைத்தானன்றோ? அதைப் போலவே உதாரத்தின் இருப்பிடமான ஸ்ரீ கிருஷ்ணன். அவரை அடைந்த அர்ஜுனன். அவன் எல்லா சுகங்களையும் விரும்பினால் ஆச்சரியப்பட என்ன இருக்கிறது? ஸ்ரீ லக்ஷ்மீகாந்தனைப் போன்ற தனிகன் அர்ஜுனனுக்குக் கிடைத்திருக்கிறார், அவரிடம் தன் விருப்பப்படி கேட்கும் யோக்யதையும் அர்ஜுனனுக்கு இருக்கிறது. அதனாலேயே அர்ஜுனன் மேற்கூறிய விதம் கேட்டுக்கொண்டான். (1)

श्रीभगवानुवाच —

संन्यासः कर्मयोगश्च निःश्रेयसकरावुभौ ।
तयोस्तु कर्मसंन्यासात्कर्मयोगो विशिष्यते ॥ २ ॥

ஸ்ரீ பகவான் உவாச —

ஸந்யாஸ: கர்ம யோகஸ்ச நிச்ச்ரேயஸ கராவுபௌ ।
தயோஸ்து கர்ம ஸந்யாஸாத் கர்ம யோகோ
விசிஷ்யதே ॥

பகவான் கூறுகிறார் :— குந்திஸுதா, ஸந்யாசத்தையும், கர்மயோகத்தையும் இணைத்து யோசித்தால் உண்மையில் இரண்டுமே மோக்ஷத்தைக் கொடுக்கக்கூடியது. இருந்தாலும் பெண்கள் குழந்தைகள் இவர்களுக்கு நதியைக் கடக்க தோணி அவசியம் என்பது போல ஞானி அஞ்ஞானி இருவருக்கும் கர்மயோகம் சுலபமான வழி. ஸாரம், அஸாரம் என்பதை எண்ணிப் பார்த்தோமானால் கர்மயோகமே சுலபமாகக் காண்கிறது. இதனால் அனாயாசமாக சந்நியாசத்தின் பலன் கிடைக்கிறது. இப்பொழுது நான் சந்நியாசிகளின் லக்ஷணத்தைக் கூறுகிறேன். இதனால் நீ ஸந்நியாசம், கர்மயோகம் இரண்டின் ஒற்றுமையை அறிவாய். (2)

ज्ञेयः स नित्यसंन्यासी यो न द्वेष्टि न काङ्क्षति ।
निर्द्वन्द्वो हि महाबाहो सुखं बन्धात्प्रमुच्यते ॥ ३ ॥

ஞேய꞉ ஸ நித்ய ஸந்யாஸீ யோ ந த்வேஷ்டி ந காங்க்ஷதி
நிர்த்வந்த்வோ ஹி மஹாபாஹோ ஸுகம் பந்தாத்
ப்ரமுச்யதே ॥

எவன் சென்றதை நினைத்து வருந்துவதில்லையோ துர்லப வஸ்துக்களில் இச்சை வைப்பதில்லையோ, எவனுக்கு இதயத்தில் மேருவைப் போன்ற உறுதி இருக்கின்றதோ, எவனுடைய அந்தகரணத்தில் அகந்தை மமதை என்பது உண்டாவதில்லையோ, அவனையே ஸந்நியாசி என்று எண்ணு. எவன் மனதில் இத்தகைய உறுதியுடன் இருக்கிறானோ, அவனை விஷய வாசனைகள் தாமே விடுகின்றன. அவன் அனுயாசமாக நிரந்தர ஸுகத்தை அடைகிறான். அவனுக்கு வீடு வாசல் என்ற பந்தங்களை விடவேண்டிய அவசியமே இல்லை. ஏனென்றால் விஷய வாசனைகளை க்ரஹித்து விட்டு அதை விடுபவர்கள் இயற்கையிலேயே நிஸ்ஸங்கத்தை விரும்புகிறார்கள். தீயணைந்தபின் சாம்பலே மிச்சமிருக்கும் அல்லவா? அச்சாம்பலை மூட பஞ்சும் உதவுமல்லவா? அதைப் போல யாருடைய புத்தியில் ஸங்கல்ப விகல்பங்கள் இல்லையோ, அவன் கர்ம பந்தத்தால் கட்டுறமாட்டான். எப்பொழுது மனம் ஸங்கல்ப விகல்பங்களை விடுகிறதோ, அப்பொழுது ஸந்நியாசம் ஏற்படுகிறது. அதனால் ஸந்நியாசம், கர்ம யோகம் இரண்டும் சமமே. (3)

सांख्ययोगौ पृथग्बालाः प्रवदन्ति न पण्डिताः ।
एकमप्यास्थितः सम्यगुभयोर्विन्दते फलम् ॥ ४ ॥

ஸாங்க்ய யோகௌ ப்ருதக் பாலா꞉ ப்ரவதந்தி
ந பண்டிதா꞉ ।
ஏகமப்யாஸ்தித꞉ ஸம்யகுபயோர் விந்ததே பலம் ॥

ஹே பார்த்தா, ஸாதாரண மந்தபுத்தியுள்ளவர்கள் ஞானம், கர்மம் இவைகளின் பேதத்தை அறிவதில்லை. ஸாதாரணமாக அஞ்ஞானத்தால் இவைகள் வெவ்வேறென்று ஜனங்கள் கருதுகிறார்கள். ஒரே தீபம் வெவ்வேறு பிரகாசத்தைக் கொடுக்குமா? எவர்கள் உத்தம அனுபவத்தால் சம்பூர்ண ஞானத்தை அடைகிறார்களோ, அவர்கள் இரண்டையும் ஒன்றாகவே கருதுகிறார்கள். (4)

यत्सांख्यैः प्राप्यते स्थानं तद्योगैरपि गम्यते ।
एकं सांख्यं च योगं च यः पश्यति स पश्यति ॥ ५ ॥

யத் ஸாங்க்யை: ப்ராப்யதே ஸ்தாநம்
தத் யோகைரபி கம்யதே ।
ஏகம் ஸாங்க்யம் ச யோகம் ச ய: பச்யதி ஸ பச்யதி ॥

எந்த வஸ்து ஞான மார்க்கத்தால் கிடைக்கிறதோ, அதையே கர்ம மார்க்கத்தால் அடையலாம். மார்க்கங்கள் வேருனலும் அடையும் வஸ்து ஒன்றே. பார், ஆகாசத்திற்கும் வெளிக்கும் பேதம் உண்டா? அதைப் போலவே கர்மயோகத்திற்கும் ஸந்நியாசத்திற்கும் பேதம் இல்லை. மேலும் அதைப்போலவே எவன் ஸாங்க்யத்திற்கும் யோகத்திற்கும் பேதமில்லை என்று அறிகிருனே, அவன் இவ்வுலகிலேயே ஞானப் பிரகாசத்தை அடைகிருன். ஆத்ம ஸ்வரூபத்தை உணருகிருன். (5)

संन्यासस्तु महाबाहो दुःखमाप्तुमयोगतः ।
योगयुक्तो मुनिर्ब्रह्म नचिरेणाधिगच्छति ॥ ६ ॥

ஸந்யாஸஸ்து மஹாபாஹோ துக்கமாப்துமயோகத: ।
யோகயுக்தோ முநிர்ப்ரஹ்ம நசிரேணுதிகச்சதி ॥

பார்த்தா! யோகம் என்னும் வழியினுல் மோக்ஷம் என்னும் பர்வதத்தில் ஏறுகிறவன் சீக்கிரமே கைவல்யமுக்தி என்னும் சிகரத்தை அடைகிருன். இந்த யோகமார்க்கத்தைப் பின்பற்ருதவர்கள் வீணுக அங்கும் இங்கும் அலைகிருர்கள். அவர்கள் ஸந்நியாஸத்தை அடையவே முடியாது. (6)

योगयुक्तो विशुद्धात्मा विजितात्मा जितेन्द्रियः ।
सर्वभूतात्मभूतात्मा कुर्वन्नपि न लिप्यते ॥ ७ ॥

யோகயுக்தோ விசுத்தாத்மா விஜிதாத்மா ஜிதேந்த்ரிய: ।
ஸர்வபூதாத்ம பூதாத்மா குர்வன்னபி ந லிப்யதே ॥

எவன் மனப்பிரமைகளை ஒதுக்கி குரு வாக்யத்தால் நிர்மலமாகி திடமாக ஆத்ம ஸ்வரூபத்தைத் தியானிக்கிருனே,

உப்பினால் செய்த ஒரு பொம்மை கடலில் போடப்படாதவரை கடலினின்றும் வேருக இருப்பதுபோலும் கடலில் போட்டவுடன் கரைந்துபோவது போலும் மேற்கூறிய ஸங்கல்ப விகல்பமற்ற மனம் சைதன்ய ரூபமாகவே ஆகிறது. அப்படி சுத்தீகரிக்கப் பட்ட மனது மூன்று உலகங்களிலும் வியாபிக்கிறது. பிறகு அவனுக்கு கர்த்தா, கர்மம், கிரியை என்ற பேதங்கள் அற்று விடுகின்றன. அவன் கர்மத்தைச் செய்பவனாக இருந்தாலும் கர்மம் அற்றவன் என்றே சொல்லப்படுகிறான். (7)

नैव किंचित्करोमीति युक्तो मन्येत तत्त्ववित् ।
पश्यन्शृण्वन्स्पृशञ्जिघ्रन्नश्नन्गच्छन्स्वपन्श्वसन् ॥ ८ ॥

प्रलपन्विसृजन्गृह्णन्नुन्मिषन्निमिषन्नपि ।
इन्द्रियाणीन्द्रियार्थेषु वर्तन्त इति धारयन् ॥ ९ ॥

நைவ கிஞ்சித் கரோமீதி யுக்தோ மந்யேத தத்வவித் ।
பச்யன் ச்ருண்வன் ஸ்ப்ருசன் ஜிக்ரன் அச்நன்
கச்சன் ஸ்வபன் ச்வஸன் ॥
ப்ரலபன் விஸ்ருஜன் க்ருஹ்ணன் உன்மிஷன்
நிமிஷன்னபி ।
இந்த்ரியாணீந்த்ரியார்த்தேஷு வர்தந்த இதி தாரயன் ॥

நான் தேஹீ என்ற எண்ணத்தை மறந்துவிடுகிறான். பிறகு அவனுக்குச் செய்ய வேண்டிய கடமை என்ன பாக்கி இருக் கிறது. இப்படிப்பட்ட யோக யுக்த புருஷனிடம் தேஹத்தை விடுவதற்கு முன்பே பரப்பிரும்மம் என்று சொல்லக்கூடிய சின்னங்களும் காணப்படும். ஆனால் பார்ப்பவனுக்கு அவன் எப்பொழுதும் உலகத்துடன் கூடியவனே. கர்மங்களிலும் ஈடுபடுபவனே. அவனும் கண்களால் பார்க்கிறான். காது களால் கேட்கிறான். ஆனால் ஆச்சரியம் என்னவென்றால் இந்திரியங்களின் விஷயத்தில் அவனுக்கு ஆஸக்தி என்பதே இல்லை. அவனுக்கு ஸ்பர்ச அறிவு இருக்கிறது. ஸுகந்த துர்கந்தங்களை முகருகிறான். ஸமயோசிதமாகப் பேசுகிறான். உணவை விரும்புகிறான். எதை விடவேண்டுமோ அதை விடுகிறான். ஸுகமாக நித்திரை செய்கிறான். மனம் விரும்பியபடி எங்கும் செல்கிறான். மனம் விரும்பிய கர்மங்

களையும் செய்கிறான். ஒவ்வொன்றுக்க் கூறுவானேன்? மூச்சுவிடுதல் கண்ணிமைத்தல் இவைகளையும் செய்கிறான். ஆனால் அனுபவ பலத்தினால் இந்த எல்லா கர்மங்களுக்கும் தான் கர்த்தா என்பதை அவன் நினைப்பதே இல்லை. அவன் மோஹமாகிய படுக்கையில் தூங்கிக்கொண்டிருந்தவரை உலகமாகிய சொப்பன சுகத்தை அனுபவித்துக்கொண்டிருந்தான். இப்பொழுது அவனைப் பொறுத்தவரை ஞான சூரியன் உதித்து விட்டான். அவன் விழித்துக்கொண்டுவிட்டான். (8-9)

ब्रह्मण्याधाय कर्माणि सङ्गं त्यक्त्वा करोति यः ।
लिप्यते न स पापेन पद्मपत्रमिवाम्भसा ॥ १० ॥

ப்ரஹ்மண்யாதாய கர்மாணி ஸங்கம் த்யக்த்வா
கரோதி ய: ।
லிப்யதே ந ஸ பாபேந பத்மபத்ரமிவாம்பஸா ॥

இப்பொழுது அவனுடைய எல்லா இந்திரியங்களும் தங்கள் தங்கள் விஷயங்களின் ஸந்நிதியில் தாமாகவே காரியங்களை செய்கின்றன. தீப ஒளியினால் வீட்டுக்காரியங்களைச் சுலபமாகச் செய்வதுபோல யோக புருஷனின் தேக கர்மங்கள் நடைபெறுகின்றன. தண்ணீரில் மலர்ந்த தாமரை தண்ணீரால் நனைக்கப் படாததைப்போல அவன் கர்மபந்தத்தில் வசப் படுவதில்லை. (10)

कायेन मनसा बुद्ध्या केवलैरिन्द्रियैरपि ।
योगिनः कर्म कुर्वन्ति सङ्गं त्यक्त्वात्मशुद्धये ॥ ११ ॥

காயேந மநஸா புத்த்யா கேவலைரிந்த்ரியைரபி ।
யோகிந: கர்ம குர்வந்தி ஸங்கம் த்யக்த்வாத்மசுத்தயே ॥

எந்த கர்மத்தைச் செய்ய புத்தியின் அவசியம் தேவை இல்லையோ, எதில் மனத்தின் முளைகூட எழும்பாதோ, அது சரீர கர்மம். சுலபமாகக் கூறினால் யோகிகள் குழந்தைகளைப் போல சரீர கர்மத்தைச் செய்கிறார்கள். இந்த பஞ்ச பூதங் களாலான சரீரம் தூங்குவதைப்போலும் மனம் கனவில் வியவ கரிப்பதைப் போலும் என்று வைத்துக்கொள் இதில் ஆச்சரியம் என்னவென்றால் வாசனைகளின் பலத்தைப் பார். தேகத்

திற்குத் தெரியாமலேயே அவைகள் சுக துக்கத்தை அனுபவிக்கின்றன. இதைப்போல இந்திரியங்களுக்கும் கொஞ்சம் கூட சம்பந்தம் இன்றி எந்த கர்மங்கள் செய்யப் படுகின்றதோ, அது மானஸ கர்மம் என்று சொல்லப்படுகிறது. யோகிகள் மானஸ கர்மமும் செய்கின்றனர். ஆனால் அவைகளில் கட்டுப் படுவதில்லை. ஏனென்றால் அவர்கள் நான் செய்கிறேன் என்ற அகம்பாவத்தை எப்பொழுதோ விட்டு விட்டார்கள் அல்லவா? ஆனால் மோஹமடைந்த இந்திரியங்களின் சேஷ்டைகள் பிசாசு பிடித்தவனின் சித்தத்தைப் போன்று ஒழுங்கீனமாக வேலை செய்கின்றன. உருவத்தை அறிந்து கொள்கிறது, அழைத்தால் காது கேட்கிறது வாய் பேசுகிறது, ஆனால் அறிவு இருப்பதில்லை. இவ்விதம் அறிவின்றி ஒரு காரணமுமில்லாமல் செய்யப்படும் காரியங்கள் இந்திரியங்களின் கர்மம் என்று அறி. எங்கும் எல்லாவற்றையும் அறிந்து செய்யப்படும். கர்மம் புத்தியின் கர்மம். யோகி ஜனங்களும் புத்தியை தீக்ஷண்யப் படுத்திக்கொண்டு மனத்தை ஒரு முகமாக்கிக் கர்மத்தைச் செய்கின்றனர். ஆனாலும் அவர்கள் கர்மத்தில் பந்தப்படுவதில்லை. ஏனெனில் இது நம்முடைய புத்தி, நாம் செய்கிறோம், என்ற அகங்காரம் அவர்களுக்கு இருப்பதில்லை. அதனால் கர்மத்தைச் செய்து கொண்டே அவர்கள் சுத்தனாக இருக்கிறார்கள். கர்த்தா இல்லாமல் எந்த கர்மம் செய்யப்படுகிறதோ, அதே நிஷ்கர்மம். குரு கிருபையினாலேயே அறியப்படவேண்டிய இந்த ரகஸ்யத்தை யோகிகள் அறிகிறார்கள். இதன் பிறகு சாந்த ரஸத்தின் பெருக்கு இதயத்திலிருந்து பாத்திரத்தில் அடங்காமல் பொங்கி வரும் பாலைப்போல வழிந்தோடி வருகிறது. இப்பொழுது சொல்லப்போகும் வசனம் வாக்குக்கெட்டாதது. எவர்களின் இந்திரியங்கள் பூரணம் எய்திவிட்டனவோ, அவர்களே இதைக் கேட்கும் யோக்யதை உள்ளவர்கள். (இப்பொழுது ச்ரோதாக்கள் எண்ணுகிறார்கள் விஷயத்தை விட்டு செல்கிறாரே, கதையின் தொடர்பு விட்டுப்போகிறாரே. சுலோகங்களின் இசைவு அறுபட்டுப்போகுமே, எந்த விஷயத்தை மனதல் கிரஹிப்பதே கடினமோ, தீவிரமாக சிந்தித்தாலும் புத்தியால் அடைய முடியாதோ, அதை எங்கள் பாக்யத்தால் உத்தமமாக வர்ணிக்கிறீர்கள். உண்மையிலேயே வாக்கிற்கு எட்டாத விஷயங்களை சப்தங்கள் இணைத்துத் தெளிவாகச் சொன்னீர்கள், இனி வேறு விஷயங்களுக்கு இங்கு என்ன

வேலை.) அதனால் சுரோதாக்களின் இந்த தீவிர விருப்பத்தை அறிந்து நிவர்த்தி தாஸராகிய நான் கூறுகிறேன். கிருஷ்ணார்ஜுன சம்வாதத்தை ஒரு தரம் கேட்டால் போதாது. அடிக்கடிக் கேளுங்கள். ஸ்ரீ கிருஷ்ணன் கூறுகிறார் :— இப்பொழுது நான் உனக்கு தீர்ந்து தெளிந்த புருஷர்களின் லக்ஷணத்தைக் கூறுகிறேன். மனம் தெளிந்து கேட்பாயாக.

युक्तः कर्मफलं त्यक्त्वा शान्तिमाप्नोति नैष्ठिकीम् ।
अयुक्तः कामकारेण फले सक्तो निबद्ध्यते ॥ १२ ॥

யுக்த: கர்மபலம் த்யக்த்வா சாந்திமாப்நோதி நைஷ்டிகீம் ।
அயுக்த: காமகாரேண பலே ஸக்தோ நிபத்யதே ॥

ஆத்மஞானத்துடன் கூடினவர்கள் கர்ம பலனை மனதால் திரஸ்கரிப்பவர்கள். உலகில் சாந்தியின் வீட்டை யடைந்து அவளிடமிருந்து ஏவரம் பெற்றுக்கொள்கிறார்கள். ஹே கிரீடி, எவன் ஆத்மயோகி இல்லையோ, அவன் கர்ம பந்தத்தினால் கட்டுண்டு பல போகமாகிற முனையில் பல இச்சையாகிற சுருக்கித் தொங்கவிடப்படுகிறான். (12)

सर्वकर्माणि मनसा संन्यस्यास्ते सुखं वशी ।
नवद्वारे पुरे देही नैव कुर्वन्न कारयन् ॥ १३ ॥

ஸர்வகர்மாணி மநஸா ஸம்ந்யஸ்யாஸ்தே ஸுகம் வசீ ।
நவத்வாரே புரே தேஹீ நைவ குர்வன் ந காரயன் ॥

பலனை விரும்புகிறவன் எவ்விதம் செய்வானோ, அவ்விதமே ஞானியும் கர்மத்தைச் செய்வான் ஆனால் நான் இந்த கர்மத்தைச் செய்யவில்லை என்ற உபேக்ஷா பாவம் அவனுக்கு எப்பொழுதும் இருக்கும். அவன் எங்கு பார்த்தாலும் சுகத்தையே காண்பான். அவனுக்கு எப்பொழுது விரும்பினாலும் மஹாபோதம் தயாராக காத்துக்கொண்டிருக்கும். அப்படிப்பட்ட பலனை விரும்பாத தியாகி நவத்வாரமுள்ள தேஹத்தில் இருந்தாலும், இல்லாதவனாகவே இருக்கிறான். செய்தும் செய்யாதவனாகிறான். (13)

न कर्तृत्वं न कर्माणि लोकस्य सृजति प्रभुः ।
न कर्मफलसंयोगं स्वभावस्तु प्रवर्तते ॥ १४ ॥

ந கர்த்ருத்வம் ந கர்மாணி லோகஸ்ய ஸ்ருஜதி ப்ரபு: ।
ந கர்ம பல ஸம்யோகம் ஸ்வபாவஸ்து ப்ரவர்த்ததே ॥

ஸர்வேஸ்வரன் பார்ப்பதற்கு அகர்த்தாவாக இருக்கிறான். ஆனால் மூன்று உலகங்களையும் விஸ்தாரமாகப் படைக்கிறான். அவனைக் கர்த்தா என்று சொல்ல முடியாது. கர்மத்தில் அவன் ஈடுபடவில்லை. உதாசீன பாவத்துடன் செய்யும் அவன் அங்க அவயவங்கள் கர்மத்தால் கட்டுப்படாது. அவனுடைய யோக நித்திரை பங்கமடையாது. அவனுடைய அகர்த்தா என்ற பெயருக்கும் இழிவு ஏற்படாது. அவன் மிகவும் நன்றாக மஹா போத சமுகாயத்தைச் சிருஷ்டித்து படைப்பை நிறை வேற்றுகிறான். உலகின் இதயமே அவன். ஆனால் அவன் ஒருவனுக்கும் சொந்தமும் அல்ல. உலகம் உண்டாகிறது, அழிகிறது. இக்காரண காரியங்கள் அவனை பாதிக்கவே பாதிக்காது. (14)

नादत्ते कस्यचित्पापं न चैव सुकृतं विभुः ।
अज्ञानेनावृतं ज्ञानं तेन मुह्यन्ति जन्तवः ॥ १५ ॥

நாதத்தே கஸ்யசித் பாபம் ந சைவ ஸுக்ருதம் விபு: ।
அக்ஞாநேநாவ்ருதம் க்ஞாநம் தேந முஹ்யந்தி
ஜந்தவ: ॥

பாவமும் புண்யமும் அவனை அண்டியிருக்கின்றன. அவன் அவைகளைப் பார்ப்பதும் இல்லை. அதற்கு சாக்ஷியாக இருப்பதும் இல்லை. மற்ற விஷயங்களைப்பற்றி கேட்க என்ன இருக்கிறது. தேகத்தின் சேர்க்கையினால் அவன் உருவம் உள்ளவனாகி விளையாடுகிறான். இதனால் அவனுடைய நிராகாரஸ்வரூபம் மலினமடைகிறதில்லை. அவன் உலகை படைத்து காத்து அழிக்கிறான் என்று உலகம் கூறுகிறதே அது அக்ஞானமே.

ज्ञानेन तु तदज्ञानं येषां नाशितमात्मनः ।
तेषामादित्यवज्ज्ञानं प्रकाशयति तत्परम् ॥ १६ ॥

க்ஞாநேந து தத்க்ஞாநம் யேஷாம் நாசிதமாத்மந: ।
தேஷாமாதித்யவத் க்ஞாநம் ப்ரகாசயதி தத்பரம் ॥

எப்பொழுது இவ்வஞ்ஞானம் பூரணமாக நசிக்கிறதோ, பிரமையாகிற அந்தகாரம் ஒழிகிறதோ, அப்பொழுது ஈஸ்வரனுகிய என் நிஷ்கர்மத் தன்மை புலப்படுகிறது. அல்லது ஈசுவரன் அகர்த்தா என்ற எண்ணம் எழுமேயாகில் அல்லது நானே ஈசுவரன் என்று நினைப்பானுகில் அவனுக்கு மூன்று உலகங்களிலும் ஒருவித பேதமும் கிடையாதன்ரு! ஸ்வானுபவம் அடைந்த அவன் தன்னைப்போலவே உலகில் எல்லோரையும் முக்தனுகக் காண்கிருன். சூரியன் உதயமானவுடன் கிழக்கு திசையில் உள்ள வீடுகளில் மாத்திரம் தானு வெளிச்சம் பரவுகிறது? மற்ற திசைகளிலும் பிரகாசம் பரவுகிறது அல்லவா? (16)

तद्बुद्धयस्तदात्मानस्तन्निष्ठास्तत्परायणाः ।
गच्छन्त्यपुनरावृत्तिं ज्ञाननिर्धूतकल्मषाः ॥ १७ ॥

தத்புத்தயஸ் ததாத்மாநஸ் தந்நிஷ்டாஸ் தத்பராயணு:।
கச்சந்த்ய புநராவ்ருத்திம் க்ஞாந நிர்த்தூத கல்மஷா: ॥

நிச்சய புத்தி உள்ளவனுக்கு ஆத்மஞானம் உண்டாகிறது. அவன் தன்னை பிரும்ம ஸ்வரூபமாக நினைக்கிருன். இரவும் பகலும் பிரும்மத்தின் நினைவிலேயே பிரும்மஸ்திதியிலேயே நிற்கிருன். இவ்விதமான உத்தம ஞானம் எவன் இதயத்தைத் தேடிவந்து அடைகிறதோ அவனுடைய ஸமதிருஷ்டியைப் பற்றி நான் எந்த வார்த்தைகளால் வர்ணிப்பது? அவன் தான் ஏகனுகி உலகத்தையும் ஏகமாகக் காண்கிருன். எப்படி தனவானுக்கு குதூகலத்திற்காக நினைத்துப் பார்த்தால்கூட தரித்திரத்தின் தன்மை விளங்காதோ, விவேகிக்கு எப்படி பிராந்தியை அறியமுடியாதோ, சூரியன் எப்படி அந்தகாரத்தின் மாதிரியை சொப்பனத்திலும் பார்க்க முடியாதோ, அமிர்தம் மரணத்தின் கதையை எப்படிக் காதால்கூடக் கேட்க முடியாதோ, ஸந்தாபம் என்பதை எப்படி சந்திரன் அறியமாட்டானே, அதே போல ஞானிகள் பிராணிகளுக்குள் பேதம் என்பதை அறியமாட்டார்கள். (17)

विद्याविनयसंपन्ने ब्राह्मणे गवि हस्तिनि ।
शुनि चैव श्वपाके च पण्डिताः समदर्शिनः ॥ १८ ॥

வித்யா விநய ஸம்பந்நே ப்ராஹ்மணே கவி ஹஸ்திநி ।
சுநி சைவச் வபாகே ச பண்டிதா: ஸமதர்சிந: ॥

மேலும் இது கொசு என்றும் இது யானை என்றும், இவன் பிராமணன் என்றும் இவன் சண்டாளன் என்றும், இது என்னுடையது என்றும் பிறருடையது என்றும் அவனுக்கு பேதமேது? மேலும் இது பசு என்றும் இது நாய் என்றும், இது பெரியது, சிறியது என்றும், ஞான விழிப்படைந்தவன் கனவு காண்பானு? அகங்காரம் கடுகளவேனும் மீதமிருந்தா லன்றே இந்த பேதம் தென்படும்? அதுதான் அப்பொழுதே நாசமடைந்துவிட்டதே! (18)

इहैव तैर्जितः सर्गो येषां साम्ये स्थितं मनः ।
निर्दोषं हि समं ब्रह्म तस्माद्ब्रह्मणि ते स्थिताः ॥ १९ ॥

இஹைவ தைர்ஜித: ஸர்கோ யேஷாம் ஸாம்யே
ஸ்திதம் மந: ।

நிர்தோஷம் ஹி ஸமம் ப்ரஹ்ம தஸமாத் ப்ரஹ்மணி
தே ஸ்திதா: ॥

சமதிருஷ்டியின் மர்மத்தைக் கூறுகிறேன். எங்கும் எப்பொழுதும் சமானமாக இருக்கும் இரட்டைத்தன்மையற்ற பிரும்மம் நானே. எவர்களை விஷய வாசனைகள் பற்றுவதில்லையோ, இந்திரியங்கள் தண்டித்து வசப்படுத்தவில்லையோ இவர்கள் இச்சையற்ற ஒருமைத் தன்மையை அடைகிறுர்கள். மேலும் எவர்கள் உலக ரீதியான வியவகாரங்களை செய்து கொண்டு (தூங்குகின்றவர்கள் கனவில் கர்மம் செய்தாலும் உண்மையில் இல்லை என்றவாறு போல) சமத்தன்மையினுல் பலன் கர்மங்களை தியாகம் செய்கின்றனரே, இவ்வித புத்தியுள்ளவர்களை, இவர்கள் தேக தாரிகளாக இருந்தாலும் உலக புத்தி உள்ளவர்கள் இவர்களை அறிந்து கொள்ளமாட்டார்கள். எப்படி என்ருல் மனிதர்களைபிடித்து ஆட்டும் பிசாசு கண்களுக்கு தென்படாதது போல. அது இருக்கட்டும். காற்றின் சேர்க்கை

யினால் ஜலத்தில் அலைகள் எழும்புகின்றன. சாதாரண ஜனங்கள் அவ்வலைகளை ஜலத்தினின்றும் வேறாக நினைக்கிறார்கள். அதுபோல மனம் எப்பொழுதும் பிரும்மத்திடம் லயித்தவனுக்கும் நாமரூபம் உண்டு. ஆனால் அவன் உண்மையில் பிரும்மமே. இவ்விதமான சமதிருஷ்டி அடைந்தவனுக்கு சில சில லக்ஷணங்கள் உள்ளன. அந்த லக்ஷணங்களைச் சுருக்கமாகக் கூறுகிறேன் கேள். (19)

न प्रहृष्येत्प्रियं प्राप्य नोद्विजेत्प्राप्य चाप्रियम् ।
स्थिरबुद्धिरसंमूढो ब्रह्मविद्ब्रह्मणि स्थितः ॥ २० ॥

ந ப்ரஹ்ருஷ்யேத் ப்ரியம் ப்ராப்ய நோத்விஜேத்
ப்ராப்ய சாப்ரியம் ।
ஸ்திரபுத்திரஸம்மூடோ ப்ரஹ்மவித் ப்ரஹ்மணி ஸ்தித; ॥

கானல் நீரின் பெருக்கினால் பர்வதம் அசையுமா? அதைப் போல நல்ல சமயமோ, கெட்ட சமயமோ ஏற்பட்டால் அவர்கள் விகாரமடைய மாட்டார்கள். உண்மையில் அவர்களே சத்யவான்கள். ஸமதர்சிகள். அவர்களே பரப்ரும்மம். (20)

बाह्यस्पर्शेष्वसक्तात्मा विन्दत्यात्मनि यत्सुखम् ।
स ब्रह्मयोगयुक्तात्मा सुखमक्षय्यमश्नुते ॥ २१ ॥

பாஹ்ய ஸ்பர்சேஷ்வஸக்தாத்மா விந்தத்யாத்மநி
யத்ஸுகம் ।
ஸ ப்ரஹ்ம யோக யுக்தாத்மா ஸுகமக்ஷய்யமச்நுதே ॥

ஆத்ம ஸ்வரூபத்தை விட்டு விலகி இந்திரிய விஷயங்களுக்குத் திரும்பவே தெரியாதவர்கள் விஷய ஸுகத்தை அனுபவிக்கவே மாட்டார்கள். என்பதில் என்ன ஆச்சரியம் இருக்கிறது? அப்படிப் பட்டவனுடைய அந்தக்கரணம் இயற்கையாகவே எல்லையில்லா ஆத்ம ஸுகானந்தத்தால் ததும்புகிறது அந் நிலையிலிருந்து அவன் வெளியில் கால் வைக்க மாட்டான். சந்திரனால் மலர்ந்த குமுத புஷ்பத்தின் இலையில் சுத்த சந்திர கிரணத்தை உண்ணும் சகோர பக்ஷி

மணற்பொடிகளை எங்காவது உண்ணுமா? அதைப் போல் ஆத்மஞானத்தை அடைந்து, ஆத்ம ஸுகத்தை அறிந்தவனிடமிருந்து விஷய ஸுகம் தானாகவே விலகிப்போகிறது.

இந்த விஷய ஸுகங்களில் யார் யார் சிக்கிக்கொள்கிறார்கள் என்பதை விசாரித்துப்பார்ப்போம். எவர்கள் ஆத்மஸுகத்தை அறியவில்லையோ, அவர்களே இந்திரிய ஸுகத்தை அனுபவிக்கிறார்கள். பசியினால் பீடித்த தரித்திர ஜனங்கள் அரிசிக் குருணையை உபயோகிப்பதைப்போலவும் தாகத்தால் பீடிக்கப்பட்ட மான் ஜலமாகத் தோன்றும் கானலை ஜலமென எண்ணி பாலைவனத்தை அடைவதைப்போலவும், ஆத்ம ஸ்வரூபத்தை பாராதவன் எப்பொழுதும் ஆத்ம ஸுக விஷயத்தில் தரித்திரனாகவே இருக்கிறான். அவனுக்கு விஷய ஸுகமே திருப்தியாக இருக்கிறது.

விஷயத்தில் ஸுகம் இருப்பதாகச் சொல்வது பொருந்தாது. உலகில் மின்னலின் பிரகாசத்தினால் எதையாவது பார்க்க முடிகிறதா? காற்று, மழை, வெயில் இவைகளிலிருந்து பாதுகாக்க மேகத்தின் நிழலே போது மென்றால் மூன்றடுக்கு வீடு ஏன் கட்டவேண்டும்? அதைப்போல விஷயத்தில் ஸுகம் இருக்குமென எண்ணுவது அக்ஞானமயமாகும். எங்கேயாவது வர்சனாவி என்ற விஷம் தித்திக்குமா? செவ்வாய் கிரஹத்திற்கு மங்களம் என்று பெயர். அது எங்காவது மங்களத்தைக் கொடுக்குமா? கானலை நீராக நம்ப முடியுமா? அதைப்போல விஷய ஸுகத்தை வர்ணிப்பது வீண். எங்காவது படமெடுத்த ஸர்ப்பத்தின் நிழல் எலிக்கு நன்மையை அளிக்குமா? தூண்டிலிலிருக்கும் மாமிசத்தை விழுங்காதவரை மீனுக்கு க்ஷேமம். அதைப்போலவே விஷய ஸுகத்தை அறி. விரக்தனுக்கு விஷயஸுகம் பாண்டு ரோகத்தைப்போல் தோன்றும். அதனால் விஷயஸுகத்தை துக்கம் என்று அறி. ஆனால் அக்ஞானிகள் என்ன செய்வார்கள். அவர்களால் விஷயத்தை அனுபவிக்காமல் இருக்க முடியாது. அவர்கள் இதன் உள் ரகஸியத்தை அறியாததால் அதை அனுபவித்தே தீரவேண்டியிருக்கிறது. சாணத்தில் ஊறும் புழுக்களுக்கு அதன் வாசனை தெரியுமா? துக்கிகளுக்கு துக்கமே ஆத்மஸுகம். விஷய ரூபமான சகதியில் அளையும் தவளை, போகரூபமான ஜலத்தில் விளையாடும் ஜல ஜந்துக்கள் இவைகள், சகதியையும், ஜலத்தையும் எப்படி விடமுடியும்?

ये हि संस्पर्शजा भोगा दुःखयोनय एव ते ।
आद्यन्तवन्तः कौन्तेय न तेषु रमते बुधः ॥ २२ ॥

யே ஹி ஸம்ஸ்பர்சஜா போகா து:கயோநய ஏவ தே।
ஆத்யந்தவந்த: கௌந்தேய ந தேஷு ரமதே புத:॥

ஜீவஜந்துக்கள் விஷயஸுகத்தில் விரக்தர்களானால் துக்க யோனியில் பிறந்த அவர்கள் ஜன்மம் வீணாகிவிடுமல்லவா? கர்ப்ப வாசம், ஜனன மரணம் முதலிய கஷ்டங்களை யார் அனுபவிப்பார்கள்? விஷயாசக்த புருஷர்கள் விஷய ஸுகத்தை விடுவார்களேயானால் மஹாபாபம் எங்கு சென்று ஒளிந்துகொள்ளும்? பிறகு சம்சாரம் என்ற பெயர் பொய்யாகி விடாதா? எவர்கள் விஷயஜன்ய துக்கத்தையே சுகமாக எண்ணுகிறார்களோ, பொய்யான அவித்யா சமூகம் அவர்களுக்கு உண்மையாகவே தோன்றுகிறது. ஹே சுத்த வீரனே! சிந்தித்துப் பார்த்தால் இது ஸ்பஷ்டமாக விளங்கும். நீ மறந்தும் இம்மார்க்கத்தில் செல்லாதே. வைராக்யவான்கள் விஷத்தைப்போல இதை ஒதுக்குகிறார்கள். அந்த இச்சையற்ற ஜனங்களுக்கு விஷயத்தில காணும் ஸுகமாகிற துக்கத்தில் விருப்பமே கிடையாது. (22)

शक्नोतीहैव यः सोढुं प्राक्शरीरविमोक्षणात् ।
कामक्रोधोद्भवं वेगं स युक्तः स सुखी नरः ॥ २३ ॥

சக்நோதீஹைவ ய: ஸோடும் ப்ராக்சரீர விமோக்ஷணாத்।
காமக்ரோதோத்பவம் வேகம் ஸ யுக்த: ஸ ஸுகீ நர:॥

ஞானிகளின் மனதில் விஷயங்களைப்பற்றிய எண்ணமே இருக்காது. தேகம் இருக்கும்பொழுதே தேகத்தின் விகாரங்களை வசப்படுத்திவிடுகிறார்கள். வெளி உலக வியவகாரங்கள் என்னவென்றே அறியமாட்டார். அவர்களுடைய ஹ்ருதயத்தில் ஒருவிதமான ஸுகம் நிரம்பி இருக்கிறது. அவர்கள், அந்த ஸுகத்தின் போகத்தை ஒரு நூதனமான வழியில அனுபவிக்கிறார்கள். பக்ஷி பழத்தைக் கொத்துவதுபோல் அவர்கள் இந்த போகத்தை அனுபவிப்பதில்லை. அவர்கள் அனுபவிக்கவேண்டும் என்ற எண்ணத்தை மறந்தவர்களாக இருக்கின்றனர். அவர்கள் போகங்களை அனுபவிக்கும்பொழுது

அவர்கள் மனதில் ஒருவிதமான எண்ணம் எழும்புகிறது. அச்சமயம் அகங்காரத் திரை நீங்கி, ஸுகம் அவர்களை ஆலிங்கனம் செய்கிறது. அவர்கள் அந்த ஆலிங்கனத்தால் தன்மயமாகிவிடுகிறார்கள். அச்சமயம் தண்ணீருடன் கலந்த தண்ணீர் வேருகத் தெரியாததுபோல, ஆகாசத்துடன் கலந்த வாயு வேருகத் தெரியாததுபோல, அவர்கள் சுகத்துடன் கலந்து சுகமாகவே ஆகிறார்கள். த்வைத எண்ணமே அழிந்துவிடுகிறது. அந்த தாதாத்மியத்தை அறியும் சாக்ஷி அங்கு யார் இருக்கிறார்கள்? (23)

योऽन्तःसुखोऽन्तरारामस्तथान्तर्ज्योतिरेव यः ।
स योगी ब्रह्मनिर्वाणं ब्रह्मभूतोऽधिगच्छति ॥ २४ ॥

लभन्ते ब्रह्मनिर्वाणमृषयः क्षीणकल्मषाः ।
छिन्नद्वैधा यतात्मानः सर्वभूतहिते रताः ॥ २५ ॥

யோऽந்த: ஸுகோऽந்தராராமஸ் ததாந்தர்ஜ்யோதிரேவ ய: ।
ஸ யோகீ ப்ரஹ்மநிர்வாணம் ப்ரஹ்மபூதோऽதிகச்சதி ॥

லபந்தே ப்ரஹ்ம நிர்வாணம் ருஷய: க்ஷீணகல்மஷா: ।
ச்சிந்நத்வைதா யதாத்மாந: ஸர்வபூதஹிதே ரதா: ॥

எது வாக்கிற்கு எட்டாதோ, அதை எப்படி வர்ணிக்க முடியும்? ஆத்மாவே இக்குறிக்கோளை அறியமுடியும்! இந்த சுகத்தில் ஆழ்ந்தவர்கள் தன் சொரூபத்தில் லயித்தவர்கள். எப்பொழுதும் ப்ரும்மானந்தத்தால் மூடப்பட்டவர்களாகவே இருக்கிறார்கள். அவர்கள் ஆனந்த சொரூபம். சுகத்தின் பயிர். மஹா போதத்தின் விளையாட்டுத்தலம். விவேகத்தின் நகரம். பிரும்மத்தின் சுபாவம். பிரும்ம வித்தை என்னும் அலங்காரம் அணிந்த அவயவம். அவர்கள் தத்வத்தின் சாத்விக அம்சம். சைதன்யமாகிற சரீரத்தின் அங்கங்கள். இங்கு குரு கூறுகிறார் போதும். ஒவ்வொரு வார்த்தையாக எதற்கு வர்ணிக்கவேண்டும்? சாது மஹாத்மாக்களின் ஸ்துதியில் ஆழ்ந்துவிட்டாயானால் உனக்கு கதையின் நினைவே இருக்காது. நிராலம்ப சொருபத்தைப் பிரேமையினால் வர்ணித்துக்கொண்டேயிருக்கிறாய். சரி. இந்த ரஸப்

பெருக்கை சற்று நிறுத்து. இக்கிரந்தத்தின் அர்த்த ரூபமான தீபத்தைத் தூண்டி பிரகாசிக்கச் செய். சாதுக்களின் ஹ்ருதயரூபமான கோவிலில் மங்களமான காலையைப் பிரகாசிக்கச்செய். இவ்விதமான குருவின் அபிப்ராயத்தைப் பெற்ற உடனேயே நிவ்ருத்திதாஸர் கூறுவார். கேளுங்கள், ஸ்ரீ கிருஷ்ணர் கூறுகிறார். ஹே அர்ஜுனா, நீ எல்லையில்லாத சுகத்தின் அடித்தளத்தில் மூழ்கி ஒரே இடத்தில் உட்கார்ந்து விட்டாய். அங்கே ஸ்திரமாக அதன் ரூபமாக ஆகிவிட்டாய். எவர்கள் சுத்த ஆத்மஞானத்தின் சகாயத்தால் தன் ஆத்மாவிலேயே எல்லா சம்சாரத்தையும் காண்கிறார்களோ, அவர்கள், மனித ரூபம் எடுத்திருந்தாலும் பரப்ரும்ம சொரூபமாகவே காணப்படுகிறார்கள். உண்மையில் அவர்கள் எல்லாவற்றையும் தாண்டினவர்களும், அழிவற்றவர்களும், எல்லை அற்றவர்களுமாக ஆகிறார்கள். அவர்கள் மனிதர்களில் உயர்ந்தவர்கள். விரக்தர்களின் கூட்டம். (24-25)

कामक्रोधवियुक्तानां यतीनां यतचेतसाम् ।
अभितो ब्रह्मनिर्वाणं वर्तते विदितात्मनाम् ॥ २६ ॥

காமக்ரோத வியுக்தாநாம் யதீநாம் யதசேதஸாம் |
அபிதோ ப்ரஹ்ம நிர்வாணம் வர்தேதே விதிதாத்மநாம் ||

எவர்கள் மனத்தை விஷயத்திலிருந்து ஜயித்து வசப்படுத்தியிருக்கிறார்களோ, அவர்கள் எந்த இடத்தில் தூங்கி விழிப்பையே அடையமாட்டார்களோ, அந்த மோக்ஷத்தின் இருப்பிடமாகிய ஆத்மஞானிகளைப் பரப்ரும்மம் என்றே அறி. அவர்கள் தேகம் இருக்கும்பொழுதே ப்ரும்மதத்வத்தை அடைகிறார்கள் என்று எப்படிக் கூறலாம் என்று நீ கேட்டாய். அதைச் சுருக்கமாகக் கூறுகிறேன். (26)

स्पर्शान्कृत्वा बहिर्बाह्यांश्चक्षुश्चैवान्तरे भ्रुवोः ।
प्राणापानौ समौ कृत्वा नासाभ्यन्तरचारिणौ ॥ २७ ॥

ஸ்பர்சாந் க்ருத்வா பஹிர்பாஹ்யாம்ஸ்சக்ஷு-
ஸ்சைவாந்தரே ப்ருவோ: |
ப்ராணாபாநௌ ஸமௌ க்ருத்வா நாஸாப்யந்தர-
சாரிணௌ ||

வைராக்யத்தின் உதவியினால் அவர்கள் விஷயத்தை வெளியேற்றிவிட்டு சரீரத்தில் மனதை ஒருமைப்படுத்திவிடுகிறார்கள். எங்கு இயற்கையிலேயே இடை, பிங்களா, ஸுஷும்னா என்ற நாடிகள் சேருகின்றனவோ, எங்கு புருவங்கள் சேருகின்றனவோ, அதன் மத்தியில் ஸூக்ஷ்ம திருஷ்டி உள்ளவர்களாகி, சிதாகாசத்தில் சஞ்சாரம் செய்து கொண்டிருக்கும் யோகிகள், இடமும் வலமுமாகத் திரிந்து கொண்டிருக்கும் தன் பிராணனை அபானவாயுவுடன் சித்தத்தில் சேர்த்து சமானமாக்குகிறார்கள். (27)

यतेन्द्रियमनोबुद्धिर्मुनिर्मोक्षपरायणः ।
विगतेच्छाभयक्रोधो यः सदा मुक्त एव सः ॥ २८ ॥

யதேந்த்ரிய மநோ புத்திர் முநிர் மோக்ஷபராயண: ।
விகதேச்சா பய க்ரோதோ ய: ஸதா முக்த ஏவ ஸ: ॥

கங்கா நதி வழியிலுள்ள நல்ல ஜலத்தையும், சாக்கடையையும் ஒன்றாகச் சேர்த்துக்கொள்கிறது. கங்கையில் சேர்ந்த அந்த ஜலத்தை வேறு வேறாகப் பிரிக்க முடியாது. அதே போல சிதாகாசத்தில் பிராண, அபான வாயுவை ஒன்று சேர்த்து மனதை வயப்படுத்திவிட்டால் அப்பொழுது வாசனைகளுடைய எண்ணங்கள் தானாகவே அடங்கிவிடும். எங்கு சம்சாரத்தின் சித்திரம் பிரதிபிம்பிக்கிறதோ அந்த மனமாகிற படுதா கிழிந்து விடுகிறது. ஸரோவரத்தின் ஜலம் உலர்ந்து விட்டால் சூரியன் அங்கு பிரதிபிம்பிக்குமா? எப்பொழுது மூலமனமே இல்லையோ அங்கு அனுபவமுடையவர்கள் தேகத்துடனேயே பிரும்மமாகிறார்கள். (28)

भोक्तारं यज्ञतपसां सर्वलोकमहेश्वरम् ।
सुहृदं सर्वभूतानां ज्ञात्वा मां शान्तिमृच्छति ॥ २९ ॥

போக்தாரம் யஜ்ஞதபஸாம் ஸர்வலோக மஹேச்வரம் ।
ஸுஹ்ருதம் ஸர்வபூதாநாம் ஜ்ஞாத்வா மாம்
சாந்திம்ருச்சதி ॥

இவ்விதமாக தேகத்துடனேயே பிரும்மத்தை அடையும் மார்க்கத்தை நாம் கூறினோம். யம நியமங்களாகிற பர்வதத்தையும், அப்பியாசமாகிற ஸாகரத்தையும் தாண்டி

அப்பால் சென்றுவிடுகிறார்கள். அவர்கள் தங்களை உபாதி இல்லாமல் ஆக்கிக்கொண்டு பிரபஞ்சத்தை உணருகிறார்கள். பிறகு சாந்திமயமாக ஆகிறார்கள். இந்தவிதமாக ஹ்ருஷீகேசன் யோகமார்க்கத்தைப்பற்றி வர்ணித்தவுடன் விஷயம் மிகவும் ரகசியமானதால் ஆனந்தமும் ஆச்சரியமும் உள்ளதாக அர்ஜுனன் நினைக்கிறான். ஸ்ரீ கிருஷ்ணன் உடனே அவன் எண்ணத்தை அறிந்துகொண்டார். சிரித்துக் கொண்டே கூறினார்:— "என்ன இவ்வார்த்தைகளால் உன் சித்தம் பிரஸந்நமாயிற்று?" அப்பொழுது அர்ஜுனன் கூறினான்:— "பிறர் மனதின் எண்ணங்களை அறிபவரே, நீங்கள் என் எண்ணங்களை சரியாக ஊகித்தீர். எதை நான் சிந்தித்துச் சிந்தித்துக் கேட்கவேண்டும் என்று எண்ணுகிறேனோ, அதைத் தாங்கள் முன்னாலேயே அறிந்துவிடுகிறீர்கள். இதுவரை தாங்கள் கூறியதை இன்னும் சற்று விஸ்தாரமாகக் கூறுங்கள். ஜலத்தில் ஆழத்தில் இறங்குவதைக்காட்டிலும் கணுக்கால் ஜலத்தில் இறங்குவது எளிதாக இருக்கிறது. தாங்கள் கூறிய இந்த மார்க்கம் எங்களைப் போன்ற நிர்பல மனிதர்களுக்கு ஸாங்க்ய யோகத்தைவிட ஸுலபமாயிருக்கிறது. ஆனால் இவ்விஷயத்தைப்பற்றி நான் இன்னும் கொஞ்சம்கூட தெரிந்துகொண்டுதான் நிச்சயம் செய்யமுடியும். அதனால் ஹே தேவ, இவ்விஷயத்தை இன்னும் ஒருமுறை விஸ்தாரமாகக் கூறுங்கள்". அப்பொழுது கிருஷ்ணன் கூறுவார்:— "ஆம். இம் மார்க்கம் உனக்கு நல்லதாகத் தோன்றினால், எனக்குக் கூறுவதற்குத் தடை என்ன இருக்கிறது? ஆனந்தமாகக் கூறுகிறேன். கேள். நீ கேட்கிறாய். கேட்டதை நடைமுறைக்குக் கொண்டுவர முயற்சிக்கிறாய். பின் நான் ஏன் உனக்கு உபதேசம் செய்யக்கூடாது". ஏற்கனவே ஸ்ரீ கிருஷ்ணனின் மனம் பிரியத்துடன் கூடியது. இதில் பக்தனின் ஆர்வமும் கலந்திருக்கிறது. பின் அந்த நேசத்தின் அற்புகத்தைப் பற்றி எவ்விதம் வர்ணிப்பது? அதை காருண்ய ரஸத்தின் மழை என்பதா, நூதன பிரேமையின் ஸ்ருஷ்டி என்பதா? ஸ்ரீ கிருஷ்ணனின் கிருபா திருஷ்டியை வர்ணிக்க நானா லாயக்குள்ளவன்? அந்த க்ருபா திருஷ்டியில் அமிர்தத்தை கரைத்து வைத்திருக்கிறது. அல்லது அது பிரேமை மதுவை அருந்தி மது மத்தனாகி இருக்கிறது. அதனால் அவர் அர்ஜுனனுடைய பிரேமையில் சிக்கிக்கொண்டிருக்

கிறார். அதிலிருந்து விடுவித்துக்கொள்ள வகை தெரியவில்லை. இன்னும் அதிகமாக வர்ணித்து அதிகமாகக் கதையை விஸ்தரித்துக் கொண்டுபோனாலும், கிருஷ்ணார்ஜுன பிரேமையைப்பற்றி நம்மால் சரியாக வர்ணிக்கமுடியாது. இதில் என்ன ஆச்சர்யம்? எப்பொழுது ஈசுவரன் தன்னைத் தானே அளவிட்டுக்கொள்ள முடியவில்லையோ, அப்பொழுது பிறர் புத்திக்கு எவ்வாறு எட்டும்? பொதுவாக இது பிரேமையுடன் கூடியது என்று அறியலாம் அவர் ஆர்வத்தோடு கூறுகிறார் :- அப்பனே, எந்த எந்த விதமாகக் கூறினால் உன் சித்தத்தில் ஞானம் உறுதியாகுமோ அந்த விதமாக நான் விஷேதமாகவே கூறுகிறேன். யோகம் என்பது என்ன ஸ்திதி? அதன் உபயோகம் என்ன? அதற்கு அதிகாரி யார்? இவ்விஷயங்களைப் பற்றி எத்தனை மார்க்கங்கள் உண்டோ, அத்தனையும் உனக்குக் கூறுகிறேன்''. இவ்விதம் கூறி ஸ்ரீ ஹரியானவர் விவரித்த கதையை மேலே கூறுகிறோம். நிவர்த்தி தாஸர் கூறுகிறார் :- ஸ்ரீ கிருஷ்ணர் த்வைத நிலையை விடாமல் யோக நிரூபணம் செய்கிறார். அந்த கதையை நான் வர்ணிக்கிறேன். (29)

ஐந்தாம் அத்தியாயம் முற்றும்.

## ஆறுவது அத்யாயம்

சஞ்ஜயன் திருதராஷ்ட்ரரிடம் கூறுகிறார் :— "பிறகு ஸ்ரீ கிருஷ்ணன் யோக தத்வத்தைப்பற்றி விளக்குகிறார். அதைப்பற்றிக் கேளுங்கள். என்ன ஆச்சரியம் பாருங்கள்! ஸ்ரீ கிருஷ்ணன் அர்ஜுனனுக்கு விளையாட்டாகவே ப்ரும்ம ரஸமான விருந்தை அளித்தார். நாம் அங்கு விருந்தாளிகளாகப் போய்ச்சேர்ந்தோம். இந்த பாக்யம் எத்துணை மகத்தானது என்று வர்ணிக்க முடியாது. தாகத்திற்குத் தண்ணீர் கேட்டால் அதற்கு அமிர்தமே கொடுத்ததுபோல் இருக்கிறது நம் நிலை. முக்யமான விஷயங்களை நாம் கேட்டாகிவிட்டது. அப்பொழுது திருதராஷ்ட்ரர் கூறுவார்:— "நான் உன்னிடம் இந்த வார்த்தைகள் ஒன்றையும் கேட்கவில்லையே?" அப்பொழுது அரசனின் மனம் சஞ்சயனுக்கு நன்றாகப் புரிந்தது. அரசனுக்குத் தன் புத்திரர்களின் கவலையே அதிகமாக இருந்தது. இவ்வாறு எண்ணி சஞ்ஜயன் தன் மனதிற்குள் சிரித்துக்கொண்டார்.

கிழவருக்குப் புத்திரபாசத்தால் பைத்தியம் பிடித்துவிட்டது: இதுவரை சொன்னது எவ்வளவு நேர்த்தியான சம்வாதம்? அரசன் பிறவிக்குருடானுல் அறிவும் குருடா? இவ்வாறு மனதில் நினைத்துக்கொண்டாலும் அரசனுக்குக் கோபம் வரும் என்று சஞ்ஜயன் பயந்துகொண்டார். ஆனால் கிருஷ்ணார்ஜுனர்களின் சம்வாதத்தினுல் தான் அடைந்த லாபத்தை எண்ணி மனதிற்குள் மிகவும் சந்தோஷம் அடைந்தார். ஆனந்தத்தால் பூரிதமான அந்த:கரணத்தின் அபிப்பிராயத்தைக் கூற யாருக்குப் பயப்படவேண்டும்? அப்படியே சஞ்ஜயன் கூறுவது கீதையின் தத்வநிர்ணயம் என்ற ஆருவது அத்தியாயமாகத் திகழ்கின்றது.

பாற்கடலிலிருந்து அமிர்தம் கைக்குக் கிட்டியது. கீதார்த்தத்தின் சாரமும், விவேகமாகிற சமுத்திரத்தின் அக்கரையும், மூலப்பிரக்ருதியின் இளைப்பாறும் இடமுமான வேதமாகிற பூமியிலிருந்து கீதையாகிற முளை எழும்புகிறது. வேதமே அதை வர்ணிக்கமுடியாமல் மௌனமாய் இருக்கிறது. இருந்தபோதிலும் இந்த ஆருவது அத்தியாயத்தின் வர்ணனையை நான் அலங்கார பாஷையில் கூறுகிறேன். கவனித்துக் கேளுங்கள். என்னுடைய பாஷை அக்ஞானிகளுடையதுதான் என்றாலும், நான் தேர்ந்தெடுத்து மதுரமான பாஷையில் கூறுவேன். அமுதமும் அதனிடம் தோற்கும். அதன் இனிமைக்கு முன் சப்தஸ்வரங்களும் கசக்கும். இதில் ஆழ்ந்திருப்பவனுக்கு நல்ல வாசனைகளும் துச்சமாகப்படும். அதன் ரஸத்தன்மையைப் பருகக் காதுகளிலும் நாக்குகள் முளைக்கும். இந்திரியங்களும் தங்களுக்குள் கலகம் விளைவித்துகொள்ளும். சப்தம் என்பது காதுகளின் விஷயமானுலும் நாக்கு அது என் ரஸம் என்று பெருமை அடித்துக்கொள்ளும். வாசனையை நுகரும் நாசி இப்பாஷை சுகந்தத்துடன் கூடியது என்று சொல்லும். இந்த நவீன பாஷாபத்ததியை எழுதிப் படித்தால் கண்களுக்குப் போதும் என்ற திருப்தியே உண்டாகாது. இதுவே அழகின் சுரங்கம் என்று அவை பெருமையடித்துக்கொள்ளும். பதங்கள் முழுமையானவுடன் மனம் அதன அர்த்தத்தைக் க்ரஹித்துக்கொண்டு மகிழ்ச்சியால் வெளியில் ஓடி வரும். அதை ஆலிங்கனம் செய்துகொள்ள இரண்டு கரங்களும் தானுக விரியும்.

இப்படியாக இந்திரியக் கூட்டங்கள் தங்கள் தங்கள் உணர்ச்சிகளைப் பொருத்து இதனை அறிய முயற்சி செய்யும். ஆனால் சூரியன் எங்கும் சமமான பிரகாசத்தைக் கொடுப்பதைப்போல இந்த பாஷையும் எல்லோருக்கும் சமமான அறிவைக்கொடுக்கிறது. இவ்விதமாக இந்த பாஷையின் வியாபகம் அசாதாரணமானது. மனக்கண் கொண்டு பார்ப்பவர்களுக்கும், அறிவினால் சிந்தனை செய்பவர்களுக்கும் இதில் சிந்தாமணியின் குணங்கள் தென்படும். நான் என்னவென்று சொல்ல! இந்த சப்தமாகிற அலங்காரத் தட்டில் பிரும்ம ரஸமாகிற போஜனம் பரிமாறிவைக்கப்பட்டிருக்கிறது. நிஷ்காம்ய ஜனங்களுக்காக நான் இந்த போஜனத்தைப் பரிமாறிவைத்திருக்கிறேன். தினம் தினம் நவீன ஒளியை வீசும், ஆத்ம ஜோதியான தீபப் பிரகாசத்தில் இந்திரியக் கூட்டங்களாகிய இருட்டை விலக்கி இவ்வுணவை எவன் உண்ணுகிறானோ, அவன் லாபத்தை அடைவான் ஆனால் ஒன்று. ஸ்தூல சரீரத்தைப் படைத்தவர்களுக்கு இதனால் ஒருவித சம்பந்தமும் ஏற்படுவதில்லை இது சூக்ஷ்மமான பாவசரீரத்தால் அநுபவிக்கவேண்டிய விஷயம். இந்த அலங்கார பாஷையாகிற மேற்போர்வையை விலக்கிவிட்டால் பிரும்மதரிசனம் கிட்டும். அனாயாசமாக சுகத்திலிருந்து சுகத்தை அனுபவிக்கலாம்.

மேற்கூறியவாறு லாபம் அடைபவர்களுக்கு இந்த பரஷாலங்காரம் உபயோகப்படும். இதலாவிட்டால செவிடனும், ஊமையும் ஆகிற கலைதயில் முடியும். இவ்விஷயம் இருக்கட்டும். நம் சுரோதாககளை ஜாக்கிரதைப் படுத்த வேண்டிய விஷயம் நமக்கில்லை. ஏனென்றால் அவர்கள் காமனாரஹிதர்கள். இயற்கையாகவே இதைக்கேட்க அதிகாரிகள். அவர்கள் ஆத்மஞானத்தின் ருசியை அனுபவிக்க ஸ்வர்க்க உலக வாழ்வை திலாஞ்சலி செய்துவிட்டு வந்திருக்கிறார்கள். அவர்களைத்தவிர வேறு யாரால இச்சுவையை அறியமுடியும்? காகத்தால சந்திரனை ரஸிக்கமுடியுமா? சாமான்ய ஜனங்கள் இக்கிரந்தத்தின் மஹிமையை அறிய மாட்டார்கள். சந்திர கிரணங்கள் சகோரபக்ஷிக்கு உணவாவதுபோல இந்த கிரந்தம் ஞானிகளின் போக்ய வஸ்து. அக்ஞானிகளுக்கு இது புரியாது. இதில் அதிகம் கூறவேண்டியது ஒன்றும் இல்லை எனறாலும் ரஸானுபவத்தால

வார்த்தைப்போக்கில் தன்னை மறந்து கூறுகிறேன். சாது ஜனங்கள் மன்னித்தருளவேண்டும். இப்பொழுது கிருஷ்ண தத்வத்தை விளக்குகிறேன். புத்தியினுல் இதை கிரஹிப்பது மிகவும் கடினம். அதனுல் பாஷாமூலமாக இதை மிகவும் கஷ்டப்பட்டுத்தான் விவரிக்கமுடியும். ஆனுல் எனக்கு நிவர்த்தி தேவரின் கிருபையாகிற தீபப்பிரகாசத்தால் இவையனைத்தும் தெளிவாகத் தெரிகின்றன. இந்திரியங்களுக்கு எட்டாத ஞானத்தை அடைந்தவர்களுக்கு ஊனக்கண்ணின் உதவி இல்லாமலேயே எல்லாவற்றையும் பார்க்கமுடியும். தெய்வ கிருபையால் ஸ்பர்சவேதி கையில் கிடைத்தால், அத்துடன் சேர்ந்த இரும்பும் தங்கமாகுமன்ருே? அதுபோல ஸத்குருவின் கிருபையும், முயற்சியும் இருக்குமாகில் எதுதான் கிடைக்காது? அதனுல் ஞானதேவராகிய நான் கூறுகிறேன்:— குருகிருபை எனக்கு அபாரமாகக் கிடைத்திருக்கிறது. என்னுல் இதை நிரூபிக்கமுடியும். நான் சப்தங்களினுல் அருபமான பிரும்மத்திற்கு உருவைக்கொடுப்பேன். அது இந்திரியங்களுக்கு அப்பாற்பட்டதாயினும், இந்திரியங்களினுல் அதன் சுகத்தை அனுபவிக்கும்படிச் செய்வேன். பிறகு யசஸும், மங்களமும், உதாரமும், ஞானமும், வைராக்யமும், ஐசுவர்யமுமாகிய குணங்களுடன் கூடிய பகவானுல் பேசும்படியாக நான் ஆகிறேன். நிஸ்ஸங்கத்தில் ஸங்கத்துடன் கூடிய அப்பகவான் பார்த்தனிடம் கூறியதை என்னிடம் சித்தத்தை வைத்துக் கேளுங்கள்.

श्रीभगवानुवाच —

> अनाश्रितः कर्मफलं कार्यं कर्म करोति यः ।
> स संन्यासी च योगी च न निरग्निर्न चाक्रियः ॥ १ ॥

**ஸ்ரீ பகவான் உவாச—**

> **அநாச்ரித: கர்மபலம் கார்யம் கர்ம கரோதி ய: ।**
> **ஸ ஸந்யாஸீ ச யோகீ ச ந நிரக்நிர் ந சாக்ரிய: ॥**

பகவான் கூறுகிருர்:— கேளப்பா, உலகில் யோகியும், சந்நியாசியும் ஒருவரே. அவர்களை வேருக நினைக்காதே. நன்ருகச் சிந்தித்துப் பார்த்தாயானுல் இருவரும் ஒருவரே. ஒருவருக்கு இரண்டு பெயர் இருப்பதில்லையா? அதுபோல எது யோகமோ, அதுவே சந்நியாசம். ப்ரும்ம திருஷ்டியால் பார்க்கும்பொழுது

இரண்டிற்கும் ஒன்றிற்கொன்று சற்றும் வித்யாசம் கிடையாது. ஒரே மனிதன் பல உறவினல் மாமன் என்றும், தகப்பன் என்றும், பிள்ளை என்றும், தமையன் என்றும் அழைக்கப்படுவது போலவும் ஒரே இடத்திற்குச் செல்ல வெவ்வெறு மார்க்கங்கள் இருப்பதுபோல வும் ஒரே தண்ணீரை வெவ்வேறு பாத்திரங்களில் வைத்திருப்பது போலவும்,, யோகம், சந்நியாசம் இவைகளின் வேற்றுமையை உணர்வாய். ஹே அர்சுன, உலகில் செய்யவேண்டிய கர்மத்தைப் புரிந்துவிட்டு பலனில் ஆசையில்லாமல் எவன் இருக்கிருனே, அவனே யோகி என்று போற்றப்படுகிருன். பூமி இயற்கையாகவே தான் என்னும் எண்ணம் இல்லாமலேயே விருக்ஷம் முதலியவை களை உற்பத்தி செய்கிறது. அதுபோல ஆத்மா எங்கும் நிறைந்து இருக்கிறது. அதனுடைய ஆதாரத்தில் தத்தம் ஜாதி சுபாவங் களைப்பொறுத்து எந்த எந்த சமயத்தில் எந்த கர்மம் செய்ய வேண்டுமோ அவைகளைச் செய்வதே உசிதம். ஆனல் சரீரத்தில் நான் செய்கிறேன் என்றஎண்ணம் இருக்கக்கூடாது. எவனுடைய புத்தி கர்மத்தைச் செய்துவிட்டு பலனில் ஆசைவைப்பதில் லையோ, அவனே சந்யாசி. அவனேயோகி. நமக்கு ஸ்வபாவமாக வந்த உசிதமான கர்மங்களை வீண் பந்தம் என்று ஒதுக்கி விட்டு உடனேயே வேறுகர்மங்களைச் செய்ய முயற்சிபபது சந்தனத்தைப் பூசி உடனேயே அதை அழித்துவிட்டு மற்றொரு லேபனத்தை பூசிக்கொண்டால் எப்படியோ அதுபோல, ஆக்ரஹத்திற்கு அதீனப்பட்டு ஒன்றிற்கும் உதவாதவனுகிருன். முதலாவதே இயற்கையாக கிருஹஸ்தாஸ்ரமத்தின் சுமை தலையிலிருக்கிறது. அவன் சந்யாசம் செய்துகொண்டால் அச்சுமை அதிகமாகுமே தவிர குறையாது. அதனல் ச்ரௌத ஸ்மார்த்த கர்மங்களை விடா மல் யோக மரியாதையை உல்லங்கனம் செய்யாமல் இருப்பவன் தன்னில் உண்மையாகவே யோக சுகத்தை அடைகிருன். (1)

यं संन्यासमिति प्राहुर्योगं तं विद्धि पाण्डव ।
न ह्यसंन्यस्तसंकल्पो योगी भवति कश्चन ॥ २ ॥

யம் ஸந்யாஸமிதி ப்ராஹுர்யோகம் தம் வித்தி
பாண்டவ |
ந ஹ்யஸந்யஸ்த ஸங்கல்போ யோகீ பவதி கஸ்சந ||

கேள். எவன் சந்நியாசியோ, அவனே யோகி. இந்த ஒற்றுமையாகிற கொடியை அநேக சாஸ்திரங்கள் பறக்க விட்டிருக்

கின்றன. அவர்கள் தங்கள் அனுபவமாகிற திராசினால் நிறுத்து ஒரு சத்யத்தை தேர்ந்தெடுத்திருக்கிறார்கள். அது என்ன வென்றால் எங்கு தியாகத்தினால் சங்கல்பம் லோபமடைகிறதோ அங்கு யோகஸாரமான ப்ரும்ம தரிசனம் கிடைக்கிறது. (2)

**आरुरुक्षोर्मुनेर्योगं कर्म कारणमुच्यते ।**
**योगारूढस्य तस्यैव शमः कारणमुच्यते ॥ ३ ॥**

*ஆருருக்ஷோர் முநேர்யோகம் கர்ம காரணமுச்யதே ।*
*யோகாரூடஸ்ய தஸ்யைவ சம: காரணமுச்யதே ॥*

அதனால் ஹே பார்த்தா, உனக்கு யோக ரூபமான பர்வத சிகரத்தில் ஏறவேண்டியிருக்குமானால் கர்ம மார்க்கமாகிற படிகளை விடாதே. இந்த வழியாக யமநியம ரூபமான ஆதார பூமியில் ஆஸன ரூபமான ஒற்றையடிப் பாதையைப் பிடித்துக்கொண்டு பிராணாயாமமாகிற மணற் குன்றுகளின் மேல் ஏறு. பிறகு பிரத்யாஹாரமாகிற சமதளம் இருக்கிறது. அங்கு புத்தியின் கால்களே வழுக்குகின்றன. அங்கு செல்லும் ஹட யோகிகளே கூட வீழ்ந்து விடுவோமோ என்ற பயத்தால் தங்கள் பிரதிக்ஞை களைப் பரித்யாகம் செய்கிறார்கள். இருந்தாலும் அப்யாச பலத்தினால் பிரத்யாஹாரம் என்னும் பிடிப்பில்லாத இந்த இடத்தில் வைராக்யமாகிற விரல்களை அழுந்த வைத்து போகத்தான் வேண்டும். பிறகு வாயு வென்னும் குதிரையில் ஏறிக்கொண்டு தாரணை என்னும் மேலே மேலே செல்லும் மார்க்கத்தில் போய்க் கொண்டிரு. தியானம் என்னும் எல்லையைக் கடக்கும் வரை இப்படிப் போய் கொண்டிரு. பிறகு இப்பாதை முடிந்துவிடும். முயற்சி செய்யவேண்டும் என்ற இச்சை அடங்கிவிடும். பிரும் மானந்தம் என்ற ஏகாக்ரம் மனத்தை அடையும்பொழுது சாதனம், சாத்யம், சாதகன் ஆகிய மூன்றும் ஒன்றாகிவிடும். மேலே செல்ல இடமில்லை. கடந்த நினைவுகளும் தடைபட்டுவிடும். இந்த சமமான பூமியில் சமாதி ஒன்றே நிலைக்கும். இந்த உபாயத்தினால் யோகாரூடர்களானவர்கள் அதிதீவிர புத்திசாலிகளாகத் திகழ்கிறார்கள். அவர்களுடைய லக்ஷணங்களை வர்ணிக்கிறேன், கேள். (3)

**यदा हि नेन्द्रियार्थेषु न कर्मस्वनुषज्जते ।**
**सर्वसंकल्पसंन्यासी योगारूढस्तदोच्यते ॥ ४ ॥**

யதா ஹி நேந்த்ரியார்த்தேஷு ந கர்மஸ்வநுஷஜ்ஜதே ।
ஸர்வஸங்கல்ப ஸந்ந்யாஸீ யோகாரூடஸ் ததோச்யதே ॥

யாருடைய இந்திரியங்களாகிற வீடு விஷய வாசனைகளின் போக்கு வரவற்றதாயிருக்கிறதோ, எவன் ஆத்ம ஞானமாகிற மாளிகையில் தூங்குகிருனே, சுக துக்க ரூபமான சரீரத்தோடு கூடினவனுக இருந்தாலும் யாருடைய மனம் விழிப்படைய வில்லையோ, அதாவது விஷயங்களைப் பொருத்த ஸ்மரணையே இல்லையோ, எவனுடைய இந்திரியக் கூட்டங்கள் கர்மத்தில் ஈடுபட்டிருப்பினும் பலனைப்பற்றி அந்தக்கரணத்தில் கடுகளவு இச்சையும் இருக்காதோ, இத்தனை பெரிய தேகத்தை தரித்துக் கொண்டிருந்தபோதிலும் விழித்துக் கொண்டிருந்தபோதிலும், எவன் தூங்குவதைப் போலிருப்பானே அவனை யோகாரூட னென்றறி. அப்பொழுது அர்ஜுனன் கூறுவான் :- ஹே அனந்த! இதைக்கேட்டு எனக்கு மிக்க ஆச்சரியமாயிருக்கிறது. ஒரு யோகிக்கு இந்த விதமான யோக்யதை எப்படி வருகிறது? (4)

उद्धरेदात्मनात्मानं नात्मानमवसादयेत् ।
आत्मैव ह्यात्मनो वन्धुरात्मैव रिपुरात्मनः ॥ ५ ॥

உத்தரேதாத்மநாத்மாநம் நாத்மாநமவஸாதயேத் ।
ஆத்மைவ ஹ்யாத்மநோ பந்துராத்மைவ ரிபுராத்மந: ॥

அப்பொழுது ஸ்ரீ கிருஷ்ணன் சிரித்துக்கொண்டு சொல்கிருன்:— உன்னுடைய கேள்வியல்லவா எனக்கு மிகவும் ஆச்சர்யமாயிருக்கிறது! இந்த அத்வைத நிலையில் எவன் யாருக்கு எதைக் கொடுக்க முடியும்? மோஹமாகிய படுக்கையில் படுத்து அஞ்ஞானமாகிய நித்திரையில் ஆழ்ந்து இருக்கும் ஒருவன் ஜனன மரணரூபமான துஸ்ஸ்வப்பனத்தைக் காண்கிருன். திடீரென்று விழிப்பு ஏற்பட்டவுடன் கனவு பொய்யாகத் தோன்றுகிறது. இதைப்போல் ஸத்பாவனைகள் எழும்பொழுதும் நமக்குள்ளேயே தான் எழுகின்றன. பின்னென்னவென்ருல் இந்தப் பொய்யான தேகாபிமானத்தில் மனதை ஈடுபடுத்தி நமக்கு நாமே தீங்கிழைத்துக்கொள்கிரும். (5)

बन्धुरात्मात्मनस्तस्य येनात्मैवात्मना जितः ।
अनात्मनस्तु शत्रुत्वे वर्तेतात्मैव शत्रुवत् ॥ ६ ॥

பந்துராத்மாத்மநஸ்தஸ்ய யேநாத்மைவாத்மநா ஜித:।
அநாத்மநஸ்து சத்ருத்வே வர்தேதாத்மைவ சத்ருவத் ॥

நன்ருக ஆலோசித்து இந்த அகங்காரத்தை விட்டுவிட்டு இந்த நித்யரூபமான ப்ரும்மரூபத்தை அடைந்தால் நமக்கே நாம் நன்மை செய்தவர்களாவோம். அப்படிக்கின்றி தன் அழகான இந்த சரீரத்தையே ஆத்மாவாக எண்ணிக்கொண்டால் பட்டுப்பூச்சியைப்போல தனக்குத்தானே வைரியாகிருன். அதிருஷ்டவசமாக வழியில் நடக்கும் பிரயாணிக்கு எதிரில் பணமுட்டை கிடந்தாலும் அவனுடைய துர்பாக்யம் அவனுக்குக் குருடனைப்போல் நடந்துபார்க்கவேண்டுமென்று தோன்றுகிறது. அப்பொழுது நன்ருகத் திறந்த தன் கண்களை மூடிக்கொண்டு நடக்கிருன். அல்லது பிரமத்தின் காரணமாக நான் இல்லவே இல்லை. நான் இறந்தேவிட்டேனென்று அவன் கருதினுல், அவன் அந்தக்கரணத்தில் இதை உறுதியாக நம்பினுல், அவனை என்ன செய்யமுடியும்? உண்மையில் அவன் இருக்கவே இருக்கிருன். ஆனுல் அவன் புத்தி அவனை அப்படி எண்ணச்செய்கிறது. ஸ்வப்னத்தில் பட்ட காயத்தினுல் ஒருவன் உண்மையிலேயே மரணமடைகிருனு? கிளியின் சரீரத்தின் பாரம் தாங்காமல் அதைப் பிடிக்கவைத்திருக்கும் பொறி கவிழ்ந்துவிடுகிறது. அப்பொழுது கிளி வேண்டுமென்ருல் பறந்துபோகலாம். ஆனுல் அதன் மனம் ஸந்தேகப்படுகிறது. அதனுல் அது வீணுகக் கழுத்தைத் தூக்கித்தூக்கிப் பார்த்து உடம்பை வளைத்துப் பொறியின் உள்ளே நுழைகிறது. பிறகு தன் கால்களினுல் கூண்டின் கதவை இழுக்கிறது. அப்பொழுதுதான் அதற்குத் தோன்றுகிறது, நாம் மாட்டிக்கொண்டுவிட்டோமென்று. இப்படி எண்ணம் எழுந்தபின் தன் கால்களை அதிவேகமாகப் பொறியின் கதவில் அடித்துப் பொறியை மூடிவிடுகிறது. இப்படிக் காரணமில்லாமல் சிக்கிக்கொள்பவனை எவன் கட்டுப்படுத்த முடியும்? அகப்பை பிடுங்கிய குரங்குபோல தனக்குத்தானே வைரியாகிருன். அவன் தன் ஸங்கல்பத்தை விஸ்தரிக்கிருன் எவன் பொய்யான பொருள்களுக்கு வசப்படுவதில்லையோ அவனே ஆத்மஞானி. (6)

जितात्मनः प्रशान्तस्य परमात्मा समाहितः ।
शीतोष्णसुखदुःखेषु तथा मानापमानयोः ॥ ७ ॥

**ஜிதாத்மந: ப்ரசாந்தஸ்ய பரமாத்மா ஸமாஹித: |**
**சீதோஷ்ண ஸுகது:கேஷு ததா மாநாபமாநயோ: ||**

அந்தக்கரணத்தை ஜெயிப்பவனும், பலம்பொருந்திய விருப்பங்களை அடக்குபவனுமானவனுக்கு பரமாத்மா அவனைவிட்டு வேறு ஒரு வஸ்துவல்ல. தங்கத்துடன்கூடிய செம்பு முதலிய அழுக்கு நீங்கியதும் சுத்தத்தங்கம் சுடர்விட்டு ஒளிர்வதுபோல ஸங்கல்பம் நாசமடைந்ததும் ஜீவன் பிரும்மமாகவே ஆகிறான். கடாகாசம் நாசமடைந்ததும் அதற்கு ஆகாசத்துடன் சேர்வதற்கு வேறுஇடம் தேடிப்போக வேண்டாதது போல யாருக்கு பொய்யான தேகாபிமானம் முற்றிலும் நாசமடைகிறதோ அவன் எங்கும் நிறைந்த பரமாத்ம ரூபமாகவே ஆகிறான். அவனைக் குளிர், வெப்பம், ஸுகம், துக்கம், மானம், அவமானம் ஒன்றும் அண்டாது. கதிரவன் செல்லும் வழியெங்கும் ஜோதிப்பிரகாசம் ஆவதுபோல அவனை அடையும் பொருட்கள் அவன் ரூபமாகவே ஆகிறது. மேகத்திலிருந்து வர்ஷிக்கும் ஜலம் ஸமுத்திரத்தை அடைந்து அதனுடன் ஒன்றுவதுபோல யோகிகளின் சுபாசுபகர்மம் அவனை விட்டு வேறல்ல. (7)

**ज्ञानविज्ञानतृप्तात्मा कूटस्थो विजितेन्द्रियः ।**
**युक्त इत्युच्यते योगी समलोष्टाश्मकाञ्चनः ॥ ८ ॥**

**ஜ்ஞாநவிஜ்ஞாந த்ருப்தாத்மா கூடஸ்தோ**
**விஜிதேந்த்ரிய: |**
**யுக்த இத்யுச்யதே யோகீ ஸமலோஷ்டாச்ம காஞ்சந: ||**

அவனுக்கு இந்த சம்சாரம் ஞானமயமாகத் திகழ்கிறது. உலகம் பொய் என்பதை அறிகிறான். இவ்வெண்ணம் எழுந்த உடனேயே அவன் ஞானவானாகத் திகழ்கிறான். நான் தனிப்பட்டவன், அல்லது எங்கும் நிறைந்தவன் என்ற த்வைதபாவத்திற்கு அவன் உள்ளத்தில் இடமில்லாததால் தானாகவே எண்ணங்கள் மறைந்து விடுகின்றன. இவ்விதமாக இந்திரியங்களை ஜெயித்தவன் தேகியாக இருந்தபோதிலும் யோக்யதையில் பரப்பிரும்மத்திற்கு ஒப்பானவன். அவனே ஜிதேந்திரியன். யோகயுக்தன். அவன் சிறிது பெரிது என்ற பேதமற்றவனாக இருக்கிறான். அவன் தங்கத்தினாலான மேருபர்வதத்தையும், மண் குன்றையும் ஒன்றாகவே எண்ணுகிறான். விலை மதிப்பற்ற ரத்னச் சுரங்கம் கிடைத்தாலும், பூமியைக் கொடுத்துக்கூட வாங்க முடியாத விலை

மதிப்பற்றதாக இருந்தாலும் அவனைப் பொருத்தவரை அவை கூழாங்கற்களே. (8)

सुहृन्मित्रार्युदासीनमध्यस्थद्वेष्यबन्धुषु ।
साधुष्वपि च पापेषु समबुद्धिर्विशिष्यते ॥ ९ ॥

ஸுஹ்ருந்மித்ரார்யுதாஸீநமத்யஸ்தத்வேஷ்யபந்துஷு ।
ஸாதுஷ்வபி ச பாபேஷு ஸமபுத்திர் விசிஷ்யதே ॥

அவனுக்கு மித்திரன் சத்ரு, உதாஸீனன், இவ்வாறு முரண்பட்ட எண்ணங்களின் கற்பனையே எழாது. அவனுக்கு மித்ரன் யார்? சத்ரு யார்? நானே உலகம் என்ற ஞானம் படைத்தவனுக்கு உத்தமம், அதமம் என்ற ஞானம இருக்கமுடியுமா? ஸ்பர்சவேதியான உரைகல்லில் மட்டப் பொன்னிற்கும் சுத்தப் பொன்னிற்கும் வித்தியாசம் ஏற்படுமா? அதுபோல யோகியின் புத்திககு சராசரங்களின் எல்லா பொருள்களும் ஒன்ருகவே காண்கிறது. இந்தச் சிதறிக் கிடக்கும் பலதரப்பட்ட இயற்கை அழகு உள்ள உலகு பலதரப்பட்ட நகைகளில் உள்ள பொன்னைப்போல ஒரே பரப்ப்ரும்மத்தில் அடங்கி இருக்கும் இந்த உத்தம ஞானத்தை அந்த ப்ரும்ம ஞானி அடைகிருன. அதனுல் அவன் சித்திர விசித்திரமான இயற்கையின் விகாரங்களில் சிக்கிக் கொள்ளமாட்டான். துணியைப் பார்ப்பவன் அதிலுள்ள ஒவ்வொரு நூலிழையையா பார்த்துக்கொண்டிருக்கிருன்? அதைப்போல ஒருமையைத் தவிர அவன் கண்களுககு வேறென்றும் தெரிவதுல்ல. அவன் பெயர் சிறந்த தீர்த்தத்தைப்போல பவித்ரமானது. அவனைப் பார்த்தால் மனம் சாந்தி அடைகிறது. அவனுடன் சேர்ந்த உலகப் பிரமை பிடித்தவர்களுக்கும் ப்ரும்மஞானம் ஏற்படும். அவனுடைய வார்த்தைகள் நாமத்தின் பிராணன். அவன் பார்த்த பார்வையில் மகா ஸித்திகள் உற்பத்தியாகின்றன. ஸ்வர்க்காதி ஸுகங்கள் அவனுக்குப்பொழுதுபோக்கும் விளையாட்டே. அப்படிப்பட்ட யோகியை அகஸ்மாத்தாக மனதில் நினைப்பவனுக்கும் அவனுடைய யோக்யதைகள் சித்திக்கும். அதிகம் கூறுவானேன்? அவனைத் துதிப்பதே மங்களம். (9)

योगी युञ्जीत सततमात्मानं रहसि स्थितः ।
एकाकी यतचित्तात्मा निराशीरपरिग्रहः ॥ १० ॥

யோகீ யுஞ்ஜீத ஸததமாத்மாநம் ரஹஸி ஸ்தித: |
ஏகாகீ யதசித்தாத்மா நிராசீரபரிக்ரஹ: ||

எங்கு அத்வைதமாகிற பகல் உதித்ததோ, எது பிறகு அஸ்தமனமாகாதோ, எது தனக்குள் தானே ஆழ்ந்து நிற்கிறதோ, அதை அறிந்தவனே இணையில்லாதவன். அவன் ஒருவனே பரிவாரம் இல்லாமல் தன்னம் தனியாக நிற்கிறன். ஸ்ரீ கிருஷ்ணன் அவரால் முடிந்தமட்டும் இத்தன்மையான ஸாது மஹாத்மாக்களைப் பற்றி வர்ணிக்கிறர். மேலும் கூறினர் :– ஞானிகளில் மேலானவன். பார்க்கிறவர்களின் திருஷ்டிக்குப் பிரகாசத்தைக் கொடுப்பவன். எந்த ப்ரபுவின் ஸங்கல்பத்தால் விச்வ ஸ்ருஷ்டி உண்டாகிறதோ; ஓங்கார ரூபமான சந்தையில் கிடைக்கும் சப்த ப்ரும்மரூபமான வஸ்திரமும் எவனுடைய புகமுடம்பை மூடுவதற்குப் போதாததாக ஆகுமோ யாருடைய சரீர தேஜஸிலிருந்து சூர்யனும் சந்திரனும் கடன் வாங்குகிறர்களோ அத்தகைய ஞானியன்றி இவ்வுலகம் எப்படி பிரகாசமாகும்? அவனுடைய பேருக்கு முன் ஆகாசமும் அல்பமாகிறது. அவனுடைய ஒவ்வொரு குணத்தையும் எவ்வாறு வர்ணிக்க முடியும்? அதைப் பற்றிச் சொல்வதிருக்கட்டும். ஏதோ ஒரு ஆவேசத்தில் அவனைப் பற்றி வர்ணித்தேன். அதுவும் அற்பமென்று ஏன் வர்ணித்தோம் என்று தோன்றுகிறது. த்வைதம் என்ற பெயரையே அழிக்கவல்ல ப்ரும்ம வித்தையை வ்யக்தமாகக் கூறுவதென்றல் ப்ரேமையின் மாதுர்யமே போய்விடும். அதனலேயே நான் போதுமானபடி வர்ணிக்கவில்லை. எனக்குப் ப்ரேமையானது பிடிக்கும் அதற்காகவே மனத்திற்கு ஒரு மெல்லிய திரையிட்டு அதன் மறைவிலிருந்து கூறுகிறேன். எவர்கள் ஸோஹம் பாவத்தில் சிக்கிக் கொண்டிருக்கிறர்களோ, மோக்ஷ ஸுகத்திற்காக தீனர்களாகப் பிரார்த்திக்கிறர்களோ அவர்களின் திருஷ்டி ப்ரேம பக்தர்களுக்கு வரவேண்டாம். ஒரு வேளை பக்தனுடைய அகம்பாவம் போய் அவன் பிரும்ம ரூபியாகவே என்னைப் போலாய் விட்டால் பிறகு நான் தனியாக என்ன செய்வேன்? பிறகு யாரோடு கண்களோடு கண் நோக்கி ஸந்தோஷமடைவேன்? யாருடன் என் மனம் போனபடி பேசுவேன்? யாரை ஆலிங்கனம் செய்வேன்? என்னுடன் ஐக்யமாகிவிட்டால் என்னுடைய காக்ஷியில் உத்தமமானதும், மனதில் அடங்காததுமான ப்ரேமாலாபனத்தை யாருடன் செய்வேன்? இவ்விதமாக ப்ரேமை

வசப்பட்ட கிருஷ்ணன் அர்ஜுனனுக்கு உபதேசிக்கும் சாக்கில் தன் மனத்தையே தன் மனத்துடன் பொருத்துவதற்கு முயற் சித்தார். இது கேட்பதற்குப் பொருத்தமன்றி இருக்கலாம். ஆனால் அர்ஜுனனை ஸ்ரீ கிருஷ்ண ஸுகத்திற்க்காகவே செய்யப்பட்ட கருவியாக அறி. சொல்வதற்கென்ன இருக் கிறது? மலடிக்கு விருத்தாப்ய தசையில் புத்திரனுண்டானல் அவனிடம் ப்ரேமையின் காரணமாக எப்படி நடந்து கொள் வாளோ, அதே நிலை ஸ்ரீ கிருஷ்ணனுக்கு உண்டாயிற்று. கிருஷ்ணப் பிரேமையை உண்மையாக நான் அறியாவிட்டால் இவ்விதம் கூறமாட்டேன். பிரேமை என்பது ஆச்சர்யமான வஸ்து! உபதேசமெங்கே? யுத்தம் எங்கே? இரண்டிற்கும் நடுவில் பிரேமிகளின் பிரேமைதான் இங்கு வெளியாகிறது. பிரேமைக்கு லஜ்ஜை உண்டா? ஊக்கத்திற்குக் களைப்புண்டா? அர்ஜுனன் நட்பின் இருப்பிடம். அதாவது நன்றாக அலங் கரிக்கப்பட்ட கண்ணாடி. இந்தவிதமாக அவன் மிகவும் பவித்ரவான். புண்யசாலி. உலகில் பக்தி ரூபமான விதையை விதைக்க அவன் உத்தமமான விளை நிலம். அதனாலேயே க்ருஷ்ணனின் க்ருபா பாத்திரமானான்.

ஆத்ம சமர்ப்பணத்திற்கு முன்னால் தோழமை என்பது ஒரு முகவுரை. அர்ஜுனனோ, ஆத்மசமர்ப்பணத்திற்கு மூர்த்தீ கரித்த தேவரூபம். கிருஷ்ணனுக்கு மிக்க ப்ரியமானவன். அவன் பக்கத்தில் இருக்கும் கிருஷ்ணனைத் துதிக்காவிட்டாலும் வேண்டாம். ஆனால் சேவகனான அவனை அவசியம் துதிக்க வேண்டும். ப்ரேமையோடு பதிக்கு சேவை செய்பவளும், பதிக்கு மரியாதை செய்பவளுமான பதிவ்ரதையை பதியைவிட அதிகமாக வர்ணிக்கவேண்டுமல்லவா? அதைப்போல இப் பொழுது எனது ஹ்ருதயம் அர்ஜுனனையே துதிக்க விரும்பு கிறது. ஏனெனில் அவனே இம்மூவுலகின் பாக்யங்களுக்கும் அதிஷ்டானமாக விளங்குகிறானல்லவா? அவனிடம் உள்ள ப்ரேமையினால்தானே நிராகாரமான பரமாதமா உருவத்தை எடுத்துக்கொண்டிருக்கிறான்? இல்லாவிட்டால் அவன் ஏன் தான் பூர்ணமாக இருந்தாலும் அர்ஜுனனின் பொருட்டு இத்தனை ஆதுரப்படுகிறான்?

இப்பொழுது ஞானதேவரின் ச்ரோதாக்கள் கூறுகிறார்கள்: "அஹோ பாக்யம்! என்ன அழகான வாணிகள்? நாத ப்ரும்மமே ஸௌந்தர்யத்தை வென்றதாக அல்லவா இருக்

கிறது? பாஷையா அது? ஆகாசத்திலிருந்து அலங்கார ரூபமான நானுவித வர்ணஜாலங்கள் விழுவதுபோலல்லவா இருக்கிறது! ஞானமாகிற நிலவு வீசுகிறது. பாவார்த்தமாகிற தன்மை பரவுகிறது. ச்லோகார்த்தரூபமான தாமரை எத்தனை அழகாக மலர்ந்திருக்கிறது! மனோபாவனை வெள்ளமாகப் பெருகுகிறது. நிஷ்காம ஜனங்களுக்கும்கூட காமத்தை உற்பத்தி செய்கிறது". இந்தவிதமாக ச்ரோதாக்கள் ஆனந்தப்பட்டுக்கொண்டார்கள்.

இதைப் பார்த்து நிவர்த்திதாஸர் ஞானேஸ்வரர் கூறுகிறார்:— கவனித்துக் கேளுங்கள். பாண்டவகுலத்தில் கிருஷ்ண ரூபியான நூதன சூர்யன் பிரகாசிக்கிறான். அவனை தேவகி கர்ப்பத்தில் தரித்தாள். யசோதை கஷ்டப்பட்டு வளர்த்தாள். ஆனால் கடைசியில் பாண்டவர்களுக்கே உபயோகப்பட்டான். அதனால் அதிகதினம் சேவை சுச்ருஷை செய்தும் சமயம் பார்த்து வினய விண்ணப்பம் செய்ய வேண்டிய கஷ்டம் அர்ஜுனனுக்கு இல்லை. அதிருக்கட்டும் கதைக்கு வருவோம் அர்ஜுனன ப்ரேமையுடன் கூறுவான்:- தாங்கள் வர்ணித்த சாது மஹாத்மாக்களின் லக்ஷணம் என்னிடம் கொஞ்சம் கூட இல்லை. அந்த லக்ஷணங்களை கவனித்தால் நான் எவ்வளவோ அற்பம்? ஆனால் நிச்சயமாகத் தங்கள் வசனத்தால் நான் சிரேயஸ்ஸை அடைவேன். தாங்கள் மனது வைத்தால் நான் பிரம்மமாகவே ஆவேன். அது எப்படி வேண்டுமோ இருக்கட்டும். தாங்கள் என்ன சொன்னீர்களோ அதை அப்பியசிப்பேன். தாங்கள் யாரை வர்ணித்தீர்களோ எனக்கு அது தெரியாது. ஆனால் அதைக் கேட்டுவிட்டு என மனதில் அதிகக் குதூகலம் உண்டாகிறது. அந்த சாது மஹாத்மாக்களின் யோக்யதை நமக்குக் கிடைத்தால எவ்வளவு ஆனந்தமாக இருக்கும்? என்னால் அப்படி ஆகமுடியுமா? ஆனால் தாங்கள் மனது வைத்தால் ஆகிவிடுவேன்.

கிருஷ்ணன் சிரித்துக்கொண்டு கூறுகிறான்: "ஆம், ஆம். அவசியம்செய்வேன்". ஆனால் இந்த சந்தோஷத்தை அடையும்வரை மிக்க கஷ்டங்களை எதிர்க்கவேண்டியிருக்கிறது. அந்த சந்தோஷத்தை அடைந்தால் பிறகு சுகத்திற்குக் குறைவேது? சர்வேச்வரனும் சமர்த்தனும் ஒப்பற்றவனுமான யஜமானனின் சேவகன் அல்லவா அவன? அதனால் அவன்

னிதில் ப்ரும்மமாகிவிட்டான். பாக்யமாகிற தானியங்களால் தழைத்தபயிர்போலானுன். யாரைத்தரிசிக்க இந்திராதிதேவர்களும் ஆயிரக்கணக்கான ஜன்மங்கள் எடுத்தாலும் முடியாதோ, அவன் அர்ஜுனனுக்கு வசமாய்விட்டார். அவனுடைய ஒரு விஷயம்கூட அர்ஜுனனிடம் பலனில்லாது போகவில்லை. அர்ஜுனன் பிரும்மமாக ஆசைப்பட்டு கிருஷ்ணனிடம் கேட்டுக்கொண்டான். கிருஷ்ணன் யோஜித்தான். அர்ஜுனனுக்கு ப்ரும்ம ப்ரேமை ஏற்பட்டிருக்கிறது. அவனுடைய புத்தியாகிற வயிற்றில் வைராக்யமாகிற கர்ப்பம் ஏற்பட்டிருக்கிறது. இன்னும் பக்குவம் வராவிட்டாலும் அர்ஜுனனுடைய வ்ருக்ஷம் வைராக்யமாகிற வசந்தக் காற்றில் ஸோஹம் பாவ ரூப மலர்களால் குலுங்குகிறது. அப்பொழுது கிருஷ்ணனுக்கு நிச்சயமாகிவிட்டது. அர்ஜுனன் விரக்தனைவிட்டான். மோக்ஷப்ராப்தியான பழம் பழுப்பதற்கு இன்னும் அதிக காலம் இல்லை. இவன் எந்த தத்வத்தை எடுத்துக்கொண்டாலும் உடனே பலனளிக்கும். அதனால் இவனுக்கு நான் அளித்த அப்பியாசம் வீணுகப்போகாது.

இவ்விதம் எண்ணி அச்சமயம் ஸ்ரீ ஹரி அர்ஜுனனிடம் கூறுவான். இப்பொழுது உனக்கு எல்லா யோகத்திலும் சிறந்த யோகத்தைக் கூறுகிறேன் கேள். அந்த மார்க்கத்தில் சம்சாரமாகிற விருக்ஷத்திலிருந்து மோக்ஷம் என்னும் கோடிக்கணக்கான பழங்கள் பாய்விரித்தாற்போல் விழுந்து இருக்கும். அவ்வழியாக சங்கரபகவான் இன்னும் யாத்திரை செய்துகொண்டு இருக்கிறார். தேர்ந்தயோகி ஜனங்கள்கூட சிதாகாசமாகிற பாதையில் கோணலும் குறுகலுமானபாதையில் தான் போய்க் கொண்டிருக்கிறார்கள். ஆனால் இப்பொழுது தேர்ந்த அனுபவமென்னும் அவர்களுடைய பாதங்களின் சின்னங்கள் பட்டுப்பட்டு அது ஒரு நல்ல ரஸ்தாவாகிவிட்டது. அதனால் அதைப் பின்பற்றுபவர்கள் இப்பொழுது அக்ஞான ரூபமான வேறு குறுகிய மார்க்கங்களை விட்டு விட்டு அந்த ஆத்மரூபமான நேர்மார்க்கத்தில் விரைகிறார்கள். இம் மார்க்கத்தில் செல்லும் சாதகர்கள் சித்தி அடைகிறார்கள் தத்வ ஞானிகளோ மேலும் உன்னதி அடைகிறார்கள். இம் மார்க்கத்தில் செல்பவர்களுக்குப் பசி தாகம் இருப்பதில்லை. இரவிற்கும் பகலுக்கும் வித்தியாசம் இருப்பதில்லை. போகும் சமயம் கால்பட்ட இடங்களிலெல்லாம் மோக்ஷ சுரங்கம் திறந்திருப்பதைப் பார்க்கலாம். இதில் கோணலும் மாணலும்

ஆக போகிறவர்கள் கூட சுவர்க்க சுகத்தை அடைகிருர்கள். கிழக்கே பார்த்து நேராகச் செல்கிறவர்கள் மேற்கு திக்கிலிருக்கும் தன் வீட்டிற்கு சாந்தமாக வந்து சேருகிருர்கள். ஹே தனுர்தர, இந்த மார்க்கமே இப்படித்தான். இம்மார்க்கத்தில் எந்த இடத்திற்குப் போனாலும் அங்கு கிராமங்கள் இல்லாவிட்டாலும் அது கிராமமாக தென்படும். இதைப்பற்றி நான் சொல்வதற்கில்லை. உனக்கே தெரியும். பார்த்தன் ஆதுரத்துடன் 'எனக்கு எப்படித் தெரியும். ஆவலாகிற சமுத்திரத்தில் மூழ்கி இருக்கும் என்னை ஏன் வெளியில் தூக்கமாட்டேனென்கிறீர்கள்?'' என்ருன். அப்பொழுது ஸ்ரீ கிருஷ்ணன்: ''ஏன் அதைரியப்படுகிறாய்? நான் சொல்ல இருந்தேன். நீயே கேட்டுவிட்டாய் இப்பொழுது நான் அதை விவரித்துக் கூறுகிறேன். கேள்''. (10)

शुचौ देशे प्रतिष्ठाप्य स्थिरमासनमात्मनः ।
नात्युच्छ्रितं नातिनीचं चैलाजिनकुशोत्तरम् ॥ ११ ॥

சுசௌ தேசே ப்ரதிஷ்டாப்ய ஸ்திரமாஸநமாத்மந: ।
நாத்யுச்ரிதம் நாதிநீசம் சைலாஜிநகுசோத்தரம் ॥

ஆனல் அது அனுபவத்தினுல்தான் உனக்குத் தெரியவரும். ஒரு ஏகாந்த ஸ்தலத்தைத் தேர்ந்தெடுத்துக்கொள். சாந்தியை விரும்பி அங்கு உட்கார்ந்தாயானல் எழுந்திருக்கவே விருப்பமில்லாமல் இருக்கவேண்டும். அவ்விடத்தைப் பார்க்கும் பொழுது வைராக்யம் இருமடங்கு அதிகமாகவேண்டும். அந்த இடம் சாது மஹாத்மாக்கள் வசித்த இடமாக இருக்க வேண்டும். சந்தோஷத்தையும், தைரியத்தையும் மனதிற்கு உற்சாகத்துடன் ஊட்டவேண்டும். ரமணீயமான அந்த இடம் சாதகனுக்குச் சாதனையைத் தானே கொடுக்கவேண்டும். அதன் அனுபவம் தானே ஹ்ருதயத்தில் ஸ்புரிக்கவேண்டும். அந்த இடத்தின் சமீபமாகச் செல்லும் நாஸ்திகனுக்குக்கூட சிரத்தையால் தபஸ் செய்யவேண்டும் என்ற எண்ணம் உண்டாகவேண்டும். இச்சையை விரும்பியவன் அவ்வழியாகப் போவானுயின் அவ்விச்சையை மறந்து அங்கிருந்து திரும்பும் நினைவே அவனுக்கு இருக்கக்கூடாது. இப்படிப்பட்ட ஒரு இடத்தைத் தேர்ந்தெடுக்கவேண்டும். அதில் புகுந்தவர்களை ஸ்திரமாய் இருக்கச்செய்யவேண்டும். ஊர் சுற்றுபவர்

கனை நிரந்தரமாக இருக்கச்செய்யவேண்டும். தூங்கும் வைராக்யத்தைச் செவிட்டில் அறைந்து விழிக்கச்செய்ய வேண்டும். டம்பத்தில் இச்சையுள்ளவர்களுக்கு இந்த இடத்தைப் பார்த்து ராஜ்யம் கிடைத்தால்கூட அதைத் தியாகம்செய்துவிட்டு சாந்தியுடன் இந்த இடத்தில் ஏன் உட்காரக்கூடாது என்று தோன்றவேண்டும்.

ப்ரும்ம சொரூபம் பார்த்த உடனேயே கண்களுக்குத் தோன்றும்படியாக அத்தனை உத்தமமாகவும் நிர்மலமாகவும் தோன்ற வேண்டும். ஒரு விஷயம் முக்கியமாக கவனிக்க வேண்டும். அவ்விடம் சாதகர்களால் சாதனை செய்யப்பட்ட இடமாக இருக்கவேண்டும். சாதாரண ஜனங்களின் பாத தூளியினுல் மலினமாகாமல் இருக்கவேண்டும். அங்கு வேரிலிருந்தே இனிக்கும்படியான எப்பொழுதும் பழத்தைக் கொடுக்கும் படியான விருக்ஷங்கள் அடங்கினதாக இருக்க வேண்டும். ஒவ்வொரு அடிக்கு ஒவ்வொரு நீர் ஊற்று இருக்க வேண்டும். அவைகள் மழைகாலம் தவிற மற்ற காலங்களில் நிர்மலமாக இருக்கவேண்டும். வெயில் உரைக்கவேகூடாது. சீதளமான மந்தமாருதம் ஒலிக்காமல் மெள்ளமெள்ள வீசிக் கொண்டே இருக்கவேண்டும். சப்தமே கேட்கக்கூடாது. ஒரு காட்டைப் போன்று அடர்த்தியாக இருக்கவேண்டும். நாய் கள் அங்கு உள்ளே நுழையக்கூடாது. கிளிகளும், வண்டு களும் கூட இருக்கக்கூடாது. நீர் ஊற்றுகளில் ஹம்ஸங்களும் ஸாரஸங்களும் நீந்திக்கொண்டிருக்க வேண்டும். சில சில சமயங்கள் குயில்கள் வேண்டுமானுல் கூவலாம். எப்பொழுதும் கூடாது. இரண்டொரு மயில்கள் வேண்டுமானுல் வந்து போகலாம். நான் வேண்டாமென்று கூறவில்லை. ஆனுல் இப்பேர்பட்ட ஒரு இடம் அவசியம் தேர்ந்தெடுக்க வேண்டும். அங்கு ஒரு மடம் அல்லது சிவாலயம் இருக்கவேண்டும். அவை இரண்டில் ஏதாவது ஒன்றில் எங்கு போனுல் சித்தம் ஆனந்தம் அடையுமோ, அங்கு அடிக்கடி போய் ஏகாந்தமாய் உட்காரவேண்டும். தாத்பர்யம் என்னவென்ருல் இப்படி ஓர் இடத்தைத் தேர்ந்தெடுத்து அங்கு உட்கார்ந்து மனது சாந்தியடைகிறதா என்று பார்க்கவேண்டும். அவ்விடம் மனதிற்குச் சாந்தமாக இருக்குமானுல் இனி ஆஸனத்தைப் பற்றி சொல்கிறேன். அடியில் மிகவும் மிருதுவான தர்ப்பைப் புல்களைப் பரப்பவேண்டும். அதன்மேல் அழகான மிருதுவான மான்தோலை விரிக்கவேண்டும். அதன்மேல் தூய

மெல்லிய வஸ்திரத்தை மடித்துப்போடவேண்டும். இம்மூன்றும் ஒரே ஆசானத்தைப் போல் ஒன்றுடன் ஒன்று இணையவேண்டும். ஆஸனம் உயரமானதாக இருக்கக்கூடாது. இருந்தால் சரீரம் அசையும். தாழ்ந்திருந்தால் பூமி ஸ்பர்ச தோஷம் ஏற்படும். மேற்கூறியவாறு ஆசனம் சமமாக இருக்க வேண்டும். (11)

तत्रैकाग्रं मनः कृत्वा यतचित्तेन्द्रियक्रियः ।
उपविश्यासने युञ्ज्याद्योगमात्मविशुद्धये ॥ १२ ॥

தத்ரைகாக்ரம் மந: க்ருத்வா யதசித்தேந்த்ரியக்ரிய: ।
உபவிச்யாஸநே யுஞ்ஜ்யாத் யோகமாத்மவிசுத்தயே ॥

பிறகு சாதகன் ஏகாக்ர சித்தத்துடன் அதில் உட்கார்ந்து ஸத்குருவை ஸ்மரிக்கவேண்டும். அத்யந்தப் பிரேமையுடன் குருவை நினைக்கும்பொழுதே அகக்கரணங்களும் புறக்கரணங்களும் ஸாத்விக பாவத்தினுல் நிரம்பியிருக்கவேண்டும். அஹம் பாவத்தை வேருடன் களையவேண்டும். விஷயங்களை மறக்க வேண்டும். ஹ்ருதயத்தில் விரிந்துகிடக்கும் மனமாகிற வஸ்திரத்தை மடித்துவைக்கவேண்டும். இப்படிப்பட்ட மனோநிரோதம் ஏற்படும்வரை குருஸ்மரணமே போதுமானது. இவ்வித அனுபவத்துடன் ஆஸனத்தில் உட்காரவேண்டும். அச்சமயம் மனோபாவம் எப்படியிருக்கவேண்டுமென்றுல் சரீரம் சரீரத்தை சமாளித்துக்கொள்ளட்டும். பிராணன்கள் பிராணன்களுடன் ஐக்யமாகட்டும். ப்ரவ்ருத்திகள் நம்மை விட்டு எங்கேனும் செல்லட்டும். சமாதி இதோ வந்துவிட்டது என்று தோன்றவேண்டும். ஆஸனத்தில் உட்கார்ந்ததும் எல்லா அப்யாசங்களும் தானுகவே வந்ததாகக் கொள்ள வேண்டும். ஆஸனத்திற்கு இத்தனை மகிமை இருக்கிறது.

இப்பொழுது ஆஸனத்தின் விதியைப்பற்றிக் கூறுகிறேன். கேள். துடையுடன் ஆடுசதை இணையவேண்டும். உள்ளங்கால் வளைத்து குதஸ்தானத்தை நன்ருக அமுத்தவேண்டும். வலது காலை மடித்துவைத்து அதனுல் ஆண்குறியிலிருந்து குத ஸ்தானம் வரை உள்ள ரேகையை நன்ருக அமுக்கவேண்டும். இப்படிச் செய்வதால் இடது கால் தானுகவே உயர்ந்துவிடும். குதத்திற்கும் குறிக்கும் மத்தியில் நாலுங்குலமுள்ள இடத்தில் இரண்டு பக்கமும் ஒன்றரை அங்குலம் வீதம் விட்டு விட்டு

மத்தியிலுள்ள ஓர் அங்குலத்தில் குதியங்காலால் மேல்பக்கமாக அழுத்தவேண்டும். அப்பொழுது சரீரம் ஸ்திரமாக இருக்கும். அடிவயிற்றை மேல்நோக்கித் தூக்குவதாகப் பாவனை செய்ய வேண்டும். அதாவது வயிறு எழும்பியும் எழும்பாமலும் இருக்க வேண்டும். இரண்டு முழங்கால்களும் சம அளவில் இருக்க வேண்டும். அப்பொழுது சரீரமாகிய கூடு குதியங்காலி லிருந்து நெற்றி வரை ஒரே சமமாக இருக்கும். மூலபந்தனம் செய்வது என்று இதையே சொல்கிறார்கள். இதை வஜ்ராஸனம் என்றும் கூறுவார்கள். இவ்வாறு மூலாதார பந்தனம் சித்தியாகிவிட்டால் அபான வாயுவின் அதோ மார்க்கம் தடைபட்டுவிடும். அப்பொழுது அந்த வாயு உள்ளுக்குள்ளேயே குறுகிய இடத்தில் தடைபட்டுவிடும். (12)

समं कायशिरोग्रीवं धारयन्नचलं स्थिरः ।
संप्रेक्ष्य नासिकाऽग्रं स्वं दिशश्चानवलोकयन् ॥ १३ ॥

ஸமம் காய சிரோக்ரீவம் தாரயந்நசலம் ஸ்திர: ।
ஸம்ப்ரேக்ஷ்ய நாஸிகாக்ரம் ஸ்வம் திசஸ்சா-
நவலோகயன் ॥

கையை த்ரோணமென்னும் யாக அகப்பையைப் போன்று எளிதாக இடது காலின் மேல் வைக்க வேண்டும். பாஹு மூலங்கள் விரிந்து தோன்ற வேண்டும். நடுவில் சரீரம் கம்பைப்போல் ஸ்திரமாக இருப்பதால் சிரக்கமலம் உள்பக்கம் அமுங்கி இருப்பதைப்போல் தோன்றும். கண்களின் கவாடம் போன்ற இமைகள் மூடியிருக்க வேண்டும். மேல் இமைகள் அசையக்கூடாது. எத்தனை முடியுமோ அத்தனை கீழே தாழ்ந் திருக்கவேண்டும். கண்கள் அரைக்கண் பார்வையில் திறந் திருக்கவேண்டும். அப்பொழுது உள்நாட்டம் ஏற்பட்டு ஆவலால் வெளிப்பக்கம் பார்க்கவேண்டும் என்று தோன்றினால் மூக்கு நுனி மட்டும் காணப்படவேண்டும். ஆனால் இது பார்வையல்ல. உள்நாட்டம் உள்ளுக்குள்ளேயேதான் இருக்கும். ஆனால் அர்த்த திருஷ்டி மூக்கு நுனியைப் பார்ப்பது போல் இருக்கும். அப்பொழுது நான்கு பக்கமும் அலைந்து பார்க்கும் நாட்டமும் புருவங்களைப் பார்க்க வேண்டுமென்ற இச்சையும் தானே அடங்கி விடும். அப்பொழுது தொண்டை உலரும். முகவாய் கழுத்திற்குக் கீழிருக்கும் பள்ளத்தில் புல

மாக அழுங்குவதால் ஹ்ருதயம் அழுக்கப்படும். கழுத்திலிருக்கும் கண்டமணி தெரியாது இவ்விதம் செய்யும் பந்தனத்தை ஜாலந்தர யோகம் என்று சொல்கிறார்கள். தொப்புள் மேலே எழும்பும். வயிறு உள்ளே அழுதங்கும். இதனால் ஹ்ருதயகமலம் விகஸிக்கும். இவ்விதமாக நாபியின் கீழ் ஸ்வாதிஷ்டாண சக்கரத்தின் மேலே பந்தனமாகும்பொழுது அதை உட்யான பந்தனமென்கிறார்கள். சரீரத்தின் வெளியங்கங்கள் இம்மாதிரி அப்பியஸிக்கப்படும் பொழுது மனோதர்மம் தானாகவே அழிந்துவிடும். (13)

प्रशान्तात्मा विगतभीर्ब्रह्मचारिव्रते स्थितः ।
मनः संयम्य मच्चित्तो युक्त आसीत मत्परः ॥ १४ ॥

ப்ரசாந்தாத்மா விகதபீர் ப்ரஹ்மசாரி வ்ரதே ஸ்திதः ।
மநः ஸம்யம்ய மச்சித்தோ யுக்த ஆஸீத மத்பர: ॥

கற்பனை மறைந்து விடும். செய்கைகள் அடங்கும். சரீரமும் மனோபாவமும் இளைப்பாறும். பசி என்னாயிற்று? நித்திரை எங்கு போயிற்று என்பது மறந்து விடும். ஸ்மரண சக்தி குறையும். அபான வாயுவை மூலபந்தனத்தினால் கட்டுப்படுத்தினவுடன் ஒரே அடியாக மறுபுறம் திரும்பிச் சுருங்கும். பிறகு விரியும். சந்தர்பத்தினால் உன் மத்தமாகும். இஷ்டப்படி கர்ஜிக்கும். சற்றைக்கொருதரம் மணிபூரகத்தில் மோதும். புயல் மாதிரியான இந்த வேகம் சாந்தமானவுடன் அது வயிற்றில் பரவும். அழுகிப் போன மரத்தைப்போல வயிறு அதை வெளியில் தள்ளும். அது உள்ளே மாத்திரம் சுற்றிக் கொண்டிருக்காது. சரீரமாகிற மாளிகை பூராவும் சஞ்சரிக்கும். கபத்தையும் பித்தத்தையும் இருக்கவிடாது. தாதுக்களாகிற சமுத்திரத்தைக் கலக்கும். மேதஸ் என்ற பர்வதத்தைப் பிளக்கும். நரம்புகளில் பிணைந்து இருக்கும் கொழுப்புகளை வெளியில் எறியும். நாடிகளைச் சிக்கலில் இருந்து விடுவிக்கும். சரீரத்தைத் தளரவைக்கும். இவ்விதமாக அபானவாயு சாதகர்களை பயமுறுத்தும். ஆனால் இதற்காக பயப்படவேண்டாம். இது வியாதியை வெளிப்படுத்தும் ஆனால் உடனேயே நாசப்படுத்தும் ஜலதத்வத்தையும், பிருத்வி தத்வத்தையும் சுத்தப்படுத்தும். இதன்மத்தியில் ஒரே ஆஸனத்தில் இருப்பதால் உள்ள உஷ்ணத்தினால் குண்டலினி என்னும்

சக்தி விழிப்படையும். ஒரு சிறு நாகம் குங்குமத்தில் ஸ்நானம் செய்தது போன்ற இந்தக் குண்டலினி சக்தி தூங்கிக்கொண்டு இருக்கும். மூன்றரை சுற்று வட்டத்தில் முகத்தை மத்தியில் புதைத்துப் பாம்புபோல் தூங்கும் மின்னலரல் செய்த கங்கணத்தைப் போலவும், தீ நாக்கின் சுழியைப் போலவும், உருக்கிய தங்கத்தைப் போலவும், அக்குண்டலினி மிகவும் சிறிய அளவில் நன்ருகச் சுற்றப்பட்டு இருக்கும். மிகவும் சிறிய அளவில் அடங்கி இருக்கும். அது இந்த வஜ்ராஸனத்தால் விழிப்படையும். அது எப்படியிருக்கும் என்ருல் நக்ஷத்திரம் பெயர்ந்ததைப் போலவும், சூரியனின் இருப்பிடம் நகர்ந்ததைப் போலவும், ஒளியின் வெள்ளத்தில் மின்னலின் முளை எழுந்தது போலவும் இந்த சக்தி சுருண்டு கிடந்ததை விட்டுக் கொட்டாவி விட்டுக்கொண்டு தலையைத் தூக்கும். எழுந்ததும் நேராக நாபிஸ்தானத்தில் காணப் படும். ரொம்பநாளாக இது பசியினுல் உறங்கிக்கொண்டு இருந்தது. இப்பொழுது பலவந்தமாக எழுப்பின கோபம் சேர்ந்தது. அதனுல் அது ஆவேசத்துடன் நேராக மேல் பக்கம் நோக்கி முகத்தை வைத்துக்கொண்டு கிளம்புகிறது. ஹே கிரீடி, ஹ்ருதயகமலத்தின் கீழே எந்தப் பிராணவாயு கிளம்பியிருக்கிறதோ, அதைஒரேயடியாக சாப்பிட்டுவிடுகிறது. மேலும் கீழுமாக தீ நாக்குகளை நீட்டி மாமிசத்தைச் சாப்பிடு கிறது. எந்தெந்த இடங்களில் மாமிசபிண்டங்களாக இருக் கிறதோ அவைகளை எல்லாம் சாப்பிட்டுவிடுகிறது. ஹ்ருதயத் திலும் வாயை வைத்து ஒன்றிரண்டு கவளங்களை சாப்பிட்டு விடுகிறது. பிறகு உள்ளங்கால்களையும், உள்ளங்கைகளையும் பேதிக்கிறது. இவ்விதமாக அது ஒவ்வொரு அவயவத்தின் கிரந்திகளையும் தேடிச் செல்கிறது. கீழ்பாகத்தையும் விட்டு விடுவதில்லை. நகங்களின சத்தையும் சாப்பிட்டுவிடுகிறது. தோலை நன்ருக சுத்தப்படுத்தி எலும்புக்கூட்டோடு ஒட்டச் செய்கிறது. எலும்புக் குழாய்களின் உள்ளிருக்கும் ரஸத்தை சாப்பிட்டுவிடுகிறது. நரம்பு வலைகளை அலசிவிடுகிறது. சரீரத்தின்மேலிருக்கும் ரோமங்கள் வளர்வதை நிறுத்திவிடு கிறது. பிறகு பேய்தாகம் கொண்ட அந்தக் குண்டலினி சப்த தாதுக்களைக் கொண்ட சமுத்திரங்களை ஒரு துளியாக்கிக் குடித்துவிடுகிறது. அதனுல் சரீரத்தின் ஒவ்வொரு பாகமும் உலர்ந்துவிடுகிறது. நாசித்துவாரத்தின் வழியாக பனிரெண்டு அங்குலம் வரை வெளியில் செல்லும் மூச்சை உள்ளுக்கிழுத்து

விடுகிறது. அப்பொழுது கீழிருக்கும் வாயு உயரே செல்கிறது மேலிருக்கும் வாயு கீழே வருகிறது. இப்படி இரண்டு வாயுக்களும் ஒன்று சேரும்பொழுது ஆறு சக்கரங்களின் பற்கள் மாத்திரமே மிஞ்சி நிற்கிறது, ஏற்கனவேயே இந்த இரண்டு வாயுக்களும் குண்டலினி கிளம்பும்பொழுதே சேரவேண்டியது தான். ஆனால் குண்டலினி கோபமடைந்து உங்களுக்கு இங்கு என்ன வேலை என்று அதட்டுவதுபோல் அவை ஓடி விடுகின்றன இந்த விதமாக அது சரீரத்திலுள்ள பிருதவி சம்பந்தமான தாதுக்களைக் கொஞ்சமும் இல்லாமல் சாப்பிட்டு விடுகிறது. ஜலதத்வத்தையும் சுத்தமாக துடைத்து விடுகிறது. இந்த விதமாக இந்த இரண்டு மஹாபூதங்களையும் சாப்பிட்ட பிறகு அதற்கு பூரண திருப்தி ஏற்பட்டு விடுகிறது இதற்குப் பிறகு சுஷும்னு என்ற பெயருள்ள நாடிக்குப் பக்கத்தில் சாந்தமாக வந்து நிற்கிறது. இப்பொழுது திருப்தியின் சந்தோஷத்தினால் தன் வாயிலிருக்கும் விஷத்தை உமிழ்கிறது. அதுவே அமிர்தமாகப் பிராண வாயுவிற்கு உயிர் அளிக்கிறது. உள்ளுக்குள் அந்த விஷம் அக்னியைப் போல தகித்தாலும் வெளியில் ஜில்லென்ற சீதளத் தன்மையை உணரலாம். அப்பொழுது இதுவரை கசங்கி உலர்ந்து எழுநத அவயவங்கள் திடமாகத் தோன்றுகின்றன. முதலில் நாடி மார்க்கங்கள் அடைபடுகின்றன. ஒன்பது வாயுக்களின் சலனமும் நின்று விடுகின்றன. அப்பொழுது சரீர தர்மம் நடைபெறுவதில்லை. இப்பொழுது இடை, பிங்களை என்ற நாடிகள் ஒன்று சேருகின்றன, மூன்று கிரந்திகளிலும் முடிச்சு விழுகின்றன. ஆறு சக்கரங்களின் மொட்டுகளும் மலர்கின்றன சந்திரநாடி, சூரியநாடி என்னும் கல்பித வாயுக்கள் விளக்கை வைத்துக்கொண்டு தேடும் ஸ்திதியில் ஆகிவிடுகின்றன. புத்தியின் மலர்ச்சி தடைபடுகின்றது. நாசியினால் முகரும் நல்ல வாசனைகள் குண்டலினியுடன் கூட சுஷும்னு நாடியில் பிரவேசித்து விடுகிறது.

அச்சமயம் மேல்பக்கத்திலிருந்து சந்திராம்ருதம் என்னும் அமுதம் மெல்ல மெல்ல வந்து குண்டலினியின் முகத்தில் விழுகிறது. அதனால் நாடிநரம்புகளில் ரசம் நிரம்பி அது சரீரம் பூராவுமாகப் பரவுகிறது. பிராணவாயுவின் சேர்க்கை பால அங்கே அங்கே உலர்கிறது. அது எப்படி இருக்கிறது என்றால் உருக்கிய மெழுகினால் செய்த சட்டம் மெழுகு உருகின பிறகும் அதிலேயே சட்டத்தின் வடிவாக இருப்பது போல்

இந்த சரீரத்தின் உருவத்தில் அந்த அமிர்தம் காந்தி மயமாகத் திகழ்கிறது. அதன் மேல் தோல் போர்வையால் மூடினதைப்போல இருக்கிறது. சூரியன் மேகருபமான முக்காடிட்டுக் கொண்டு இருக்கிருன். அந்த முக்காடு கலையும் பொழுது தன் தேஜஸுடன் பிரகாசிக்கிருன். அது போல சரீரத்தின் மேலே இருக்கும் தோல் உலர்ந்து அப்பளத்தைப் போல நொறுங்கி விடுகிறது. அப்பொழுது அவயவங்களின் காந்தியின் சோபை ஸ்படிகத்தைப் போல ஒளிர்கிறது. ரத்னமாகிற விதையில் எழும் முளையைப் போல பிரகாசிக்கிறது சந்தியா காலத்தில் ஆகாசத்தின் அருணவர்ணத்தை எடுத்து அதனுல் சரீரத்தை அமைத்ததைப் போல இருக்கிறது. ஆத்ம ஜ்யோதிர் லிங்கத்தை ஸ்வச்சப் படுத்தியதைப் போல இருக்கிறது. சரீரமாகிற கண்ணுடிப் பையில் குங்குமத்தை நிரப்பியதைப் போல இருக்கிறது. மூர்த்தீகரிக்க சாந்தியாக அவன் விளங்குகிருன். ஆனந்தம் என்னும் சித்திரப் பதுமையாக இருக்கிருன். மஹராசுகத்தின் பொம்மையோ, சந்தோஷமாகிற விருக்ஷத்தின் வளர்ச்சியோ, தங்கத்தினுல் ஆன சம்பக புஷ்பமோ, மென்மை யெல்லாம் ஒரு உருவாகத் திரண்ட அமிர்தத்தால் ஆன சிலேயோ, சாத்ருதுவின் ஆர்த்ரத் தன்மையால் சந்திர பிம்பமே தளிர் விட்டிருக்கிறதோ, அல்லது தேஜஸே மூர்த்தீகரித்து ஆஸனத்தில் உட்கார்ந்து இருக்கிறதோ என்றபடி, அதாவது குண்டலினி சந்திராம்ருதத்தைகுடிக்கும் பொழுது, சரீரத்தின் சோபை இவ்வாறு திகழ்கிறது.

யமனும் அந்த தேகாக்ருதியைப் பார்த்து பயப்படுகிருன். முதுமை பின்னுல் நழுவுகிறது யௌவனம் முடிச்சவிழ்ந்து மலர்கிறது. மறைந்துபோன பால பருவம் திரும்பவும் தலை தூக்குகிறது. வயதைக் குறைத்துக் காட்டுகிறது. உண்மையில் அவனுடைய தைரியத்தின் உவமையற்ற மகிமை அதிகமாகிறது. இங்கு பாலகன் என்று சொன்னது பலத்தைக் குறித்துச் சொன்னது. அப்பொழுது சரீரத்தில் புது நகம் முளைக்கிறது. ரத்னம் தளிர்விட்டதைப்போல அவை ஒளிர்கிறது. இரு வரிசையாக வைரத்தைப் பதித்தால்போல் புதுப் பற்கள் முளைக்கின்றன உள்ளங்கைகளும் உள்ளங்கால்களும் ரத்ன கமலத்தைப் போலாகின்றன. கண்களைப் பற்றி வர்ணிக்கவே முடியாது. உங்கள் யூகத்திற்கு விட்டு விடுகிறேன்.

நன்றாகப் பழுத்த முத்து சிப்பியினுள் அடங்காதுபோனால் சிப்பிகள் திறந்தே இருக்குமல்லவா? அதுபோல சாதகனின் கண்மணிகளாகிற முத்துக்கள் இமைகளில் அடங்குவதில்லை. வெளிக்கிளம்பி நான்கு பக்கங்களிலும் ஒளி வீசுகின்றன. கண்கள் பாதி மூடியிருந்தாலும் அவைகளின் ஒளி ஆகாசம் வரை பரவுகிறது. சரீரம் தங்கமயமாய் ஜ்வலிக்கிறது. ஆனால் காற்றைப்போல் லேசாக இருக்கிறது. ஏனெனில் அதில் ப்ருத்வி தத்வமும் ஜல தத்வமும் இல்லை அல்லவா? அவனுக்கு சமுத்திரத்தின் அக்கரை கண்ணுக்குத் தென்படுகிறது. ஸ்வர்க்கத்தினுடைய மந்த ஒலி காதிற்குக் கேட்கிறது. ஒரு சிற்றெறும்பின் மன நிலையையும் அவன் யூகித்தறிகிறான். காற்றிலேறி குதிரை மாதிரி சஞ்சரிக்கிறான். ஜலத்தின்மேல் உள்ளங்கால்கள் நனையாமல் நடக்கிறான். இதைப்போல எத்தனையோ சித்திகள் அவனை வந்தடைகின்றன.

கவனமாய்க் கேள். பிராணனைக் கையைப் பிடித்து இழுத்துக்கொண்டு ஹ்ருதயாகாசத்தை ஏணியாக ஆக்கிக் கொண்டு சுஷும்னா நாடி என்னும் படி வழியாக ஏறி ஹ்ருதயத்தை அடைந்த குண்டலினி ராணி ஜகதம்பா யாரென்றால் அவளே சைதன்யரூபமான சக்ரவர்த்தியின் சோபை. அவள் ஜகத்தின் விதையான ஓம்காரத்தின் அங்குரமான ஜீவனின்மேல் தன் சாயையைப் பரப்புகிறாள். நிராகார ப்ரும்மத்தின் சாகார சரீரமாகிறாள். பரமாத்மாவான சிவலிங்கத்தை வைக்கும் செப்பாகிறாள். அச்சிவனே ஓம்காரத்தின் ஜன்மபூமியன்றோ? வேறு எதை வர்ணிப்பது? வர்ணிக்கவே தெரியவில்லை. இந்தக் குண்டலினி என்னும் பாலையானவள் ஹ்ருதயத்தை அடைந்தவுடன் தானாகவே அநாஹத த்வனி கேட்கத் தொடங்குகிறது. குண்டலினி ஹ்ருதயத்தை அடைந்தவுடன் புத்தியின் சைதன்யம் விழித் தெழுகிறது. இப்புத்தியின் நுட்ப அறிவினால் நாம் அநாஹத சப்தத்தைக் கேட்கிறோம். அந்த த்வனி எப்படியிருக்கிறது என்றால், ஜ்வலிக்கும் அக்னி குண்டத்தில் ஓம்காரத்தின் வடிவிலிருக்கும் தீ நாக்கிற்குச் சப்தமும் இருந்தால் எப்படி இருக்குமோ அப்படியிருக்கும்.

இவ்விஷயங்களைக் கற்பனையால் தான் அறிய முடியும். இங்கு கற்பனை செய்ய யார் இருக்கிறார்கள்? அதனால் இந்த த்வனி எதனால் ஏற்பட்டதென்று அறிய முடியவில்லை. ஒரு

விஷயம் மறந்து விட்டேனே! ஆகாயத்தில் சுற்றும் காற்று நாசமடையாவிட்டால் ஆகாசம் கர்ஜிக்கிறது. அதை அநாஹதமான மேகத்தினால் ஆகாசம் கர்ஜிக்கிறது என்று சொல்லலாம், அப்பொழுது சரீரமாகிற வீட்டில் பிரும்மரந்திரம் என்னும் ஜன்னல் திறக்கப்படுகிறது. அது தாமரையின் நடு பாகத்தின் உருவத்தைப் போலிருக்கிறது. அதுவே மஹதாகாசம். சைதன்யம் அதில் வசிக்கிறது. இந்த ஹ்ருதயரூபமான வீட்டில் குண்டலினியாகிற பரமேஸ்வரி தேஜஸ் ரூபமான நைவேத்யத்தை அர்பணிக்கிருள். புத்திக்கு அவள் இந்த விதமான நைவேத்தியத்தைக் கொடுக்கிருள். இதில் த்வைதம் என்ற வேறுபாடே தெரிவதில்லை.

இப்பொழுது குண்டலினி தன்தேஜஸையும், தேகத்தையும் விட்டு விடுகிருள். பிராண ரூபமாக ஆகிவிடுகிருள். அந்த சமயம் காற்றுரூபமான ஓர் யுவதி தான் மூடிக்கொண்டிருக்கும் தங்கப் போர்வையைக் களைந்தால் எப்படியிருக்கும்? அல்லது தீப ஜோதி வாயுவினுல் அணைந்து வாயுவில் லயமானது போல அல்லது மின்னல் ஒளிவீசி ஆகாசத்திலேயே லயமானது போல இவ்விதம் ஹ்ருதய கமலத்தில் குண்டலினி சக்தியானவள் தங்கமே தீப ஒளியாக ஆறுற்போலவும், ஒளியே ஜலமாக ஆகி ஊற்றெடுப்பது போலவும் ஆகிருள். இவ்வொளி வெள்ளம் ஹ்ருதய பூமியாகிற பள்ளத்தில் ஒரேயடியாக தங்கி விடுகிறது. இவ்விதமாக அந்த சக்தியானவள் தன் சக்தியிலேயே லயமாகிருள். அவளைச் சக்தி என்று சொல்லுங்கள் அல்லது பிராணன் என்றே சொல்லுங்கள். அச்சமயம் நாதமோ, பிந்துவோ கலையோ, ஜோதியோ ஒன்றும் இருப்பதில்லை. அதாவது மனதை வசப்படுத்தினுல் மூச்சின் ஆதாரத்தில் நிலை நிறுத்தல், தியானப்யாசம் செய்தல் ஒன்றுமே இருக்காது. ஒரு எண்ணத்தைக் கல்பிக்கவோ, விடவோ ஒன்றும் முடியாது. இதுவே சுத்தீகரிக்கப்பட்ட மஹா பூதங்களின் நிர்மலமான சொரூபம். பிண்டமே பிண்டத்தை விழுங்குவது என்றதான சம்பிரதாயம் இருக்கிறதே, அதுவே இது. இதையே மஹா விஷ்ணு வர்ணிக்கிருர். இந்த த்வனியாகிற மூட்டையை அவிழ்த்து ஸ்ரோதாக்களை வாங்குபவர்களாகக்கொண்டு வியாபாரியைப் போல நான் சத்யம் என்ற வஸ்திரத்தை மடிப்பை உதறி உதறிக் காட்டுகிறேன்.

युञ्जन्नेवं सदाऽऽत्मानं योगी नियतमानसः ।
शान्तिं निर्वाणपरमां मत्संस्थामधिगच्छति ॥ १५ ॥

யுஞ்ஜந்நேவம் ஸதாऽऽத்மாநம் யோகீ நியதமாநஸ: ।
சாந்திம் நிர்வாணபரமாம் மத்ஸம்ஸ்தாமதிகச்சதி ॥

சக்தியும் தேஜஸும் மறையும்பொழுது தேகத்தின் ரூபமும் மறைந்துவிடும். யோகியின் சரீரம் ஊனக்கண்களினுல் பார்க்கமுடியாத அளவு சிறியதாக இருக்கிறது. யோகியின் சரீரம் என்னவோ முன்போல்தான் இருக்கிறது. ஆனுல் காற்றினுல் ஆக்கப்பட்டதுபோல் அவ்வளவு லேசாக உணர்கிருன். வாழையின் பட்டை உரித்த தண்டைப்போல் அந்தஜே மென்மையாகவும் லேசாகவும் காண்கிருன். ஆகாசத்திற்கு உருவம் அமைத்தால்எப்படியோ அப்படி. அவனுடைய உருவம் லேசாகும்பொழுது அதனைக் கேசர சரீரம் என்கிருர். அவன் சரீரம் இப்படியானவுடன் சாதாரண மனிதனின் கண்களுக்கு ஜ்யோதிர்மயமாகத் தென்படுகிறது. யோகி நடந்துபோகும் பொழுது அவனுடைய ஒவ்வொரு அடித்தளத்திலிருந்தும் அணிமாதி சித்திகள் உற்பத்தியாகின்றன.

அதிருக்கட்டும். தேகம் இருக்கும்பொழுதே தேகத்தில் பிருத்வி, அப்பு, தேயு மூன்றின் செய்கைகளும் மறைகின்றன. இதயத்திலுள்ள பிருத்வி தத்வத்தை ஜலதத்வம் கலக்கிறது. ஜலதத்வத்தை அக்னி உலரவைக்கிறது. அந்த அக்னி தத்வத்தை வாயு தத்வம் அணைத்து விடுகிறது. அப்பொழுது யோகிக்கு வாயு தத்வமே மிஞ்சுகிறது ஆனுல் சரீரத்தின் ஆதாரத்தில் அது இருக்கிறது. சிலகாலம் இவ்விதமிருந்து அச்சரீரம் ஆகாசதத்வத்துடன் கலந்து விடுகிறது. அப்பொழுது குண்டலினி என்ற பெயர் போய் வாயு என்ற பெயரை அடைகிறது. குண்டலினி பிரும்மத்தில் லயமாகும் வரை அதன் சக்தி இருந்துகொண்டுதான் இருக்கும். பிறகு அந்தக் குண்டலினி ஜலந்தர பந்தனத்தை விட்டு விட்டு சுழும்ஞ நாடியில் பிரவேசிக்கிறது. அங்கிருந்து வாயு மார்க்கமாக மேலே கிளம்புகிறது. ஹ்ருதயத்தில் ஓம்கார நாதத்தின் பீடத்தில் காலை வைத்துக்கொண்டு சீக்கிரமாக பஸ்யந்தீ என்ற ஏணிவழியாக ஏறுகின்றது. பிறகு ஸாகரத்தில் நதி கலப்பது போல ஓம்காரத்தின் அர்த்த மாத்திரை வரைக்கும் ஆகாச தத்வத்தின் மூலமாகப் போய்ச் சேருவதை

பார்க்கிறோம். பிறகு ஸ்திரமாக ப்ரும்மரந்திரத்தில் நின்று ஸோஹம்பாவமாகிற புஜங்களை விரித்து ஸஹஸ்ராரத்திலுள்ள பரப்ரும்மத்தை ஆலிங்கனம் செய்துகொள்கிறது.

இச்சமயம் நடுவிலுள்ள ஐந்து மஹா பூதங்களாகிற படுதாக்கள் விலகி கடைசியில் ஆக்ஞா சக்கரத்திலுள்ள மாயை என்னும் படுதாவை விலக்கி பிரும்மத்துடன் போய்ச்சேருகிறது. அந்த ப்ரும்மானந்தத்தில் ஆகாச தத்வத்துடன் சகலமும் லயமாகிவிடும். மேகங்கள் சமுத்திரத்திலிருந்தே ஜலத்தை எடுத்து நதிகளில் பெய்து பிறகு நதி என்ற பெயரில் சமுத்திரத்தில் கலப்பதைப்போல், ப்ரும்மத்திலிருந்தே உண்டான பிண்டசரீரமான ஜீவாத்மா பிரும்மபதமான பரமாத்மாவில் லயமாகிறது. அச்சமயம் பிண்டம் என்று ஒன்று இருந்தது. ஒரே வஸ்து இரண்டாக இருந்து ஒன்ருக ஆயிற்று என்று அறிந்து சொல்பவர் யாரிருக்கிருர்கள்? கடாகாசம் மடாகாசத்தில் லீனமாகிவிடுகிறது. எவனுக்கு இந்த அனுபவம் ஏற்படுகிறதோ, அவனே சித்தபுருஷன். அந்த அனுபவத்தை வாயால் வர்ணிக்கமுடியாது. அப்படியிருக்க, கிராம வம்புபோல் எப்படி எடுத்துக்கொள்வது? இந்த அபிப்ராயத்தை நான் வெளியிட்டுவிடுவேன் என்ற அபிமானம் கொள்ளக்கூடிய வாக்கே அங்கிருக்காது. ஓம் எனும் பீடத்தில் ஹ்ருதயாகாசத்தில் காலை வைத்து அர்த்தமாத்திரையான ஆகாச தத்வத்தை தாண்டும்பொழுது அங்கு ஓம் என்பதில் உள்ள மகாரம்கூட பிரவேசிக்கமுடியாது. பிராண தத்வத்திற்கே அங்கு ஆகாச தத்வத்திற்குப் போக சங்கடம் ஏற்படும். அங்கு சேர்ந்த பிறகு ஆகாச தத்வத்தின் சப்தரூபமும் அஸ்தமித்துவிடும். அதனுல் மஹதாகாசமான தேகத்தில் பூதாகாசத்திற்கே இடமில்லாதபோது சப்தத்திற்கு ஏது இடம்? அதாவது தாத்பர்யம் என்னவென்ருல், அந்த வஸ்துவை நிச்சயமாக சப்தத்தினுல் வர்ணிககமுடியாதுஎன்பது ஸ்பஷ்டம் காதாலும் கேட்க முடியாது. தைவ யோகத்தினுல் உனக்கு சில அனுபவங்கள் ஏற்பட்டால் நீயாகவே அந்தப் பொருளாகி விடுவாய். அதன்பிறகு அறிவதற்கு ஒன்றும் இருக்காது.

இவ்விஷயம் இருக்கட்டும். இப்படிச் சப்தம் பின்தங்கி விடும்பொழுது சங்கல்பமும் முடிந்துவிடுகிறது. பிறகு எண்ணமாகிற காற்றலைகளும் அங்கு பிரவேசிக்க முடியாது. அதுவே உன்மனி அவஸ்தையின் சோபை. துரீயாதீதத்தின்

தாருண்யம். யூகிக்கக்கூட முடியாத அநாதி பரமதத்வம் விஸ்வத்தின் மூலாதாரம். யோக விருக்ஷத்தின் பழம். ஆனந்தத்தின் ஜீவாதாரம் உருவத்தின் எல்லை. மோக்ஷத்தின் ஏகாந்த இடம். ஆதி அந்தமற்ற நிலை. மஹாபூதங்களுக்கும் விதை. மஹாதேஜஸிற்கும் தேஜஸ் அப்பிரும்ம தத்வமே என் நிஜஸ்வரூபம். அதுவே இந்த சதுர்புஜ ரூபமாக வெளியில் தெரிகிறது. இவ்வுருவம் சில சில சமயமே வெளியில் காண்பிக்கப்படும். அதாவது என் பக்த சமுதாயத்தை நாஸ்திகர்களின் கபட தந்திரம் ஏமாற்றும்பொழுது இச்சதுர்புஜ ரூபம் ஆவிர்பவிக்கப்படுகிறது. பிரும்மதத்வத்தை அடையும் மஹாசுகம் அநிர்வசனீயம். அதை அடையும்வரை எந்த சாதகனுக்கும் தம் சாதனமாகிய வழியிருக்கிறது. அந்த எல்லைவரை உள்ள பிரும்ம ஸுகஸ்வரூபமே என்னால் கூறப் பட்டது.

இந்த சாதனத்தை, இந்தச் சரீரத்திலேயே அனுஷ்டிக் கிறவன் நிர்மலனாகி எனக்குச் சமானமான யோக்யதையைப் பெறுகிறான். அவனுடைய சரீரம் பரப்ரும்ம ரூபமான ரஸத்தை உருக்கி தேகாக்ருதி ரூபமான வார்ப்படத்தில்வார்த்தது போல் இருக்கும். இந்த அனுபவம் ஹ்ருதயத்தில் பிரகாசிக்கும்போது அவனைப் பொருத்து சம்பூர்ண விச்வம் லயமாகிவிடும்.

அப்பொழுது அர்ஜுனன் கூறுவான்: — ஹே தேவா, உண்மை. தாங்கள் ப்ரும்மப்ராப்திக்கு எந்த வழி காண்பித்தீர் களோ அதைத் தவிர வேறு இல்லை. திடமாக இந்த மார்க்கத்தை அப்யசிக்கிறவர்கள் நிச்சயமாக ப்ரும்மத்தை அடைகிறார்கள் என்று தாங்கள் சொன்னதை நான் நன்றாக அறிந்துகொண்டேன். ஹே தேவ, இந்த வர்ணனையைக் கேட்டபொழுதே சித்தத்தில் ஞானம் பொங்கி வழிகிறதே. இதை அனுபவத்தில் கொண்டு வரும்பொழுது அந்த ரூபமாக ஏன் ஆகமாட்டோம்! இது முற்றும் உண்மை. ஆனால் ஒரு நிமிஷம் நான் கூறுவதைக் காது கொடுத்துக் கேளுங்கள். ஹே கிருஷ்ணா, இதுவரை தாங்கள் எந்த யோகத்தை நிருபணம் செய்து காட்டினீர்களோ, அதை நன்றாக மனதில் ஸ்வீகரித்துக் கொண்டேன். ஆனால் அதை அப்யசிக்கும் யோக்யதை என் மனதில் இருப்பதாக நான் சற்றும் கருத வில்லை. எனக்குள்ள இயற்கையான சரீரபலத்தாலும், அற்ப மேதையாலும் இந்த யோகத்தை என்னால் அனுஷ்டிக்க

முடியுமானால் ஆனந்தமாக நான் இந்த மார்க்கத்தை அப்பியாசம் செய்வேன். அதனால் நீங்கள் கூறிய இந்த யோகத்தை என்னால் அநுஷ்டிக்க முடியாவிட்டால் என் சக்தியைப் பொருத்து, என் யோக்யதையைப் பொருத்து ஒரு யோகம் உண்டானால் அதைத் தங்களிடம் கேட்க விழைகிறேன். அதனால் நான் தங்களைக் கேட்கிறேன். தயவுசெய்து கூறுங்கள். தங்கள் யோக நிருபணத்தைக் கேட்டேன். அறிந்தேன். சரியானபடி அப்யசித்தால் அதை யாரும் அடைமுடியும் என்றிருந்தேன். ஆனால் அதற்குரிய சரீர பலமும் யேக்யதையும் இல்லாமல் அதை அடையமுடியுமா?

அப்பொழுது கிருஷ்ணன் கூறுவார் :— 'ஹே தனுர்தரா, நீ என்ன கேட்கிறாய்? அதிகாரத்தின் சகாயம் இல்லாமல, அதாவது யோக்யதையின் சகாயம் இல்லாமல் ஒரு காரியமும் முடியாது. அப்படியிருக்கும்பொழுது இது மோக்ஷ விஷயம். அதாவது இந்த யோக்யதை எனபது நாம் அடையக்கூடிய விஷயம். நாம் பெறும் ஆதீனத்திற்குள்ளேயே இருக்கிறது. பலன் ஏற்படக்கூடிய ஒரு கார்யத்தைச் செய்தால அதன் பலனை நம் யோக்யதையினால்தான் அடைந்தோம் என அறிகிறோம். அதுவும் இநத மார்க்கத்தில் ஒரு பொருளும் எளிதாகக் கிடைக்கக்கூடியதில்லே. ஆனால் நீ யோகயதை யோக்யதை என்கிறாயே, யோக்யதை என்று ஒரு சுரங்கமா இருக்கிறது அதிலிருந்து எடுத்துக்கொள்ள? க்ஷணநேரத்தில் விரக்தனாகி தர்ம விஹிதமான கார்யங்களைச் செய்வதில் சக்தனாகும்பொழுது அவனை அதிகாரி என்று கூறமுடியாதா? இந்தக் கணக்குப்படி உனக்கு அந்த யோக்யதை இருக்கிறது.' இவ்விதமாகக் கிருஷ்ணன் அர்ஜுனனின் சந்தேகத்தைப் போக்கினான். தர்ம விஹிதமான, ஒழுங்கான மார்க்கத்தில் போகிறவனுக்கு யோக்யதை இருக்கத்தான் செய்கிறது. ஒழுங்கீனமான மனிதனுக்கு ஒருபோதும் யோக்யதை ஏற்படாது. (15)

नात्यश्नतस्तु योगोऽस्ति न चैकान्तमनश्नतः ।
न चातिस्वप्नशीलस्य जाग्रतो नैव चार्जुन ॥ १६ ॥

நாத்யச்நதஸ்து யோகோऽஸ்தி ந சைகாந்தமநச்நத: ।
ந சாதி ஸ்வப்நசீலஸ்ய ஜாக்ரதோ நைவ சார்ஜுன ॥

நாக்கு ருசிக்கு அடிமைப்பட்டவனும், நித்திரை வசப் பட்டவனும், ஆலஸ்யமுள்ளவனும் இந்த விஷயத்திற்கு அதிகாரியாக மாட்டான். அடம் பிடித்து வேண்டுமென்றே பசி, தாகத்தைக் கட்டுப்படுத்துபவனும், நித்திரை வழிக்கே போகாதவனும் இப்படிப் பிடிவாதமாகச் சரீரத்தை கட்டுப் படுத்துவதால் இச்சரீரம் இயற்கையாகவே அவனுக்குக் கட்டுப்படவில்லை என்பது அர்த்தம். பிறகு யோகம் எப்படி அவனுக்குக் கட்டுப்படும்? அதனால் விஷய வாசனைகளை நன்றாக அனுபவிக்கவேண்டும் என்றும் இருக்கக்கூடாது. அவைகளை முற்றிலும் கட்டுப்படுத்தவேண்டும் என்றும் இருக்கக்கூடாது. (16)

युक्ताहारविहारस्य युक्तचेष्टस्य कर्मसु ।
युक्तस्वप्नावबोधस्य योगो भवति दुःखहा ॥ १७ ॥

யுக்தாஹார விஹாரஸ்ய யுக்தசேஷ்டஸ்ய கர்மஸு ।
யுக்த ஸ்வப்நாவபோதஸ்ய யோகோ பவதி து:கஹா ॥

யுக்தமான ஆகாரவிஹாரங்களைச் செய்யவும் வேண்டும். யுக்தியினால் அதை அளவுடன் நிறுத்தவும்வேண்டும். மற்றக் கர்மங்களையும் இதே விதமாகக் கட்டுப்படுத்தவேண்டும். அளந்து பேசவேண்டும். நிதானமாக நடக்கவேண்டும். நித்திரைக்கும் மானமரியாதை கொடுத்துப் போதுமான அளவு தூங்கவேண்டும். விழிப்பையும் அளவுபடுத்தவேண்டும். இப்படிச் செய்வதனால் கப வாத பித்த தாதுக்கள் சமநிலையில் இருக்கும். சரீரமும் ஸுகமாயிருக்கும். இந்தமாதிரியாக இந்திரியங்களை மிதமாகக் கட்டுப்படுத்தினால் மனம் சந்தோஷமாக இருக்கும். (17)

यदा विनियतं चित्तमात्मन्येवावतिष्ठते ।
निःस्पृहः सर्वकामेभ्यो युक्त इत्युच्यते तदा ॥ १८ ॥

யதா விநியதம் சித்தம் ஆத்மந்யேவாவதிஷ்டதே ।
நி:ஸ்ப்ருஹ: ஸர்வகாமேப்யோ யுக்த இத்யுச்யதே ததா॥

யோக விஷயமாக வெளி வியவகாரங்களைக் கட்டுப் படுத்திவிட்டால் உள் விவகாரம் சுகமாக இருக்கும். சிரமமான அப்யாசமில்லாமலே யோகம் சித்திக்கும். நம்முடைய பாக்ய லக்ஷ்மி விழித்தெழுந்தால் நம் சிறு முயற்சியும்

திருவினையாகி ஸகல ஸம்பத்தும் வீட்டில் வந்தடையும். யுக்திமானும் புத்திமானுமான மனிதன் குதூகலத்துடனும் விடாமுயற்சியுடனும் அப்யசிப்பானாகில் அவனுடைய அனுபவம் ஆத்ம ஸித்தியான பலனை அளிக்கும். அதனால் ஹே பாண்டவா, எந்த பாக்யவானுக்கு இந்த யுக்தி தோன்றுகிறதோ, அவன் மோக்ஷ ஸிம்மாஸனத்தில் அமருகிருன். (18)

यथा दीपो निवातस्थो नेङ्गते सोपमा स्मृता ।
योगिनो यतचित्तस्य युञ्जतो योगमात्मनः ॥ १९ ॥

யதா தீபோ நிவாதஸ்தோ நேங்கதே ஸோபமா ஸ்ம்ருதா ।
யோகிநோ யதசித்தஸ்ய யுஞ்ஜதோ யோகமாத்மந: ॥

இந்த யுக்தியும் யோகமும் சேர்ந்து எங்கு பிரயோகமாகிறதோ அவனுடைய மனம் தடஸ்தமாகி இருந்த நிலையிலேயே க்ஷேத்ர ஸந்யாசத்தை அவன் பெறுகிருன். அவனை யோக யுக்தனுக அறி. காற்றில்லாத இடத்தில் தீபத்தைப் போல அவன் பிரகாசிக்கிருன். இப்பொழுது உன் மனதிற்குப் பொருத்தமான ஒரு விஷயத்தைக் கூறுகிறேன். கேள். நன்ருக கவனித்துக் கேள். நீ யோகப் பிராப்தியை இச்சிக்கிருய் ஆனல் அப்யாசத்திற்குப் பயப்படுகிருய் யோகத்தின் கடினத்தைக்கண்டு இவ்விதம் பயப்படுகிருயா? மனத்திலிருந்து பயத்தைத் தூர விலக்கு. இந்த துஷ்ட இந்திரியங்கள் வீணுக பயத்தை உண்டாக்குகின்றன. ஆயுளை ஸ்திரமாக்கிப் போய்க்கொண்டிருக்கும் உயிரையும் பிடித்து வைக்கும் ஒரு அரு மருந்தை அதன் கசப்பின் காரணமாக நாக்கு தன் வைரியாகக் கருதவில்லையா? அதுபோல ஆத்மாவிற்கு மங்களத்தைக்கொடுக்கும் ஸகல விஷயங்களும் இந்திரியங்களுக்குத் துக்கத்தைத்தான் கொடுக்கும். இல்லாவிட்டால் யோகத்தைப்போல் ஸுலபமானது எது? (19)

यत्रोपरमते चित्तं निरुद्धं योगसेवया ।
यत्र चैवात्मनाऽऽत्मानं पश्यन्नात्मनि तुष्यति ॥ २० ॥

सुखमात्यन्तिकं यत्तद् बुद्धिग्राह्यमतीन्द्रियम् ।
वेत्ति यत्र न चैवायं स्थितश्चलति तत्त्वतः ॥ २१ ॥

யத்ரோபரமதே சித்தம் நிருத்தம் யோகஸேவயா ।
யத்ர சைவாத்மநாத்மாநம் பச்யந்நாத்மநி துஷ்யதி ॥

ஸுகமாத்யந்திகம் யத்தத்புத்திக்ராஹ்யமதீந்த்ரியம் ।
வேத்தி யத்ர ந சைவாயம் ஸ்திதச் சலதி தத்வதः ॥

அதனால் நாம் ஸ்திரமான ஆஸனத்தில் இருந்து எந்த உத்தமமான அப்யாஸத்தைக் கூறி வந்தேனோ அதனால் உன்னுடைய இந்திரியங்களை அடக்க உன்னால் கட்டாயம் முடியும். சாதாரணமாக இந்த யோகத்தால் இந்திரிய நிக்ரஹம் ஏற்படத்தான் செய்கிறது. உடனேயே சித்தம் ஆத்ம ஸ்வரூபத்தை ஸந்திக்கத் தயாராகிறது. இந்த ரீதியில் சித்தம் திரும்பி தன்னைத் தானே பார்த்துக் கொள்கிறது. பார்த்துக்கொண்ட உடனேயே இத்தனை காலமாக நாம் தேடி வந்த பிரும்மதத்வம் நாமே என அறிகிறது. இப்படி அறிந்து கொண்டதும் ஸுக ஸாம்ராஜ்யத்தில் ஸஞ்சரிக்கிறது. தனது ஒருமையில் தானே லயமாகிறது. எதற்கப்பால் ஒன்றும் இல்லையோ எதை இந்திரியங்களால் எட்ட முடியாதோ அவ் வஸ்துவாகத் தன்னையே அவன் அறிகிறான். (20-21)

यं लब्ध्वा चापरं लाभं मन्यते नाधिकं ततः ।
यस्मिन्स्थितो न दुःखेन गुरुणाऽपि विचाल्यते ॥ २२ ॥

யம் லப்த்வா சாபரம் லாபம் மந்யதே நாதிகம் ததः ।
யஸ்மிந்ஸ்திதோ ந துःகேந குருணாபி விசால்யதே ॥

அப்படிச் சித்த லயமானவனுக்கு மேரு மலையைவிட பெரிய துக்கம் வந்து அவனை அழுத்தினாலும் அந்த பாரத்தினால் அவன் மனம் அழுந்தாது. ஆயுதங்களால் அவன் தேகத்தை வெட்டினாலும், அக்கினியினால் எரிக்கப்பட்டாலும் இந்த மஹாசுகத்தில் தூங்கும் அவன் சித்தம் விழித்துக் கொள்ளாது. அவன் தனக்குள் பிரவேசித்துத் தானே ஆகிறான். அவன் தேகத்தின் உதவியை ஒன்றுக்கும் எதிர்பார்ப்பதில்லை தேகத்தைவிட பெரிதான ஒரு சுகத்தில் ஈடுபட்டிருக்கும் அவன் தேகத்தையே மறந்து விடுகிறான். (22)

तं विद्याद् दुःखसंयोगवियोगं योगसंज्ञितम् ।
स निश्चयेन योक्तव्यो योगोऽनिर्विण्णचेतसा ॥ २३ ॥

தம் வித்யாத் துக்க ஸம்யோக வியோகம் யோக
ஸம்ஜ்ஞிதம் ।
ஸ நிஸ்சயேந யோக்தவ்யோ யோகோऽநிர்விண்ண
சேதஸா ॥

எந்த சுகத்தின் இனிமையில் மனம் தேக ஸுகத்தின் ஸ்மரணையை மறந்து விடுகிறதோ ஸம்ஸார சிக்கல்களை அறுத்து எறிகிறதோ, எந்த ஸுகம் யோகத்தின் ப்ரபையோ ஸந்தோஷத்தின் ராஜ்யமோ, எந்த ஸுகத்திற்காக ஞாத்ரு, ஞானம், ஞேயம் ஆகிய த்ரிபுடி ஒன்று சேர்கிறதோ, அந்த ஸுகம் மேற்கூறிய யோகத்தை அப்யஸிப்பதால் அகக் கண்ணின் முன்னால் மூர்த்தீகரித்துக் காணப்படுகிறது. அதைக் கண்டதும் யோகி அதில் லயமாகிவிடுகிறான். (23)

संकल्पप्रभवान्कामांस्त्यक्त्वा सर्वानशेषतः ।
मनसैवेन्द्रियग्रामं विनियम्य समन्ततः ॥ २४ ॥

ஸங்கல்ப ப்ரபவான் காமான் த்யக்த்வா
ஸர்வாநசேஷத: ।
மநஸைவேந்த்ரிய க்ராமம் விநியம்ய ஸமந்தத: ॥

அப்பனே, இந்த யோகத்தின் ஸுலபமார்க்கம் என்ன வென்றால் ஸங்கல்பம் புத்ர சோகத்தை அடையச் செய்யும். அதாவது ஸங்கல்பத்தின் புதல்வர்களான காமக்ரோதங்கள் நாசமடையும். ஸங்கல்பம் காமக்ரோதாதி விஷயங்கள் அழிந்ததைக் கேட்டதும் இந்திரியங்களைக் கட்டுப்படுத்திய நிலையில் பார்த்ததும் இதயத்தைப் பிளந்து கொண்டு நாசம் அடைகிறது. வைராக்கியத்தால் இவ்வித ஸங்கல்பத்தைக் கொன்றுவிட்டால் தைரியமாகிற கோயிலில் புத்தி ஸுகமாக வசிக்கும். (24)

शनैः शनैरुपरमेद्बुद्ध्या धृतिगृहीतया ।
आत्मसंस्थं मनः कृत्वा न किंचिदपि चिन्तयेत् ॥ २५ ॥
यतो यतो निश्चरति मनश्चञ्चलमस्थिरम् ।
ततस्ततो नियम्यैतदात्मन्येव वशं नयेत् ॥ २६ ॥

சனை: சனைருபரமேத் புத்த்யா த்ருதி க்ருஹீதயா ।
ஆத்ம ஸம்ஸ்த்தம் மந: க்ருத்வா ந கிஞ்சிதபி சிந்தயேத் ॥

யதோ யதோ நிஸ்சரதி மநஸ் சஞ்சலமஸ்த்திரம் ।
ததஸ் ததோ நியம்யைததாத்மந்யேவ வசம் நயேத் ॥

தைரியம் புத்தியை ஆச்ரயிக்கும் பொழுது புத்தி மெல்ல மெல்ல அனுபவத்தின் வழியாக மனதை இட்டுச் சென்று ப்ரும்ம ஸ்வருபத்தில் இருத்துகிறது. இது ஒருவிதமான மார்க்கம் இது முடியாவிட்டால் இன்னும் ஸுலபமான மார்க்கம் இருக்கிறது, அதாவது உன் மனதை ஒழுங்கு படுத்திக் கொண்டு ஏதாவது ஒரு நிச்சயத்தில் உறுதியாக நில். இதை ஒரு பொழுதும் அசட்டை செய்யாதே. இதில் வெற்றி பெற்று விட்டாயானால் எளிதாகக் காரியம் முடிந்துவிடும். இல்லாவிட்டால் மனதைக் கட்டவிழ்த்து வெளியில் விட்டு விடு இப்படி விடுதலையடைந்த மனது எங்கெல்லாம் அலைகிறதோ அங்கெல்லாம் அறிவை முன்னிட்டுக்கொண்டு சென்று அதை மெதுவாக மீட்டுக் கொண்டு வா இந்தவிதமாக சித்தத்திற்கு ஸ்திரமான அப்யாசம் ஏற்படும். (25–26)

प्रशान्तमनसं ह्येनं योगिनं सुखमुत्तमम् ।
उपैति शान्तरजसं ब्रह्मभूतमकल्मषम् २७ ॥

ப்ரசாந்த மநஸம் ஹ்யேநம் யோகிநம் ஸுகமுத்தமம் ।
உபைதி சாந்த ரஜஸம் ப்ரஹ்மபூதமகல்மஷம் ॥

பிறகு சில நாள் சென்றதும் அந்த ஸ்திரத் தன்மையினால் சித்தம் எளிதாக ஆத்ம ஸ்வருபத்தின் அருகில் அடையும். அதைப் பார்த்துவிட்டு அதனுடன் சேர்ந்துவிடும். த்வைதம் அத்வைதத்தில் மூழ்கிவிடும். அந்த ஒருமையின் பிரகாசத்தில் த்ரிலோகமும் பிரகாசிக்கும். ஆகாசத்தை மறைத்திருந்த மேகம் விலகியதும் ஆகாயம் தெளிவாகத் தெரிவதுபோல சித்தம் ப்ரும்மத்தில் லயமானதும் ப்ரும்மமயமாகவே ஆகிவிடும். (27)

युञ्जन्नेवं सदात्मानं योगी विगतकल्मषः ।
सुखेन ब्रह्मसंस्पर्शमत्यन्तं सुखमश्नुते ॥ २८ ॥

யுஞ்ஜந்நேவம் ஸதாऽऽத்மாநம் யோகீ விகத கல்மஷ: ॥
ஸுகேந ப்ரஹ்ம ஸம்ஸ்பர்சமத்யந்தம் ஸுகமச்நுதே ॥

ஸங்கல்பமாகிற ஸம்பத்தைத் தியாகம் பண்ணி விட்டு எவர்கள் இந்த ஸுலபமான யோகத்தை ஆஸ்ரயிக்கிறார்களோ அவர்கள் அநேக விதமான அனுபவங்களை அடைகிறார்கள். உப்பை ஜலத்திலிருந்து பிரிக்க முடியுமா? சித்த யோகத்தினால் அப்படிப்பட்ட நிலை ஏற்படுகிறது. உலகத்திற்கு ப்ரும்மானந்த ரூபமான கோயிலில் மஹா ஸுகமான தீப ஒளி காணப்படுகிறது. முன்னேறும் உன் கால்களே பின்னுக்கும் செல்கின்றன என்பதை ஞாபகம் வைத்துக்கொள். இக் காரியம் அனுஷ்டானம் பண்ணுவதொன்றும் கடினமல்ல. இதுவும் உன்னால் முடியாதுபோனால் மற்றொரு உபாயம் இருக்கிறது. (28)

सर्वभूतस्थमात्मानं सर्वभूतानि चात्मनि ।
ईक्षते योगयुक्तात्मा सर्वत्र समदर्शनः ॥ २९ ॥

यो मां पश्यति सर्वत्र सर्वं च मयि पश्यति ।
तस्याहं न प्रणश्यामि स च मे न प्रणश्यति ॥ ३० ॥

ஸர்வ பூதஸ்த்தமாத்மாநம் ஸர்வ பூதாநி சாத்மநி ।
ஈக்ஷதே யோக யுக்தாத்மா ஸர்வத்ர ஸம தர்சந: ॥

யோ மாம் பச்யதி ஸர்வத்ர ஸர்வம் ச மயி பச்யதி ।
தஸ்யாஹம் ந ப்ரணச்யாமி ஸ ச மே ந ப்ரணச்யதி ॥

பார்த்தா, எல்லா தேகங்களிலும் நானே இருக்கிறேன். அப்படியே எல்லா உலகங்களும் என்னிடம் இருக்கின்றன. இவ்விதமாக ஒன்றை யொன்று சேர்ந்து நானே எங்கும் நிறைந்திருக்கிறேன். புத்தியினால் இவ்விஷயத்தை கிரஹித்துக் கொள். ஹே அர்ஜுனா, ஏகாக்ர சித்தத்துடன் என்னை எல்லா பூதங்களிலும் பார்க்கவேண்டும். பூதங்களின் அநேகத் தன்மைகளால் மனதில் பலவித கற்பனைகள் எழக்கூடாது எல்லாம் நானே என்று எவன் அறிகிறானோ அவனே நானாக ஆகிறேன். ஆனால் அவனே நான், அவனே நான் என்று சொல்லிக்கொண்டிருப்பது வீண். இவ்விதம் சொல்லா விட்டாலும் அவனே நான் தானே! தீபமும் ஒளியும்போல் அவனில் நான் இருக்கிறேன் என்னில் அவன் இருக்கிறான். ஜலம் என்றால் அது ரஸம் தானே? ஆகாசம் என்றால் அது

அவகாசம் தானே? அதைப்போல அந்த யோகி என் உருவாகவே ஆகிருன். (29–30)

सर्वभूतस्थितं यो मां भजत्येकत्वमास्थितः ।
सर्वथा वर्तमानोऽपि स योगी मयि वर्तते ॥ ३१ ॥

ஸர்வ பூத ஸ்திதம் யோ மாம் பஜத்யேகத்வமாஸ்த்தித:।
ஸர்வதா வர்தமாநோபி ஸ யோகீ மயி வர்ததே ॥

ஹே கிரீடி! எவன் என்னை எங்கும் நிறைந்தவனுகக் காண்கிருனே, வஸ்திரத்தில் நூலைப் போல உலகெங்கும் நிறைந்தவனென்று எத்தனையோ வித ஆபரணங்கள் இருந்தாலும் தங்கம் ஒன்றேதான் என்பதைப்போலும் எவன் அறிகிருனே, இவ்விஷயத்தில் அவன் பர்வதத்தைப் போல உறுதியுடன் இருக்கிருன். அத்வைத சூரியனின் பிரகாசத்தால் அஞ்ஞானம் என்ற இருட்டு அழிவதைப் போலவும், எத்தனை இலைகள் உண்டோ அத்தனை மலர்கள் கிடையாது. என்பதைப் போலவும், இந்தப் பஞ்ச பூதத்திலைான சரீரத்தில் கட்டுண்ட போதும் அந்த யோகிக்கு இந்த பந்தத்தினுல் தன் சொருபத்தை அறிய ஒரு இடையூறும் இருக்காது. அவன் இத்தகைய இந்த அனுபவத்தினுலே என்னுடன் ஐக்கியமாகிருன் நான் எங்கும் நிறைந்தவன் என்ற அனுபவம் அவனுக்கு ஏற்படும் பொழுதே இயற்கையிலேயே அவன் எங்கும் நிறைந்தவனுகிருன். அவன் சரீரியாக இருந்த போதிலும் இந்த சரீரத்துடன் அவனுக்கு சம்பந்தம் கிடையாது. இவ் விஷயம் சப்தத்தினுல் வர்ணிக்கக் கூடியதா? (31)

आत्मौपम्येन सर्वत्र समं पश्यति योऽर्जुन ।
सुखं वा यदि वा दुःखं स योगी परमो मतः ॥ ३२ ॥

ஆத்மௌபம்யேந ஸர்வத்ர ஸமம் பச்யதி யோऽர்ஜுந ।
ஸுகம் வா யதி வா துக்கம் ஸ யோகீ பரமோ மத: ॥

அதனுல் நான் சுருக்கமாகக் கூறுகிறேன். தன்னைப்போல் ஜகத்தையும் பார்ப்பவனுக்கும், சுகதுக்கங்களின் மர்மங்களையும் சுபாசுபகர்மங்களையும் மனேதர்மத்தினுல் நாசம்செய்பவனுக்கும் ஸமம், விஷமம் என்ற எண்ணங்களற்றவனுக்கும், இவ் விஷயத்தினுல் இடையூறு ஏற்படாது. தன் சரீரத்தின்

அவயவங்களினுல் நமக்கு ஒரு இடையூறும் ஏற்படாததுபோல. சம்பூர்ணமான மூன்று லோகங்களும் நான்தான் என்ற எண்ணத்தை எவன் ஸகஜமாகக் கொள்கிருனே, அவன் ஒரு தேஹியாக இருந்தாலும், வியவகார உலகில் ஸுகதுக்கங்களை அனுபவித்தாலும் அவன் பரப்பிரும்மம்தான் என்று என் திட விஸ்வாஸம். அதனுல் சமத்துவத்தை உபாசனை பண்ணு. தன்னுள் உலகைப்பார். உலகை நீயாகப் பார். இதை நான் அடிக்கடி சொல்வதின் தாத்பர்யம் என்னவென்ருல் ஸமதிருஷ்டி-யைப்போல ஞானம் அடைய வேறு வழிகிடையாது. (32)

अर्जुन उवाच —

योऽयं योगस्त्वया प्रोक्तः साम्येन मधुसूदन ।
एतस्याहं न पश्यामि चञ्चलत्वात्स्थितिं स्थिराम् ॥

चञ्चलं हि मनः कृष्ण प्रमाथि बलवद्दृढम् ।
तस्याहं निग्रहं मन्ये वायोरिव सुदुष्करम् ॥ ३४ ॥

அர்ஜுன உவாச—

யோऽயம் யோகஸ் த்வயா ப்ரோக்த: ஸாம்யேந மதுஸூதந ।
ஏதஸ்யாஹம் ந பச்யாமி சஞ்சலத்வாத் ஸ்திதிம் ஸ்திராம் ॥

சஞ்சலம் ஹி மந: க்ருஷ்ண ப்ரமாதி பலவத் த்ருடம் ।
தஸ்யாஹம் நிக்ரஹம் மந்யே வாயோரிவ ஸுதுஷ்கரம் ॥

அர்ஜுனன் கூறுவான் :— ஹே தேவா, தாங்கள் கிருபை கூர்ந்து நன்ருகத்தான் உபதேசிக்கின்றீர். ஆனுல் இந்த மனதின் இயற்கைக்கு மாருக நான் ஒன்றும் செய்யமுடியவில்லை. இந்த மனது எப்படிப்பட்டது, எவ்வளவு பெரியது என்று பார்ப்போமெனருல் தென்படுகிறதா? ஆனுல் இதன் கற்பனையின் முன்னுல் மூன்று உலகங்களும் அற்பமே. குரங்கு எங்காவது ஸமாதியில் லயித்திருக்குமா? மஹாவாயுவைத் தடுத்து நிறுத்த முடியுமா? அது புத்தியை நசிககச் செய்கிறது. திடபுத்தியை ஒதுக்குகிறது. தைரியத்துடன் தோழமைக் கொண்டு அதற்குப் பல வழிகளைக் காட்டி அதை ஓடச்செய்கிறது. விவேகத்தை

மறக்கடிக்கச் செய்கிறது. சந்தோஷத்திற்கு விருப்பத்தைக் கொடுக்கிறது. பேசாமல் உட்கார்ந்திருந்தாலும் பத்துதிக்குகளிலும் ஓடுகிறது. தடுத்து நிறுத்தினோமானால் நான்கு திக்குகளிலும் அலைபாய்கிறது. ஒழுங்கு என்பது மனத்துடன் தோழமை கொண்டிருந்தும்கூட மனம் தன் ஸ்வபாவத்தை விடவில்லையே! மேற்கூறிய இந்தக் காரணங்களினால் மனம் சலிக்காமல் இருந்து நமக்கு சம திருஷ்டி ஏற்படும் என்பது நினைக்கக் கூடியதாகவே இல்லை. (33-34)

श्री भगवानुवाच —

असंशयं महाबाहो मनो दुर्निग्रहं चलम् ।
अभ्यासेन तु कौन्तेय वैराग्येण च गृह्यते ।। ३५ ।।

ஸ்ரீ பகவானுவாச—

அஸம்சயம் மஹாபாஹோ மநோ துர்நிக்ரஹம் சலம் ।
அப்யாஸேந து கௌந்தேய வைராக்யேண ச
க்ருஹ்யதே ॥

அப்பொழுது கிருஷ்ணன் கூறுவான் '— உண்மைதான் அப்பா! நீ சொல்வது சரி. சபலத்தன்மையே மனதின் ஸ்வபாவம். ஆனால் வைராக்யத்தின் துணைகொண்டு அப்யாசம் என்னும் வழியில் இதைச் செலுத்தினால் கொஞ்சகாலத்திற்கு பிறகு இது ஸ்திரமாகும். இம்மனத்தின் உயர்ந்த குணம் ஒன்று உண்டு. அது என்னவென்றால் ஒரு விஷயத்தில் ருசிகண்டு விட்டால் அதிலே பேராசைகொண்டு அதன் பின்னாலேயே ஓடும். அதனால் வைராக்யத்தின் சகாயத்தினால் மனதிற்குக் குதூகலத்தை ஊட்டி ஆத்மானுபவ ஸுகத்தைப்பற்றிச் சொல்லிக் கொண்டே இருக்கவேண்டும். (35)

असंयतात्मना योगो दुष्प्राप इति मे मतिः ।
वश्यात्मना तु यतता शक्योऽवाप्तुमुपायतः ।। ३६ ।।

அஸம்யதாத்மநா யோகோ துஷ்ப்ராப இதி மே மதிः ।
வச்யாத்மநா து யததா சக்யோऽவாப்துமுபாயதः ॥

உனக்குத் தெரியாதா! வைராக்யமில்லாமலும் அப்யாசத்திற்கு முயற்சிக்காமலும் இருப்பவனுக்கு மனம் வசமாகுமா?

யாம, நியம, மார்க்கத்தில் செல்லாமலும் வைராக்யத்தை நினையாமலும் விஷய வாசனையாகிற ஜலத்தில் மூழ்கிக்கொண்டே இருந்தால் அதை அஜ்ஜலத்திலிருந்து யுக்தி என்ற கயிற்றைக் கட்டி வெளியில் இழுக்காமலிருந்தால் மனதிற்கு விடுதலை யேது! அதனால் மனோநிக்ரஹத்திற்கு மேற்கூறிய உபாயத்தைக் கையாளு. சிறிது காலம் பார்த்து விட்டு ஸ்திரமாய் இருக்கிறதா இல்லையா என்று பார். யோகத்திற்காக பெரியவர்கள் கூறி இருக்கும் சாதனங்கள் பொய்யா? இந்த மார்க்கத்தை உன்னால் அப்யசிக்க முடியாது என்று வேண்டுமானால் கூறு. சரீரத்தில் யோகபலமிருந்தால் மனம் ஏன் சலிக்கிறது? அப்பொழுது அர்ஜுனன் கூறுவான் :— தாங்கள் சொல்வது மிகவும்சரி. யோக பலத்திற்கு முன்னால் மனோபலம் நிற்காதுதான். நான் இதுவரை இதைப்பற்றி எண்ணவேயில்லையே! இந்த யோகம் என்பது என்ன? இதை எப்படி அடைவது என்பதை அறியாததால் மனது என்பது ஜெயிக்கமுடியாதது என்று இதுவரை எண்ணியிருந்தேன். ஹே புருஷோத்தமா! என் ஆயுளில் முதல் தடவையாக இன்றே நான் தங்கள் கிருபையால் யோக பலத்தைப்பற்றி சிறிது அறிந்தேன். (36)

अर्जुन उवाच —

अयतिः श्रद्धयोपेतो योगाच्चलितमानसः ।
अप्राप्य योगसंसिद्धिं कां गतिं कृष्ण गच्छति ।। ३७ ।।

कच्चिन्नोभयविभ्रष्टश्छिन्नाभ्रमिव नश्यति ।
अप्रतिष्ठो महाबाहो विमूढो ब्रह्मणः पथि ।। ३८ ।।

एतन्मे संशयं कृष्ण छेत्तुमर्हस्यशेषतः ।
त्वदन्यः संशयस्यास्य छेत्ता न ह्युपपद्यते ।। ३९ ।।

அர்ஜுன உவாச—

அயதி: ச்ரத்தயோபேதோ யோகாச்சலிதமாநஸ: ।
அப்ராப்ய யோக ஸம்ஸித்திம் காம் கதிம் க்ருஷ்ண
கச்சதி ॥

கச்சிந்நோபயவிப்ரஷ்டஸ்சிந்நாப்ரமிவ நச்யதி ।
அப்ரதிஷ்டோ மஹாபாஹோ விமூடோ ப்ரஹ்மண:பதி॥

ஏதந்மே ஸம்சயம் க்ருஷ்ண சேத்துமர்ஹஸ்யசேஷத: |
த்வதந்ய: ஸம்சயஸ்யாஸ்ய சேத்தா ந ஹ்யுபபத்யதே ||

இருந்த போதிலும் எனக்கு ஒரு சிறு சம்சயமிருக்கிறது. அதைத் தாங்கள்தான் நிவர்த்திக்க வேண்டும். ஒருவன் சாதனம் செய்யாமலேயே அகாவது அப்யஸிக்காமலே மோக்ஷ பதத்தை அடைய முயற்சி செய்கிறான். அவன் இந்திரியம் என்ற பெயருள்ள கிராமத்திலிருந்து புறப்பட்டு ஆத்மசித்தி என்ற நகரத்திற்கு போவதற்கு சிரத்தை என்னும் மார்க்கமாகப் போகிறான். ஆனால் அவனுக்கு ஆத்மசித்தி என்ற நகரத்தை அடைய முடியவில்லை. திரும்பிவரவும் முடியவில்லை. வழியிலேயே அவன் ஆயுள் பூரணமாகிறது. காலமில்லாக் காலத்தில் பரவிய மேகம் மிகவும் மெல்லியதாகவும் பஞ்சுபோலவும் பரவுகிறது. சற்று நேரத்தில் மறைந்தும்விடுகிறது. மழையும் பெய்கிறதில்லை. அதைப்போல் அவன் திரும்பவும் முடியவில்லை. லக்ஷியத்தை அடையவும் முடியவில்லை. அடைய வேண்டிய ஆத்மஸித்தி நகரத்தை அடையவில்லை. சிரத்தா என்ற மார்க்கத்தில் வெகு தூரம் வந்துவிட்டதால் இந்திரிய கிராமத்திற்குப் போகமுடியவில்லை. இப்படி இரண்டு இடங்களையும் விட்டுவிட்டு சிரத்தை என்ற மார்க்கத்தில் ஆயுள் பூரணமடைகிறவனின் கதி என்ன ஆகும்? (37-38-39)

श्रीभगवानुवाच —

पार्थ नैवेह नामुत्र विनाशस्तस्य विद्यते ।
न हि कल्याणकृत्कश्चिद्दुर्गतिं तात गच्छति ॥ ४० ॥

ஸ்ரீபகவானுவாச—

பார்த்த நைவேஹ நாமுத்ர விநாசஸ்தஸ்ய வித்யதே |
ந ஹி கல்யாணக்ருத் கஸ்சித் துர்கதிம் தாத கச்சதி ||

ஹே பார்த்தா! மோக்ஷ ஸுகமடைவதில் சிரத்தை இருக்கிறவனுக்கு மோக்ஷத்தைவிட்டு வேறு கதி என்ன இருக்கிறது? ஆனால் நீ சொல்வதுபோல வழியிலேயே அவன் ஆத்மா இளைப்பாற விரும்புகிறது. இந்த சிரத்தா மார்க்கத்தில் மூச்சை விடுகிறவனுடைய ஸுகம் தேவர்களுக்கும் கிடைப்பதரிது. ஸாதாரணமாக, அப்யாஸமாகிற அடிகளைத் தீவிரமாக எடுத்து வைத்துச் சென்றானானால் ஆயுளாகிற ஸூர்யன் அஸ்தமிப்பதற்கு

முன்ஞலேயே ஆத்மஸித்தி நகரத்தை அடைந்துவிடுகிருன். ஆஞல் அவனுக்கு அத்துணை வேகமும் பலமுமில்லை. நடுவிலேயே அவன் சரீரம் களைத்து விழுந்துவிடுகிறது. ஆஞலும் அவனுக்கு மோக்ஷமென்பது தீர்மானமாக நிச்சயிக்கப்பட்ட பதம் என்று அறி.

**प्राप्य पुण्यकृताँल्लोकानुषित्वा शाश्वतीः समाः ।**
**शुचीनां श्रीमतां गेहे योगभ्रष्टोऽभिजायते ॥ ४१ ॥**

ப்ராப்ய புண்யக்ருதாம் லோகாந் உஷித்வா
சாச்வதீ: ஸமா: ।
சுசீநாம் ஸ்ரீமதாம் கேஹே யோகப்ரஷ்டோऽபி ஜாயதே ॥

இந்திரபதவி அடையவேண்டி அநேக கஷ்டங்கள் அடைந்து ஜனங்கள் முயற்சிக்கிருர்கள். ஆஞல் மோக்ஷத்தை விரும்பும் ஸாது அஞயாஸமாக அதை அடைகிருன் என்று கேட்க உனக்கு ஆச்சர்யமாக இருக்கவில்லையா? இந்திரபதவி அடைந்தும் நிஷ்ப்ரயோஜனமான போகங்களை அனுபவித்து அனுபவித்து அவன் மனம் வெறுப்படைகிறது. ஸ்வர்க்க போகத்தை அனுபவிக்கும் ஸமயம் அவன் தினமும் பச்சாத்தாபப் படுவான். ஹே பகவன்! ஏன் எனக்கு திடீரென்று இந்தக்கஷ்டம் உண்டாயிற்று? கடைசி காலத்தில் அந்த உலகத்திலிருக்கிருன். ஆஞல் ஸகலவிதமான தர்மங்களுக்கும் எது இருப்பிடமோ அதை அடைகிருன். நன்ருக வளர்ந்து பலன் கொடுக்கும் பயிர்களில் பருத்த தான்யம் விளைவதைப்போல் அந்த யோகி ஐச்வர்யம் நிரம்பியுள்ள வீட்டில் பிறக்கிருன். நீதி மார்க்கத்தில் நடப்பவர்களும், உண்மையும் தூய்மையுமான மனதை உடையவர்களும், சாஸ்திர ஸம்பந்தமானவைகளையே செய்பவர்களும், வேதமே தங்கள் வீட்டு விளக்காக விளங்குபவர்களும், ஸ்வதர்மத்தையே எப்பொழுதும் ஆச்ரயிப்பவர்களும், நித்யாநித்ய விவேகத்தை மந்திரியாக உள்ளவர்களும், ஈச்வரனை பஜிப்பவர்களுமான குலத்தில் ஈச்வர சிந்தை என்ற பதிவ்ரதை எப்பொழுதும் இருக்கிருள். ருத்திஸித்திகள் வீட்டு தாதிகளாக இருக்கின்றன. ஆத்மபுண்யமே கஜாஞவாக நிரம்பியுள்ள அந்த வீட்டில் ஸகல ஸுகங்களும் நிரம்பியிருக்கின்றன. அவ்விதமான குலத்தில் யோகப்ரஷ்டன் பிறக்கிருன். *(41)*

**अथवा योगिनामेव कुले भवति धीमताम् ।**
**एतद्धि दुर्लभतरं लोके जन्म यदीदृशम् ॥ ४२ ॥**

அதவா யோகிநாமேவ குலே பவதி தீமதாம் |
ஏதத்தி துர்லபதரம் லோகே ஜந்ம யதீத்ருசம் ||

எவன் ஞானரூபாக்னியில் ஹோமம் செய்கிறனோ, பரப்பிரும ரூபமான யக்ஞத்தைச் செய்கிறனோ, ஆத்மசுகம் என்னும் க்ஷேத்திரத்தில் வசிக்கிறனோ, எவன் மூவுலகிலும் ஆத்மசுகமாகிற சிம்மாசனத்தில் அமர்ந்து அரசாளுகிறனோ, எவன் சந்தோஷமாகிற வனத்தில் கூவும்குயிலோ, எவன் தினமும் விவேகமாகிற பழத்தைக் கொடுக்கும் விருக்ஷத்தடியில் உட்கார்ந்திருக்கிறனோ, அந்த யோகியின் வீட்டில் இந்த யோகப்பிரஷ்டன் பிறக்கிறன். மிகச்சிறிய வயதிலேயே அவனுக்கு ஆத்மஞானமாகிற அருணோதயம் ஆகிறது. அப்பொழுதே யௌவனம் என்னும் நகரத்தில் படிக்கப் போகாமலேயே பிள்ளைப் பிராயத்திலே சர்வக்ஞை என்னும் பெண் அவன்கழுத்தில் ஜெயமாலை அணிவிக்கிறள். தேவியின் சேர்க்கையால் அவன் மனதில் சகலவித்தைகளும் தோன்றுகின்றன. வாயிலிருந்து சகலசாஸ்திரங்களும் வெளிப்படுகின்றன. இவ்விதமான ஜன்மம் எடுப்பதற்கு தேவர்களும் ஸகாமபிரியர்களாய் ஸ்வர்கத்திலிருந்து கொண்டு ஜபஹோமங்களை செய்கிறர்கள். சீக்கிரம் நரஜென்மம் வேண்டுமென்று ம்ருத்யு லோகத்தை பார்த்துக்கொண்டு ஸ்துதிக்கிறர்கள். (42)

तत्र तं बुद्धिसंयोगं लभते पौर्वदेहिकम् ।
यतते च ततो भूयः संसिद्धौ कुरुनन्दन ॥ ४३ ॥
पूर्वाभ्यासेन तेनैव ह्रियते ह्यवशोऽपि सः ।
जिज्ञासुरपि योगस्य शब्दब्रह्मातिवर्तते ॥ ४४ ॥

தத்ர தம் புத்தி ஸம்யோகம் லபதே பௌர்வதேஹிகம் |
யததே ச ததோ பூயः ஸம்ஸித்தௌ குருநந்தந ||

பூர்வாப்யாஸேந தேநைவ ஹ்ரியதே
ஹ்யவசோऽபி ஸः |
ஜிஜ்ஞாஸுரபி யோகஸ்ய சப்தப்ரஹ்மாதிவர்த்ததே ||

முதல் ஜன்மத்தில் அவனுக்கு எந்த சத்புத்தியிருந்ததோ எதைஅடைந்த பிறகு அவனுக்கு ஆயுள்முடிந்ததோ அந்தபுத்தி

அவனை சீக்கிரத்தில் அடைகிறது. அப்பேர்பட்ட பாக்யவான் கால்வழியாகப் பிறக்கிறுன். கண்கள் திவ்யஞானமாகிற மை தீட்டப்பட்டு பூமிக்குள் புதைந்திருக்கும் தனம்கூடத் தெரியும் படியாக இருக்கிறது. கடினமான அபிப்ராயங்களையும் குருவினுல் அறியக்கூடிய ரகசியங்களையும் அப்பியாசம் இல்லாமலேயே அவனுடைய புத்தி அவனுக்கு அறிவிக்கிறது. பலம்பொருந்திய இந்திரியங்கள் மனதிற்கு வசமாகின்றன. மனம் தத்வத்தில் லயிக்கிறது. எளிதாகவே மூச்சுக்காற்று ஆகாயத்தை அடைய விரும்புகிறது. அதாவது குண்டலினி சக்தி எளிதாக ஸஹஸ்ரா ரத்தை அடைகிறது. அப்யாசம் தன்னைத்தானே அவனை வந்து அடைகிறது. சமாதி அவனுடைய மனம்என்னும் வீட்டைத் தேடிப்பிடித்து வந்தடைகிறது. யோகஸ்தானத்தின் அதி தேவதையே, ஜகத்உத்பத்தியின் மேன்மையே, வைராக்ய சித்தியின் அதிபதியே மூர்த்தீகரித்து வந்திருக்கிறதோ என்று தோன்றுகிறுன். அவன் சம்சாரத்தின் அளவுகோல். அஷ்டாங்க யோகத்தின் இலக்கியத்தைப் படிக்கும்தீபம். சந்தனத்தை விட்டு சுகந்தம் வேருகாததைப்போல் அவன் ஞானத்தைவிட்டு வேருவதில்லை சாதனு தசையிலேயே அவன் சந்தோஷமே உருவெடுத்து வந்ததைப்போல காண்கிருன். சித்திகளின் களஞ்சியமாகக் காண்கிருன். (43-44)

प्रयत्नाद्यतमानस्तु योगी संशुद्धकिल्बिषः ।
अनेकजन्मसंसिद्धस्ततो याति परां गतिम् ॥ ४५ ॥

ப்ரயத்நாத்யதமாநஸ்து யோகீ ஸம்சுத்தகில்பிஷ: ।
அநேக ஜன்ம ஸம்ஸித்தஸ் ததோ யாதி பராம் கதிம் ॥

இவ்விதமான நூற்றுக்கணக்கான ஜன்மங்களுக்குப் பிறகு அந்த யோகப்ரஷ்டன் அநேக ஜன்மங்களின் பிரதிபந்தங்களைத் தாண்டிக்கொண்டு ஆத்மசித்தியின் கரையை அடைகிருன். சம்பூர்ண சாதன சமூகங்கள் அவன் பின்னேசெல்கின்றன பிறகு அவன் விவேகமாகிற ராஜ்யத்தில் பிரவேசிக்கிருன். பிறகு வேகமாக அவனுடைய விசாரமென்னும் நடையினுல் விவேக நகரையும் தாண்டி பிரும்மம் என்னும் ராஜதானியை அடை கிருன். மனமாகிற மேகம் லயமடைகிறது. காற்றின் காற்றுத் தன்மை நிற்கிறது. ஆகாசம் ஆகாசத்தில் லயமடைகிறது. ஓம்காரத்தின் அர்த்தமாத்திரை ஓம்காரத்தில் லயமடைகிறது.

வர்ணிக்கமுடியாத ஸுகத்தை அடைகிருன். அவனை வர்ணிக்க வாக்கு ஊமையாகிவிடும். இவ்விதமான ப்ரஹ்ம நிலையின் ஸம்பூர்ண கதிக்கும் அப்பால் உருவமற்ற மூர்த்தியாக அவன் ஆகிருன். பூர்வஜன்மத்தின் ஸகாம, அகாம மலங்கள் சுத்த மாகின்றன. அவன் பிறந்த உடனேயே அவனுடைய லக்ன நாழிகை ஜலத்தில் மூழ்கிவிடுகிறது. தத்ருபமான தன் ஸங்கத் திலேயே அவன் விவாஹம் செய்துகொண்டு அபின்னனுகிருன். மேகம் விலகினதும் ஆகாசம் தோன்றுவதைப்போல. எங்கிருந்து உலகம் உண்டாகிறதோ, எங்கு லயமாகிறதோ அவ்விடத்தைப் பாஞ்சபௌதிக தேஹம் இருக்கும்பொழுதே அந்த யோகி அடைகிருன். (45)

तपस्विभ्योऽधिको योगी ज्ञानिभ्योऽपि मतोऽधिकः।
कर्मिभ्यश्चाधिको योगी तस्माद्योगी भवार्जुन ॥ ४६ ॥

தபஸ்விப்யோऽதிகோ யோகீ க்ஞாநிப்யோऽபி மதோऽதிக: ।
கர்மிப்யஸ்சாதிகோ யோகீ தஸ்மாத் யோகீ பவார்ஜுந ॥

லாபத்தில் ஆசைவைத்து தைரியமாகிற கைகளில் நம்பிக்கைவைத்துக் கர்மநிஷ்டர்கள் ஸத்கர்மமாகிற பிரவாஹத்தில் நுழைகிருர்கள். எந்த ஒரு பொருளுக்காக ஞானி மஹாத்மாக்கள் ஞானமாகிற திடகவசத்தையணிந்து பிரபஞ்சமாகிற யுத்த பூமியில் இறங்குகிருர்களோ, எதை அடைய விரும்பி தபஸ்விஜனங்கள் உடைந்துபோன கோட்டையின் பாழும் சுவரை ஆச்ரயித்து ஒரு ஆதாரமுமற்று வழுக்கிக் கொண்டு நிற்கிருர்களோ, எது பஜனை செய்பவர்களின் லக்ஷ்யமோ, யக்ஞம் செய்பவர்களின் பலனே, எப்பொழுதும் யாவருக்கும் எது பூஜ்ய வஸ்துவோ, எது ஸாதகர்களின் பரதத்துவமான ஸித்திதத்துவமோ, யோகப்ரஷ்டன் அந்த தத்துவமாகவே ஆகிருன. அதனுல் கர்மநிஷ்டர்களுக்கு அவன் வணங்கத்தக்கவன். ஞானிகளுக்கு அறியத்தகுந்தவன். தபஸ்விகளுக்கு மூலமான லக்ஷ்யம. அவனுள் ஜீவபரமாத்ம ஐக்யத்தினுல் மனேதர்மம உதயமாகிறது. அதனுல் அவன் சரீரியாக இருந்தாலும் மேற்கூறியவைகள் அவனை வந்தடைகின்றன. அதனுல் ஹே பாண்டு குமாரா, நீ அந்தக்கரணத்தில் யோகியாகஇரு என்று நான் ஆதிமுதலே கூறிவருகிறேன். (46)

योगिनामपि सर्वेषां मद्गतेनान्तरात्मना ।
श्रद्धावान्भजते यो मां स मे युक्ततमो मतः ॥ ४७ ॥

யோகிநாமபி ஸர்வேஷாம் மத்கதேநாந்தராத்மநா ।
ச்ரத்தாவாந் பஜதே யோ மாம் ஸ மே யுக்ததமோ மத: ॥

அப்பா! யோகி என்று கூறப்படுபவனே தேவாதிதேவன் என்றறி. அவனே என் ஸுகத்திற்கெல்லாம் காரணம் என்றறி. அவனே என் உயிர். அவனே என் வாழ்வு. பஜிக்கிறவனும் பஜனையும் பஜனையின் பலனுமான ஸம்பூர்ண சக்தி ஸாதனத்தின் த்ரிபுடியே அவன். அவன் அகண்டாகாரமான அனுபவத்தின் மூலமாக என் ரூபமாகவே ஆகியிருக்கிருன். எனக்கும் அவனுக்கும் உள்ள பிரேமைக்கு ஒரு ஸ்வரூபமிருக்கிறதா? ஹே ஸுபத்ராபதி! அப்படி இருந்தால் அதை என்னுல் வர்ணிக்க முடியாது. அந்த ஏகாக்ரமான ப்ரேமைக்கு உவமை கூறி வர்ணிக்கவேண்டுமாளுல் நான் தேஹம், அவன் ஆத்மா. இப்பொழுது ஸஞ்ஜயன் கூறுகிருன்:— பக்த சகோர சந்திரனும், குணக்கடலும், மூவுலகிற்கும் சக்ரவர்த்தியுமான ஸ்ரீ கிருஷ்ணன் இவ்விதமாகச் சொன்னவுடன் அர்ஜுனனுக்கு யோக நிருபணத்தை அறியவேண்டுமென்றிருந்த ஆசை முன்னைவிட அதி தீவிரமாயிற்று. இவ்விஷயத்தை ஸ்ரீ கிருஷ்ணனும் அறிந்து கொண்டார். மிக்க ஸந்தோஷத்தையடைந்தார். அர்ஜுனன் யோகநிருபணத்தைப் பிரதிபலிக்கும் கண்ணுடி என அறிந்து கொண்டார். இந்த ஆனந்தத்தினுல் புளகாங்கிதரான அவர் என்ன நிருபணம் செய்தாரோ அது இனிமேல் சொல்லப்படுகிறது. அதில் சாந்த ரஸம் பெருகும். ஞானமாகிற விதையின் மூட்டை அவிழ்க்கப்படும். அவ்விதைகளை விதைக்கும் பொருட்டு ஸாத்விகமான மழை பெய்யும். ஆத்யாத்மிக மேடுகள் ஸமமாக்கப்பட்டு சாதுர்யரூபமான பாத்திகள் தயாராக்கப்படும். தங்கத்தைப்போன்ற உத்தமமான மனேலயமான உரம் சேர்க்கப்படும். இப்பொழுது அதனுல் இந்த நிவர்த்திதேவருக்கு இந்த ஞான விதையை விதைப்பதற்கு விருப்பமுண்டாகியிருக்கிறது.

ஞானதேவர் கூறுகிருர்:— ஸத்குரு லீலார்த்தமாக என்னை விதைவிதைக்கும் ஸ்தானமாகக் கருதினுர். என் தலையில் கை வைத்தாரல்லவா? அதே விதை விதைப்பதாக ஆயிற்று. இந்த முகமே பயிர் விளையும் வயலாக ஆயிற்று. ஸத்துக்களின் அநதக்

கரணமாகிற களஞ்சியத்தில் அவை போய்ச்சேரும். சரி. அது இருக்கட்டும். இப்பொழுது கிருஷ்ணர் எதைச் சொல்கிருரோ அதைச் சொல்கிறேன். அதை மனமாகிற காதுகளால் கேளுங்கள். புத்தி என்னும் கண்களால் பாருங்கள். சித்தத்தையே விலைகொடுத்து வாங்குங்கள். மனோநியோகமென்னும் பாதை வழியாக அதை ஹ்ருதயத்துக்குக் கொண்டுசெல்லுங்கள். இந்த வாக்கு ஸஜ்ஜனங்களுடைய புத்தியை ஸந்தோஷிக்கச் செய்யும். நமக்கு ஹிதமாகிற நன்மையைச் செய்யும். பலனுக்குப் புத்துயிர் அளிக்கும். உயிர்களுக்கு ஸுகரூபமான புஷ்பமாலையாக ஆகும். இப்பொழுது ஸ்ரீமுகுந்தன் அர்ஜுனனிடம் கூறிய வார்த்தையைக் கேளுங்கள். (47)

ஆருவது அத்யாயம் முற்றும்.

## ஏழாவது அத்யாயம்

श्रीभगवानुवाच—

मय्यासक्तमनाः पार्थ योगं युञ्जन्मदाश्रयः ।
असंशयं समग्रं मां यथा ज्ञास्यसि तच्छृणु ॥ १ ॥

ज्ञानं तेऽहं सविज्ञानमिदं वक्ष्याम्यशेषतः ।
यज्ज्ञात्वा नेह भूयोऽन्यज्ज्ञातव्यमवशिष्यते ॥ २ ॥

ஸ்ரீபகவானுவாச—

மய்யாஸக்தமநா: பார்த்த யோகம் யுஞ்ஜந் மதாச்ரய:।
அஸம்சயம் ஸமக்ரம் மாம் யதா ஞாஸ்யஸி தச்ச்ருணு ॥

க்ஞாநம் தே஽ஹம் ஸவிக்ஞாநமிதம் வக்ஷ்யாம்ய
சேஷத:।
யத்ஞாத்வா நேஹ பூயோ ந்யத்ஞாதவ்யமவசிஷ்யதே ॥

இப்பொழுது பகவான் கூறுவார்:— பார்த்தா! நீ இப்பொழுது யோகயுக்தனுக ஆகிவிட்டாய். இப்பொழுது நான் வியவகாரத்தோடு கூடின ஞானத்தைச் சொல்கிறேன். அதனுல் நீ ஸர்வ வியாபியான என்னை உள்ளங்கை நெல்லிக்கனி போல் அறிந்து கொள்வாய். வியவகார ஞானமென்பது விஞ்ஞானம். அதற்கு

இங்கு என்ன வேலை என்று நீ நினைக்கலாம். ஆனால் வியவகார ஞானத்தையே நீ முதலில் தெரிந்து கொள்ள வேண்டும். இல்லாவிட்டால் ஞானத்தை அறியும் சமயம் ஞாத்ருத்வத்தின் கண்கள் மூடிவிடும். கரையை அடைந்த படகு முன்செல்லாதது போல. அறியக்கூடிய சக்தி எங்கு பிரகாசிக்க முடியாதோ, சிந்தனை எங்கு சென்று திரும்பி விடுமோ, தர்க்கம் எங்கு பயன் படாதோ, அது ஞானம் என்று அறி. பிரபஞ்சம் விக்ஞானம். பிரபஞ்சத்தை உண்மை என்று நம்புவது அக்ஞானம். எதனால் எல்லா அக்ஞானங்களும் போய்விடுகிறதோ, விக்ஞானங்கள் மிச்சமின்றி ஆகிவிடுகிறதோ அப்பொழுது ஞானம் ஸ்வரூபமயமாக ஆகிறது. இதனால் சிறியவன், பெரியவன் என்ற பேதபாவம் அற்றுவிடுகிறது. இவ்விதமான மர்மத்தை நான் சப்தங்களால் வர்ணிக்கிறேன். இதனால் உன்மனமே விருப்பம் பூர்த்தியாகும்.

मनुष्याणां सहस्रेषु कश्चिद्यतति सिद्धये ।
यततामपि सिद्धानां कश्चिन्मां वेत्ति तत्त्वतः ॥ ३ ॥

மனுஷ்யாணாம் ஸஹஸ்ரேஷு கஸ்சித் யததி ஸித்தயே ।
யததாமபி ஸித்தாநாம் கஸ்சிந் மாம் வேத்தி தத்வத: ॥

ஆயிரம் பேர்களில் ஒருவருக்கே இவ்விஷயத்தில் ப்ரீதி உண்டாகிறது. இப்படி ப்ரீதி ஏற்படுபவர்களில் ஒருவனே இருவனே தான் ஞானியாகிறான். ஹே அர்ஜுனா! இவ்வுலகில் லக்ஷக்கணக்கான ஆட்களைச் சேர்த்து ரதகஜ துரகபதாதி சேனைகளைத்தயார் பண்ணுகிறார்கள். அஸ்த்ர சஸ்த்ரங்களினால் அத்தனை பேரும் இறக்கின்றனர். ஆனால் ஒருவனே விஜய ஸிம்மாஸனத்தில் அமருகிறான். ஆசையென்னும் வெள்ளப் பெருக்கில் கணக்கற்றவர் அகப்பட்டுக் கொள்கின்றனர். ஆனால் முக்தி என்னும் கரைக்கு ஒருவனாவது போய்ச் சேருவானோ என்பது சந்தேகம். அதனால் இந்தப்பதம் ஸாமான்யமானது அல்ல. இது மிக்கச் சிரேஷ்டமானது. விரிவாக இதைப் பிறகு சொல்கிறேன். இப்பொழுது மற்றொரு விஷயத்தைச் சொல்கிறேன்.

भूमिरापोऽनलो वायुः खं मनो बुद्धिरेव च ।
अहङ्कार इतीयं मे भिन्ना प्रकृतिरष्टधा ॥ ४ ॥

பூமிராபோநலோ வாயு: கம் மநோ புத்திரேவ ச ।
அஹங்கார இதீயம் மே பிந்நா ப்ரக்ருதிரஷ்டதா ॥

ஹே தனஞ்சய! கவனமாகக் கேள். மஹத்தத்வாதி ரூபங்களில் மாயை சரீரத்திற்கு நிழல் போல் ப்ரதிபலிக்கிறது. இதைப் ப்ரக்ருதி என்று கூறுகிறோம். இந்தப்ரக்ருதி எட்டு விதமாக ப்ரகாசிக்கிறது. இதனாலேயே மூன்று உலகங்களும் உற்பத்தியாகின்றன. இந்த எட்டு பாகங்களும் முறையே பூமி, ஜலம், தீ, காற்று, ஆகாசம், மனம், புத்தி, அகங்காரம் (4)

अपरेयमितस्त्वन्यां प्रकृतिं विद्धि मे पराम् ।
जीवभूतां महाबाहो ययेदं धार्यते जगत् ॥ ५ ॥

அபரேய மிதஸ்த்வந்யாம் ப்ரக்ருதிம் வித்தி மே பராம் ।
ஜீவபூதாம் மஹாபாஹோ யயேதம் தார்யதே ஜகத் ॥

ஹே பார்த்தா, இந்த எட்டு பாகங்களும் எங்கு ஐக்யமாகிறதோ, அதுவே என் சிரேஷ்டமான ப்ரக்ருதியாகும். அதை ஜீவனென்று சொல்கிறோம். அது அசேதன வஸ்துக்களுக்கு உயிர் கொடுக்கிறது. சேதனத்தில் சேதனத் தன்மையை உண்டாக்குகிறது. மனதில் சோக மோஹங்களின் கல்பனையைச் செய்கிறது. புத்திக்கு அறியும் சக்தியைக் கொடுக்கிறது. அதனுடைய அகங்கார ரூபமான கௌசலத்தினால் ஜகம் நிலைக்கிறது. (5)

एतद्योनीनि भूतानि सर्वाणीत्युपधारय ।
अहं कृत्स्नस्य जगतः प्रभवः प्रलयस्तथा ॥ ६ ॥

ஏதத் யோநீநி பூதாநி ஸர்வாணீத்யுபதாரய ।
அஹம் க்ருத்ஸ்நஸ்ய ஜகத: ப்ரபவ: ப்ரளயஸ்ததா ॥

அதனுடைய ஸூக்ஷ்ம விருத்திகள் விளையாட்டாகவே ஸ்தூல விருத்தியுடன் ஒன்று சேரும் பொழுது பூத ஸ்ருஷ்டியின் காரியாலயம் இயங்கத் தொடங்குகிறது. அதாவது நாணயம் அச்சடிக்கும் யந்திர சாலையைப்போல. அந்த யந்திர சாலையில் நான்கு விதமான நாணயங்கள் அடிக்கப்படுகின்றன. நான்கின் மதிப்பென்னவோ ஒன்று போலத்தான். ஆனால் அவைகள் வெவ்வேறு வகுப்பைச் சேர்ந்ததாக இருக்கின்றன. இதில்

எண்பத்திநாலு லக்ஷம் பிரிவுகள் இருக்கின்றன. இதைத்தவிர எண்ணிக்கையில் அடங்காத எத்தனையோ பிரிவுகள் இருக்கின்றன. இந்த நாணயங்களால் ஈரேழு பதினாலு உலகங்களின் கஜானாக்களும் நிரப்பப்படுகின்றன. பஞ்ச மஹா பூதங்களினாலான இந்த நான்கு நாணயங்கள் மிகவும் செலாவணியாகின்றன. இவற்றின் பூராக்கணக்கையும் பிரவிருத்தி என்னும் பெண் எழுதுகிறாள். ஏனென்றால் அவளேஇந்த நாணயங்களில் முத்திரையடித்து இவைகளைப் பெருக்குகிறாள். பிறகு அவளே இவற்றை சேகரித்து உருவாக்குகிறாள். மத்திய காலத்தில் அவளே இவற்றின் வரவு செலவையும் எழுதுகிறாள் இந்த அலங்கார வர்ணனை இருக்கட்டும். ஸ்பஷ்டமாகக் கூறினால் நாமரூப விஸ்தாரத்தை ப்ரக்ருதியே செய்கிறாள். ப்ரக்ருதியின் செய்கையே பிரவிருத்தி. பிரக்ருதி எனது பிரதிச்சாயையே அதனால் நானே உலகின் ஆரம்பமும், மத்தியும், அந்தமும் ஆவேன். (6)

मत्तः परतरं नान्यत्किञ्चिदस्ति धनंजय ।
मयि सर्वमिदं प्रोतं सूत्रे मणिगणा इव ॥ ७ ॥

மத்த: பரதரம் நாந்யத் கிஞ்சிதஸ்தி தநஞ்ஜய ।
மயி ஸர்வமிதம் ப்ரோதம் ஸூத்ரே மணிகணா இவ ॥

கானல் நீரின் உற்பத்தியை விசாரித்துக்கொண்டே போனால் அது சூரியனிடமே கொண்டுபோய் விடும். அதுபோல் இந்தப் பிரக்ருதியினால் ஏற்பட்ட ஸ்ருஷ்டி வியவகாரம் எப்பொழுது லயம் அடைகிறதோ அப்பொழுது நானே மீதியாகியிருப்பேன். அதனால் உற்பத்தியாவதும், காண்பதும், மறைவதும் என்னில் நிகழும் நிகழ்ச்சிகளே மணிகளில் ஊடுருவிப் போகும் நூலைப் போல நானே இருக்கிறேன். தங்கத்தினாலான மணிகளைத் தங்க நூலில் கோர்த்தாற்போல நானே மணியாகவும் நூலாகவும் இருக்கிறேன். (7)

रसोऽहमप्सु कौन्तेय प्रभास्मि शशिसूर्ययोः ।
प्रणवः सर्ववेदेषु शब्दः खे पौरुषं नृषु ॥ ८ ॥

पुण्यो गन्धः पृथिव्यां च तेजश्चास्मि विभावसौ ।
जीवनं सर्वभूतेषु तपश्चास्मि तपस्विषु ॥ ९ ॥

ரஸ: அஹமப்ஸு கௌந்தேய ப்ரபாஸ்மி சசி
ஸூர்யயோ: |
ப்ரணவ: ஸர்வவேதேஷு சப்த: கே பௌருஷம்
ந்ருஷு ||
புண்யோ கந்த: ப்ருதிவ்யாம் ச தேஜஸ்சாஸ்மி
விபாவஸௌ |
ஜீவனம் ஸர்வபூதேஷு தபஸ்சாஸ்மி தபஸ்விஷு ||

அதனால் ஜலத்தின் திரவத் தன்மையும், காற்றின் ஸ்பர்சமும், சந்திர சூரியர்களின் பிரகாசமும் நானே. பூமியின் கந்தமும் ஆகாசத்தின் சப்தமாகிற குணமும், வேதத்தின் ஓம்காரமும் நானே. மனிதனின் மனிதத் தன்மையும் நானே. அகங்காரிகளின் ஆணவமும் நானே. பராக்ரமமும் நானே. இதுவே என் உண்மை உருவம். தேஜஸின் அக்னி என்ற உருவமாகிற மேல் பரப்பை நீக்கியவுடன் அதன் உண்மை ஸ்வரூபம் தோன்றும். அதுவே நான். நானாவிதமான யோனிகளில் பிறந்த ஜீவராசிகள் மூவுலகங்களிலும் தங்கள் தங்கள் ஜீவிதத்தின் பொருட்டு வ்யவகரிக்கின்றன. சில காற்றைக் குடிக்கின்றன. சில புல்லைத் தின்கின்றன. சில அன்னத்தைப் புஜிக்கின்றன. சில ஜலத்தை நம்பியிருக்கின்றன. ப்ரக்ருதியின் ப்ரவிருத்தி வசப்பட்ட இப்பிராணிகள் வெவ்வேறான வாழ்க்கை நடத்துவதுபோல் தோன்றினாலும் அவை என்னிடமிருந்து வேறல்ல. நானே அவைகள்.
(8, 9)

बीजं मां सर्वभूतानां विद्धि पार्थ सनातनम् ।
बुद्धिर्बुद्धिमतामस्मि तेजस्तेजस्विनामहम् ॥ १० ॥

बलं बलवतां चाहं कामरागविवर्जितम् ।
धर्माविरुद्धो भूतेषु कामोऽस्मि भरतर्षभ ॥ ११ ॥

பீஜம் மாம் ஸர்வபூதாநாம் வித்தி பார்த்த ஸநாதனம் |
புத்திர் புத்திமதாமஸ்மி தேஜஸ் தேஜஸ்விநாமஹம் ||

பலம் பலவதாம் சாஹம் காமராக விவர்ஜிதம் |
தர்மாவிருத்தோ பூதேஷு காமோऽஸ்மி பரதர்ஷப ||

உத்பத்தியின் சமயத்தில் எவைகள் ஆகாசத்திலிருந்து முளைத்தெழுந்து பரவுகின்றனவோ, அவை அந்திம காலத்தில்

ஓம்காரத்தில் லயமடைகிறது. உலக வியவகார சமயத்தில் உல்கத்தில் நானுவிதமாகப் ப்ரவ்ருத்திக்கின்றவை எல்லாம் மஹாப்ரளய சமயத்தில் முற்றிலும் மறைந்து போகும். இந்த உலக வியவகாரங்களின் வித்து நானே. இந்த வித்தை நான உன் கையில் தருகிறேன். ஏ பாண்டவ, இதை நீ பகிரங்கமாக ஆத்மானுத்ம விசாரம் என்ற பெயருள்ள கிராமத்திற்கு எடுத்துச் செல். அங்கு இதன் உத்தம உபயோகத்தை நீ காண்பாய். இந்த அலங்காரச் சொற்களிருக்கட்டும். நான் சுருக்கமாகக் கூறுகிறேன். தபஸ்விகளின் தபஸும் நானே. பலிஷ்டர்களின் பலமும் நானே. புத்திமான்களின் புத்தியும் நானே. ஜீவர்கள் வியவகரிக்கும்பொழுது சிரேஷ்ட தர்ம காரியங்களைச் செய்யும் பொழுது ஸ்ரீ கிருஷ்ணு என்று கூறுகிறர்களே அந்தக் கிருஷ்ணன் நான்தான். சாதாரணமாக உலகில் இந்திரியங்களின் விகாரங் களினுல் மனம் போனபடி நடக்கிறர்கள். ஆனுல் தர்ம விருத்த மாக இல்லை. எவர்கள் விதிவிலக்காகிய கோணல் மாணலான மார்க்கததை விட்டுவிட்டு தங்களுக்கு விதித்திருக்கும் மார்க் கத்தில் நியமமாகிற தீவர்த்தியின் வெளிச்சத்தில் இருக்கிறர்களோ அவர்களுடைய இத்தகைய வியவகாரத்தினுல் தர்மம் பூர்ணத் வத்தையடைகிறது. உலகில் மோக்ஷ ரூபமான தீர்த்தங்களின் அதிகாரம் நமக்குக் கிடைக்கிறது. எவன் வேத மஹிமையாகிற மண்டபத்தில் இச்சா ரூபமான கொடியைப் படர விடுகிறுனே, அக்கொடியின் கர்ம பலன்களாகிற இலைகள் படர்ந்து மோக்ஷ மாகிற புஷபத்தைப் புஷ்பிக்கிறதோ அதுவரை நியமத்தை விடாமல் போகிறவனுடைய யாதொரு ஊக்கமுண்டோ அதுவே நான். ஒவ்வொன்ருய் கூறுவானேன் இவ்வுலகின் வஸ்து சமுதாயம் முழுவதும் என்னிடத்திலிருந்தே உண்டாகின்றன.

ये चैव सात्त्विका भावा राजसास्तामसाश्च ये ।
मत्त एवेति तान्विद्धि न त्वहं तेषु ते मयि ॥ १२ ॥

யே சைவ ஸாத்விகா பாவா ராஜஸாஸ்தாமஸாஸ்ச
யே ।
மத்த ஏவேதி தான் வித்தி ந த்வஹம் தேஷு தே மயி ॥

சாத்விக சுபாவமும் ரஜஸ், தமஸ் ஆகிய குணங்களும் என்னிடமிருந்தே உண்டானவை. அவை என்னிடமிருந்து உண்டானவையானுலும் என்னை பாதிக்காது. ஸ்வப்னத்தில்

காயம் ஏற்பட்டவர்களுக்கு விழிப்பு நிலையில் ஒன்றும் ஆகாதது போல பீஜகணிகா என்ற பழம் சதைப் பற்றுள்ளதாகவும், ரஸமுள்ளதாகவும் இருக்கும். ஆனால் அதில் விதையிலிருந்து மரம் முளைக்காது. முளையிலிருந்தே முளைக்கும். ஆனால் மரத் தத்வத்திலும் விதை இருக்கத்தானே இருக்கிறது? அதுபோல நான் விக்ருத ரூபமாகக் காணப்பட்டாலும் அப்படியில்லை. ஆகாயத்தில் மேகங்கள் உண்டாகின்றன. ஆனால் மேகத்தில் ஆகாயம் இருப்பதில்லை. மேகத்திலிருந்து ஜலம் உற்பத்தி யாகிறது. ஆனால் ஜலத்தில் மேகம் இருப்பதில்லை. மேகம் உறைவதினால் உண்டாகும் மின்னலில் ஜலம் இருக்கவா செய்கிறது; அக்னியிலிருந்து எழும் புகையில் அக்னியிருக்கிறதா? அதுபோல் நான் செயற்கை முறையில் கர்மம் செய்பவனாகத் தோன்றினாலும் அந்த விகாரம் என்னை வந்தடையாது. (12)

त्रिभिर्गुणमयैर्भावैरेभिः सर्वमिदं जगत् ।
मोहितं नाभिजानाति मामेभ्यः परमव्ययम् ॥ १३ ॥

த்ரிபிர் குணமயை: பாவை: ஏபி: ஸர்வமிதம் ஜகத் ।
மோஹிதம் நாபிஜாநாதி மாமேப்ய: பரமவ்யயம் ॥

ஜலத்தில் விளையும் பாசி ஜலத்தை மூடுகிறது. மேகத்தினால் ஆகாயம் மறைக்கப் படுகிறது. ஸ்வப்பனத்தை பொய் என்கிறோம். ஆனால் தூங்குகிறவனுக்கு அது நிஜம் போல் காண்கிறதல்லவா? கண்ணில் காஷம படருகிறது. அதனால் கண்ணின் பார்க்கும் சக்தி இழந்து விடுகிறதா? அதைப் போல முக்குணங்களாகிற நிழல் என்னைச் சுற்றியிருக்கிறது. அது திரை போல கனமாக என்னை மறைக்கிறது. அதனால் என்னை ஒருவரும் அறிய முடியவில்லை. எல்லாம் என்னிடமிருந்து உண்டானவைகளே. ஆனால் ஜலத்திலிருந்து உண்டான முத்து ஜலத்தில் கரைகிறதா? மண்ணிலிருந்து செய்த பாண்டம மணணோடு கலக்கின்றதானாலும், அக்னியில் வேகவைத்தால் வேறுகிறது. அதுபோல ஜகத்தில் சகல ஜீவஜந்துக்களும் என்னுடையவையே ஆனால் மாயையால் ஜீவதசை அடைந்திருக்கின்றன. அதனால் அவை என்னுடையவையாயினும் என் உருவில் இல்லை. என்னை அறியவுமில்லை. அகந்தை, மமதை, இவைகளின் மதத்தினால் விஷயத்தில் ஆழ்ந்து குருடாயிருக்கின்றன. (13)

दैवी ह्येषा गुणमयी मम माया दुरत्यया ।
मामेव ये प्रपद्यन्ते मायामेतां तरन्ति ते ॥ १४ ॥

தைவீ ஹ்யேஷா குணமயீ மம மாயா துரத்யயா ।
மாமேவ யே ப்ரபத்யந்தே மாயாமேதாம் தரந்தி தே ॥

ஆனால் தனஞ்சயா, அவை என்னுடைய மகத் தத்வமாகிற மாயையைக் கடந்து என்ரூபமாக எப்படியாகும்? மாயை என்னும் நதியில் பிரும்ம பர்வதத்தின் பிளந்த கண்வாயிலிருந்து முதன் முதலாக சங்கல்பம்என்னும் ஜலப்ரவாகம் பெருக ஆரம்பித்தவுடன் மஹாபூத ரூபமான சின்னச் சின்ன நீர் குமிழிகள் கிளம்பு கின்றன. சிருஷ்டியை விஸ்தரிக்கின்றன. அந்தப் பிரவாகம் பெருகிப் பெருகி காலகதி என்ற வேகத்துடன் கர்ம மார்க்கம், நிவ்ருத்தி மார்க்கம் என்ற இருகரைகளின் நடுவே ஓடுகின்றது. முக்குணமாகிற மேகங்களின் மழையால் வெள்ளப் பெருக்கெடுக் கிறது. அதை மோஹ ரூபி பிரவாஹம் என்று சொல்லலாம். இவ்வெள்ளப்பெருக்கினால் யமம், நியமம்என்ற நகர்கள் மூழ்கடிக்கப் படுகின்றன. இதில் துவேஷமாகிற சுழிகள் நிரம்பி இருக்கின்றன மத்ஸரமாகிற முதலைகளும், மதமாகிய மஹா மீனும், விளையாடு கின்றன. பிரபஞ்சமாகிற விளைவுகள் ஆங்காங்கு இருக்கின்றன.

இதில் கர்மம், அகர்மம், சுகம் துக்கம், என்ற கட்டைகள் மிதந்து வருகின்றன. நடுநடுவில் ராகமாகிற சிறு சிறு தீவுகளும் இருக்கின்றன. அவைகளில் காமமாகிற அலைகள் மோதுகின்றன அப்பொழுது அத்தீவின் நாற்புறமும், ஜீவராசிகளான நுரைகள் காணப்படுகின்றன. சில இடங்களில் அப்பிரவாகத்தை அகங் காரம் என்கிறோம். அப்பிரவாகத்தில் வரும் நுரையே வித்தை, தனம், சாமர்த்தியம் என்ற மும்மதங்கள் என்று கூறலாம். விஷய ரூபமான அலைகளின் மோதல்களால் அவை உயர எழும்பு கின்றன. காலகதி என்ற வேகத்தில் போகும் இந் நதியில் உதயம், அஸ்தமனம் என்ற வெள்ளப்பெருக்கு வருகிறது என்றும் கூறலாம். அப்பொழுது ஜனன மரணமான கரைகள் இடிந்து விழுகின்றன. பஞ்சபூதங்களாகிற நீர்க் குமிழிகள் வருவதும் மறைவதுமாக இருக்கின்றன. இதில் மோஹம், பிரமை என்ற மீன்கள் தைரியமாகிற மாமிசத்தை உண்டு வளர் கின்றன. அக்ஞானமாகிற சுழிகள் உண்டாகின்றன. பெரும் பாலும் மனப்பிராந்தி என்ற சாக்கடை ஜலம் சகதியாகிற ரஜோகுணத்துடன் இப்பிரவாகத்தில் விழும பொழுது அந்த

சப்தத்தின் கர்ஜனை சுவர்க்கம் வரை கேட்கின்றது. சில சமயம் தமம் என்னும் உபநதியின் சேர்க்கையால் பிரவாகம் பயங்கர மாயிருக்கின்றது. இவைகளில் சப்த ரூபமான மடுக்கள் இருக் கின்றன.

இம் மாயாநதி கடக்க மிகவும் அரிதானது. சில சமயம் இதில் வரும் ஜனன மரணரூப வெள்ளப் பெருக்கு சத்ய லோகத்தின் கோட்டையையே இடித்து தள்ளுகின்றது. பிரம்மாண்ட ரூபமான பாறைகள் இஜ்ஜலத்தின் மோதல்களால் விழுகின்றன. இதுவரை இந்த ஜலபிரவாகம் வேகம் குறைந்துவிடத் தொடங்கவில்லை. இம் மஹாமாயா நதியை யாரால் கடந்து செல்ல முடியும்? இதுவரை எவ்வளவோ உபாயங்கள் செய்து பார்த்தாகிவிட்டது. அதனால் பயனில்லை. தன் புத்தி பலத்தில் கர்வம் வைத்து, தன் பாஹு பலத்தில் நம்பிக்கை வைத்து இதைக் கடப்பவன் தன் நினைவை இழக்கிறான்.

சில சமயம் இவ்வித ஆத்ம புத்தியின் கர்வத்தால் செல்பவன் ஞான சக்தி என்னும் மடுவில் விழுந்து அபிமானம் என்னும் மீனால் விழுங்கப்படுகிறான். மூன்று வேதங்களாகிற ஓடத்தில் ஏறி சிலர் கடக்க எண்ணுகிறார்கள். அவர்கள் அகங்காரம் என்னும் பாறையில் மோதி, கர்வம் என்னும் மீனால் விழுங்கப் படுகிறார்கள். சிலர் யௌவனத்தின் பலத்தினால் நீந்தி காமம் என்னும் பாறையில் மோதுண்டு விஷய வாசனையாகிற மகர மச்சத் தினால் விழுங்கப்படுகிறார்கள். சிலர் வயோதிகமாகிற அலைகளில் சிக்குண்டு மதி மயக்கம் என்னும் செடி கொடிகளால் சுற்றப்பட்டு மாயா நதியில் ஆழ்ந்துவிடுகிறார்கள். சிலர் சோகரூபமான கரை களிலேயே மோதுண்டு இறக்கிறார்கள். சிலர் குரோதமாகிற சுழலில் சிக்கித் தவித்து மேலெழும்பிய உடனேயே துக்கமாகிற கழுகினால் கொத்தப்பட்டு அதற்கு இரையாகிறார்கள். சிலர் மரண மென்னும் மணற்பாங்கில் எறியப்பட்டு புதையுண்டு சாகிறார்கள்.

சிலர் யாகம், யக்ஞம் என்னும் பாதுகாப்பு பெல்டை மாட்டிக் கொண்டு கடக்க விரும்பினாலும் ஸ்வர்க்க ரூபமான கண்ணி களில் சிக்கிக்கொண்டு சாகிறார்கள். சிலர் மோக்ஷ மென்னும் அக்கரையை விரும்பி கர்ம ரூபமென்னும் புஜபலத்தில் நம்பிக்கை வைத்து நீந்துகிறார்கள். ஆனால் அவர்கள் விதி நிஷேதங்கள் ஆகிற சுழலில் சிக்குகிறார்கள். அந்நதியில் வைராக்ய மென்னும் படகுகள் நுழையக்கூட முடியாது. விவேகமென்னும் கயிற்றை கட்டிக் கொண்டு செல்லலாம் என்றாலும் பிரயோஜனமில்லை.

ஆனால் யோக பலத்தினால் அதைக் கடக்க முயற்சிக்கலாம். அப்படி முயற்சிப்பவர் வெகு சிலரே.

இப்படித் தன் சொந்த பலத்தினால் மாயாநதியைக் கடப்பவர்களுக்கு எதை உவமையாகக் கூறுவது? அபத்தியம் செய்யும் நோயாளியின் நோயைக் கட்டுப் படுத்த முடியுமா? துர்ஜனங்களின் புத்தி சாதுக்களை வசப்படுத்த முடியுமா? விஷய வாசனையில் சிக்கியவர்கள் சித்திகளை அடைய முடியுமா? நியாயாலயம் திருடனுக்குப் பயப்படுமா? தூண்டிலை மீன் விழுங்குமா? பயந்தவன் பிசாசை விரட்ட முடியுமா? இளம் மான் கன்று வலையை அறுத்து எறிய முடியுமா? எறும்பு மேரு பர்வதத்தைத் தாண்ட முடியுமா? இவை முடியுமானால் ஜீவனும் மாயா நதியைத் தாண்ட முடியும்? காமவெறியனிடம் சிக்கிய ஸ்திரீ பிழைக்க முடியுமா? அது போல ஜீவராசிகளால் மாயா மயமான இந்நதியைக் கடக்க முடியாது.

ஆனால் யார் என்னை ஸரள பாவத்துடன் பஜிக்கிறார்களோ, அவர்கள் இந்நதியை எளிதாகக் கடக்கிறார்கள். அவர்களுக்கு இம்மாயாநதியின் ஜலம் முழங்கால் அளவே. அவர்களுக்கு சத்குருவே வழிகாட்டி. அனுபவம் என்னும் தாழ்ந்த அணைக் கட்டின் வழியாக மெல்ல மெல்ல அவர்கள் செல்கிறார்கள் சில சமயம் அவர்களுக்கு ஆத்ம ஸமர்ப்பணம் என்னும் படகும் உதவுகிறது. அப்படகில் செல்பவர்கள் அகம்பாவம் என்னும் மூட்டை முடிச்சுகளைக் கொண்டு செல்வதில்லை. அந்த ஆத்ம ஸமர்ப்பணம் என்னும் படகானது சங்கல்பம், விகல்பம் என்னும் அலைகளை சாமர்த்தியமாக ஒதுக்கி ராகம் அனுராக மென்னும் சுழல்களினின்றும் ஒதுங்கி மெதுவாக அக்கரை சேர்கிறது. ஐக்கிய ரூபமான துறை அவர்களுக்குத் தென்படுகிறது. அதில் ஆத்ம போத ரூபமான கலங்கரை விளக்கம் தென்படுகிறது. இவ்விதமாக அவர்கள் நிவர்த்தி மார்க்கமாகிற அக்கரையை அடைகிறார்கள். சிலர் ஞானம், வைராக்கியம் என்னும் இரு கைகளால் நீந்தி ஸோஹம், ஸோஹம் என்று மூச்சையடக்கி அனாயாசமாக நிவர்த்தி என்னும் கரையை அடைகிறார்கள். என்னைப் பஜிக்கிறவர்களே இந்த மாயை என்னும் நதியைக் கடக்கிறார்கள் ஆனால் இவர்கள் மிக மிக சொற்பம் என்றறிவாய்.

न मां दुष्कृतिनो मूढाः प्रपद्यन्ते नराधमाः।
माययापहृतज्ञाना आसुरं भावमाश्रिताः ॥ १५ ॥

चतुर्विधा भजन्ते मां जनाः सुकृतिनोऽर्जुन ।
आर्तो जिज्ञासुरर्थार्थी ज्ञानी च भरतर्षभ ॥ १६ ॥

ந மாம் துஷ்க்ருதிநோ மூடா: ப்ரபத்யந்தே நராதமா: ।
மாயயாபஹ்ருதஜ்ஞாநா ஆஸுரம் பாவமாச்ரிதா: ॥

சதுர்விதா பஜந்தே மாம் ஜநா: ஸுக்ருதிநோऽர்ஜுந ।
ஆர்தோ ஜிஜ்ஞாஸுரர்த்தார்த்தீ ஜ்ஞாநீ ச பரதர்ஷப ॥

எவரிடம் அகங்காரம் இருக்கிறதோ அவர்கள் ஆத்ம ஞானத்தை அடையமாட்டார்கள். அவர்களுக்கு மோஹம் என்னும் பித்தம் தலைக்கேறி யிருக்கும். நியமம் என்னும் வஸ்திரம் அரையில் நழுவுவதும் தெரியாது. பவிஷ்யமாகிற அதோகதியைப் பற்றி வெட்கமே இருக்காது. வேதம் எதை வேண்டாமென்று தடுக்கிறதோ அதையே செய்வார்கள். ஹே பாண்டவா! எவர்கள் சரீரமாகிற கிராமத்தில் வந்தார்களோ, அவர்கள் கிராமத்திற்குத் தாங்கள் வந்த கடமையை மறந்துவிட்டு இந்திரிய மென்னும் கிராமத்திற்குச் செல்லும் ராஜபாட்டையில் அகந்தை, மமதை என்ற பெண்களைப்பற்றி வம்பளந்துகொண்டு செல்கிறார்கள். அந்த வெறியில் அவர்களுக்கு துக்கம், சோகம் என்ற யாதொரு காயம் படுகின்றதோ அதன் ஸ்மரணையே இருப்பதில்லை. மாயை என்னும் விஷம் அவர்களுக்குள் பரவி யிருக்கிறது. அதனால் அவர்கள் நிலை தடுமாறி என்னை மறக்கிறார்கள். ஆனாலும் பூர்வஜன்ம பாக்கிய வசத்தால் தங்கள் சுகத்தை விரும்பும் சில மக்கள் என்னை நான்குவிதமாகப் பஜிக்கிறார்கள். அவர்கள் முறையே ஆர்த்தன், ஜிக்ஞாஸு, அர்தார்த்தி, ஞானி எனப்படுவர். (15-16)

तेषां ज्ञानी नित्ययुक्त एकभक्तिर्विशिष्यते ।
प्रियो हि ज्ञानिनोऽत्यर्थमहं स च मम प्रियः ॥ १७ ॥

தேஷாம் ஜ்ஞாநீ நித்யயுக்த ஏகபக்திர் விசிஷ்யதே ।
ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோऽத்யர்த்தம் அஹம்
ஸ ச மம ப்ரிய: ॥

இவர்களில் ஆர்த்தன் எனப்படுவர் தங்கள் மனக்கஷ்ட நிவாரணத்திற்காக என்னை பஜிப்பவர்கள். ஜிக்ஞாஸு என்பவர் ஞானப்ராப்திக்காக என்னை பஜிப்பர். அர்த்தார்த்தி என்பவர்

செல்வத்திற்காக என்னை பஜிப்பவர். நாலாவது ஞானி என்பவர் மேற்கூறிய மூன்றையும் விரும்புவதில்லை. அவனே என் பிரிய பக்தன் அவனையே ஞானி என்றறி. ஞானமாகிற பிரகாசத்தில் அவனுக்குப் பேதமாகிற அந்தகாரம் நாசமடைந்து விட்டது. ஒருமை என்ற நிலையில் அவன் என் ரூபமே ஆகிறான். ஸ்படிகத்திற்குள் ஜலம் இருப்பதைப் போல நமக்குத் தோன்றுகிறதல்லவா? அவ்விதமாக ஞானி இவ்வுலகில் வாழ்கிறான். ஞானியின் வர்ணனை மிகவும் அற்புதம். வாயு ஆகாசத்தில் பரவியிருப்பது கண்களுக்குத்தெரிகிறதா? கண்களுக்குத் தெரியாததால் வாயுதத்வம் இல்லை என்று கூறமுடியுமா? அதுபோல அவன் என்னுள் ஐக்கியமாகிவிட்டாலும் அவன் சரீரம் உலகில் உள்ளவரை பக்தனென்ற பெயர் இருக்கும். விசிறியையோ, துணியையோ வீசி ஆகாசத்தில் இருக்கும் வாயு தத்வத்தை அறிவதுபோல சரீரத்தால் செய்யும் கர்மத்தின் தரத்தைப் பொறுத்து ஒரு பக்தனை அறியலாம். ஆனால் அவன் ஆத்மா என்றும் என்னுள்ளே லயித்திருப்பதால் அவன் என் ரூபமாகவே ஆகிறான். அவனுக்கு ஞானம் உதயமாகிவிட்டதால் அவன் என்னையே தன் ஆத்மாவாக உணர்கிறான். அதனால் சந்தோஷித்த நானும் அவனை என் ஆத்மாவாகவே கருதுகிறேன். தேகமிருந்தும், ஜீவனிருந்தும் இரண்டிற்கும் அப்பாற்பட்ட காரியத்தை அவன் செய்கிறான். (17)

उदाराः सर्व एवैते ज्ञानी त्वात्मैव मे मतम् ।
आस्थितः स हि युक्तात्मा मामेवानुत्तमां गतिम् ॥ १८ ॥

உதாரா: ஸர்வ ஏவைதே ஜ்ஞாநீ த்வாத்மைவ மே மதம்।
ஆஸ்த்தித: ஸ ஹி யுக்தாத்மா மாமேவ
அநுத்தமாம் கதிம் ॥

அதனால் தங்கள் தங்களுடைய உன்னதியின் பொருட்டு ஒவ்வொரு ஞானியும் என்னைப் பஜிக்கிறார்கள். நான் யாரை நேசிக்கிறேனோ அவர்களெல்லோரும் ஞானிகள் தான் பாலுக்கு ஆசைப்பட்டு நாம் பசுவைக் கயிற்றால் கட்டிப் போடுகிறோம். ஆனால் பசுவிற்கு கன்றின் பந்தனம் கயிற்றின் பந்தனத்தைவிட அதிகமாயிருக்கிறது. அதன் சரீரம் கயிற்றில் கட்டுண்டிருந்த போதிலும் அது, மனத்தாலும், அறிவாலும் பிராணனாலும் கன்றைத் தவிர வேறொன்றும் அறியாது அதைப்போல பக்தனுக்கும் நானே ஆதாரம். அவர்கள் எனக்கு மிகவும் பிரிய

மானவர்கள். அவர்கள் என்னை அடைந்து சம்சாரத்திற்குத் திரும்புவதை மறந்து விடுகிறார்கள். நதி சமுத்திரத்தை அடைந்து திரும்புவதை மறப்பது போல. அந்தக்கரணமாகிற மலைகுகையில் பிறந்த அனுபவம் என்னும் கங்கை சமுத்திரமாகிய என்னை அடைகிறது. அதிகம் சொல்வானேன்? எவன் ஞானி என்று சொல்லப்படுகிறானோ அவன் என் உயிர். (18)

बहूनां जन्मनामन्ते ज्ञानवान्मां प्रपद्यते ।
वासुदेवः सर्वमिति स महात्मा सुदुर्लभः ॥ १९ ॥

பஹூநாம் ஜந்மநாமந்தே ஜ்ஞாநவாந் மாம் ப்ரபத்யதே।
வாஸுதேவ: ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப: ॥

அந்த ஞானி விஷய வாசனையாகிற முட்களும் காமக் குரோதங்களாகிற புதர்களும் நிறைந்த ஸம்ஸாரமாகிற வனத்திலிருந்து மீண்டும் சத்வாசனை என்ற பர்வதத்தின் உச்சியை அடைகிறான். அங்கிருந்து அவன் சாதுக்களின் ஸத்கர்மங்களாகிய சரளமார்க்கத்தில் செல்கிறான் அகர்மமாகிற கரடு முரடான பாதையை விட்டு விடுகிறான். தன் வாழ்நாள் முழுவதும் அதே மார்க்கத்தில் அவன் சென்றாலும் ஆஸக்தி என்ற பாதரக்ஷைகளை அவன் அணிவதில்லை. பலனை உத்தேசித்தா அவன் போகிறான்? அதுவுமில்லை. இவ்விதமாக சரீர ஸம்யோகமென்னும் இரவில் தனியாகச் சென்று சென்று கர்மக்ஷயம் என்னும் காலை வேளையைப் பார்க்கிறான். அப்பொழுது குருகிருபை என்ற அருணோதய காலம் ஏற்படுகிறது. ஞானமாகிற மிருதுவான வெய்யில் அவன்மேல் படுகிறது. அவ்வெளிச்சத்தில் ஸமதையாகிற இயற்கையின் செல்வங்களை அவன் பார்க்கிறான். அச்சமயம் அவன் எங்கு நோக்கினாலும், அவனுக்கு நானே தென்படுகிறேன். பள்ளத்திலிருக்கும் நீரை குடத்தை அமிழ்த்தி எடுக்கும்பொழுது பள்ளத்தில் இருக்கும் நீர் உள்ளும் புறமும் இருப்பதைப்போல அவன் என்னுள் இருக்கிறான். நான் அவன் உள்ளும் புறமுமாக இருக்கிறேன். இது வாக்கால் சொல்லமுடியாதது. இவ்விதமாக அவன் ஞானம் என்னும் செல்வத்தை சம்பாதித்து உலகையே ஜெயிக்கிறான். இவ்விதமாக ஸ்வானுபவத்தில் ஆழ்ந்து உலகையே வாஸுதேவ மயமாகக் காண்கிறான். அவனே பக்தர்களில் சிரேஷ்டன். அவனே ஞானி அவனுடைய அனுபவமாகிற குடையில் சராசரமாகிற எல்லா ஸாமான்களும் கிடைக்கும்.

அவனைப்போல மஹாத்மாக்கள் கிடைப்பது துர்லபம். ஆனால் கிரீடி! எத்தனையோ பேர்கள் என்னைப் பஜிக்கிறார்கள். அவர்கள் போகத்திற்காகவும், காமத்திற்காகவும் பஜிக்கிறார்கள். ஆசையாகிய அந்தகாரத்தில் அவர்கள் திருஷ்டி மழுங்கிவிட்டது.

कामैस्तैस्तैर्हृतज्ञानाः प्रपद्यन्तेऽन्यदेवताः ।
तं तं नियममास्थाय प्रकृत्या नियताः स्वया ॥ २० ॥

காமைஸ் தைஸ் தைர் ஹ்ருதஜ்ஞாநா:
ப்ரபத்யந்தேऽந்ய தேவதா: ।
தம் தம் நியமமாஸ்த்தாய ப்ரக்ருத்யா நியதா: ஸ்வயா ॥

பலத்தில் இச்சை வைத்து என்னைப் பஜிக்கிறவர்களின் இதயத்தில் காமம் பிரவேசிக்கிறது. அந்தக் காமத்தின் சேர்க்கையினால் அவனுடைய ஞானம் என்னும் தீபம் அணைகிறது. இவ்விதமாக அவர்கள் உள்ளும் வெளியும் அந்தகாரத்தினால் சூழப்படுகிறார்கள். இதனால் நான் மிக அருகிலிருந்தபோதிலும் அவர்கள் என்னை அறிகிறார்களில்லை. இவர்கள் என்னை மறந்து பலவித முறைகளால் பலவித தேவதைகளை ஆராதிக்கிறார்கள். முதலாவது அவர்கள் ப்ரக்ருதி மாயை வசப்பட்டவர்கள். போகங்களைப் பெறத் துடிக்கின்றனர். இந்தப் பேராசையின் காரணமாக என்னை விசித்திரமாகப் பஜிக்கிறார்கள். இவ்வித பூஜைக்காக எத்தனையோ நியமங்களை வகுத்துக்கொள்கிறார்கள். எத்தனையோ பூஜைப் பொருள்களைச் சேகரிக்கிறார்கள். பற்பல விதமான பூஜைப் பொருள்களைப் பற்பல தேவதைகளுக்கு ஸமர்ப்பிக்கிறார்கள். (20)

यो यो यां यां तनुं भक्तः श्रद्धयार्चितुमिच्छति ।
तस्य तस्याचलां श्रद्धां तामेव विदधाम्यहम् ॥ २१ ॥

யோ யோ யாம் யாம் தநும் பக்த: ச்ரத்தயார்சிதும்
இச்சதி ।
தஸ்ய தஸ்யாசலாம் ச்ரத்தாம் தாமேவ விததாம்யஹம் ॥

இவ்விதமாக அன்னிய தேவதைகளை பூஜிக்க ஆதுரமுள்ளவர்களின் இச்சையையும் நானே பூர்த்தி செய்து வைக்கிறேன். ஸகல தேவ தேவியர்களும் நானே. ஆனால் அவர்கள் அதை அறிய மாட்டார்கள். அவர்கள் என்னை வெவ்வேறு பாவத்தால் வெவ்வேறு தேவதைகளாக பாவிக்கின்றனர். (21)

स तया श्रद्धया युक्तस्तस्या राधनमीहते ।
लभते च ततः कामान्मयैव विहितान्हि तान् ॥ २२ ॥

ஸ தயா ச்ரத்தயா யுக்தஸ் தஸ்யா ராதநமீஹதே ।
லபதே ச தத: காமாந் மயைவ விஹிதாந்ஹி தாந் ॥

இவ்விதமான பூஜா விதிகளில் சிரத்தை வைத்து அவர்கள் காரிய சித்தியைப் பெறும் பொருட்டு அந்தந்த தேவதைகளை உசிதமான முறையில் ஆ ரா த னை செய்ய விரும்புகிறார்கள். எந்த பாவத்துடன் பூஜிக்கிறார்களோ அந்தப் பலனை அடைகிறார்கள். ஆனால் என்னால்தான் இவைகள் பலன் பெறுகின்றன.

अन्तवत्तु फलं तेषां तद्भवत्यल्पमेधसाम् ।
देवान्देवयजो यान्ति मद्भक्ता यान्ति मामपि ॥ २३ ॥

அந்தவத்து பலம் தேஷாம் தத் பவத்யல்ப மேதஸாம் ।
தேவான் தேவயஜோ யாந்தி மத்பக்தா யாந்தி மாமபி ॥

ஆனாலும் இவர்கள் என்னை உண்மையாக அறியாமல் தங்கள் கற்பனைக் கோட்டைக்கு வெளியே வருவதில்லை. அதனால் சீக்கிரம் அழியக்கூடிய பலனைப் பெறுகிறார்கள். இவ்விதமான பூஜைகளைச் செய்வதே உலகத்தாரின் ஸாதனை. இவைகளின் பல போகங்களோ கனவைப் போல நிலையற்றவை ஆகும். இவ்வித பலனில் ஆசையில்லாமல் இவ்வித தேவ தேவி ரூபங்களை அவர்களிடமுள்ள பிரேமைக்காகவே பூஜிப்பவர்கள் அந்தந்த தேவ தேவி ரூபங்களை அடைகிறார்கள். ஆனால் உடல், மனம், உயிரால் என்னைப் பின்பற்றுபவர்கள் தேக முடிவில் என் ரூபமாகவே ஆகின்றனர். (43)

अव्यक्तं व्यक्तिमापन्नं मन्यन्ते मामबुद्धयः ।
परं भावमजानन्तो ममाव्ययमनुत्तमम् ॥ २४ ॥

அவ்யக்தம் வ்யக்திமாபந்நம் மந்யந்தே மாமபுத்தய: ।
பரம் பாவமஜாநந்தோ மமாவ்யய மநுத்தமம் ॥

ஆனால் ஒருவனுவது இவ்விதம் செய்கிறதில்லை. வீணாகத் தங்கள் ஹிதத்திற்கு ஹானியைத் தேடிக்கொள்கிறார்கள். பசுவின் குளம்படித் தண்ணீரில் நீந்துவதற்கு முயற்சிக்கிறார்கள். அமிர்தக்

கடலில் மூழ்கும்பொழுது யாராவது வாயை இறுக மூடிக் கொள்வார்களா? மனதில் சாக்கடையைப்பற்றி எண்ணு வார்களா? அமிர்தத்தில் பிரவேசித்து இறப்பதைவிட அமிர்தத் தன்மையாகவே ஆவது மேலல்லவா? பலனில் இச்சை என்னும் கூண்டைவிட்டு அனுபவம், ஸாதனம் என்னும இறக்கைகளின் உதவியால் சிதாகாசமென்னும் ஆனந்தத்தில் பறந்தாலென்ன? உயரமாகவும், இச்சைப்படி பறப்பதற்கு விஸ்தாரமாகவும் இருக்கும் சிதாகாசத்தை அளக்க ஏன் முயற்சிக்கவேண்டும்? நிராகாரத்தை ஸாகாரமாக ஏன் எண்ணவேண்டும்? ஸித்தனுகி விட்ட பின்பு ஸாதனத்தைச் செய்து வாழ்வை ஏன் முடித்துக் கொள்ளவேண்டும்? ஆனுல் ஏ பாண்டவா, நன்ருக யோசித்துப் பார்த்தாலும இநத ஜீவர்களுக்கு ஒன்றுமே தோன்ருது. (24)

नाहं प्रकाशः सर्वस्य योगमायासमावृतः ।
मूढोऽयं नाभिजानाति लोको मामजमव्ययम् ॥ २५ ॥

நாஹம் ப்ரகாசஃ ஸர்வஸ்ய யோகமாயா ஸமாவ்ருதஃ ।
மூடோऽயம் நாபிஜாநாதி லோகோ மாமஜமவ்யயம் ॥

இவர்களுக்கும் எனக்கும் நடுவில் ஆதிமாயை என்னும் படுதா தொஙகுவதினுல் கண்ணிருநதும் குருடர்களாய் இருக் கின்றனர் இதனுல் பிரகாசமாகிற என்னை இவர்களால் பார்க்க முடியாது. நானில்லாத பொருளும் உலகில் ஒன்றிருக்கிறதா? ரஸமில்லாத ஜலம் உண்டா? ஸ்பர்சமில்லாத காற்று உண்டா? ஆகாசம் இலலாத இடம் உண்டா? இவ்விதமாக நான் ஒருவனே எங்கும் நிறைந்திருக்கிறேன். (25)

वेदाहं समतीतानि वर्तमानानि चार्जुन ।
भविष्याणि च भूतानि मां तु वेद न कश्चन ॥ २६ ॥

வேதாஹம் ஸமதீதாநி வர்தமாநாநி சார்ஜுன ।
பவிஷ்யாணி ச பூதாநி மாம்து வேத ந கஸ்சன ॥

சென்றகாலம், நிகழ்காலம் இரண்டிலும் நானே இருக்கிறேன். வருங்காலமும் என்னைத் தவிர வேறல்ல. இதுவும் பேரளவில்

சொல்வதைத் தவிர இதில் ஒன்றும் வருவதோ போவதோ இல்லை. கயிற்றில் தோன்றும் ஸர்ப்பத்தை ஒருவரும் கறுப்பு என்றோ வேறு வர்ணம் என்றோ சொல்வதில்லை. அதுபோல பஞ்சபூதத்தினாலான செயற்கைக்குள் வித்யாசம் காணப்பட்டால் அவைகளில் வித்யாசம் காணப்படுவதில்லை. ஹே பாண்டுசுதா, நான் எப்பொழுதும் அவைகளில் ஊடுருவியிருக்கிறேன். ஆனால் இந்த பிராணிகளின் உலகம் இருக்கிறதே அதற்குக் காரணம் வெவ்வேறாக இருக்கிறது. அதைப்பற்றி கூறுகிறேன் கேள். (26)

इच्छाद्वेषसमुत्थेन द्वन्द्वमोहेन भारत ।
सर्वभूतानि संमोहं सर्गे यान्ति परंतप ॥ २७ ॥

இச்சாத்வேஷ ஸமுத்தேந த்வந்த்வ மோஹேந பாரத ।
ஸர்வபூதாநி ஸம்மோஹம் ஸர்கே யாந்தி பரந்தப ॥

அகங்காரத்திலும் உடலிலும் பிரீதி இருக்கும் பொழுது, அதிலிருந்து இச்சை என்னும் பெண் பிறக்கிறாள். அவள் காமம் என்னும் யௌவனாவஸ்தையை அடையும்பொழுது அவளுக்குத த்வேஷத்துடன் விவாகமாகிறது. இவ்விருவருக்கும் மோஹம் என்னும் குழந்தை பிறக்கிறது. அதை அவனுடைய தாத்தாவான அகங்காரம் வளர்த்துப் பெரியவனாக்குகிறான். அவனுக்குத் தைரியம் என்பவனுடன் விரோதம். ஒழுங்கிற்குக் கட்டுப்படமாட்டான். பிறந்தது முதல் ஆசை என்னும் தாதுபுஷ்டி ஔஷதத்தைச் சாப்பிட்டு வாட்ட சாட்டமாக வளர்ந்திருக்கிறான். அவன் அஸந்தோஷம் என்னும் மதுவை எப்பொழுதும் பானம் செய்கிறான். விஷய வாசனை என்னும் மாளிகையில் விக்ருதி என்னும் பெண்ணுடன் ரமித்துக்கொண்டிருக்கிறான். சுத்த பாவம் என்னும் வழியில் சங்கல்ப விகல்பமென்கிற முட்களைப் பரப்பியிருக்கிறான். இதனால் அவன் வசப்பட்ட பிராணிகள் பிரமையின் மோஹத்தை அடைந்திருக்கின்றன. சம்சாரம் என்ற காட்டில் துக்கம் என்ற பாரத்தினால் அழுத்தப்படுகிறான். (27)

येषां त्वन्तगतं पापं जनानां पुण्यकर्मणाम् ।
ते द्वन्द्वमोहनिर्मुक्ता भजन्ते मां दृढव्रताः ॥ २८ ॥

யேஷாம் த்வந்த கதம் பாபம் ஜநாநாம் புண்ய
கர்மணும் ।
தே த்வந்த்வ மோஹ நிர்முக்தா பஜந்தே மாம்
த்ருட வ்ரதா: ॥

இந்த சங்கல்ப விகல்பமாகிற முட்களை சில தைரியவான்கள் பார்த்துச் சற்றும் பிரமையடைவதில்லை. ஏகநிஷ்டை என்னும் பாதரக்ஷைகளை அணிந்து முட்களின் முனைகளை நசுக்கிக்கொண்டு மஹாபாதகமாகிற காட்டைக் கடக்கிறார்கள். புண்யம் என்னும் வேகத்தோடு ஓடிக்கொண்டு என்னை வந்தடைகிறார்கள் (28)

**जरामरणमोक्षाय मामाश्रित्य यतन्ति ये ।**
**ते ब्रह्म तद्विदुः कृत्स्नमध्यात्मं कर्म चाखिलम् ॥ २९ ॥**

ஜரா மரண மோக்ஷாய மாமாச்ரித்ய யதந்தி யே ।
தே ப்ரஹ்ம தத்விது: க்ருத்ஸ்ந மத்யாத்மம் கர்ம
சாகிலம் ॥

எவர்கள் மிகவும் ஆதுரத்துடன் ஜன்ம மரணமாகிற கதையே முடியும்படியான இம் முயற்சியைச் செய்கிறார்களோ, அவர்கள் கேவலம் ஒருதரம் இவ்விதப் பிரயத்தினம் செய்தால் போதும். அவர்களுக்குப் பரப்பிரும்மம் என்னும் பழுத்த பழம் கிடைத்து விடும். அதில் பூர்ணம் என்னும் மதுர ரஸம் சொட்டிக்கொண்டே இருக்கும். அப் பழத்தைச் சாப்பிட்டதும் அவன் பூரண காமனாகிறான். ஆத்ம ஞானத்தை அடைய வேண்டும் என்ற குதூகலம் பூரணமாகிறது. கர்மத்தின் செயல் ஸமாப்தி ஆகிறது. மனம் சாந்தமாகிறது. ஹே தனஞ்சய, எவர்களுக்கு வியாபாரத்தின் கொள்முதல் நானே, அவர்கள் இவ் வியாபாரத்தால் அத்யாத்மமான ஞானத்தை அடைகிறார்கள் சமத்வம் என்ற வட்டி ஏராளமாகக் கிடைக்கிறது. ஐக்கியம் என்னும் வியாபாரிகள் அவனைச் சுற்றிக் கொண்டே இருக்கிறார்கள் பேதம் என்னும் தரித்திரம் அவனை அணுகுவதில்லை. (29)

**साधिभूताधिदैवं मां साधियज्ञं च ये विदुः ।**
**प्रयाणकालेऽपि च मां ते विदुर्युक्तचेतसः ॥ ३० ॥**

ஸாதி பூதாதி தைவம் மாம் ஸாதி யக்ஞம் ச யே விது: ।
ப்ரயாண காலேऽபி ச மாம் தே விதுர்யுக்த சேதஸ: ॥

எவர்கள் பஞ்ச பூதங்களால் ஆன என் ஸாகார ரூபத்தை அனுபவ ரூபமான கையினால் பிடித்து அதிதைவமான ஜீவாத்மாவை ஸ்பர்சிக்கிறார்களோ, எவர்களின் ஞானசக்தியின் பலத்தினால் பரமாத்மாவாகிற நான் காணப்படுகிறேனோ, அவர்கள் சரீரத்தின் வியோகத்தால் துக்கமடைவதில்லை. ஆயுள் என்னும் கயிறு அறுந்து மரணம் என்னும் பாதாளத்தில் விழும் பிராணிகளுக்கு மனதில் பிரளயமே நிகழாதா? ஆனால் யார் என் சொரூபத்தை உள்ளபடி அறிகிறார்களோ அவர்கள் தேக முடிவில் மரணாவஸ்தையிலும் என்னை ஏனோ மறப்பதில்லை. நிபுணர்களான இவர்களே அந்தக்கரணத்தில் ரமித்த யோகிகள் இந்த சப்த ஜாலங்களான கங்கா ஜலத்தின் அடியில் ஆழம் எவ்வளவு என்ற அளவை அவர்கள் கூறவில்லை. அவ்வசனங்களாகிற பழங்கள் நாநாவிதமான அர்த்தங்களாலும், ரகஸியங்களாலும் நிரம்பி பாவனையாகிற வாசனையை வீசிக் கொண்டிருந்தது.

இவ்விதமாக இந்த கிருஷ்ணரூபி விருக்ஷத்திலிருந்து வசனங்களாகிற பழங்கள் ஸகஜ கிருபையாகிற மந்த வாயுவின் அசைவால் கவரப்பட்டு அர்ஜுனனின் காதுகளாகிற தொன்னையில் சென்று விழுகின்றன சித்தாந்தமே உருவெடுத்து வந்தது போலும் ப்ரும்மானந்தமாகிற சமுத்திரத்தில் மூழ்கிப் பரமாநந்தத்தில் கரைந்ததுபோலும் அவன் காணப்பட்டான். இவ்வதிசயத் தன்மையால் அர்ஜுனனின் ஞான நேத்ரம் திறந்தது. ஆச்சரியத்துடன் அமிர்தத் துளிகளைப் பருகத் தொடங்கினான். இவ்விதமான ஸுகஸம்பத்து கிடைத்தவுடன் அவனுக்கு சுவர்க்கம்கூட வெறிச்சென்றாகிவிட்டது. ஹ்ருதயத்தில் சொல்லவொண்ணாத சுகம் ஏற்பட்டது. வெளி விவகாரங்களிலேயே இவ்வளவு சுகம் பெருகும்பொழுது சுவானுபவ ரஸானுபூதியைப் பருக அவன் விரும்பினான். சீக்கிரமாகவே அவன் வசனரூபமான பழங்களை யுக்தி என்னும் உள்ளங்கையில் ஏந்தி அனுபவமாகிற வாயில் போட விரும்பினான். சுபத்ராபதி பார்த்தனுக்கு இப்பழங்களை சிந்தனை என்னும் நாக்கினால் சுவைக்கமுடியவில்லை. காரண காரியங்களாகிற பற்களினால் கடிக்கமுடியவில்லை. அதனால் அதை அவன் வாயில் போட்டுக்கொள்ள முடியவில்லை.

அவன் ஆச்சரியமடைந்து சொல்லத் தொடங்கினான். இவ் வசனங்கள் ஜலத்தில் பிரதிபலிக்கும் நக்ஷத்திரங்கள் போலல்லவா தோன்றுகின்றன! இவைகள் எளிமையாக இருந்தாலும்

சிக்கலாக அல்லவா இருக்கிறது! இவைகள் உண்மையில் சப்தங் களல்ல. ஆகாசத்தின் விஸ்தாரமே. இவ் விஸ்தாரத்தில் நம் மதி மூழ்கிவிட்டால் நம்மைக் கண்டுபிடிக்க முடியாது. மதியே மூழ்கிவிட்டால் பின் அறிய என்ன இருக்கிறது.

இவ்விதமாக யோசித்து அர்ஜுனன் கிருஷ்ணனைப் பார்த்தான். "ஸ்வாமி, இச்சப்தங்கள் என்னால் ருசிக்க முடியாமல் இருக்கின்றனவே! மிகவும் ஆச்சரியமாக அல்லவா இருக்கிறது! ஆழங்காண முடியாதபடி அல்லவா இருக்கிறது! இம்மாதிரி தீவிர சிந்தாந்தங்கள் காதுகளால் கூட கேட்டு அறிய முடியாத படி கடினமாக இருக்குமா? நான் இந்த சொற்பொழிவுகளைக் கேட்டேன் என் ஆச்சர்ய சக்தியே ஆச்சர்யப்படுகிறது. காது களாகிற ஜன்னல்கள் ஊடே பரவும் சப்தருபமான கிரணங்கள் ஹ்ருதயத்தில் பிரகாசத்தை கொடுக்க வில்லையே! இவ்வார்த்தை களின் சிரவணத்தால் மனஒருமையில்லாமல் போகிறது. இப் பொழுது இச்சப்தங்களின் அர்தத்தை அறிய எனக்கு விருப்பம் இருக்கிறது. இதை சொல்வதால் நேரம் வீணாகுமோ என்றிருக் கிறது. ஆனால் ஹே தேவா, இதைச் சீக்கிரமாக நிருபணம் செய்யுங்கள்" என்றான்.

இவ்விதமாக இதுவரை சொன்ன விஷயங்களை அழகாக விமர்சனம் செய்துவிட்டு இனி சொல்லவேண்டிய விஷயம் எப்படி இருக்க வேண்டும் என்பதை நாசுக்காகத் தெரிவித்து விட்டு நடுவில் தன் ஆர்வத்தை வெளியிட்ட அவனுடைய சாதுர்யத்தை பாருங்கள்! கிருஷ்ணன் ஹ்ருதயத்தையே ஆலிங்கனம் செய்யும் விருப்பமிருந்தாலும் மரியாதையின் எல்லைக்குள் இருக்கும் அழகைப் பாருங்கள்! குருவினிடம் கேள்வி கேட்கும் பொழுது எவ்வளவு ஜாக்கிரதையாக இருக்கவேண்டும் என்னும் மர்மத்தை அர்ஜுனன் ஒருவனே அறிந்தான்.

இப்பொழுது அர்ஜுனனின் இந்தக் கேள்விக்கு சர்வக்ஞரான ஸ்ரீஹரி எவ்விதம் பதிலளிக்கிறார் என்பதை சஞ்சயன் எவ்வளவு அழகாக வர்ணிக்கிறார் தெரியுமா? அக்கதையை நம் ஸரளமான ஸம்பாஷணையாலேயே வர்ணிப்போம். காதுக்குக் கேட்பதோடுகூட கண்களுக்கும் ஆனந்தத்தைக் கொடுப்பது போலவும் புத்திக்கு காதின் மூலமாக சப்தம் எட்டி அதன் ஸாரத்தை அது ருசிப் பதற்கு முன்னாலேயே அக்ஷரங்களின் சோபை இந்திரியங்களை மோஹிக்க செய்கிறது. எப்படி என்றால் மல்லிகை புஷ்பத்தின்

வாசனையை நாசி முகர்வதற்கு முன்பே கண்கள் அதன் அழகைப் பார்த்து மகிழவில்லையா? அதுபோலவே இந்த பாஷையின் அழகு இந்திரியங்களுக்கு சுக சாம்ராஜ்யத்தை அளித்துவிட்டு சித்தாந்த ரூபியான அறிவு என்னும் நகரத்தில் பிரவேசிக்கிறது இந்த உத்தமமானதும் இதுவரை சொல்லப்படாததுமான வார்த்தைகளைக் கேளுங்கள். நிவர்த்தி தேவரின் தாஸனான ஞான தேவரான நான் இந்த விண்ணப்பத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன். (30)

ஏழாவது அத்தியாயம் முற்றும்.

## எட்டாவது அத்யாயம்.

अर्जुन उवाच —

**किं तद्ब्रह्म किमध्यात्मं किं कर्म पुरुषोत्तम ।**
**अधिभूतं च किं प्रोक्तमधिदैवं किमुच्यते ॥ १ ॥**

அர்ஜுன உவாச—

கிம் தத் ப்ரஹ்ம கிமத்யாத்மம் கிம் கர்ம புருஷோத்தம 1
அதிபூதம் ச கிம் ப்ரோக்த மதிதைவம் கிமுச்யதே 11

அர்ஜுனன் கூறுகிறான். மகாராஜ்! கேளுங்கள் நான் சொல்வதை நிரூபியுங்கள். பிரும்மம் என்பது என்ன? கர்மம் என்பது எந்தப் பொருளின் பெயர்? அத்யாத்மம் என்று எதைக் குறிக்கிறீர்கள்? அதிபூதம் எப்படி இருக்கும்? அதிதைவம் என்பது என்ன? இவைகளை நான் தெளிவாக அறிந்து கொள்ளுமாறு நிரூபியுங்கள். (1)

**अधियज्ञः कथं कोऽत्र देहेऽस्मिन्मधुसूदन ।**
**प्रयाणकाले च कथं ज्ञेयोऽसि नियतात्मभिः ॥ २ ॥**

அதியக்ஞ: கதம் கோऽத்ர தேஹேऽஸ்மின்
மது ஸூதன ।
ப்ரயாணகாலே ச கதம் ஜ்ஞேயோऽஸி நியதாத்மபி: ॥

அதியக்ஞும் என்பது என்ன? அது இந்த தேகத்தில் என்ன நிலையில் இருக்கிறது? ஹே தேவ எவன் தன் அந்தக் கரணத்தை நிர்மலமாக வைத்துக் கொண்டிருக்கிருனே அவனுக்கு தேகத்தை விடும் ஸமயம் உங்கள் ஞாபகம் வரும் என்று கூறினீர்களே? அது எந்த விதம் ஏற்படுகிறது. எந்த பாக்யவான் சிந்தாமணி ரத்னத்தாலான கோவிலில் தூங்குகிருனே. அவன் தூக்கத்தில் உளறும் சப்தம்கூட வீணுகாது. அதுபோல் அர்ஜுனன் வாயிலிருந்து மேற்கூறிய சப்தங்கள் கிளம்பியவுடன் ஸ்ரீ ஹரி கூறுவார். நீ எதைகேட்டாயோ அதைக் கூறுவேன். அர்ஜுனன் காமதேனுவின் கன்று. கல்பகத்தருவுடன் இணைத்துக்கட்டப் பட்டிருக்கிறது. இதனுல் மனோரத ஸித்தி என்னும் லாபத்தை அவன் அடைகிருன் என்ருல் இதில் ஆச்சர்யம் என்ன இருக்கிறது? ஸ்ரீ கிருஷ்ணன் கோபத்தால் யாரை அடிக்கிருனே அவனுக்கே பரபிரும்மஸித்தி கிடைக்கிறது. அப்படியிருக்க அவர் கிருபையினுல் உபதேசம் பண்ணும்போது எவன் தான் லாபம் அடையமாட்டான்? அதைவிட நாம் கிருஷ்ண ரூபமாகவே ஆகிவிட்டால் நம் அந்தக் கரணமும் அவனுடையதாக ஆகிவிடு மல்லவா அப்போது நம் சித்தரங்கத்தில் ஸங்கல்ப்பமாத்திரத்தில் ஸித்திகள் விளையாடும. இதற்கு வேண்டியது பகவானிடம் பிரேமை. அது அளவிடமுடியாதபடி அர்ஜுனனிடம் நிறைந்திருக்கிறது. அதனுல் அவனுடைய மனோரதம் எப்பொழுதும் ஸித்தியாகும். அதனுல் அர்ஜுனன் இவ்விதம தன் மனோவிருப்பத்தைக் கேட்பானென்று அறிந்து கிருஷ்ணன் விடையாகிய உணவை முதலிலேயே பறிமாறி வைத்திருந்தார். ஸ்தன்ய பானம் செய்யும் குழந்கையின் பசியை மாதா முன்னுடியே அறிவாளன்ருே அது கேட்ட பிறகா அன்னை பால் கொடுக்கிருள் ஆகவே கிருபாநிதியான குருவின் விஷயத்தில் இது அற்புத மல்லவா சரி இது இருக்கட்டும். பகவான் என்ன கூறுகிருர் என்பதை இனி கவனிப்போம். (௨)

श्रीभगवानुवाच —

अक्षरं ब्रह्म परमं स्वभावोऽध्यात्ममुच्यते ।
भूतभावोद्भवकरो विसर्गः कर्मसंज्ञितः ॥ ३ ॥

ஸ்ரீ பகவானுவாச—

அக்ஷரம் ப்ரஹ்ம பரமம் ஸ்வபாவோऽத்யாத்மமுச்யதே ।
பூதபாவோத்பவகரோ விஸர்க: கர்மஸம்ஞித: ॥

ஸர்வேசுவரனுன கிருஷ்ணன் கூறுகிருர். இந்த துவாரங்கள் நிறைந்த சரீரத்தில் எந்தப்பொருள் நிரம்பி இருக்கிறதோ எவ்வளவு சலித்தாலும் கீழேவிழாதோ சூக்ஷ்மத்திலும் சூக்ஷ்மமாக இருந்தாலும் எது சூன்யமில்லேயோ, ஆகாசத்தை சல்லடை போட்டு சலிக்கும்படி அத்தனை சூக்ஷ்மமானதோ. பிரபஞ்ச ஞான மாகிற தோலில் ஒட்டிக்கொண்டிருக்கிற அதை எத்தனை உலுக்கி ஞலும் கீழே விழுவதில்லேயோ. அதை பரபிரும்மம் என்று கூறு கிருர்கள். அது உருவத்தை சிருஷ்ட்டித்தாலும் அந்த வஸ்துவுக்கு ஜன்ம தர்மம் கிடையாது அதனுல் சிருஷ்ட்டிக்கப்பட்ட வஸ்து நாசமடைந்தாலும் அது நாசமடைவதில்லே. இப்படித் தன் ஸகஜ நிலேயில் இருக்கும் இந்த பிரும்மத்தினுடைய அழிவற்ற தத்வத்தை அத்யாத்மமென்று கூறுகிருர்கள். நிர்மலமான ஆகாசத்தில் எங்கிருந்தோ வர்ண வர்ணமான மேகங்கள் வந்து குவிவதுபோல் இந்த சுத்தநிராகாரமான அதிஷ்டானத்தில் மகத்தத்வமாகிய பிரும்மாண்டத்தின் பூத பேதங்கள் காணப் படுகின்றன. கல்ப்பனேக்கெட்டாத பரபிருமமமாகிய பூமியில் ஆதி ஸங்கல்ப்பமாகிய மேகங்கள் எழுகின்றன. க்ஷண நேரத்தில் இதில் பிரும்மாண்டமாகிய மேகங்கள் கடை விரித்தாற்போல் தோன்று கின்றன. ஒரு பழத்துள் விதைகள் நெருங்கியிருப்பது போல் இவைகள் நெருங்கியிருக்கின்றன. இவைகளில் ஆவதும் அழிவது மாகிய ஜீவராசிகள் கணக்கில் அடங்கா. பினபும இபபிரும் மாண்டத்தில் அநேக அம்சங்களிலிருந்தும் ஸங்கல்ப்ப விகல்ப் பங்கள் தோன்றுவதும் மறைவதுமாக இருக்கின்றன. இப்படியாக சிருஷ்டி பெருகிக்கொண்டே போகிறது. இப்படி உண்டாவதும் அழிவதுமாகிய எல்லாமே பிரும்மம்தான். சமமாகவும் விரோத மாகவும் ஆகிய பாவனேகள் அடங்கிய இந்த ஸம்ஸாரத்தின் பெருக்கைப் பார்த்தால் ஏன் வீணுகப்போவதற்காகவே இவைகள் உண்டாகின்றன என்று தோன்றும். இவைகளே சிருஷ்டிக்கும் யோனிகளும் கணக்கில் அடங்கா. மூல அவ்யக்தத் திலிருந்து உண்டாகும் இவைகள் ஏன் பிறக்கின்றன? ஏன் அழிகின்றன? இவற்றுக்கு முக்கிய காரணகர்த்தா யார்? இவை யொன்றும் தெரியாது. ஆனுல் நடுவில் இவைகள் தன்பாட்டில் வளர்ந்துகொண்டே போகின்றன. இப்படி கர்த்தா இல்லா மலேயே உருவாகி அவ்யக்தத்தில லயமாகும் இவ்விளே யாட்டைக் கர்மம் என்று கூறுகிருர்கள். (3)

अधिभूतं क्षरो भावः पुरुषश्चाधिदैवतम् ।
अधियज्ञोऽहमेवात्र देहे देहभृतां वर ॥ ४ ॥

அதிபூதம் க்ஷரோ பாவ: புருஷஸ்சாதி தைவதம் |
அதியக்ஞோऽஹ மேவாத்ர தேஹே தேஹ ப்ருதாம்வர॥

இப்பொழுது அதிபூதத்தைப்பற்றிக் கூறுகிறேன் கேள். மேகம் எவ்விதம் உத்பத்தியாகி அழிகின்றதோ, எதன் இருப்புப் பொய்யோ, எது இல்லாதிருப்பதே ஸத்யமோ பஞ்சமகாபூதங்கள் ஒன்று சேர்ந்து எதற்கு உருவத்தைக் கொடுக்கிறதோ, பஞ்ச பூதங்களின் ஆசிரயத்தை அடைந்து அவைகளுடைய சேர்க்கையாலேயே காணப்பட்டு அவைகளுடைய வியோகத்தினால் நாம ரூபங்கள் அழிந்துபோவதை அதிபூதமெனக் கூறுகிறார்கள். இப்பொழுது அதிதைவமென்பதை புருஷன் என்று அறிவாய் அவன் பிரகிருதியை அடைந்து ஸம்பத்துக்களை அநுபவிக்கிறான் புத்தியால் அறிகிறான். இந்திரியரூபமான தேசத்துக்கு அவன் அரசன். தேகரூபமான ஸூர்யன் அஸ்தமிக்கும் போது அவன் ஸங்கல்ப ரூபமான பக்ஷிகள் அடையும் விருக்ஷம். அவன் பரமாத்மாவே தான். ஆனால் வேருகத்தோற்ற மளிக்கிறான். ஏனென்றால் அவன் அகங்காரமாகிற நித்ரையில் ஆழ்ந்திருக்கிறான். கனவின் சேஷ்டையினால் ஸந்தோஷமாகவும் துக்கியாகவும் ஆகிறான். அப்புருஷனை நாம் ஜீவனென்று கூறுகிறோம். அவனை இந்த பஞ்ச மகாபூதங்களாகிற மகாபூதத்தின் அதிதைவமென்று அறி. இப்பொழுது இந்தச் சரீரமாகிய நகரத்தில் நான் சரீரம் என்ற எண்ணத்தை மறக்கச் செய்கிற என்னை அதியக்ஞமென பார்கள். இது வரை கூறிவந்த அதிபூதம் அதியக்ஞம் எல்லாமே நான். ஆனால் நான், நல்ல தங்கம மற்ற உலோகங்களில் கலந்திருப்பது போல் அவைகளில இருக்கிறேன் அதனால் அதன் விலை மட்டமாகிறது. இந்த மட்ட உலோகங்களுடன் கலந்ததினால் தங்கத்தின் உத்தமத் தன்மை மறையவில்லை. ஆனால் அவைகளுடன் சேர்ந்திருக்கும் மட்டும் மாற்றுக் குறைவுதான. அதைப் போல இந்த அதிபூதம் அதிதைவம் எலலாம் அவித்தையாகிய தாயின் முந்தானையால் மறைக்கப்பட்டு இருக்கிறபடியால் அவைகளை அறியமுடியாது. அவித்தை என்னும் திரை நீங்கும்போது பேதபாவங்களின் எல்லை அழியும் போது அவைகளை ஒன்ருக்க் காண்கிறோம். ஆனால் அவைகள்

உண்மையில் வேறுவேரு என்ன? ஸ்படிகத்தின் மேல் தலை மயிரைப் போட்டு மூடினுல் ஸ்படிகத்தில் கருப்பு கோடிட்டது போல் தோன்றும். மயிரை நீக்கினுல் அவ்வரிகளும் மறைந்து விடும். வரிகளினுல் பிளவுபட்டது போல் தோன்றிய ஸ்படிகத்தை இப்பொழுது யாராவது ஒன்று சேர்த்தார்களா என்ன? இல்லை இல்லை. எப்பொழுதும் போலவே அது துண்டு படாமல் முழுமையாகவே இருக்கிறது. அதை போல் அகம்பாவம விலகியதும் ஜீவேசுவர ஐக்யம் தோன்றுகிறது. இந்த ஐக்யம் எங்கு யதார்த்தமாக தோன்றுகிறதோ அந்த ஈசுவரனுகிய அதியக்ஞமே நான். அப்பா! இதுவரை நான் என்ன சொன்னேனே அவை எல்லாம் யக்ஞகர்மத்திலிருந்து உண்டானவைகளே. நான் எந்த லக்ஷ்யத்தை குறிவைத்து இதைக் கூறினேனே அந்த லக்ஷ்யமே இந்த ஸம்பூர்ண ஜீவன்களுடைய விச்ராமஸ்தலமாகும். அதுவே நிஷ்காமஸுகத்தின் இருப்பிடமாகும். இதை மறுபடியும் தெளிவாகக் கூறுகிறேன் கேள்.

வைராக்யரூபமான விறகுகளைச் சேகரித்து அதில் இந்திரிய ரூபமான அக்னியை ஜ்வலிக்கச்செய். அதில் விஷய ரூபமான நெய்யை ஆஹுதிபண்ணு. வஜ்ராஸனமாகிய பூமியை ஸமதளப் படுத்தி சரீரமாகிற மண்டபத்தை அதில் எழுப்பி மூலபந்த முத்ரை என்னும் வேதிகையை அமைக்க வேண்டும். அதில் இந்திரிய நிக்ரகமாகிய அக்னியில் இந்திரியங்களாகிய ஸமித்தை பெரிய பெரிய யோக மந்திரங்களை உச்சரித்து யக்ஞம் செய்ய வேண்டும. மனம் பிராணன் இவைகளை நிக்ரகித்தலே யக்ஞ ஸம்பத்தின் ஆரம்பம். இதனுல் புகைவிலகிய ஞானக்னி ஜ்வலிததெழுகிறது. இவ்விதமாக மேற்கூறிய எல்லா சாமான் களையும் ஞானக்னியில் அற்பணிக்கவேண்டும். ஞானம் ஞேயத்தில் கலந்து விடும். பிறகு இந்த ஞேயமே பூரண நிஜஸ்வருபத்துடன் மீதியாக இருக்கும் அதன் பெயரே அதியக்ஞம்.

இவ்விதமாகப் பலவாருக ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மா எடுத்துக் காட்டியவுடன் மகாபுத்திமானன அர்ஜுனன் அறிந்துகொண்டு விட்டான். இதை முகக்குறிப்பால் அறிந்த ஸ்ரீ அச்சுதன் நன்ருகக கேட்கிருயே என்று கூறினர். இதைக்கேட்ட அர்ஜுனனுக்கு அளவற்ற ஆனந்தமுண்டாயிற்று. குழந்தையுடைய திருப்தியினுல் திருப்தியடைவதும் சிஷ்யனுடைய தேர்ச்சியினுல் கிருதார்த்தமாவதுமான இவ்விரண்டையும் ஒருதாயும் குருவுமே அறிவார்கள். அதனுல் அர்ஜுனனைப் பார்க்கப் பார்க்க

ஸ்ரீ கிருஷ்ணனின் மனதில் ஸாத்விக எண்ணங்கள் எழுந்து பொங்கிப் பொங்கி வழிந்தது. ஆனால் அதை பகவான் அடக்கிக் கொண்டார். பிறகு கோமளமான இனிய வசனங்களைக் கூறினார். அவ்வசனங்கள் பூர்ணஸுகத்தில் வாசனை கலந்தது போலவும் சாந்தமாகிற அமிருத அலைகளைப் போலவும் இருந்தன. அப்பொழுது அவர் கூறினார். கேட்பவர்களில் சிறந்த தனஞ்சயா! இவ்விதமாக மாயை எரிக்கப்பட்டவுடன் அதை எரிக்கக்காரண மாக இருந்த ஞானமும் எரிந்துவிடும். (4)

अन्तकाले च मामेव स्मरन्मुक्त्वा कलेवरम् ।
यः प्रयाति स मद्भावं याति नास्त्यत्र संशयः ॥ ५ ॥

அந்தகாலே ச மாமேவ ஸ்மரன் முக்த்வா களேபரம் ।
யஃ ப்ரயாதி ஸ மத்பாவம் யாதி நாஸ்த்யத்ர ஸம்சயஃ ॥

நாம் இதுவரை என்ன வர்ணித்தோமோ அந்த அதியக்ஞமே எல்லாவற்றிற்கும் ஆதிகாரணம் அந்த அதியக்ஞமே நான்தான். அந்திம காலத்தில் என்னை அறிந்து தேகம் பொய் என்று அறிந்து தேர்ந்து ஆகாசத்தில் மேகங்களால் கட்டப்பட்ட கோட்டை மறைவது போல் இதுவும் ஒரு நாள் மறையும் என்றறிந்து ஆத்ம ஸ்வரூபத்தில் லயிக்கவேண்டும். அநுபவம் என்னும் மாளிகையில் நிச்சயமென்னும் அறையில் இருந்தோ மானால் வெளியில் எங்காவது போகவேண்டும் என்ற எண்ணமே இருக்காது. இந்த விதமாக உள்ளும் வெளியும் எனது ரூபமாக இருப்பவர்களுக்கு பஞ்சபூதங்களினாலான ஆவரணம் தானே விழுந்து விடுகிறது அல்லது இந்தப் பஞ்சபூதங்களினாலான திரைகள் மறையாவிட்டாலும்கூட இப்படி ஒரு திரை இருக்கிறது என்ற எண்ணமே அவனுடைய மனதில் எழாது அதனால் அந்தத் திரை விழுந்தால் என்ன விழாவிட்டால் என்ன? அவனுடைய அனுபவம் அவனை விட்டு ஒரு நாளும் அகலாது. அவனுடைய நம்பிக்கை ஐக்யத்தினோடு சாஸ்வதமென்னும் ஹ்ருதய ரூபமான வார்ப்படத்தில் வார்க்கப் பட்டிருக்கிறது. அது பூர்ணானந்தமெனும் கடல் நீரால் கழுவப்பட்டிருக்கிறது. அதனால் அது மலினமே அடையாது. ஆழ்ந்த தண்ணீரில் அமிழ்த்திய குடத்தின் மேல் பக்கமும் உள்ளும் தண்ணீரால் நிரம்பி இருக்கிறது, அகஸ்மாத்தாக அந்தக்குடம் உடைந்தாலும் இதனால் அந்த ஜலத்துக்கு ஒரு கெடுதலும்

உண்டாகாது அதைப்போலவே இவனுடைய சரீரத்துக்கும் ஏற்படுகிறது. சர்ப்பம் சட்டை கழற்றினல் அதற்கு ஏதாவது தீங்கு உண்டாகிறதா? அதிக உஷ்ணத்திஞல் மேல் துணியை எடுத்து எறிந்தோமாஞல் இதனல் அவயவங்களுக்கு ஏதாவது நஷ்ட முண்டாகிறதா? அதைப்போலவே இவனுடைய சரீரத்துக்கும் ஏற்படுகிறது. ஆத்மா என்னும் பொருளால் சரீரம் நிரம்பியிருக்கும். இதை புத்தி யறிந்து விட்டால் பின் அது வ்யாகூலமடையாது அதனல் இந்தக் காலத்தில் இவ்விதமான தத்வத்தை அறிந்து தேகத்தை விடுபவன் எனது உருவமாகவே ஆகிவிடுகிருன். சாதாரண நியமம் என்னவென்ருல் மரணம் கழுத்தைப் பிடிக்கும்போது அந்தக்கரணம் எப்பொருளை நினைக்கிறதோ அப்பொருளாகவே அவன் ஆகிருன். ஒருவன் பிரமையினல் காற்றின் போக்கில் ஓடி ஓடி இரண்டு அடிக்கு முன்னல் இருக்கும் கிணற்றில் விழுவானேயாஞல் அச்சமயம் அவனைத் தடுக்க ஒருவனும் இல்லையாஞலும் இருந்தாலும் அவன் விழத் தானே செய்வான். அதைப்போல மரண சமயத்தில் எந்தப் பொருள் அவன் கண் முன்னல் நிற்கிறதோ அப்பொருளாகவே அவன் பிறப்பாஞஞல் அதில் ஆச்சர்யமில்லை. மனிதன் விழித்தெழும்போது எதை நினைக்கிருனே எதைக் கற்பனை பண்ணுகிருனே தூக்கத்தில் அதையே கனவாகக் காண்கிருன். (5)

यं यं वापि स्मरन्भावं त्यजत्यन्ते कलेवरम् ।
तं तमेवैति कौन्तेय सदा तद्भावभावितः ॥ ६ ॥

யம் யம் வாபி ஸ்மரன் பாவம் த்யஜத்யந்தே
களேபரம் ।
தம் தமேவைதி கௌந்தேய ஸதா தத்பாவ பாவித: ॥

உயிருடன் வாழும் ஸமயத்தில் மனது எதை விரும்புகிறதோ அதை மரண ஸமயத்தில் விசேஷமாகக் கனவுபோல் காண்கிருன் அது ஒரு சித்ரத்தை ஸினிமா திரையில் காண்பிப்பதுபோல் ஆகும் அப்பொருள்களில் எது முன்னல் நிற்கிறதோ அவன் மரணம் அடையும்போது அதாகவே பிறக்கிருன். (6)

तस्मात्सर्वेषु कालेषु मामनुस्मर युद्ध्य च ।
मय्यर्पितमनोबुद्धिर्मामेवैष्यस्यसंशयम् ॥ ७ ॥

தஸ்மாத் ஸர்வேஷு காலேஷு மாமநுஸ்மர யுத்ய ச ।
மய்யர்பித மனோ புத்தி: மாமேவைஷ்யஸ்யஸம்சயம் ॥

இதனால் நீ எப்பொழுதும் என்னையே நினைத்துக் கொண்டு கண்களால் எதைப்பார்க்கிறாயோ, காதுகளால் எதைக்கேட்கிறாயோ, மனதினால் எதை நினைக்கிறாயோ, அவைகளெல்லாம் உள்ளும் புறமுமாக என்னுடையதாகவே இருக்கட்டும். அப்பொழுது நான் என்னுடைய இயற்கை வடிவுடன் உனக்குத் தோன்றுவேன். அர்ஜுனா, நீ இப்படி திடபக்தியாக இருக்கும் போது தேகம் நாசமடைந்தாலும் அது உண்மையில் மரணம் இல்லை. இந்நிலையில் பாபபுண்ணியங்களைச் சேர்த்து வைப்பதில் உனக்கு பயமேன்? நீ உண்மையில் உனது புத்தியையும் மனதையும் என்பால் வைப்பாயாகில் அவசியம் என்னை அடைவாய். இதுஎப்படி முடியும் என்று உனக்கு ஸந்தேகம் இருந்தால் நீ அப்யாசம் செய்துபார். பிறகு அப்படி இருக்கவில்லையானால் என்னைக் கோபித்துக்கொள். (7)

अभ्यासयोगयुक्तेन चेतसा नान्यगामिना ।
परमं पुरुषं दिव्यं याति पार्थानुचिन्तयन् ॥ ८ ॥

அப்யாஸ யோக யுக்தேன சேதஸா நான்யகாமிநா ।
பரமம் புருஷம் திவ்யம் யாதி பார்த்தானுசிந்தயன் ॥

இந்த விதமான அப்யாசத்தால் யோகம் சித்தத்துக்கு இதமாக இருக்கிறது. முயற்சியால் நொண்டியும் மலை ஏறுகிறான் அப்பா, அதுபோல் நிரந்தரமான அப்யாசத்தால் சித்தத்தில் பரமபுருஷனிடம் ஈடுபாடு உண்டாகட்டும் பிறகு சரீரம் இருந்தால் என்ன இல்லாவிட்டால்தான் என்ன அநேகவித நிலையை அடைந்த இந்தச்சித்தம் ஆத்மாவை ஒருதரம் விரும்பிவிட்டால் பிறகு தேகம் இருக்கிறதா? அல்லது இல்லையா? என்று எண்ணப் போகிறது? நதி பிரவாகம் ஹோ ஹோ என்ற இரைச்சலுடன் எப்பொழுது கடலை அடைகிறதோ பிறகு அது பின்னால் என்ன நடக்கிறது என்று திரும்பியா பார்க்கிறது? இல்லை இல்லை அது ஸமுத்திரத்தில் தன்னை இழக்கிறது. அதுபோல் சித்தம் ஞான ஸ்வரூபமாகும்போது, பரமானந்தத்தில் ஆழும் பொழுது ஜனனமரணம் அதற்கு முடிவடைகிறது. (8)

कविं पुराणमनुशासितारमणोरणीयांसमनुस्मरेद्यः ।
सर्वस्य धातारमचिन्त्यरूपमादित्यवर्णं तमसः परस्तात् ॥ ९ ॥

प्रयाणकाले मनसाचलेन भक्त्या युक्तो योगबलेन चैव ।
भ्रुवोर्मध्ये प्राणमावेश्य सम्यक्स तं परं पुरुषमुपैति दिव्यम् ॥

கவிம் புராண மநுசாஸிதார-
மணோரணீயாம்ஸமநுஸ்மரேத் ய: ।
ஸர்வஸ்ய தாதார மசிந்த்ய ரூப
மாதித்ய வர்ணம் தமஸ: பரஸ்தாத் ॥

ப்ரயாணகாலே மனஸாசலேன
பக்த்யா யுக்தோ யோகபலேன சைவ ।
ப்ருவோர்மத்யே ப்ராணமாவேச்ய ஸம்யக்
ஸ தம் பரம் புருஷமுபைதி திவ்யம் ॥

எவனுடைய நிலை உருவமற்றதோ, ஜனனமரணங்கள் எவனை அணுகாதோ, அவன் எங்கும் நிறைந்தவனாகிறான். எது ஆகாசத்தைவிடப் பழமையோ, பரமாணுவையும்விட சூக்ஷ்மமானதோ, எதனுடைய இருப்பினால் ஜகத் இயங்குகிறதோ எது ஜகத்தை உற்பத்திசெய்கிறதோ, எது ஜகத்துக்கு ஜீவனோ, எது எண்ணத்துக்கு எட்டாததோ, எதை யூகிப்பதற்கு சாஸ்த்ரங்களே பயப்படுகிறதோ அதுவே அது. விட்டில் பூச்சி ஜோதியை விழுங்குமா! பிரகாசத்தில் இருட்டு நுழையுமா? வெளிப் பார்வைக்கு அவனுக்கு காலையும் பகலும் இரவாகவே தோன்றும் ஸூர்ய கிரணங்களைப்போல் ஜ்வலிப்பதும் ஞானி மனதில் எப்பொழுதும் உதயமாகி இருப்பதும் அஸ்தமனத்தை அறியாததுமான அந்த பரிபூர்ண பிரும்மத்தை அறிந்து எவன் மரணகாலம் வந்தவுடன் ஏகாக்ரசித்தத்தில் இருக்கிறானோ, அல்லது பத்மாஸனமிட்டு அமர்ந்து வடக்குமுகமாக இருந்து இதயத்தில் கர்மயோகத்தின் ஸுகத்தை நிரப்பி அந்தக்கரணத்தை ஏகாக்ரப்படுத்தி சுவரூபபிராப்திக்காக அதிஇச்சையுடன் அதுவே தானாகும்பொருட்டு அப்யஸிக்கிறானோ, அந்த அப்யாஸத்தினால் கிடைத்த யோகத்தின் மூலமாக சுழும்னா நாடியின் மத்ய மார்க்கத்தின் வழியாக அக்னிசக்கரத்திலிருந்து பிரும்மரந்திரம் வரை போகிறானோ. அவனுடைய சரீரம் சேதனாவஸ்தையில்

இருப்பதுபோல் வெளியில் தோன்றினும் அவனுடைய பிராணன் மகாகாசத்தில் பிரவேசித்து விடுகிறது. மேலும் எவன் மனதை ஒருமுகப்படுத்தி தைரியமாக பக்தியின் பாவனையினால் பெருமித மடைந்து யோகபலத்தால் தன்னை நன்கு தயாரித்துக்கொண்டு சேதனா சேதன வஸ்துக்களிலிருந்து விடுபட்டவனாகி புருவமத்தியிலுள்ள ஆக்ஞாசக்ரத்தில் பிரவேசிக்கிறானோ, அவன் மணியின் நாதம் மணியிலேயே லயமடைவதுபோல், குடத்துக்குள் ஏற்றி வைத்த விளக்கு எங்கு கொண்டு போனாலும் தெரியாதது போல் ஹே பாண்டவா அவன் உலகில் இருந்து விட்டுப்பின் தனது சரீரத்தைவிடுகிறான். அவனே பரபிரும்மம் அவனே பரமபுருஷன் அவனுடைய நிலை அவனிடத்திலேயே அடங்குகிறது (9-10)

यदक्षरं वेदविदो वदन्ति विशन्ति यद्यतयो वीतरागाः ।
यदिच्छन्तो ब्रह्मचर्यं चरन्ति तत्ते पदं संग्रहेण प्रवक्ष्ये ॥ ११ ॥

யதக்ஷரம் வேதவிதோ வதந்தி
விசந்தி யத்யதயோ வீதராகா: ।
யதிச்சந்தோ ப்ரஹ்மசர்யம் சரந்தி
தத்தே பதம் ஸங்க்ரஹேண ப்ரவக்ஷ்யே ॥

எல்லா ஞானங்களுக்கும் எல்லையான ஆத்ம ஞானக் களஞ்சியமான ஞானி ஜனங்கள் எதைத் தங்கள் கூறிய மனதினால் அக்ஷரம் என்று கூறுகிறார்களோ, அது உண்மையில ஒரு அகண்ட ஆகாசமாகும பிரசண்டவாயுவினாலேயும் அதைக்கலைக்க முடியாது. மேகங்கள் அதற்கு முன எப்படி நிற்கும்? புத்தியினால் அறியக்கூடிய வஸ்துவற்கு ஒரு எல்லையுணடு. ஆனால் எந்த வஸ்துவை ஞானத்தினாலும அறியமுடியாதோ அதுவே அக்ஷரம் எனறு கூறப்படுகிறது. வேதார்த்தங்களை அறிந்த ஞானிகள் அதை அக்ஷரமென்று கூறுகிறார்கள். அது இயற்கைக்கு அபபால் உள்ளது. பரமார்த்த ஸ்வரூபமே அது எவர்கள் விஷயமாகிய விஷத்தை ஒழித்து விட்டு எலலா இந்திரியங்களுக்கும் பிராயச்சித்தம செய்து விட்டு தேகரூபமான விருக்ஷதின் நிழலில் உட்கார்ந்திருககிறார்களோ எல்லாவிதத்திலும் விரக்தர்களாகி அனவரதமும தனது முடிவை எதிர்பார்க்கிறார்களோ எது நிஷ்காம புருஷர்களுக்கு இஷ்ட தெய்வமோ, எதனுடைய விருப்பத்துக்கு முன்னால் அப்பாவிகளான அவர்கள் பிரும்மசர்யம் முதலிய சங்கடங்களைப்பற்றிக் கவனிப்பதில்லையோ. நிஷ்டூரமாக

இந்திரியங்களை பலவீனமடையச் செய்கிறார்களோ அப்படிப்பட்ட அவர்களாலும் அடையமுடியாத துர்கமமான இடம் ஒன்றிருக் கிறது. வேதம் அதன் கரையிலேயே முழுகிவிடுகிறது. அந்த உத்தமபதம் மேற்கூறிய ரீதியில் செல்பவர்களுக்குக் கிடைக் கிறது. இதை மறுபடியும் உனக்கு எடுத்துக் கூறுகிறேன் என்றார். அர்ஜுனன் கூறுவான்- "ஸ்வாமி, நான் இதையே சொல்ல இருந்தேன் அதற்க்குள் நீங்களே கிருபை புரிந்து விட்டீர்கள். இப்பொழுது இதைப்பற்றி நீங்கள் வர்ணித்துக் கூறுங்கள் ஆனால் பதங்கள் எளிமையாக இருக்கட்டும்" அப்பொழுது மூன்று உலகங் களுக்கும் ஜோதியாக விளங்கும் கிருஷ்ணன் கூறுவார்- உன் தரம் எனக்குத் தெரியாதா என்ன? நான் தெளிவாகவும் சுருக்கமாகவும் கூறுகிறேன் கேள். மனதை வெளியில் அசையச் செய்யும் ஆசையை சர்வதா விட்டுவிடு ஹ்ருதய ரூபகுகையில் எப்பொழுதும் மூழ்கி இருக்கவேண்டும். (11)

सर्वद्वाराणि संयम्य मनो हृदि निरुद्धय च ।
मूर्न्ध्याधायात्मनः प्राणमास्थितो योगधारणाम् ॥ १२ ॥

ஸர்வத்வாராணி ஸம்யம்ய மநோ ஹ்ருதி நிருத்த்ய ச ।
மூர்த்ந்யாதாயாத்மந: ப்ராண மாஸ்த்திதோ
யோக தாரணாம் ॥

ஆனால் சகல இந்திரிய துவாரங்களும் ஒழுங்கு என்னும் கதவுகளால் மூடப்பட்டு இருநதால்தான் இந்தக்காரியம் நடை பெறும். அப்பொழுதுதான மனம் இதயததில் அடைபட்டு ஸ்திரமான ஸகஜ நிலையில் இருக்கும கைகால் நொண்டியான மனிதன் வீட்டை விட்டு வெளியேற முடியாதவாறுபோல், ஹே பாண்டவா, இவ்விதமாகச் சித்தம் ஸ்திரமான பிறகு பிராணனை ஓங்கார ரூபமாக நினைத்து மெல்ல மெல்ல கிரமமாக பிரும்மரந்திரம்வரை கொண்டுபோகவேண்டும். அங்கு ஆகாசத்தில் கலந்த வாயு தெரியாததுபோல் தாரணையின பலத்தால் அங்கு அதை லீனமடையச் செய்யவேண்டும். ஓங்காரத்தின் மூன்று மாததிரைகளும் அர்த்த மாத்திரையில் லீனமடையும்வரை அந்த வாயு பிரும்மரந்திர ஆகாசத்தில் ஸ்திரமாக இருக்கவேண்டும். பிறகு இந்த ஐகய நிலையில் ஓங்காரம் பிரும்மத்தில் லயமாகும். (12)

ओमित्येकाक्षरं ब्रह्म व्याहरन्मामनुस्मरन् ।
यः प्रयाति त्यजन्देहं स याति परमां गतिम् ॥ १३ ॥

ஓமித்யேகாக்ஷரம் ப்ரஹ்ம வ்யாஹரன் மாம்
அநுஸ்மரன் ।
ய: ப்ரயாதி த்யஜன் தேஹம் ஸ யாதி பரமாம் கதிம் ॥

இவ்விதமாக ஓங்காரத்தின் ஸ்மரணமும் இல்லாமல் போனவுடன் அதே சமயத்தில் பிராணனும் தேகத்திலிருந்து பிரிந்து விட்டால் அப்பொழுது ஓங்காரத்துக்கு அப்பாலுள்ள பிரும்மானந்த ஸ்வரூபமே மிஞ்சும். ஏகாக்ஷரம் என்னும் பிரணவமே பிரும்மம் என்று அறி. அதுவே எனது ஸ்வரூபம். அதை நினைத்துக் கொண்டு மேற் கூறியவாறு எவன் தேகத்தை விடுகிறானோ அவன் நிச்சயமாக என்னை அடைகிறான். அவனுக்கு என்னை அடைவதைத்தவிற என்ன லாபம் இருக்கிறது? ஆனால் ஹே அர்ஜுனா! அந்தக்காலத்தில் இந்த எண்ணம் எப்படி வரும்! இந்திரியக்கூட்டங்கள் சிதறிக்கிடக்கும்போது வாழ்வின் சுகம் அஸ்தமிக்கும்போது, உள்ளும் வெளியும் மிருத்யுவின் சின்னங்கள் வெளியாகும்போது, யாரால் பத்மாஸனம் போட்டுக் கொண்டு உட்கார்ந்திருக்கமுடியும்? யாரால் இந்திரியங்களைக் கட்டுப்படுத்தமுடியும்? அந்தகரணத்தால் ஓம்காரத்தை எப்படி ஸ்மரிக்கமுடியும்? இம்மாதிரி ஸந்தேகங்களுக்கு மனதில் இடமே கொடுக்காதே. ஏனென்றால் என்னையே நினைத்து எனக்கே ஸேவை செய்பவர்களுக்கு அந்திமசமயத்தில் நானே அவர்களுடைய வேலையாளாகிறேன். (13)

अनन्यचेताः सततं यो मां स्मरति नित्यशः ।
तस्याहं सुलभः पार्थ नित्ययुक्तस्य योगिनः ॥

मामुपेत्य पुनर्जन्म दुःखालयमशाश्वतम् ।
नाप्नुवन्ति महात्मानः संसिद्धिं परमां गताः ॥

அநந்ய சேதா: ஸததம் யோ மாம் ஸ்மரதி நித்யச: ।
தஸ்யாஹம் ஸுலப: பார்த்த நித்ய யுக்தஸ்ய
யோகிந: ॥

மாமுபேத்ய புனர்ஜன்ம து:காலய மசாச்வதம் ।
நாப்நுவந்தி மஹாத்மாந: ஸம்ஸித்திம் பரமாம் கதா: ॥

எந்த மகான்கள் விஷயத்துக்குத் திலதர்ப்பணம் செய்துவிட்டு பிரவிருத்தியின் கால்களுக்கு விலங்கிட்டுவிட்டு என்னை ஹ்ரு தயத்தில் வைத்து பூஜிக்கிறார்களோ, அந்த போகத்தினுல்கூட அவர்களுக்கு திருப்தி ஏற்படுவதில்லையோ, பசி தாகம் முதலிய வைகளை மறக்கிறார்களோ அ வ ர் க ளு க் கு க் கண்கள் முதலிய இந்திரியங்களை அடக்குவது என்ன கஷ்டமான காரியமா? அப்படி நிரந்தரமாக ஏகாக்ரசித்தத்துடன் என்னை நிலைநிறுத்தி எனது ஸ்வரூபத்தையே வியாபிக்கச்செய்து பக்தி செய்கிறார் களோ. அவர்களுடைய தேகாந்த ஸமயத்தில் அவர்கள் என்னை நினைக்காமல் இருந்தாலும், அவர்களை நான் அடையாமலும் இருந்தேனுனல் அதற்குப்பெயர் உபாசனையா? சாதனையா? அந்த தீனமனிதர்கள் சங்கடத்தில் மாட்டிக் கொண்டு வியா கூலத்துடன் ஓ டி வா என்று கூக்குரலிட்டார்களானுல் அவர் களுடைய து க் க த் தை த் தூரவிலக்க நான் ஓடிச்செல்ல வேண்டாமா?

பக்தி பண்ணினுல்கூட என்னை அடையமுடியாது என்ற நிலை ஏற்பட்டால் பக்தியைப்பற்றி ஏன் இச்சிக்க வேண்டும்? அதனுல் அவ்விதம் நினைக்காதே. பக்தர்கள் என்னை நினைத்தவுடனேயே அவர்கள் நி னை த் து முடிக்குமுன் நான் அவர்கள் பக்கத்தில் போய் நிற்பேன். ஆனுல் அவர்கள் என்னை நினைக்கிறார்களே! என்ற எண்ணத்தையே என்னுல் ஸகிக்கமுடியாது. ஏனென்றால் நான் அவர்களுக்கு அவ்வளவு கடன்பட்டிருக்கிறேன். நான் அவர்களுக்குப்பட்டிருககும் கடனிலிருந்துவிடுபட பக்தர்களுடைய தேகாந்தசமயத்தில் அவர்களுக்கு நான் ஸேவை செய்கிறேன். அவர்களுடைய ஸௌகுமாரமான ச ரீ ர த் து க் கு க் காற்றுப்படக் கூடாது என்று அவர்களை ஆத்மஞானமாகிய கூண்டில் வைத்துக் காப்பாற்றுகிறேன். அவர்களுக்கு எனது நினைவாகிய சாந்தமான குளிர்ந்த நிழலை அளிக்கிறேன். நான் நி த் ய ன். என்ற எண்ணத்தை அளிக்கிறேன். அதனுல் எனது பக்தர்களுக்குச் சரீரதியாகத்தின்போது துன்பமே உண்டாகாது.

நான் எனது சேவகர்களை சுகமாக என்னுடன் இழுத்துக்கொள் கிறேன். அவர்களுடைய உடலாகிய உடையை விலக்கிவிட்டு பொய்யாகிய அகங்காரமாகிய புழுதியைத்துடைத்து விட்டு, சுத்த

வாசனையை அவர்களுக்குப் பூசி என்பக்கம் இழுத்துக்கொள்ளு கிறேன். என் பக்தர்களுக்கு தேகத்தில் விசேஷப் பற்றுதல் இருக்காது. அதனால் தேகத்தை விடுகிறோமே என்ற துக்கமும் இருக்காது. சுருங்கச் சொன்னால் தேகாந்த சமயத்தில் நான் அவர்களிடம் போகிறேன். ஆனால் பகவத் ஸ்வரூபத்தை அடை கிறேன் என்ற எண்ணமே அவர்களுக்கு இருக்காது. ஏனென்றால் அவர்கள்தான் அனவரதமும் என்னை நினைத்துக்கொண்டிருப் பவர்களாயிற்றே. அவர்களுடைய அகங்கார சரீரமாகிய ஜலத்தில் ஆத்மாவாகிற சந்திரன் பிரதிபிம்பிக்கிறது. ஆனால் சந்திரிகையின் சேர்க்கை சந்திரனிடமல்லவா இருக்கிறது? இவர்கள் எப் பொழுதும் என்னிடமே இருக்கிறார்கள். அதனால் அவர்களுக்கு நான் எப்பொழுதும் எளிதில் அடையக்கூடியவனாகவே இருக் கிறேன். அதனால் அவர்கள் சரீரத்தை விடும் சமயம் என் ரூபமாகவே ஆகிறார்கள்.

மற்றவர்கள் சிலேசமாகிய விருக்ஷங்கள் நிறம்பிய தோட்டம். ஆத்யாத்மிகம் ஆதிதைவிகம், ஆதிபௌதிகம் ஆகிய நெருப்பு எரியும் அடுப்பு. அவர்கள் மிருத்யுவாகிய காக்கைக்குப் பலி யாவது நிச்சயம். அவர்கள் தரித்திரத்தைப் பெருக்குகிறார்கள். மிருத்யுபயத்தை அதிகமாக்குகிறார்கள். ஸகல துக்கங்களுக்கும் இருப்பிடமாக இருக்கிறார்கள். துன்மதிக்கு மூலஸ்தானம். கெட்ட கர்மமாகிய பழம். மதிமயக்கத்தின் உருவம். உலகம் இளைப் பாறும் இடம். சகலவித விகாரங்களும் விளையும் தோட்டம் சகலரோகங்களுமே வியஞ்சனமாகப் பறிமாறப்பட்டிருக்கும் பாத்திரம். காலரூபமான எச்சில் அன்னம். ஆசையாகிய சரீரத்தின் உலர்ந்த கூடு, ஜன்மமும் மரணமும் போக்குவரத்து செய்யும் ராஸ்தா, மதிமயக்கமும் விகல்பமுமாகிய தேன்கள் நிறைந்த ராஸ்தா. மோகமாகிய புலி வழும் குகை. வேசிகளுக்கு ஸ்நேகிதர்கள். விஷயங்களை ஸித்தி செய்யும் மந்திரம். டாகினி என்னும் பேய்க்கு பிரேமிகள். விஷரூபமான குளிர்ந்த ஜலத்தைக் குடிப்பவர்கள். கொள்ளைக் கூட்டத்தாருக்கு நண்பர்கள். குஷ்ட்ட ரோகத்தை ஆலிங்கனம் செய்யக்கூடியவர்கள். அதிக விஷ முள்ள ஸர்ப்பத்தைப்போல் வழவழப்பானவர்கள். அவர் களுடைய ஸ்வபாவம் மிருகங்களை வலைவீசி பிடிக்கும் வேடர் களுக்கு ஒப்பானது. சத்ருக்களுக்கு மித்திரர்கள். துர்ஜனங்களுக்கு மரியாதைக்குரியவர்கள். அனர்த்தமாகிய கடல். கனவிலே காணும் கனவு. கானல் நீர் பெருகிய வனம். புகையாலேயே

கற்பனை பண்ணப்பட்ட ஆகாசம். இப்படிப்பட்ட இந்த அனர்த்த மான சரீரத்தை என்னுடைய ஸ்வரூபத்துடன் ஐக்யமான புருஷன் திரும்ப அடையவேமாட்டான் (14-15)

आब्रह्मभुवनाल्लोकाः पुनरावर्तिनोऽर्जुन ।
मामुपेत्य तु कौन्तेय पुनर्जन्म न विद्यते ॥ १६ ॥

सहस्रयुगपर्यन्तमहर्यद्ब्रह्मणो विदुः ।
रात्रिं युगसहस्रान्तां तेऽहोरात्रविदो जनाः ॥ १७ ॥

ஆப்ரஹ்ம புவநால்லோகா: புநராவர்திநோऽர்ஜுந ।
மாமுபேத்ய து கௌந்தேய புனர்ஜன்ம ந வித்யதே ॥

ஸஹஸ்ரயுக பர்யந்தமஹர்யத் ப்ரஹ்மணோ விது: ।
ராத்ரிம் யுக ஸஹஸ்ராந்தாம் தேऽஹோராத்ர
விதோ ஜநா: ॥

அவ்வாறின்றி பிரும்மதத்வத்தைப்பற்றி கர்வப்பட்டுக்கொள் பவன் ஜனன மரணச் சுழலிலிருந்து மீளமாட்டான். இறந்த வனுக்கு எங்காவது சரீரத்தில் நோவு ஏற்படுமா? அல்லது விழித்துக்கொண்டவன் கனவாகிய நதியில் விழுந்து சாவானா? யார் என்னை அடைகிறார்களோ அவர்கள் ஸம்ஸாரத்தில் சிக்க மாட்டார்கள். மேலும் ஜகத் என்ற பர்வதத்தின் சிகரமும் சிரஞ்சீவித் தன்மையின் சிரேஷ்ட்டமும் த்ரைலோக்ய பர்வதத் துக்கு எல்லையுமாகிய எந்த பிரும்மபோகம் இருக்கிறதோ, எங்கு ஒரு பகல் கழிந்ததும் இந்திரனுடைய ஆயுள் முடிகிறதோ ஒரே நாளில் பதினாறு இந்திரர்களுடைய ஆயுளும் முடிகிறதோ எங்கு நமது சதுர்யுகத்தின் நாழிகைகள் கழிந்தவுடன் ஒரு தினம் ஆகிறதோ. ஆயிரம் சதுர்யுகங்கள் முடிந்து ஒரு ராத்ரி ஆகின்றதோ, எங்கு இத்தனை நீளமான இரவு பகல்கள் ஏற் படுகின்றனவோ அந்த இரவு பகல்களை பிரும்மதத்வத்தை அடைந்த பாக்யவான் பார்க்கிறான். மற்ற தேவதைகளின் அஸ்திரத்தன்மையைப் பற்றிக் கூறவேண்டாம். முக்யமாக ஒரு நாளில் பதினாலு இந்திரர்கள் அழிகிறார்கள் என்பதைக் கூறி யாயிற்று. பிரும்மாவின் வாழ்வின் எட்டு நாள்களை எவன் கண்களால் பார்க்கிறானோ அவனை அஹோராத்ரவித் என்கிறார்கள். (16-17)

अव्यक्ताद्व्यक्तयः सर्वाः प्रभवन्त्यहरागमे
रात्र्यागमे प्रलीयन्ते तत्रैवाव्यक्तसंज्ञके ॥ १८ ॥

भूतग्रामः स एवायं भूत्वा भूत्वा प्रलीयते ।
रात्र्यागमेऽवशः पार्थ प्रभवत्यहरागमे ॥ १९ ॥

அவ்யக்தாத்வ்யக்தய: ஸர்வா: ப்ரபவந்த்யஹ ராகமே ।
ராத்ர்யாகமே ப்ரளீயந்தே தத்ரைவாவ்யக்த
ஸம்க்ஞகே ॥

பூதக்ராம: ஸ ஏவாயம் பூத்வா பூத்வா ப்ரளீயதே ।
ராத்ர்யாகமேऽவச: பார்த்த ப்ரபவத்யஹராகமே ॥

அந்த பிரும்ம புவனத்தில் பகல் கழிந்தவுடன் நிராகாரமான இரவினின்றும் உலகங்கள் எண்ணிக்கைக்கு அடங்காமல் உண் டாகின்றன. பிறகு பகல் நான்கு நாழிகைகள் கழிந்தவுடன் இந்த உலக ஸமுத்ரம் வற்றத் துடங்குகிறது. இரவில் இருந்த இடமே தெரியாமல் போய்விடுகிறது. பின் காலையானதும் திரும் பியும் இதேபோல் ஆகிறது. சரத்கால ஆரம்பத்தில் மேகங்கள் மறைவதும் கிரீஷ்மருது முடிவில் அவைகள் உத்பத்தியாகின்றதும் போல் பிரும்மாவின் பகல் ஆரம்பிக்கும்பொழுது சிருஷ்டி சமுதாயம் வெளிப்படுகிறது. அவருடைய ஆயிரவருஷத்தவணை முடியுமட்டும் அப்படியே இருக்கிறது. பிறகு பிரும்மாவுக்கு இரவு ஏற்படும்போது உலகம் நிராகாரத்தில் மறைந்துவிடுகிறது. பிறகு ஆயிரம் யுகங்கள் சென்று திரும்பவும் உத்பத்தியாகிறது. ஜகத்தின் உத்பத்தியும் பிரளயமும் பிரும்மபுவனத்தின் இரவு பகலாகும். பிரும்ம புவனம் என்பது பிரும்ம சிருஷ்ட்டியின் விதைகளை வைக்கும் களஞ்சியமாகும் ஜனன மரணத்தை அளக்கும் எல்லையாகும். மூவுலகும் பிரும்ம புவனத்தின் படைப்பே பிரும்மாவின் தினம் உதயமாகும்போது இவைகள் படைக்கப் படுகின்றன. இரவாகும்போது தன்னைத்தானே மறைகின்றன. விருக்ஷம் விதையாக மாறுவதுபோலவும் மேகம் ஆகாயத்தில் மறைவதுபோலவும் அநேகத்வம் ஏகத்வத்தில் லயமாகிறது. (18-19)

परस्तस्मात्तु भावोऽन्योऽव्यक्तोऽव्यक्तात्सनातनः ।
यः स सर्वेषु भूतेषु नश्यत्सु न विनश्यति ॥ २० ॥

பரஸ்தஸ்மாத்து பாவோந்யோऽவ்யக்தோऽவ்யக்
தாத் ஸநாதந: ।
ய: ஸ ஸர்வேஷு பூதேஷு நச்யத்ஸு ந விநச்யதி ॥

இதில் ஏற்றத்தாழ்வே கிடையாது. பொருள்கள் பெயரளவுக்குக்கூட இருக்காது. பால் தயிராகிவிட்டால் அதன் பெயர் அழிந்துவிடுகிறதல்லவா, அதுபோல உருவநாசமடையும் பொழுது ஜகத்நாசம் ஏற்படுகிறது. இந்த மறைவு எங்கு ஏற்படுகிறது? இது அழிவா? இல்லை இல்லை. எங்கு உத்பத்தி ஆகிறதோ அது கண்ணுக்குத் தெரியாவிட்டாலும் அவ்விதமே இருக்கிறது. அது தென்படாததால் 'அவ்யக்தம் என்கிறோம். அவைகள் உருவத்துடன் வெளிப்படும்போது வ்யக்தம் என்கிறோம். இந்த நாமரூபங்கள் அவைகளைக் குறிப்பிட ஏற்படும் சூசகங்களே. உண்மையில் இரண்டுமல்ல வெள்ளியை உருக்கிவிட்டோமானால் வெள்ளிக்கட்டி என்கிறோம். அதை வித விதமான நகைகள் செய்யும்போது அதன் கட்டித்தன்மை மறைகிறது. இப்படி வெளிப்படையாவதற்கும் மறைவதற்கும் இந்த வெள்ளியே சாக்ஷியாகிறது. இவ்விதம் வெளிப்படை யாவதும் மறைவதும் பிரும்மத்துள் அடக்கம்.

இந்த பிரும்மம் வ்யக்தமுமல்ல. அவ்யக்தமுமல்ல இது நித்யமும் அல்ல. அநித்யமும் அல்ல. இவ்விரண்டுக்கும் அப்பாற்பட்டு அநாதிகாலம் தொட்டு இருக்கிறது இது ஒரு ஆச்சர்யகரமானது அக்ஷரத்தை அழிக்கலாம் அர்த்தத்தை அழிக்கமுடியுமா? அதுபோல் உலகநாசம் ஏற்படும், பிரும்மம் அழியாது, அலைகள் எழும்புகின்றன. மறைகின்றன. ஜலம் அப்படியே இருக்கிறது. பிரும்மம் அவிநாசி, பஞ்சபூதச் சேர்க்கையான ஜகத்தால் நஷ்டமடைவது இல்லை. நகைகளை உருக்குவதால் தங்கம் அழியுமா? அதுபோல் ஜீவாகாரத்துக்கு மரணம் ஏற்பட்டாலும் ஜீவன் அப்படியே இருக்கிறது. (20)

अव्यक्तोऽक्षर इत्युक्तस्तमाहुः परमां गतिम् ।
यं प्राप्य न निवर्तन्ते तद्धाम परमं मम ।। २१ ।।

पुरुषः स परः पार्थ भक्त्या लभ्यस्त्वनन्यया ।
यस्यान्तःस्थानि भूतानि येन सर्वमिदं ततम् ।।

அவ்யக்தோऽக்ஷர இத்யுக்த: தமாஹு: பரமாம் கதிம் |
யம் ப்ராப்ய ந நிவர்தந்தே தத் தாம பரமம் மம ||

புருஷ: ஸ பர: பார்த்த பக்த்யா லப்யஸ் த்வநந்யய |
யஸ்யாந்தஸ்ஸ்தாநி பூதாநி யேன ஸர்வமிதம் ததம் ||

நாம் எவ்விதமாவது அதைக் குறிப்பிடவேண்டும் என்பதற்காக அவ்யக்தம் என்கிறோமே தவிற அது ஸ்துதியாகாது. ஏன் என்றால் அது மனம் புத்திக்குள் அடங்காதது. அதற்கு உருவம் உண்டானபோதிலும் அதன் நிராகாரத்தன்மை அழிவதில்லை உருவம் மறைந்தாலும் அதன் நித்யத் தன்மைக்குப் பங்கம் இல்லை. அதுவே அக்ஷரமென்னும் அழியா வஸ்து.

இப்படி வர்ணிப்பதால் அதைப்பற்றிய ஞானம் நமக்கு ஒருவாறு புலப்படும். எதை விஸ்தரிப்பதற்கு நமக்கு ஒரு மார்க்கமும் தெரியவில்லையோ அதைப் பரமகதி என்று கூறுகிறோம். அது தேகரூபமான வீட்டில் சுகமாகத் தூங்கும் புருஷன். அது ஒரு காரியமும் செய்வதும் இல்லை. செய்யத் தூண்டுவதும் இல்லை. சரீர வ்யாபாரம் நடந்துகொண்டிருக்கிறது. அதில் விக்னம் இல்லை. இந்திரியங்களாகிய வழியில் வந்துகொண்டும் போய்க் கொண்டும இருக்கிறோம். விஷயரூபமாகிய கடை திறக்கப்பட்டு மனமாகிய நாற்சந்தியும் திறககப்படுகிறது. அங்கு ஜீவனுக்கு சுக துக்க ரூபமான பொருள்களை ஏராளமாக வாங்கலாம். ராஜா சுகமாகத் தனது மாளிகையில தூங்கிக்கொண்டிருக்கும்போது அவனது தேசததில் வியாபாரம் நடந்துகொண்டு இருக்கும். ஜனங்களும் பொருள்களை வாங்கிக்கொண்டும் போய்க்கொண்டும் தான் இருப்பார்கள். அதுபோல் புத்தியின் அறியும் தன்மையும் மனதின் ஸங்கல்ப விகற்ப்பங்களும், இந்திரியங்களின் வேலையும் வாயுவின் ஸ்பர்சமுமாகிய எல்லா சரீர கிரியைகளும் ஒருவராலும் ஏவப்படாமல் நடந்துகொண்டே இருக்கும்.

ஸூரியன் உதயமானதும் ஒருவரையும் எங்கும் போகச் சொல்வதும் இல்லை ஜனங்கள்தான் தன் பாட்டில் போய்க் கொண்டும் நடந்துகொண்டும் இருக்கிறார்கள். அதுபோல இச் சரீரரூபமான மாளிகையில் தூங்கிக்கொண்டிருப்பவன் புருஷன். பிருத்வி எனும் பதிவிரதையிடம் ஏகபத்னி வ்ருதம் அனுஷ்டிக் கிறான் அந்தப் புருஷன். வேதங்களின் விரிவான அறிவும்கூட அந்த மாளிகையின் அங்கணத்தைப் பார்த்திருக்காது. அவ்வாறு

கணத்தின் இடைவெளியினுல் ஆகாசத்தையே மூடிவிடலாம். இதை அறிந்தவன் யோகி ஒருவனே. அவனே பராத்பரன். ஏகநிஷ்ட்டை என்னும் வீட்டைத் தேடித்தேடி அவன் இவ் விடத்தை வந்தடைகிருன். சரீரத்தாலும் மனதாலும் வாக்காலும் வேருென்றையும் அறியாத ஏகநிஷ்ட்டர்களான பக்தர்களுக்குப் பழுத்த தானியம் நிறைந்த நெல் களஞ்சியம் இதுவாகும்.

ஹே பாண்டவா, அவர்கள் இன்று இம் மூவுலகத்தையும் சத்யம் என்னும் கண்கொண்டு புருஷோத்தமனுன பரபிரும்ம ஸ்வருபமாகவே பார்க்கிருர்கள். இதுவே ஆஸ்திக புருஷர்களின் ஆசிரயஸ்தானம இதுவே நிரகங்காரிகளின் மகததான உருவம். இதுவே நிர்குணத்தின் ஞானம். விருப்பு வெறுப்பில்லாத ஸத் புருஷர்களின் ராஜ்யம் சம்ஸாரத்தின் கவலேயே அற்ற சரணுகதர் களுக்கு அன்னையின் மடி. பக்திமார்க்கத்துக்கு ஸரளமான வழி.

இவ்விதமாக ஒவ்வொன்றையும் எவ்வளவு நாழி விவரித்துக் கொண்டிருப்பது சுருக்கமாக தனஞ்சயா, இநதப்பதத்தை அடைந்தவுடன் அவன் அதன் உருவமாகவே ஆகிவிடுகிருன. குளிர்ந்தகாற்றுப்பட்ட வென்னீரும் குளிர்வதுபோல, சூர்யோதயம் ஆனதும் அந்தகாரம் நஷ்டமடைவதும்போல் இவ்விதமான நகரததை அடைந்தவுடன் ஸம்பூர்ண மோக்ஷமயமாகிருன். தீயிலிடப்பட்ட பிறகு அதுவும் ஜ்வாலாமயமாகி தனது விறகுத் தன்மையை இழப்பதுபோல் எத்தனேதான் அறிவினுல் முயற்சித் தாலும சர்க்கரையைத் திருமபவும் கரும்பாக்க முடியாதது போலவும் அது இருக்கிறது. இரும்பைப் பொனனுக்க ஸ்பர்சவேதி இருக்கிறது. ஆனுல் அப்படியான பொன்னே இரும்பாக்க ஸ்பர்சவேதி கிடையாது. நெய்யைத் திரும்பவும் பாலாக்க முடியாது. அதுபோல் அதை அடைந்தபின் புனர் ஜன்மம் கிடையாது. அதுவே எனது பரம ஸத்யமான இருப்பிடம். இநத அநதரங்கமான ரகஸ்யத்தை உனக்குக் கூறினேன். (21-22)

यत्र काले त्वनावृत्तिमावृत्तिं चैव योगिनः ।
प्रयाता यान्ति तं कालं वक्ष्यामि भरतर्षभ ॥ २३ ॥

யத்ர காலே த்வநாவ்ருத்தி மாவ்ருத்திம் சைவ
யோகிந: ।
ப்ரயாதா யாந்தி தம் காலம் வக்ஷ்யாமி பரதர்ஷப ॥

இதை இன்னெரு விதமாக சுலபமாகப் புரிந்துக்கொள்ளலாம் தேகத்தை விடும்போது யோகி எதை நினைக்கிருனே அது எனது ரகஸ்ய உருவம் என்றறி. ஆனல் காலமில்லாத காலத்தில் மரணம் ஏற்பட்டால் தேகம் எடுக்கவேண்டியது அவசியம். ஆனல் புண்ய பர்வங்களில் நிர்மல உள்ளத்துடன் மரணம் ஏற்பட்டால் யோகி பிரும்மமாகிருன். அப்படி இல்லாமல் மரணம ஏற்பட்டால் புனர் ஜன்மம் உண்டு இவ்விதமாக ஸாயுஜ்யபதவி என்றும் புனர்ஜன்மம் என்றும் இரணடு கட்டங்கள உள்ளன. அதை உனக்கு முறையே கூறுகிறேன் கேள்.

மரண மயக்கம் ஏற்பட்டவுடன் ஐந்து தத்வங்களும் தங்கள் தங்கள் மார்க்கத்தில் கிளம்புகின்றன. பிரயாணகாலம் வந்தவுடன் புத்தி பிரமையடைந்துவிடக்கூடாது. ஸ்மரண சகதி மறையக்கூடாது. மன உறுதி இருக்கவேண்டும். பிராணக் கூட்டங்கள் ஐந்தும் மரிக்கும் ஸமயம் நல்ல நிலேயில் இருக்க வேண்டும் மனதின் அனுபவம் பிரும்மபாவத்தைத் தழுவியதாக இருக்கவேண்டும். இவ்விதமாக ஸர்வஜாக்ரதையுடன இருநதால ஸாயுஜ்யபதவி கிட்டும். இதற்கு மரணம் வரை ஒழுங்கான ஸாதனம் வேண்டும. இதற்கு அக்னியின உதவி முகயமாக வேண்டும். தீபஜ்யோதி காற்றிஞலேயோ ஜலததிஞலேயோ அணேந்துவிட்டால் நமக்குக் கண இருந்தும் பார்ககமுடியாதல்லவா? அதுபோல் மரணகாலத்தல் வாயு வெகுண்டு எழுதலால் கபம் சரீரத்தின் உள்ளேயும் வெளியேயும் வியாபிககத் தொடங்குகிறது. அப்பொழுது அக்னி அணேந்துவிடுகிறது. அப பொழுது பிராணனின் சேதனம இல்லாவிட்டால் நமக்கு அறிவிருந்தும் பிரயோஜனம் இல்லே. அக்னி இல்லாமல் சரீரத்தில சேதனத்தன்மை இருக்காது தேகத்தில் இருக்கும் அக்னி போய் விட்டால் அது சரீரமல்ல ஈரமண்மண.

இப்படிப்பட்ட சமயத்தில் யோகி வீணுக தன்னுடைய முடிவு காலததை எண்ணிக்கொண்டிருக்கிருன். கடநதகால நினேவுகள் ஒவ்வொன்ருக வருகின்றன. அலலது தேகத்தை விட்டு விட்டு என் ஸ்வரூபத்தில் சேர முயற்சிக்கிருன். அப்பொழுதும்கூட இச்சரீரத்தில் கபம் என்னும் சகதியில் அகப்பட்டுக்கொண்டு முன்பில யோஜிக்க அசக்தனுகிருன். இவ்விதமாகத தரையில் இருக்கும் பொருள் கணணுக்குத் தெரியும் முன்பேயே கையி லிருக்கும் தீபம் அணேந்துவிட்டால்? அதுபோல் முதலில் செய்து

வந்த கர்மவினைகள் யாவும் மரணம் வருவதற்கு முன்பே நஷ்டமடைந்துவிடுகின்றன. அதனால் கூறுகிறேன் ஞானத்துக்கு அடிப்படை அக்னி அதுவும் மரண சமயத்தில் அக்னியின் பலத்தைப்பொறுத்தே நம் நிலை இருக்கிறது. (23)

अग्निर्ज्योतिरहः शुक्लः षण्मासा उत्तरायणम् ।
तत्र प्रयाता गच्छन्ति ब्रह्म ब्रह्मविदो जनाः ॥ २४ ॥

அக்நிர் ஜ்யோதிரஹ: சுக்ல: ஷண்மாஸா உத்தராயணம்।
தத்ர ப்ரயாதா கச்சந்தி ப்ரஹ்ம ப்ரஹ்மவிதோ ஜநா: ॥

ஹ்ருதயத்தில் அக்னிஜோதி பிரகாசமாக இருக்கவேண்டும். காலநிலை சுக்லபக்ஷமாக இருக்கவேண்டும். அதுவும் பகலாக இருக்கவேண்டும் உத்தராயணத்தின் ஆறுமாதங்களில் ஒன்றாக இருக்கவேண்டும். இப்படிப்பட்ட ஒரு நல்ல சேர்க்கையில் பிரும்மவித் தேகத்தை விடுவானானால் அவன் பிரும்மமாகவே ஆகிறான் ஹே தநுர்தரா, மேற்சொன்ன காலத்துக்கு இந்த சக்தி இருக்கிறது. மோக்ஷத்தை யடைய இது ஒரு சரளமான மார்க்கம் இதில் அக்னி முதற்படி. பகல் இரண்டாவது படி. சுக்லபக்ஷம் மூன்றாவதுபடி உத்தராயணம் நான்காவதுபடி. இவ்வழியாக யோகி சாயுஜ்யமான புவனத்துக்குப் போய்ச்சேருகிறான். இதுவே உத்தமமான காலம். இதை அர்ச்சிராதி மார்க்கம் அதாவது சூர்யகிரணத்தின் வழியாகச் செல்லும் மார்க்கம் என்கிறோம். இதற்கு எதிரிடையாக இருக்கும் காலத்தைப் பற்றியும் கூறுகிறேன். (24)

धूमो रात्रिस्तथा कृष्णः षण्मासा दक्षिणायनम् ।
तत्र चान्द्रमसं ज्योतिर्योगी प्राप्य निवर्तते ॥ २५ ॥

தூமோ ராத்ரிஸ்ததா க்ருஷ்ண: ஷண்மாஸா தக்ஷிணாயனம்।
தத்ர சாந்த்ரமஸம் ஜ்யோதிர்யோகீ ப்ராப்ய நிவர்ததே ॥

மரண சமயத்தில் மனம் வாதத்தாலும் கபத்தாலும் அந்தகாரத்தாலும் நிறம்புகிறது. இந்திரியங்கள் மரம்போல் மரத்துவிடுகின்றன. அறிவு பிரமையில் ஒழுகிவிடுகிறது. மனம் பைத்தி

யம்போல் ஆகிறது. பிராணன் திணறுகிறது. அக்னி அணைந்து விடுகிறது. எங்கும் ஒரே புகை நிறம்பியதுபோல் இருக்கிறது சரீரத்தில் சேதனவஸ்த்தை அடங்கிவிடுகிறது. சந்திரனுக்கு முன்னால் கனமான மேகப்படலங்கள் பரவினால் எப்படி இருக்கும் இருட்டும் பிரகாசமும் அற்ற ஒரு மங்கல் வெளிச்சம் பரவி இருக்குமல்லவா! அந்நிலையில் ஜீவன் மரணமும் அடையாமல் சேதனமும் இல்லாமல் அவஸ்தைப்படுகிறான். ஆயுள் மரணத்தை எதிர்பார்த்து இந்த அவஸ்தையில் நடுங்குகிறது.

இவ்விதமாக மனம் புத்தி இந்திரியங்களின் நான்குபக்கமும் இவ்விதப்புகை சூழும்போது ஆயுள் முழுவதும் மிகக்கஷ்டப்பட்டு சேர்த்து வைத்த எல்லா லாபங்களும் பிரயோஜனம் இல்லாமல் போய்விடுகின்றன அவயவங்களே பிரயோஜனம் இல்லாமல் போகும்போது மற்றதைப்பற்றிச் சொல்லி என்னபலன்? மரண சமயத்தில் இப்படி ஏற்படத்தான் செய்கிறது. தேகநிலை இவ்வாறு இருந்தால் காலநிலை கிருஷ்ணபக்ஷம் இரவுநேரம் தக்ஷிணாயனம் ஆறுமாதங்களில் ஒருமாதம். இவ்வாறிருந்தால் அவனுக்குப் புனர்ஜன்மத்துக்கு சகல சாதனங்களும் தயாராக இருக்கின்றன என்று அறி. இவனுக்கு ஆத்மபிராப்தியின் கதையைச் சொல்வது வீணே. இக்காலத்தில் மரணமடைபவன் யோகியாக இருந்தால் அவன் சந்திரலோகம் வரை போகிறான். ஆனால் அவன் அங்கிருந்து திரும்பிவந்து உலகில் பிறக்கிறான். இது சரியான வழியல்ல. ஜனன மரண ரூபமான இந்த நரகத்துக்குச் செல்லும் பாதைக்கு தூமமார்க்கம் என்று பெயர். முன்பு குறிப்பிட்ட அர்ச்சிராதி மார்க்கம் சுலபமானது. ராஜபாட்டையைப் போன்றது. உத்தமமான சாயுஜ்ய பதவிக்கு நம்மைக் கொண்டு சேர்க்கிறது. (25)

**शुक्लकृष्णे गती ह्येते जगतः शाश्वते मते ।**
**एकया यात्यनावृत्तिमन्ययावर्तते पुनः ॥ २६ ॥**

சுக்லக்ருஷ்ணே கதீ ஹ்யேதே ஜகத: சாச்வதே மதே |
ஏகயா யாத்யநாவருத்திம் அந்யயாவர்ததே புந: ||

இந்த விதமான இரண்டு புராதன வழிகளிலும் ஒன்று ராஜமார்க்கம், மற்றொன்று காட்டுப்பாதை. நீ உனக்கு மங்களத்தை விரும்புவாயானால் உத்தம அதம மார்க்கத்தைச்

சரியானபடி கவனித்து அதன்படி செல்லவேண்டும். ஸத்யத்தை யும் பொய்மையயும் பிரித்து அறியவேண்டும். நமக்குப் பொருந்து வதைத் தேர்ந்தெடுக்கவேண்டும். நன்றாக உறுதியாகக் கட்டப் பட்ட படகில் அமர்ந்து ஆற்றைக் கடக்க விரும்பும் ஒருவன் நடுவில் அகாதமான மடுவில் குதிப்பானா? நல்ல மார்க்கம் இருக்கும்போது காட்டிற்குள் நுழைவானா? விஷத்துக்கும் அமிருதத்துக்கும் வித்யாசத்தை அறிபவன் அமிருதத்தைத் தியாகம் செய்வானா? ராஜமார்க்கத்தில் பரிசயமுள்ள ஒருவன் சந்துபொந்தில் நுழைவானா? அதனால் வாழ்க்கையில் எத்தனையோ ஸம்பவங்களும் பொருள்களும் காக்ஷிகளும் தவிர்க்க முடியாதபடி கண்முன் வரும்போது அவைகளை உன்னிப்பாகக் கவனித்து நமக்கு ஏற்ற வழியை கடைப்பிடிக்கவேண்டும்.

இவ்விதம் பரீக்ஷை செய்தால் அநேகவித சங்கடங்களைத் தவிர்க்கலாம். அப்படிச் செய்யாவிட்டால் மரண சமயத்தில் இந்த மார்க்கங்களைக் கண்டு மதிமயக்கம் ஏற்படும். அதனால் வாழ்நாள் முழுதும் செய்த சாதனைகள் வீணாகிவிடும். அர்ச்சிராதி மார்க்கம் கிடைக்கவில்லை என்றால். அகஸ்மாத்தாக யோகி தூம மார்க்கத்தில் போய்விட்டால் அவன் ஸம்ஸாரச் சக்ரத்தில் அகப் பட்டுக்கொண்டு திரும்பித் திரும்பி வந்துகொண்டிருப்பான். இந்தப் பெரிய பெரிய கஷ்டங்களை ஆழ்ந்து கவனித்துவிட்டு யோகி இதிலிருந்து எப்படி விலகுகிறான் என்பதை உனக்குத் தெளிவாக அறிவுறுத்தவே இப்படி இதை உனக்கு விளக்கிக் கூறினேன். மேற்கூறிய இரண்டு மார்க்கங்களில் ஒன்றினால் பிரும்மஸ்வரூபமும், மற்றொன்றால் புனர்ஜன்மமும் கிடைக்கிறது. இவைகளும் தெய்வகதியாலேயே கிடைக்கவேண்டும். (26)

नैते सृती पार्थ जानन्योगी मुह्यति कश्चन ।
तस्मात्सर्वेषु कालेषु योगयुक्तो भवार्जुन ॥ २७ ॥

நைதே ஸ்ருதீ பார்த்த ஜாநந்யோகீ முஹ்யதி கஸ்சந ।
தஸ்மாத் ஸர்வேஷு காலேஷு யோகயுக்தோ
பவார்ஜுந ॥

நம் இச்சைப்படி ஒன்றும் நடக்காது. ஆனால் எதுவும் திடீரென்று அகஸ்மாத்தாகவும் நடக்காது. தேகத்தை தியாகம் செய்து பிரும்ம பதத்தையடைய இது ஒன்றே மார்க்கம். ஆனால்

சரீரம் இருக்கட்டும் அல்லது அழியட்டும் நாம் பிரும்மமே யாவோம். சயிறு பாம்புபோல் தோன்றினலும், அது கயிறுதான் என்னிடம் அலை இருக்கிறதா இல்லையா என்று கடல் என்ருவது யோஜிக்குமா? அலைகள் வந்தாலும், மறைந்தாலும் ஜலம் ஜலமே. அலைகள் உண்டாவதால் ஜலம் வருவதுமில்லை, போவதுமில்லை. வற்றுவதுமில்லை. இப்படி நினைக்கும் ஒரு தேகி சரீரம் இருக்கும்போதே பிரும்மரூபத்தை அடைகிருன். சரீரம் ஒன்று இருக்கிறது என்னும் நினைப்பே அவனுக்கு இருப்பதில்லை. பின் அவனுக்கு மரணம் எப்பொழுது எங்கு ஏற்படும்? அவனுக்கு இந்த அர்ச்சிராதி தூமாதிமார்க்கத்தைப் பற்றிய கவலையும் இல்லை. தேசகால வர்த்தமானங்கள் அவனே ஆகும்போது அவன் எங்கு செல்வான்? பானை உடைந்தால் அதனுள் இருக்கும் வெளி எங்கு போவேன் என்று யோஜிக்குமா? சரளமாக அது மகா காசத்தில் கலக்கிறதல்லவா? இங்கு பாண்டத்துக்கு அழிவு ஏற்படுகிறதே தவிர ஆகாசத்துக்கல்ல. ஆகாசம் எப்பொழுதும் இருக்கிறது. இத்தகைய அறிவுடன் ஸோஹம் மந்திரத்தை ஜபிக்கும் யோகிகளுக்கு உத்தம அதமமார்க்கத்தைக் தேடும் சங்கடமேகிடையாது அதனல் 'ஹே பாண்டுஸுதா, நீ யோகியாக இருப்பாய். இதனல் ஸமத்வம் உன்னைத் தன்னைத்தானே வந்து அடையும். இதனல் எந்தகாலத்திலிருந்தாலும் எங்கிருந்தாலும் தேகம் இருந்தாலும் அழிந்தாலும் பந்தரஹிதமான பிரும்ம பாவத்தில் எப்பொழுதும் ஆழ்ந்திருப்பாய். இவ்விதம் நினைக்கும் யோகி சிருஷ்டியின் ஆரம்பத்திலும் பிறக்கிறதில்லை. சிருஷ்டியின் முடிவிலும் அழிகிறதில்லை. நடுவிலுள்ள ஸ்வர்கலோக போகங் களையும் அநுபவிப்பதில்லை. இந்த ஞானம் எவனுக்கு ஏற்பட் டிருக்கிறதோ அவன் தான் ஞானமார்க்கத்தை சரளமாக அடை கிருன். விஷயபோகங்களில் சிக்குண்டு அடிபடாமல் நேராக நிஜஸ்வரூபத்தை அடைகிருன். இந்திராதி லோகங்கள் ஸர்வபோகங்களையும் கொடுக்கும் என்பது பிரசித்தம். அதையே அவன் துச்சமென்று விலகிப்போகிருன். (27)

वेदेषु यज्ञेषु तपःसु चैव
दानेषु यत्पुण्यफलं प्रदिष्टम् ।
अत्येति तत्सर्वमिदं विदित्वा
योगी परं स्थानमुपैति चाद्यम् ॥ २८ ॥

வேதேஷு யக்ஞேஷு தப:ஸு சைவ
தானேஷு யத்புண்யபலம் ப்ரதிஷ்டம் ।
அத்யேதி தத் ஸர்வமிதம் விதித்வா
யோகீ பரம் ஸ்தாநமுபைதி சாத்யம் ॥

வேதாத்யயனத்தால் அடைந்தாலும் யக்ஞமாகிற நிலத்தில் விளைந்தாலும் தபம் தானமாகிற விருக்ஷத்தில் பழுத்தாலும், எல்லாவிதமான புண்யங்களாகிய தோட்டத்தில் பழுத்தபழமாகவே இருந்தாலும் அது இந்த நிர்மலமான பரப்ரும்மத்துக்கு ஈடாகாது. நித்யானந்தம் என்று இதைத்தான் கூறுகிறோம். இதை அடையவே வேதம் யக்ஞம் தானம் தபம் முதலிய காரியங்கள். என்றும் மாருததும் முடிவில்லாததும் அநுபவிப்பதற்குத் தகுதியான பலனைக்கொடுப்பதும், மகா சுகத்தைக் கொடுக்க ஸகோதரனைப் போலவும் ஆன இச்சுகத்தை அடைய பிராரப்தம் வலுவில் தன்னை ஈடுபடுத்திக் கொள்ளும். நூறு யாகங்கள் பண்ணினாலும் இது கிடைக்க ஸாத்யமாகாது.

யோகிகள் இதை திவ்ய திருஷ்டியினால் அறிகிறார்கள். அவர்களுக்கு இது எளிதாக விலக்குக் கிடைக்கிறது. சுகமான படிகளின் வழியாக யோகிகள் பரபிரும்மத்தை அடைகிறார்கள். இப்பதம் ஸ்தாவர ஜங்கமங்களுக்கு ஒரு மகா பாக்யம். பிரும்ம தேவரும் சங்கரரும் இதைப் பூஜிக்கிறார்கள். யோகிகள் உபயோகத்துக்கு இது போக்யதனம். சகல கலைகளுக்கும் கலை பரமானந்தத்தின் உருவம். ஜகத்தின் ஜீவர்களுக்கெல்லாம் ஜீவன். அப்படிப்பட்ட இந்த பிரும்மம் ஸர்வக்ஞத்வத்துக்கு ஹ்ருதயமாகவும், யாதவ குலத்துக்கு ஜோதியாகவும் கிருஷ்ணன் என்னும் பெயருடன் வந்து அர்ஜுனனுக்கு பிரும்ம பதத்தை நிருபித்துக் காட்டுகிறது. இவ்விதமாகக் குருக்ஷேத்திரத்தில் நடக்கும் ஸம்பவங்களை ஸஞ்ஜயன் திருதராஷ்டிரனுக்குக் கூறுவதாக ஞானதேவர் கூறுகிறார். இக்கதையின் தொடர்ச்சியை இன்னும் கேளுங்கள். (28)

எட்டாவது அத்தியாயம் முற்றும்.

# ஒன்பதாவது அத்யாயம்

கேளுங்கள்! இதை மிகவும் கவனத்துடன் கேட்டால் எல்லா சுகமும் உங்களை வந்து அடையும் என்று பிரதிக்ஞை செய்கிறேன். நான் இன்று கர்வப்பட்டுக் கொண்டு சொல்லவில்லை. இதைக் கேட்கும் நீங்கள் ஸர்வக்ஞர்கள். நீங்கள் கவனத்துடன் கேட்க வேண்டுமென்று பிரேமையுடன் விண்ணப்பித்துக் கொள்கிறேன். நீங்கள் பிடிவாதமும், ஊக்கமும் உள்ளவர்களானால் உங்கள் பிடிவாதமே பூர்த்தியாகும். உங்கள் மனோரதமும் நிறைவேறும். உங்கள் கருணையினால் நனைந்த பார்வையினால் சந்தோஷமாகிற தோட்டத்தில் வசந்தருதுவே வந்துவிடும். நான் களைத்தவனாக இருந்தாலும் அந்த தோட்டத்திலிருக்கும் சீதள சாயையால் என் களைப்பு நீங்கிவிடும்.

ஹே ப்ரபு! நீங்கள் சுகரூபமான அமிர்தத்தின் இருப்பிடம். தங்கள் நிழலில் நாங்கள் இஷ்டம்போல் தனிமையை அனுபவிக்கிறோம். நான் அங்கு போவதற்குப் பிடிவாதம் பிடித்து பயந்தேனானால் எனக்கு எப்படி சாந்தம் கிட்டும்? குழந்தையின் மழலை மொழிகளையும், தத்தித் தடுமாறி நடக்கும் நடையையும் பார்த்து எந்த மாதா சந்தோஷமடையமாட்டாள்? அதனால் எப்படியாவது மஹாத்மாக்களாகிற உங்கள் கிருபை என்மேல் பரிபூர்ணமாக இருக்கட்டும் இந்த ஆவலினால்தான் நான் பிடிவாதமாகத் தங்களிடம் பிரேமையுடன் கூறுகிறேன். இல்லாவிட்டால் தங்களைப் போன்ற ஸர்வக்ஞர்களின் முன்னால் எனக்குப் பேச என்ன இருக்கிறது? ஸரஸ்வதியின் பிள்ளைகளுக்குப் பிறரிடம் பாடம் படிக்கவேண்டுமா, என்ன?

மின்மினி எவ்வளவு பெரிதாக இருந்தாலும், எவ்வளவு சாமர்த்தியசாலியாக இருந்தாலும் சூரிய ஒளியில் அது பிரகாசிக்குமா? அமிர்தம நிரம்பிய தட்டில் பரிமாறி ருசிகக் கூடிய வேறொரு பொருள் இருக்கிறதா? ஐயா, சந்திரனுக்கு வீசுவதும், நாதத்திற்கு சங்கீதம் கற்பிப்பதும, நகைகளுககு அலங்காரம் செய்வதும எங்காவது உண்டா? சுகந்தம் எங்காவது முகர்ந்து வாசனையைத் தானே அனுபவிக்குமா? கடல் எங்காவது ஸ்நானம் செய்யப் போகுமா? ஆகாசத்திற்குக் குடிபோக எங்காவது வேறிடம் இருக்கிறதா? அதுபோல் தங்களுடைய ஊக்கத்திற்கும், கவனத்திற்கும் விருந்தாகத் தாங்கள் சபாஷ் என்று மெச்சும்படியாக யாரால் வர்ணிக்க முடியும்?

உலகைப் பிரகாசிக்கச் செய்கிற ஸூரியனுக்கு கையால்கற்பூர ஹாரத்தி செய்வது போல் இருக்கிறது என் செயல். சமுத்திரத்திற்குக் கையில் உள்ள ஜலத்தினுல் அர்க்கியம் கொடுப்பது போல் இருக்கிறது. ஹே ப்ரபு! நீங்கள் சங்கரமூர்த்தி. துர்பலனுன நான் தங்களிடம் பிரேமையை யாசிக்கிறேன். என் சப்தம் கரடுமுரடாக இருந்தாலும் அதை ஸ்வீகரித்துக் கொள்ளுங்கள் தகப்பன் உண்ணும்பொழுது குழந்தை அவர் அருகில் தவழ்ந்துசென்று அப்பா, நான் தஙகளுக்குச் சாதம்ஊட்டுகிறேன் என்று சொன்னுல் அவர் ஆனந்தமாக வாயைத் திறக்க மாட்டாரா? அதனுல் நான் சிறு பிள்ளைத்தனமாக ஏதாவது தங்களிடம் விநோதமாகக் கூறிவிட்டாலும், அது தங்களுக்கு ஸந்தோஷத்தை கொடுக்கும், ஏனென்ருல் பிரேமை அப்பேற்பட்ட பொருள். தாங்கள் அன்பினுல் என்னைத் தங்களுள் ஒருவனுக ஆக்கிக் கொண்டு விட்டீர்கள். அதனுல் எங்கள் முரட்டுத்தனம் தங்களுக்குப் பாரமாக இருக்காது.

பால் குடிக்கும் குழந்தையின் முகத்தால் இடிக்கப் பட்டபொழுது மாதாவின் ஸ்தனத்திலிருந்து பின்னும அதிகமாகப் பால் பெருகுகிறது. மிகவும் பிரேமையுள்ள மனிதன கோபிததுக கொண்டாலும அந்தப் பிரேமை இருமடங்காகப் பெருகுகிறது. அதனுல் பாலகனுன எனது வார்த்தையினுல் தங்களிடம தூங்குகின்ற தயை விழித்தெழும. இதையறிந்தே நான் பேசுவதற்கு முயற்சி செய்கிறேன். நிலவை ஊத்தம்போட்டுப் பழுக்கவைக்க முடியுமா? வாயு செல்வதற்கு ஒரு மார்க்கம கண்டுபிடிக்க முடியுமா? ஆகாசத்தை மூடிபோட்டு மூட முடியுமா? தண்ணீரை மெல்லியதாக்க முடியுமா? வெண்ணையை மததிட்டுக் கடையமுடியுமா? அதைப்போல எதைப் பார்த்துவிட்டு வ்யாகயானம் லஜ்ஜையடைந்து திரும்புகிறதோ அதைப்போல.

அதிருக்கட்டும். வேதம் நிச்சயமாகக் கட்டிலில் படுத்து சாந்தமாக உறங்குகிறது. அந்த வேதார்த்தத்தை பாஷையினுல வர்ணிக்க முடியுமா? ஆனுல் எனக்கு தங்கள் பிரேமைககுப் பாத்திரமாகுவோம் என்ற தைரியமே தெம்பளிக்கிறது. அதனுல் இப்பொழுது சந்திரனை விட சீதளமான, அமிருதத்தைவிட உயிரூட்டுவதான தங்கள் கவனத்தை என்பால திருபபி என் மனுேரதத்தைப் பூர்த்தி செய்யுங்கள். தங்கள் கிருபா திருஷ்டியாகிற மழை என்மேல் பொழிநதால்தான் எனது புத்தியாகிய

வயலில் ஸகலார்த்த ரூபமான பயிரின் முளை கிளம்புகிறது. தாங்கள் பராமுகமாக இருந்தால் எனது ஞானமாகிய முளையே உலர்ந்துவிடும். கேளுங்கள்.

வியாக்யான கர்த்தாவுக்கு கவனமெனும் உணவு கிடைத்தால் அவனுடைய அக்ஷரங்கள் புஷ்டியாகும். அர்த்தம் எப்பொழுதும் சப்தத்தை எதிர்பார்த்தே இருக்கிறது. ஒரு வாக்யத்துக்கு அர்த்தம் சொல்லும்போது மற்றொரு அபிப்ராயம் உண்டாகிறது. புத்தியில் கற்பனையாகிய மலர்மாரி பொழிகிறது. ஸம்பாஷணையாகிய அனுகூல வாயு அடிக்கும்போது ஹ்ருதயாகாசத்தில் வ்யாக்யானமாகிய ஜீவசக்தி நிறம்புகிறது. அப்படி இன்றி சுரோதாக்கள் கவனக்குறைவாக இருந்தால் ஆதுரத்துடன் சேர்த்து வைத்த ஸர்வ சக்தியும் கரைந்துவிடுகிறது. சந்திர காந்தமணி நீரைப் பெருக்கவேண்டுமென்றால் அந்த யுகதி சந்திரன் கையில்தான் இருக்கிறது. கேட்பவர் இல்லாவிட்டால் பேச்சாளர் பேச்சாளரே அல்ல.

உணவு எங்காவது தன்னைப் புஜிப்பவர்களிடம் என்னை உண்ணுங்கள் உண்ணுங்கள் என்று கூறுகிறதா? பொம்மலாட்டக்காரனை பொம்மைகள் தங்களை ஆட்டுவிக்கும்படி கூறுகிறதா? அவன் பொம்மைகளின் நன்மையைக் கருதியா ஆட்டுவிக்கிறான்? தனது கலையை வெளிப்படுத்தவல்லவா ஆட்டுவிக்கிறான்? அதனால் இந்த வீண் படாடோபத்தினால் நமக்கு என்ன லாபம்? அப்பொழுது ஸ்ரீ குரு கூறுவார். பரவாயில்லை உன்னுடைய பூர்ணமான துதியை நான் அங்கீகரிக்கிறேன். இப்பொழுது கிருஷ்ணனைப் பற்றிக் கூறுவாய் என்றார். அப்பொழுது நிவ்ருத்திதாஸரின் தாஸர் ஆனந்தத்துடன் கூறுவார். நன்று நன்று கேளுங்கள்.

श्रीभगवानुवाच —

इदं तु ते गुह्यतमं प्रवक्ष्याम्यनसूयवे ।
ज्ञानं विज्ञानसहितं यज्ज्ञात्वा मोक्ष्यसेऽशुभात् ॥ १ ॥

ஸ்ரீபகவானுவாச—

இதம் து தே குஹ்யதமம் ப்ரவக்ஷ்யாம்யநஸூயவே ।
ஜ்ஞாநம் விஜ்ஞாநஸஹிதம் யஜ்ஞாத்வா
மோக்ஷ்யஸேऽசுபாத் ॥

ஹே அர்ஜுனா! இது ஸகலத்துக்கும் ஆதியான விதை எனது ஹ்ருதயத்தில் அந்தக்கரணத்தினுள் இதுவரை மிக பத்திரமாக வைக்கப்பட்டிருக்கிறது. அதை இப்பொழுது உனது மனதில் விதைக்கிறேன். நீ நினைக்கலாம்! நல்லது! இவன் இவ்வாறு தனது ஹ்ருதயத்தைக் கிழித்து ரகஸ்யத்திலும் ரகஸ்யமான இதை ஏன் கூற வேண்டும்? என்று. ஆனால் அன்பனே நீ கேள். நீ ஆவல் வடிவாக இருக்கிறாய். நான் கூறுவதை நீ அலக்ஷ்யம் பண்ணமாட்டாய். அதனால் எனது மனதிலுள்ள அதிரகஸ்யம் வெளிப்பட்டாலும் பரவாயில்லை எனது இதயத்திலுள்ள பொருளை உனது இதயத்தில் வைக்கிறேன் அவ்வளவே.

அப்பனே, பசுவின் மடியில் பால் நிரம்பி இருக்கிறது. அந்தப் பாலின் இனிமையை மடியா சுவைக்கிறது? அப்பாலைத் தன்மயமாக இருக்கும் கன்று ஒன்றிருந்தால் அதல்லவா அப்பாலைச் சுவைத்துக் குடிக்கிறது. களஞ்சியத்திலிருந்து தான்யத்தை எடுத்து அதைப் பண்படுத்தப்பட்ட பூமியில் விதைத்தால் தான்யத்தை வீணாக இறைக்கிறதாக அர்த்தமா? அதனால் ஒருவன் ஸந்தோஷச் சித்தத்துடன் கூடியவனாக இருந்தால், நிர்மலமான அறிவுள்ளவனாக இருந்தால், நிந்தை செய்யாதவனாக இருந்தால் ஒருமைப்பட்ட மனத்துடன் அன்பு செய்பவனாக இருந்தால் ரகஸ்யத்திலும் ரகஸ்யத்தையும் அவனிடம் ஆனந்தமாகக் கூறலாம். மேற்கூறிய இத்தனை பொருத்தத்துடன் கூடியவன் உன்னைத் தவிர வேறு இல்லை எனக் கண்டேன். அதனால் இந்த ரகஸியத்தை உன்னிடமிருந்து என்னால் மறைக்க முடியவில்லை.

ஏதடா! ரகஸ்யம் ரகஸ்யம் என்று கூறுகிறானே என்று உனது மனம் அலுத்திருக்கும். அதனால் விஞ்ஞானரீதியாக இந்த ஞானத்தைப்பற்றி உனக்குக் கூறுகிறேன். அதை நன்றாக வடிகட்டி உனக்கு ஊட்டுகிறேன். ஸத்யத்தை அஸத்யத்திலிருந்து பிரித்து பரீக்ஷை செய்து ஸ்பஷ்டமாக உனக்குக் கூறுவேன். அன்னப் பறவை நீரிலிருந்து பாலை வேறாகப் பிரிப்பது போல் ஞானத்தையும் விஞ்ஞானத்தையும் உனக்கு வேறு வேறாகக் கூறுவேன். வாயு வீசுவதினால்தான் தான்யத்திலிருந்து உமியை வேறாக்க முடிகிறது. சுத்தமான தான்யம் நமக்கு கிடைக்கிறது அதைப்போல் ஞானத்தை அடைவதுடன் மனிதன் ஸம்ஸாரத்தை ஒப்படைத்து விட்டு மோக்ஷ லக்ஷ்மியின் ஸிம்மாஸனத்தில் கம்பீரமாக அமர்ந்திருப்பான் (1)

राजविद्या राजगुह्यं पवित्रमिदमुत्तमम् ।
प्रत्यक्षावगमं धर्म्यं सुसुखं कर्तुमव्ययम् ॥ २ ॥

ராஜவித்யா ராஜகுஹ்யம் பவித்ரமிதமுத்தமம் ।
ப்ரத்யக்ஷாவகமம் தர்ம்யம் ஸுஸுகம் கர்துமவ்யயம் ॥

இந்த ஞானம் வித்தை என்னும் ஊரில் சிரேஷ்ட்டமான ஆசார்ய பதத்தில் வீற்றிருக்கிறது. ஸகல ரகஸ்யங்களுக்கும் அதிபதி ஸகல பவித்ரப் பொருள்களுக்கும் அரசன். தர்மத்தின் அவதாரம் உத்தமத்திலும் உத்தமர். அதை அடைந்துவிட்டால் ஜன்ம ஜன்மாந்திரங்களை கழிக்கவேண்டிய வேலை இருக்காது. இத்தகைய ஞானத்தைக் குருமுகமாக அடைபவர்கள் மிகவும் சொற்பமே. உண்மையில் ஹ்ருதய பலத்திலேதான் இது ஸித்தியாகும். பிறகு தன்னைத்தானே நன்கு விளங்கும். அந்த ஞானத்தை ஸந்திக்க ஆத்ம ஸுகம் என்னும் ஏணி வழியே ஏறிப்போனால் அச்சுகத்தை அறிய விரும்புபவனை அது ஆலிங்கனம் செய்துகொள்ளுகிறது. உண்மையில் இந்த ஞானத்தை அடைந்து அதன் எல்லையில் போகும்போதுதான் வித்தையாகிய சுகம் நமக்குக் கிடைக்கிறது. இவ்வழியாகத்தான் அது எளிதில் அடையக்கூடியதாகும். அதுவே பரபிரும்மரூபம்.

இந்த ஞானத்தைப்பற்றி மற்றொரு விஷயம். ஒரு தரம் இதை அடைந்து விட்டால் பிறகு அது நம்மை விடவே விடாது அனுபவிக்க அனுபவிக்க நிர்மலமாகும். ஹே தனஞ்ஜயனே இப்பொழுது உனக்கு ஒரு ஸந்தேகம் ஏற்பட்டிருக்கிறதென்று புரிகிறது. அதாவது இத்தனை பெரிய வஸ்து ஜனங்கள் கண்களுக்குப் படாமல் தப்பிமறைந்திருக்கிறது. நூற்றுக்கு ஒரு ரூபாய் வட்டி வாங்குவதற்காக எரியும் தீயில் குதிக்கும் உலகம் அநாயாசமாகக் கிடைக்கும் இந்த மாதுர்யத்தை எப்படி விட்டு வைக்கும் இந்த ஞானம் பவித்ரமானது. ரமணீயமானது. எளிதில் கிடைக்கக்கூடியது. சுலபமானது. சுகத்தைக்கொடுக்கக் கூடியது. தர்மத்தினின்றும் வழுவாதது. நமக்கே அடையக் கூடியது. இப்படி சகல ஆனந்தத்தையும் கொடுக்கக் கூடியது. இது ஜனங்களிடமிருந்து எப்படித் தப்பித்திருக்கிறது. இது ஸந்தேகப்படக்கூடிய விஷயம்தான் (2)

अश्रद्दधानाः पुरुषा धर्मस्यास्य परंतप ।
अप्राप्य मां निवर्तन्ते मृत्युसंसारवर्त्मनि ॥ ३ ॥

அச்ரத்ததாநா: புருஷா தர்மஸ்யாஸ்ய பரந்தப ।
அப்ராப்ய மாம் நிவர்தந்தே ம்ருத்யுஸம்ஸாரவர்த்மநி ॥

பார். பசுவின் பவித்திரமான மடியில் மதுரமான பால் நிரம்பி இருக்கிறது. கேவலம் ஒரு தோல்தான் அதை மூடி இருக்கிறது. ஆனால் அம்மடுவைப்பற்றியிருக்கும் உண்ணிக்கு ரத்தம்தான் பிடிக்கும். பால் பிடிக்காது. வண்டுகளும் தவளை களும் ஒரே கமலத்தைச் சுற்றிச்சுற்றி வருகின்றன. ஆனால் வண்டோ கமலமகரந்தத்தை விரும்புகிறது. தவளை சேற்றை விரும்புகிறது ஒரு தரித்ரனை அபாக்யவான் வீட்டில் அவனுக்குத் தெரியாமல் ஆயிரம் கடாரம் பொன் புதைத்து வைத்திருந் தாலும், அவன் அந்தச் செல்வத்தின் மேலேயே உட்கார்ந்து கொண்டு உபவாசமிருந்துகொண்டு தரித்ரத்தையே அனுபவிப் பான். அதுபோல ஸகலஸுகத்துக்கும் இளைப்பாறுவதற்கு இருப் பிடமான ஹ்ருதய ராமன் தன் சித்தத்தில் இருக்கும்போது ப்ராந்த ஜனங்கள் விஷய ஸுகத்தையே விரும்புவார்கள்.

கண்ணுக்குத் தெரியும் கானல் நீரைப்பார்த்து விட்டு யாராவது கையிலிருக்கும் அமிருத குடத்தைக் கவிழ்ப்பானா? முத்துச்சிப்பியின் வெண்மையைக் கண்டு மயங்கி கழுத்திலணிந் திருக்கும் ஸ்பர்சவேதிமணியை உடைப்பார்களா! அதுபோல் இந்த அப்பாவிகள் அகங்காரமும் மமதையும் அவர்கள் மனதை அலைக்கழிப்பதால் ஆத்மாராமனை எல்லையை அடைய முடிய வில்லை. அதனால் ஜனன மரண ரூபமான இரு கரைகளையுடைய நதியில் பாபமென்னும் சகதியில் புதைந்து சாகிறான். கண்ணுக்கு எதிரில் தெரியும் ஸூர்யனைப்போல் நான் அகக்கண்ணில் ஒளிர் கிறேன். ஆனால் கண்ணுக்குத் தெரியும் ஸூர்யனுக்காவது உதய அஸ்தமனம் ஆகிற குறை இருக்கிறது எனக்கு இவ்வித குறை ஏதும் இல்லை. (3)

मया ततमिदं सर्वं जगदव्यक्तमूर्तिना ।
मत्स्थानि सर्वभूतानि न चाहं तेष्ववस्थितः ॥ ४ ॥

மயா ததமிதம் ஸர்வம் ஜகதவ்யக்த மூர்த்திநா ।
மத்ஸ்தாநி ஸர்வபூதாநி ந சாஹம் தேஷ்வவஸ்தித: ॥

இவ்வுலகம் முழுதும் என்னாலேயே படைக்கப்பட்டது. பால் உரைந்தால் அது தயிர்தான் விதையிலிருந்து விருக்ஷம் உண்டா

கிறது பொன்தான் நகைகளாக பரிணமிக்கிறது. அதுபோல் என் ஒருவனாலேயே இந்த ஜகம் வியாபித்திருக்கிறது. வெளிப்படாமல் புதையுண்டு கிடக்கும் இந்த உலகம் என்னால் விஸ்தரிக்கப்படும் பொழுது பாறையிலிருந்து நதி பெருகுவது போல் விஸ்தாரமாகிறது. இதைப்போல் நிராகாரமாக இருக்கும் பிரும்மம் மூன்று உலகங்களாக உருமாறுகிறது. மகத்தத்வத்திலிருந்து இந்த தேகம் வரை பஞ்ச பூதங்களினாலான இந்த ஸம்பூர்ண உலகம் என்னுடைய பிரதிபிம்பமே. ஜலத்தில் நுரை இருப்பது போல், ஆனால் நுரையில் ஜலம் இல்லாததுபோல் ஸ்வப்னத்தில் வியாபித்திருக்கிற உலகம் விழித்தவுடன் இல்லாதது போல, இந்த பஞ்ச பூத ஜகத் என்னிடம் பிரதிபலிக்கிறது. ஆனால் அவைகளில் நான் இல்லை. இவைகளைப் பற்றி நான் முன்னாலேயே உனக்குக் கூறி இருக்கிறேன். அதனால் சொன்னதை திரும்பக் கூற வேண்டிய அவசியமில்லை. சுருக்கமாகக் கூறுகிறேன். உனது திருஷ்ட்டியினால் எனது ஸ்வரூபத்தையே எங்கும் பார். (4)

न च मत्स्थानि भूतानि पश्य मे योगमैश्वरम् ।
भूतभृन्न च भूतस्थो ममात्मा भूतभावनः ॥ ५ ॥

ந ச மத்ஸ்தாநி பூதாநி பச்ய மே யோகமைச்வரம் ।
பூதப்ருந்ந ச பூதஸ்தோ மமாத்மா பூதபாவந: ॥

கற்பனைக்கும் எட்டாத நிலையில் என்னால் ஏற்படுத்தப்பட்ட இந்த பிரகிருதிக்கு அப்பால் உனது திருஷ்ட்டியைச் செலுத்துவாயானால் இந்த பஞ்ச பூததத்வமும் பொய் என்றும் நான் ஒருவனே ஸர்வமும் என்றும் அறிவாய். ஸங்கல்பமாகிய அந்திப் பொழுது மங்கும் போது புத்தியாகிய கண்களும் சற்று மயங்கத்தான் செய்கிறது. அந்த அந்தி மயங்கும் தருணத்தில் ஸகல ரூபங்களும் பின்னபின்னமாகத் தென்படுகின்றன. (பழுதையில் பாம்புபோல) அந்த ஸங்கல்பமாகிய சக்தி மயங்கி ஒளி ஏற்படும்போது எங்கும் அகண்டமாகிய ஜோதியே பரவுகிறது. இந்த ஸந்தேகம் போனவுடன் கயிற்றிலிருக்கும் ஸர்ப்பத் தன்மை நீங்கிவிடுகிறது.

பூமிக்குள்ளிருந்து பானையும் சட்டியும் தானே உண்டாகுமா? அவைகள் குயவனின் புத்தியால் அல்லவா உண்டாகிறது? ஸமுத்ர ஜலத்தில் அலைகளின் களஞ்சியம் இருக்கிறதா? ஜலத்தை வாயு அலைக்கழிப்பதாலல்லவா அலைகள் உண்டாகிறது. பருத்திச்

செடியின் வயிற்றில் துணிப்பெட்டி இருக்கிறதா? ஆடை அணிபவர்களின் கண்ணுக்கல்லவா அது துணிகளாகத் தென்படுகிறது. பொன் நகைகளாக ஆகும்போது அதன் தங்கம் குறைவதில்லை. இந்நகைகள் அணிபவர்களின் பாவனையைப் பொறுத்து வேறு வேறாகத்தென்படுகிறது. ஒலி எதிரொலிக்கும்பொழுது, கண்ணாடியில் பிரதிபிம்பம் தென்படும்பொழுது அது முன்னாலேயே அங்கிருந்ததா? நாம் பேசுவதாலும் பார்ப்பதாலும் அல்லவா அவைகள் உண்டாகின்றன?

அதுபோலவே எனது இந்த நிர்மலமான ஸ்வரூபத்தில் வஸ்துக்களைக் கற்பிக்கும்பொழுது இந்த ஸங்கல்பத்தின் காரணத்தினால் பொருள்கள் தென்படுகின்றன. இப்பொருள்களை ஸ்ருஷ்டிக்கும் பிரகிருதி மறைந்துவிட்டால் அத்துடன் பஞ்சபூத தத்வமும் மறைந்துவிடுகிறது. அப்பொழுது அகனுடைய சுத்த ஸ்வரூபம் தோன்றுகிறது தன்னைத்தானே சுற்றிக்கொண்டால் உலகம் சுற்றுவதாகத் தோன்றுகிறது. அதைப்போல தனது கற்பனையால் அகண்ட பிரும்மத்துக்குப்பதில் பஞ்சபூதங்கள் தென்படுகின்றன.

இந்த கற்பனையை விட்டு விட்டுப் பார்த்தோமானால் எல்லாப் பொருள்களில் நானும் எல்லா பொருள்களும் என்னிடத்திலும் இருப்பதைப் பார்ப்பாய். இந்த விஷயம் கனவுகாணக்கூடத் தகுந்ததல்ல. நானே பூதங்களை வகிக்கிறவன் என்றோ பூதங்களில் நான் இருக்கின்றேன் என்றோ நினைப்பது ஸங்கல்பரூபமான ஜன்னியின் பிதற்றலாகும். அதனால் ஹே பிரியோத்தம, இந்த விதமாக நான் உலகின் ஆத்மா. இதை எப்பொழுதும் பாவனை செய்யவேண்டும். ஸூரிய கிரணங்களின் ஆதாரத்தைக் கொண்டே பொய்யான கானல் நீர் உண்டாகிறது. அதுபோல் எனது அதிஷ்டானத்தினால்தான் பூததத்வங்கள் தென்படுகின்றன. இவ்விதமாக நான் பூததத்வங்களை சிருஷ்டி செய்வேன். ஆனால் அவைகளிலிருந்து விலகியே நிற்பேன். கதிரவனும் பிரபையும் போல. இப்பொழுது நீ எனது ஐசுவர்ய யோகத்தை நன்றாகத் தெரிந்து கொண்டாயல்லவா? நீ தெரிந்து கொண்டதற்கும் பிராணிகளின் பேதத்துக்கும் ஏதாவது ஸம்பந்தம் உண்டா? தாத்பர்யம் என்னவென்றால் பிராணிகள் உண்மையில் என்னை விட வேறானதல்ல. (5)

यथाकाशस्थितो नित्यं वायुः सर्वत्रगो महान् ।
तथा सर्वाणि भूतानि मत्स्थानीत्युपधारय ॥ ६ ॥

யதாகாசஸ்திதோ நித்யம் வாயு: ஸர்வத்ரகோ மஹாந் ।
ததா ஸர்வாணி பூதாநி மத்ஸ்தாநீத்யுபதாரய ॥

ஆகாயம் எவ்வளவு பெரியதாக இருக்கிறது. ஆகாசத்தில் கலந்திருக்கும் காற்றும அத்தனை பெரியது. ஆனால் காற்றை அசைத்தோமானால் அது வேறாகத் தெரிகிறது. அசையாவிட்டால் அது ஆகாசமேதான். அதுபோல் ஜீவ உலகம் என்னில் கற்பனை செய்யும்போது காணப்படுகிறது. கற்பனை இல்லாவிட்டால் உலகம் இல்லை. அச்சமயம் நானே எல்லாமாக இருக்கிறேன். அழிவும் பிறப்பும் கற்பனையாலேயே நிகழ்கின்றன. கற்பனை இல்லாதிருக்கும்போது அழிவு ஏற்படுகிறது. கற்பனை இருக்கும் போது உத்பத்தி. கற்பனை செய்பவன் இல்லாவிட்டால் உத்பத்தியும் நாசமும் ஏன் ஏற்படுகிறது ? திரும்பவும் எனது ஐசுவர்யத்தைப்பற்றிக் கேள். இந்த ஞானநுபவ சமுத்ரத்தில் என்னை ஒரு அலையாக எண்ணு பிறகு சராசரஜகத்தில் நீயே நானாகக் காண்பாய். திரும்பியும் கிருஷ்ணன் கேட்கிறார். இந்த ஞான ப்ரகாசம் உனக்குக் கிடைத்ததா இல்லையா ? உனது துவைத ரூபமான கனவு அழிந்ததா இல்லையா ? இருந்தாலும் ஒருவேளை திரும்பவும் புத்திக்குக் கற்பனையாகிய மயக்கம் வருமானால் அந்தக் கனவில் அபேதமான ஞானம் மறைந்துவிடும். அதனாலேயே உனக்குத் திரும்பவும் ஸதயமான ரகஸ்யத்தைக் கூறுகிறேன். இதனால் உனது கல்பனை என்ற நித்திரை கலையட்டும். ஞான ரூபமான விழிப்பு ஏற்படட்டும். அதனால் உனக்குத் திரும்பவும் கூறுகிறேன். ஹே தனஞ்ஜய ! நன்றாகக் கேள். எல்லா பிராணிகளிடையேயும் உத்பத்தியையும் ஸம்சார பாலனத்தையும் மாயையே செய்கிறது.

सर्वभूतानि कौन्तेय प्रकृतिं यान्ति मामिकाम् ।
कल्पक्षये पुनस्तानि कल्पादौ विसृजाम्यहम् ॥ ७ ॥

ஸர்வபூதாநி கௌந்தேய ப்ரக்ருதிம் யாந்தி மாமிகாம் ।
கல்பக்ஷயே புநஸ்தாநி கல்பாதௌ விஸ்ருஜாம்யஹம் ॥

பிரகிருதி என்று எதற்குப் பெயரோ அதை உனக்கு இரண்டு விதமாக கூறுகிறேன். ஒன்று எட்டுப்பிரிவுகள் உள்ளது மற்றொன்று ஜீவரூபம். மாயையைப் பற்றிய சகல விஷயத்தையும் நீ முன்னாலேயே கேட்டு விட்டாய். அதைத் திரும்பத் திரும்ப

வர்ணிக்க வேண்டாம். என்னுடைய இந்த பிரகிருதியின் காரணத்தினுலேயே மகாகல்பத்தின் முடிவில் எல்லாப் பிராணிகளும் அவ்யக்தத்தில் லயமடைகிறுர்கள். கோடை காலத்தில் அதிக வெப்பத்தினுல் புற்கள் எப்படித் தன் விதைகளுடன் பூமியில் லயமாகிவிடுகின்றனவோ, அதைப்போலவே வர்ஷருதுவின் படாடோபம் விலகியவுடன் அதுவரை மறைந்திருந்த சரத்காலம் வெளியாகிறது. அப்பொழுது மேகக் கூட்டங்கள் ஆகாசத்திலேயே மறைந்துவிடுகின்றன. ஆகாசத்தில் வாயு சாந்தமாக லயமடைகிறது. அலேகளின் உருவம் ஜலத்திலேயே லயமடைவதைப் போல், விழித்தெழுந்தவுடன் கனவு மனதிலேயே மறைவதைப் போல், பிரகிருதியிலிருந்து உண்டான ஜகத் கல்பாந்தகாலத்தில் பிரகிருதியிலேயே லயமடைகின்றது. நானே ஜகத்தை உண்டு பண்ணினேன் என்று கூறினேன் அல்லவா! அதைப்பற்றித் திரும்பவும் கூறுகின்றேன், கேள். (7)

प्रकृतिं स्वामवष्टभ्य विसृजामि पुनः पुनः ।
भूतग्राममिमं कृत्स्नमवशं प्रकृतेर्वशात् ॥ ८ ॥

ப்ரக்ருதிம் ஸ்வாமவஷ்டப்ய விஸ்ருஜாமி புந: புந: ।
பூதக்ராமமிமம் க்ருத்ஸ்நம் அவசம் ப்ரக்ருதேர்வசாத் ॥

ஹே கிரீடி! நான் இயற்கையாகவே பிரகிருதிக்கு இடம் அளிக்கிறேன், நூல் தொகுதியினுலாகிய துணியின் நெசவைப் போல். இந்த நெசவின் ஆதாரத்தில் ஒரு சிறு தொழிற்சாலே உண்டாகிறது. அதில் மடிபபு மடிப்பான துணிகள் தயாரா கின்றன. அதுபோல் எப்பொழுது நான் பிரகிருதிக்கு இயற்கை யாகவே இடமளிக்கிறேனே அப்பொழுது பஞ்ச பூததத்வமாகிய நூல் தொகுதியிலிருந்து பிரகிருதியே ஜகத்தாகி நெசவுத்தொழிலே ஆரம்பிக்கிறது. புரைகுத்திய தயிருடன் பாலும் தயிராவதுபோல் பிரகிருதியும் சிருஷ்டி ரூபமாகிறது. விதையைப் பூமியில் ஊன்றித் தண்ணீர் விட்டவுடன் அது எப்படி அநேக கிளே களுள்ள விருக்ஷம் ஆகிறதோ அதுபோல் இந்த ஸகல ஜீவ ராசிகளினுடைய உற்பத்தி என்னுல்தான் உணடாகிறது. ஒரு ராஜா ஒரு நகரததைத் தோற்றுவித்தான் எனபது உண்மை. அதனுல் அவனுக்கு சரீர பிரயாசை ஏது? அதைப் போலவே நான் பிரகிருதிக்கு இடமளிக்கிறேன். அது எவ்விதமென்றுல் கனவு காண்பவன் பிறகு விழிப்பு நிலே அடைவதைப் போல.

சொப்பனத்திலிருந்து விழித்தெழுந்தவனுக்குத் தேகத்தில் வலி ஏற்படுகிறதா, கனவு காண்பதற்காக அவன் தன் இருக்கையை விட்டு வேறிடம் செல்கிருனு, இவ்வித விஷயங்களுக்கெல்லாம் எனது அபிப்ருயம் என்னவென்ருல் இந்த சிருஷ்டியை உற்பத்தி செய்வதற்கு எனக்குச் சிறிதும் சிரமம் கிடையாது. அரசனை ஆச்ரயித்திருக்கும் பிரஜைகள் தங்கள் தங்கள் தொழிலைச் சுதந்திரமாகச் செய்வதைப்போல எனக்கும் பிரகிருதிக்கும் உள்ள ஸம்பந்தம். செயலாற்றுவது பிரகிருதியே. பூர்ண சந்திரனைக் கண்ட கடல் கொந்தளிக்கிறது. அதனுல் சந்திரனுக்கு ஏதாவது சிரமம் ஏற்படுகிறதா? இரும்பு ஜடத்தன்மை வாய்ந்தது. ஆனுல் காந்தத்தின் அருகில் சென்றவுடன் அது இயங்க ஆரம்பிக்கிறது. ஆனுல் காந்தத்துக்கு அதனுல் ஏதாவது கஷ்டம் உண்டாகிறதா என்ன? இவ்விதமாக நான் பிரகிருதிக்கு ஆசிரயம் அளித்தவுடன் சிருஷ்டி இயங்கத் தொடங்குகிறது. இந்த ஸம்பூர்ண பிராணி ஸமுதாயம் பிரகிருதியின் அதீனம். விதையிலிருந்து கொடிகளும் தளிர்களும் உண்டாவதற்கு பூமி தானே காரணம். சரீரத்தை ஆசிரயித்துத் தானே பாலப்பருவம் யௌவனம் கிழத்தன்மை ஆகிய தசைகள் உண்டாகின்றன. ஆகாயத்தை ஆசிரயித்துத்தானே மேகக்கூட்டங்கள் மழை பொழிகின்றன. நித்திரை வந்தால்தானே கனவு காண்கிருேம். அதைப்போல இந்த சிருஷ்டி சமுதாயத்தின் பூரண அதிகாரிணி பிரகிருதியே ஆகும் ஸ்தாவரம், ஜங்கமம், ஸ்தூலம், ஸூக்ஷ்மம அதிகம் கூறுவானேன்? இவ்வித ஸகல ரூபமான பஞ்சதத்வத்திற்கு ஆதிகாரணம் பிரகிருதியே. அதனுல் பிராணிகளை உத்பத்தி செய்வதும் அவைகளை வளர்ப்பதும் ஆகிய காரியங்களுக்கும் எனக்கும் ஒரு ஸம்பந்தமும் இல்லை. என்னை அடைந்தவர்கள் நானுகவே ஆகிருர்கள். எல்லாக் கர்மங்களிலிருந்தும் விலகி நிற்கிருர்கள். (8)

न च मां तानि कर्माणि निबध्नन्ति धनंजय ।
उदासीनवदासीनमसक्तं तेषु कर्मसु ॥ ९ ॥

ந ச மாம் தானி கர்மாணி நிபத்நந்தி தநஞ்ஜய ।
உதாஸீனவதாஸீனமஸக்தம் தேஷு கர்மஸு ॥

கடலில் அலைகள் சிதறும்போது உப்பினுல் அணைகட்டி நிறுத்தமுடியாது எல்லாக் கர்மங்களின் முடிவும் என்னையே

சேருவதால் அக்கர்மங்கள் என்னைக் கட்டுப்படுத்தாது. புகைப் படலத்தினுல் வேகமாக வீசும் காற்றைத் தடைசெய்யமுடியுமா? சூரியபிம்பத்தை இருள் மறைக்கமுடியுமா? பர்வதத்தின் ஹ்ருதயத்தில் மழைதாரைகள் பிரவேசிக்கமுடியுமா? அதுபோல் பிரகிருதியின் கர்மங்கள் என்னைக் கட்டுப்படுத்தாது. ஆனாலும் இந்த பிரகிருதியின் ஒவ்வொரு காரியத்திலும் நானே நிறம்பி இருக்கிறேன் என்று எண்ணவேண்டும். ஆனல் உதாசீனனை யோகியைப்போல் நான் ஒன்றும் செய்வதும் இல்லை செய்விப்பதும் இல்லை. வீட்டில் ஏற்றிவைத்த விளக்கு ஒருவரையும் கர்மத்தில் ஈடுபடுத்துவதும் இல்லை. கர்மத்திலிருந்து விலகியிருக்கச் சொல் வதும் இல்லை யார் என்ன வேலை செய்கிறார்கள் யார் சும்மா இருக்கிறார்கள் என்பதும் அதற்குத் தெரியாது. ஆனல் தீப ஒளி இல்லாமல் ஒரு காரியமும் நடக்காது. அது ஸாக்ஷிபூதமாக இருந்துகொண்டு வீட்டுக்காரியங்கள் ஒழுங்காக நடைபெற ஒரு கருவியாக இருக்கிறது. அதுபோலவே நான் பிராணிகளுடைய கர்மங்களில் உதாஸீன பாவத்துடன் இருந்தாலும் அவ்விளக்கு ஒளியைப்போல் அவைகளில் வியாபித்திருக்கிறேன். ஒரே விஷயத்தை எத்தனைதரம்தான் திரும்பத்திரும்பக் கூறுவது, ஹே சுபத்ராபதி! இன்னும் கேள். (9)

मयाध्यक्षेण प्रकृतिः सूयते सचराचरम् ।
हेतुनानेन कौन्तेय जगद्विपरिवर्तते ॥ १० ॥

மயாத்யக்ஷேண ப்ரக்ருதி: ஸூயதே ஸசராசரம் ।
ஹேதுநாநேன கௌந்தேய ஜகத் விபரிவர்ததே ॥

சூரியன் மனிதர்களுடைய எல்லாக் காரியங்களுக்கும் நிமித்த காரணமாகிறான். அதுபோல் நானும் ஜகத் உத்பத்திக்கு நிமித்த காரணமாகிறேன். பிரகிருதி என்னை அடைந்துவிட்டதனுல் சராசரஜகத்தின் உத்பத்தி ஏற்படுகிறது. ஆகையால் அதற்கு நானே காரணமாகிறேன். இந்த உண்மையைக் கண்டுகொண்டு நீ எனது ஐசுவர்ய யோகத்தைப் பார்ப்பாயானல், என்னிடம் எல்லாம் அடங்கியிருக்கின்றன, நான் அவைகளில் இல்லை என்பதைக் காண்பாய். இதை ஒருநாளும் மறக்காதே. இது எனது பரமரகஸ்யம். இதை உன்னிடம் திறந்து கூறுகிறேன். இப்பொழுது இந்திரியங்களாகிற கதவை அடைத்துக்கொண்டு ஹ்ருதயத்தில் அநுபவித்துப்பார். இந்த மர்மத்தை நன்றாக

அறியாதவரையில் உமியில் கலந்திருக்கும் தான்யத்தைப்போல் என் உண்மை ஸ்வரூபம் அறியமுடியாது. யூகத்திலும் அநுமானத்திலும் அடைந்துவிட்டமாதிரித் தோன்றலாம். ஆனால் கானல் நீரினால் பூமி எங்காவது நனையுமா? ஜலத்தில் இருக்கும் பாசியில் சந்திரபிம்பம் சிக்கிக்கொண்டிருப்பதுபோல் தோன்றும் ஆனால் பாசியைக் கரையில் எடுத்து உதறினால் அந்த பிம்பம் எங்கு போகிறது? இந்த ரகஸ்யத்தை அநுபவக் கண்கொண்டு பார்த்தாலும் சப்தங்களின் ஜாலங்களில் விருதாவாகச் சிக்கிவிடும் ஆனால் ஞானம் விழித்தெழும்போது இவைகள் மறைந்துவிடும். (10)

अवजानन्ति मां मूढा मानुषीं तनुमाश्रितम् ।
परं भावमजानन्तो मम भूतमहेश्वरम् ॥ ११ ॥

அவஜாநந்தி மாம் மூடா மாநுஷீம் தநுமாச்ரிதம்।
பரம் பாவமஜாநந்தோ மம பூத மஹேச்வரம் ॥

உனக்கு உலகைப்பற்றிப் பயமிருந்தால், என்னையடைய வேண்டும் என்ற ஆவல் மிகுந்திருந்தால் நான் கூறிய இந்த வழியைக் கவனமாகப் பின்பற்றுவாயாக. இல்லாவிட்டால் மஞ்சள் காமாலை வந்த கண்களுக்கு எங்கும் மஞ்சளாகத் தென்படுவதுபோல் எனது நிர்மலமான உருவமும் களங்கமாகத் தென்படும். பித்தஜ்வரம் வந்தால் பாலும் கசக்கும். அதுபோல் ஸம்ஸாரிகள் அமாநுஷனை என்னை மனிதன் என்று எண்ணுகிறார்கள். அதனால் நான் என்ன சொல்கிறேன் என்றால் உனது அபிப்ராயத்தை மாற்றிக் கொள்ளாதே. ஸ்தூல திருஷ்டியால் என்னைப் பார்க்காதே. பார்ப்பதே அக்ஞானம். கனவில் அமிருதத்தைப் பருகினவன் அமரனாகமாட்டான். ஜனங்கள் ஸ்தூலத்ருஷ்டியினால் தான் என்னைப்பார்க்கிறார்கள். அதனால் அவர்களுடைய ஞானம் மறைக்கப்பட்டிருக்கிறது. நீரில் பிரதிபலிக்கும் நக்ஷத்ரத்தை முத்து என்று நம்பி அதில் மூழ்கும் அன்னப்பறவை ஏமாந்தே போகும். கானல் நீரைக் கங்கை என்று நம்பிக்கொண்டு சென்றால் என்னவாகும்? கருவேல மரத்தை கல்பதரு என்று எண்ணிக்கொண்டு அதற்கு தண்ணீர் விட்டு வளர்ப்பதில் என்னபலன்? பாம்பை நீலமணியினாலான ஹாரம் என்று கழுத்தில் அணிய முடியுமா? கூழாங்கல்லை எங்காவது வைரம் என்று சேகரிப்பார்களா? நெருப்பை ரத்னம்

என்று எண்ணித் துணியால் மூடிமறைத்துக் கொள்ளமுடியுமா? தன் நிழலேயே மற்றொரு சிங்கம் என்று நினைத்து ஒரு சிங்கம் கிணற்றில் விழுந்த கதைதான்.

அது போல் பிரபஞ்சத்தை நானே என்று எண்ணி அதில் ஆழ்ந்து விடுகிறார்கள். சந்திரன் என்று கருதி நீரில் தெரியும் சந்திரபிம்பத்தைப் பிடிப்பதற்குச் செய்யும் முயற்சிபோலானது தான் அது. கஞ்சியைக் குடித்து விட்டு அமிருதத்தின் பலனை எதிர்பார்க்கமுடியுமா? அழியக்கூடிய ஸ்தூல மனதால் சிந்தித்து அவினாசியான என்னை எப்படிப் பார்க்கமுடியும்? மேற்குக் கடலை அடையக் கிழக்கு நோக்கிச் சென்றால்? உமியைக் குத்தினால் தான்யம் அகப்படுமா? அது போல இந்த க்ஷணத்தில் மாறக் கூடிய ஸதூலஜகத்தைப் பார்ப்பதால் என்னையடையமுடியுமா? நுரையைக் குடிப்பதால் ஜலம் குடித்த திருப்தி ஏற்படுமா? மோகமடைந்த மனோபாவனையுடன் ஸம்ஸாரிகள் உலகில் உள்ள ஜனனமரணங்கள் எனக்கும் உண்டென்று எண்ணுகிறார்கள். அநாமியான எனக்குப் பெயரிடுகிறார்கள் அக்ரியனான என்னைக் கர்மத்தில் ஈடுபடுத்துகிறார்கள். விதேகியான எனக்கு ஜனன மரணங்களைக் குறிப்பிடுகிறார்கள். எங்கும் நிறைந்த என்னை உருவமுள்ளவனாக்குகிறார்கள் உபாதிரஹிதனான எனக்குப் புகழ் பாமாலை சூட்டுகிறார்கள். அகர்த்தவ்யம் கர்த்தவ்யம் ஒன்றும் இல்லாத என்னை வ்யவகாரத்தில் ஈடுபடுத்துகிறார்கள்.

முக்குணங்களுக்கும் அப்பாற்பட்ட என்னை அக்குணங்களுடன் கூடியவனாகக் காண்கிறார்கள். அரூபியான எனக்கு அவயவங்களைக் கற்பிக்கிறார்கள். அளவிடமுடியாத என்னைச் சிறிய புத்தியினால் அளக்கிறார்கள். எங்கும் நிறைந்த என்னை ஸ்வர்க்கத்தில் இருப்பதாகக் கருதுகிறார்கள். படுக்கையில் படுத்திருப்பவன் கனவில் கானகத்தைக் காண்பதுபோல், காலில்லாதவனான என்னைக் காலுள்ளவனாகவும், கண்களில்லாத என்னைக் கண்களுள்ளவனாகவும், சுரோத்ர ரகிதனான என்னை ச்ரோத்ரமுள்ளவனாகவும் எண்ணுகிறார்கள். மறைந்திருக்கும் என்னை இப்படி பிரகடனப்படுத்துகிறார்கள். தங்களுடைய ஆத்ம திருப்திக்காக அவர்களுக்குள்ள குணங்களை என்மேல் ஏற்றி ஆறுதலடைகிறார்கள். திகம்பரனான எனக்கு ஆடை அணிவிக்கிறார்கள். நகைகள் அணிவிக்கிறார்கள். காரணரகிதனான எனக்கு ஒரு காரணம் கற்பிக்கிறார்கள். ஜோதி பிரகாசனான எனக்குச் சிலை அடித்துக் கும்பிடுகிறார்கள். ஸித்திகளுக்கும் ஸித்தனான என்னை

பிரதிஷ்டை செய்கிறார்கள். எங்கும் எப்பொழுதும் நிரந்தரமாக இருக்கும் எனக்கு ஆவாஹனம் விஸர்ஜனம் செய்கிறார்கள். மேலும் பாலன் என்றும், தருணன் என்றும், விருத்தன் என்றும் பேதம் கற்பிக்கிறார்கள். அத்வைதியான என்னை துவைதன் என்கிறார்கள். அகர்த்தாவான என்னைக் கர்த்தா என்றும் அபோக்தாவான என்னை போக்தாவாகவும் ஆக்குகிறார்கள். குடும்பம் இல்லாத எனக்குக் குடும்பத்தைக் கற்பிக்கிறார்கள். நித்ய சாஸ்வதனான என்னை மரணமடைந்தவனாகக் கற்பித்துத் துக்கிக்கிறார்கள். ஸமசித்தனான எனக்குச் சத்ருக்களைக் கற்பிக்கிறார்கள் ஆத்மானந்தத்தில் ஆழ்ந்திருக்கும் எனக்குப் பலவித துக்கங்களைக் கற்பிக்கிறார்கள். சராசர ஆத்மாவாக நிறைந்திருக்கும் என்னை ஒருவனுடைய பக்ஷத்தைச் சார்ந்து அவனைக் காப்பாற்றுகிறேன் என்றும் மற்றொருவனைக் கோபத்தால் கொல்லுகிறேன் என்றும் கூறுகிறார்கள். பிரகிருதியினால் பிறப்பிக்கப்பட்ட ஜனங்கள் தங்களுடைய குணாதிசயங்களை என்னிடம் ஆரோபித்துப் பார்க்கிறார்கள். அவர்களுடைய இந்த ஞானம் தலைகீழாக இருக்கிறது. ஒரு உருவத்தைச் செய்து அல்லது ஒரு சித்ரத்தை வைத்து அதில் நான் இருப்பதாக எண்ணி பாவனை செய்கிறார்கள். அவைகள் உடைந்துவிட்டால் தூர எறிந்துவிடுகிறார்கள். (11)

**मोघाशा मोघकर्माणो मोघज्ञाना विचेतसः ।**
**राक्षसीमासुरीं चैव प्रकृतिं मोहिनीं श्रिताः ॥ १२ ॥**

*மோகாசா மோக கர்மாணோ மோகக்ஞாநா விசேதஸ: ।*
*ராக்ஷஸீம் ஆஸுரீம் சைவ ப்ரக்ருதிம் மோஹினீம்*
*ச்ரிதா: ॥*

அதனால் இவர்களுடைய ஜன்மம் வீண் என்று நினை. மழை பெய்யாத மேகத்தையும், கானல் நீரின் அலைகளையும் தூரத்திலிருந்தே பார்க்கமுடியும். கந்தர்வ நகரையும், கற்பனைக் குதிரை ஸவாரியையும் மனதால்தான் அநுபவிக்கமுடியும். ஆட்டின் கழுத்திலிருக்கும் சதையினால் ஏதாவது பிரயோஜனமுண்டா? அதுபோல் இந்த முட்டாள்களுடைய ஜன்மம் வீணே. அவர்கள் செய்யும் கர்மம் இழிவானதே. அவர்கள் படிப்பதும் பூஜிப்பதும் குரங்கினால் எடுத்தெறியப்பட்ட மலர்மாலை போலவும் குருடன் கையில் அகப்பட்ட முத்தைப் போலவும் ஆகும். அவர்கள் படித்த சாஸ்த்ரம் ஒரு சிறு பெண் குழந்தையின் கையில்

கொடுத்த அஸ்த்ரத்துக்கு ஸமானமே ஆகும். அபவித்ரமான மனிதனுக்கு மந்திரம் உபதேசித்து என்ன பலன்? சஞ்சலசித்த முடையவனுக்கு எல்லா ஞானமும் அவனுடைய அப்யாஸமும் வீணே.

பிரகிருதியாகிய ராக்ஷஸி தமோகுணம் நிறம்பியவள். ஸத் புத்தியை விழுங்குபவள். பேயாகிய அவள் விவேகத்தை அடையாளம் தெரியாமல் அழித்துவிடுவாள். இவர்கள் அவள் வசத்தில் மயங்கிக்கிடப்பர். சிந்தையாகிய குகையில் தமோ குணம் நிறம்பிய அவளைத் தழுவிக்கொண்டு கிடக்கிறார்கள். அவர்கள் முகத்திலிருந்து ஆசையென்னும் உமிழ் நீர் வழிந்து கொண்டு கிடக்கிறது. ஹிம்ஸைஎன்னும் நாக்கு வெளியில் தொங்கு கிறது. ஸந்தோஷம் என்னும் மாமிஸத்துண்டைச் சுவைத்துக் கொண்டிருக்கிறாள். அனர்த்தங்களாகிய அவள் உதடுகள் காது வரை நீண்டு இருக்கின்றன. அவளுடைய வாய் அடாத செய்கை என்ற பர்வதத்தின் குகையைப்போல் இருக்கிறது. த்வேஷம் என்னும் அவளுடைய இகறுகள் ஞானத்தை வெட்டிவேரைச் சுவைப்பதைப்போல் சுவைத்துத் கள்ளுகிறது அவளுடையதோல் முட்டாள்களுடைய ஸ்தூலபுத்தியைப் போல் தடித்திருக்கிறது. இந்த யக்ஷிணியான பிரகிருதியின் வாயில் எந்த பிராணி பலி யாகிறதோ அது மதிமயக்கம் என்னும் பாழும் கிணற்றில்விழுகிறது.

இந்த தமோ ரூபமான குழியில் விழுந்திருப்பவர்களை ஸத் சிந்தனை என்ற நீண்ட கைகளாலும் எடுக்கமுடியாது. அவர்கள் கடைசி காலத்தில் எங்கு செல்கிறார்கள் என்பதும் நமக்குத் தெரியாது. அதனால் அந்த முட்டாள்களுடைய வர்ணனையை இத்துடன் நிறுத்திக்கொள்ளுகிறேன். வீணைகப் புழுதியைக் கிளப்பினால் தொண்டைதான் உலர்ந்துபோகும். இதைக்கேட்டு விட்டு அர்ஜுனன் கூறுவான். தங்கள் ஆக்ஞைப்படியே என்று. அப்பொழுது ஸ்ரீ கிருஷ்ணன் கூறுவார் இப்பொழுது எந்த வாக்யங்கள் நமது களைப்பை நீக்குகின்றனவோ அவைகளைக்கேள் என்று. (12)

महात्मानस्तु मां पार्थ दैवीं प्रकृतिमाश्रिताः ।
भजन्त्यनन्यमनसो ज्ञात्वा भूतादिमव्ययम् ॥ १३ ॥

மஹாத்மானஸ்து மாம் பார்த்த தைவீம்
ப்ரக்ருதிமாச்ரிதா: ।
பஜந்தி அநந்யமனஸோ க்ஞாத்வா பூதாதிமவ்யயம் ॥

நான் யாருடைய சுத்தமான மனதை க்ஷேத்ரமாகக்கொண்டு அதில் ஸந்யாசியாக வாழ்கிறேனோ அந்த சுத்த மனமுள்ள புருஷனுக்கு வைராக்யம் ஸேவை செய்யும் தாதியாகிறாள். எவனுடைய சித்தத்தின் ஸத்பாவத்தால் தர்மராஜ்யம் நடக்கிறதோ எவனுடைய மனம் விவேகத்துக்கு உயிரோ யார் ஞானமாகிய கங்கையில் தினம் தினம் ஸ்னானம் செய்கிறாரோ, பூர்ணமாகிய போஜனத்தால் திருப்தியடைகிறாரோ எவர்கள் சாந்திமயமான விருக்ஷத்தின் தளிர்களாக விளங்குகிறார்களோ, எவர்கள் பிரும்ம ரூபமான விதையின் முளையாக இருக்கிறார்களோ, எவன் தைரியமாகிற மண்டபத்துக்கு ஸ்தம்பமாக இருக்கிறார்களோ, எவர்கள் ஆனந்தரூபமான பாற்கடல் நீரால் நிறப்பப்பட்ட கும்பமாகிறார்களோ எவர்களுடைய பராபுத்தியானது மோக்ஷத்தையும் பின்னே தள்ளு என்று கூறுகிறதோ, எவர்கள் விளையாட்டிற்கும் நேர்மையை விட்டு நழுவாமல் இருக்கிறார்களோ, எவர்கள் ஸர்வ இந்திரியங்களிலும் சாந்தியாகிய பூஷணத்தை அணிந்திருக்கிறார்களோ, எவருடைய சித்தம் முழுவதும் என்னால் வியாபிக்கப் பட்டிருக்கிறதோ, அப்படிப்பட்ட மகானுபாவர்கள் பிரகிருதி மாதாவின் செல்லப் பிள்ளைகள். அவர்கள் என்னுடைய ஸம்பூர்ண உருவத்தை அறிகிறார்கள். அவர்கள் கட்டுக்கடங்காத பிரேமையினால் என்னைப் பஜிக்கிறார்கள். அவர்கள் மனம் த்வைதம் என்னும் எல்லைக்குப் போகாது அவர்கள் ஸாரூப்ய பதவி அடைந்து என்னை ஸேவிக்கிறார்கள். இன்னும் கேள். (13)

सततं कीर्तयन्तो मां यतन्तश्च दृढव्रताः ।
नमस्यन्तश्च मां भक्त्या नित्ययुक्ता उपासते ॥ १४ ॥

ஸததம் கீர்த்தயந்தோ மாம் யதந்தஸ்ச த்ருடவ்ரதா: ।
நமஸ்யந்தஸ்ச மாம் பக்த்யா நித்யயுக்தா உபாஸதே ॥

அவர்கள் பிரேமையினால் ஹரி கீர்த்தனம் செய்து கொண்டும் ஆடிக்கொண்டும் பிராயச்சித்தம் பச்சாத்தாபம் என்ற சொல்லே இல்லாமல் செய்கிறார்கள். அவர்கள் பாபம் என்னும் பெயரை அழித்துவிடுகிறார்கள். அவர்கள் யமம் நியமம் என்னும் நிலையை தீனத்தன்மை அடையச் செய்கிறார்கள். தீர்த்த ஸ்நானத்துக்குச் செல்லவேண்டுமென்ற விருப்பத்தையே அழியச்செய்கிறார்கள். யமனுடன் நமக்குள்ள விவகாரங்கள் அனைத்தையும் பாக்கியன்னியில் தீர்த்துவிடுகிறார்கள். யமம்

கூறுகிறது. நாங்கள் எதை ஒழுங்குபடுத்துவது என்று? தமம் கூறுகிறது—நாங்கள் எதை அடக்குவது என்று? தீர்த்தங்கள் கூறுகின்றன. எங்கள் பாபத்தை நாங்கள் எப்படி போக்குவது நாங்கள் எதை சாப்பிடுவது என்று? அவைகளுக்குப்பாபம்தான் மருந்துக்கும் கிடைப்பதில்லையே.

இவ்விதமாக அவர்கள் நாமகோஷத்தினுல் ஸம்ஸார துக்கங்களை நாசமடையச் செய்கிருர்கள். எல்லா இடங்களையும் மகாஸுகத்தினுல் நிறப்புகிருர்கள். அருணோதயம் இல்லாமலேயே ஜகத்தை பிரகாசிக்கச் செய்கிருர்கள். அமிருதத்தைச் சாப்பிடாமலேயே அமரத்தன்மை அடைகிருர்கள். யோகஸித்தி இல்லாமலேயே அவர்களுக்கு கைவல்யபதவி ஸித்திக்கிறது. இவன் தனிகன், இவன் தரித்திரன், இவன் பெரியவன், இவன் சிறியவன் என்றபேதம் இவர்களுக்கு கிடையாது. உலகத்தையே இவர்கள் ஆனந்த நந்தவனம் ஆக்குகிருர்கள். வைகுண்டத்திற்கு இவர்களில் ஒருவர் இருவரே செல்ல இச்சைப்படுகிருர்கள். ஏனென்ருல் இவர்கள் தாம் இருக்கும் இடத்தையே வைகுண்டமாக்கிவிடுகிருர்கள். இந்தவிதமாக இவர்கள் நாமபஜனையின் மூலமாக உலகை பிரகாசிக்கச் செய்கிருர்கள்.

ஸூர்யன் தனது தேஜஸினுல் பிரகாசிக்கிருன். ஆனுலும் அவனிடம் அஸ்தமனதோஷம் இருக்கிறது. சந்திரன் பதினைந்து நாட்களுக்கொருதரம்தான் பூர்ணனுகிருன். ஆனுல் இந்த பக்தர்கள் எப்பொழுதும் பூர்ணராகவே இருக்கிருர்கள். மேகம் பூர்ணமாக இருக்கிறதென்று நம்பமுடியாது. அது மழைபொழிந்து காலியாகிவிடுகிறது. அதனுல் இவைகளை பக்தனுக்கு உவமை கூறுவது சரியல்ல. அவர்கள் கிருபையோடு கூடின மங்களமே உருத்தரித்து வந்தவர்கள். என்பெயரை ஒருதரம் கூறுவதும் ஆயிரம்ஜன்மம் எடுத்து எனக்கு ஸேவை செய்வதும் ஒன்றே. அவ்விதமான நாமம் நிரந்தரமாக அவர்களுடைய நாவில் ஆடிக்கொண்டு இருக்கிறது.

நான் வைகுண்டத்தில் சிலசமயம் இல்லாமலும் இருப்பேன். சூர்ய பிம்பத்திலும் காணப்படாமற் போவேன். சிலசமயம் யோகிகள் மனதைக்கூட உதாசீனம் செய்துவிட்டுப் போய்விடுவேன். ஆனுல் எனது நாமத்தைக் கோஷித்து ஆடுபவர்கள் பக்கத்தில் நான் கட்டாயம் காணப்படுவேன். அவர்கள்தான் எப்படி எனது நாமத்தினுல் திருப்தியடைந்திருக்கிருர்கள்? தேச

காலத்தை மறந்துவிடுகிருர்கள். நாம ஸங்கீர்த்தனத்திஞல் தனக்குத்தானே ஸுகத்தில் ஆழ்ந்துவிடுகிருர்கள். ‘ கிருஷ்ணு ஹரே கோவிந்தா மாதவா’ என்ற ஆத்மா நாத்ம விசாரத்தை வெளிப்படுத்தும் அநேக நாம ஸங்கீர்த்தனங்களை எவ்வளவு தெளிவாக உச்சஸ்வரத்தில் பாடுகிருர்கள் ? அவர்களைப்பற்றி எவ்விதம் வர்ணிப்பேன் ?

ஹே பாண்டு ஸுதா ! இவ்விதமாகச் சிலர் எனது குணங்களைப் பாடிக்கொண்டு உலகத்தில் ஸஞ்சரிக்கிருர்கள். சிலர் மிகவும் முயற்சியின்பேரில் பஞ்சபிராணன்களையும் மனதை யும் ஜயிக்கிருர்கள். சிலர் வெளியில் யம நியமாதிகளைக் கைக்கொண்டு உள்ளே வஜ்ராஸனமாகிய கோட்டையைக் கட்டுகிருர்கள். அதற்குப் பிராணுயாமத்தால் இயங்குகிற யந்திரத்தை ஸ்தாபிக்கிருர்கள். பிறகு குண்டலினியின் பிரகாசத்திஞல் மனம் காற்று இவைகளின் உதவியுடன் சந்திர கலையிலிருந்து அமிருதம் பெருகுகிற ஸஹஸ்ரார ஸரோவரத்தில் திளைக்கிருர்கள். அப்பொழுது பிரத்யாஹாரம் தனது திறமையைக் காட்டுகிறது. வ்யவஹாரங்களின் வாய் அடைத்து விடுகிறது. இந்திரியங்கள் அடங்கி ஹ்ருதயத்தில் ஒடுங்குகிறது. பிறகு தாரணையென்னும் குதிரைமீது ஏறி மஹாபூதம் என்னும் ஸேனையை ஜயித்து மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்னும் எதிரியின் நால்வகை அக்ஷௌகிணியையும் ஜயிக்கிருர்கள். பிறகு வெற்றி வெற்றி என்று தியானமாகிய பேரிகையை முழக்குகிருர்கள். பிறகு தன்மயம் என்னும் வெண்கொற்றக் குடையை விரிக்கிருர்கள். பிறகு ஸமாதி லக்ஷ்மி எனும் சிம்மாஸனத்தில் அமர்ந்து, ஆத்மானுபவமென்னும் ராஜ ஸுகத்தை அடைந்து ஐக்ய ரஸத்திஞல் ராஜ்யாபிஷேகம் செய்கிருர்கள்.

ஹே அர்ஜுனு ! எனது துதி பஜனைகள் இவ்விதமாக ஆழ்ந்தது. இன்னும் சிலர் வேறு வகையில் பஜிக்கிருர்கள் அதையும் கூறுகிறேன். ஒரு துணியின் இரு முனைகளிலும் ஒரே நூல்தான் இழைகிறது. அதுபோல் இந்த சராசரத்தில் என்னைத் தவிற வேறு ஒன்றும் இல்லை. பிரும்மாவிலிருந்து கொசு வரைக் கும் நடுவிலிருக்கும் சராசர ஜீவராசிகளும் எனது உருவமே யாகும். அவ்விதம் என்னை எண்ணும் பக்தர்கள் பெரியவை சிறியவை என்ற பேதம் பாரார்கள். உயிருள்ளது உயிரற்றது என்றும் பாரார்கள். எங்கு எந்த வஸ்துவைக் கண்டாலும்

எனது உருவமாக எண்ணி வணங்குகிருர்கள். தங்களுடைய உத்தமத் தன்மையை ஒருபோதும் பாராட்டமாட்டார்கள். மற்றவர்களின் யோக்யதை அயோக்யதைபற்றியும் ஒரு பொழுதும் விசாரியார்கள்.

எதிரில் ஒரு பொருள் தென்பட்டது என்ருல் போதும். அதை நாளுக எண்ணி அப்படியே விழுந்து வணங்குவார்கள். பர்வதத்தின் உச்சியிலிருந்து விழும் தண்ணீர் கீழே கீழே பெருகிப் போவதைப்போல் பஞ்சபூதங்களினுலான எந்த சிருஷ்டியானுலும் அதை விழுந்து வணங்குவது அவர்களுடைய ஸ்வபாவமாக ஆகிவிட்டது. பழுத்த கனிகளையுடைய மரத்தின் கிளைகள் இயற்கையாகவே பூமியை நோக்கித் தாழ்வதைப்போல் அவர்கள் ஸம்பூர்ண சராசரங்களைக் கண்டு வணங்குகிருர்கள்? கர்வம் என்பது அவர்களை அணுகுவதே இல்லை. விநயமே அவர்களுடைய ஸம்பத்து. 'ஜய விஜயீபவ' என்னும் மந்திரத் தினுல் விநயத்தை எனக்கு அவர்கள் அற்பணிக்கிருர்கள், வணங்கி வணங்கி அவர்களுடைய மாளுபிமானம் அழிந்து விடுகிறது. பிறகு அவர்கள் எனது ரூபமாகவே ஆகிவிடுகிருர்கள். இவ்விதமாக அவர்கள் என்னில் ஆழ்ந்து என்னை பக்தி செய்கிருர்கள்.

ஹே அர்ஜுனு, இது எனது சிரேஷ்ட பக்தியின் வர்ணனை. இனி ஞானயக்ஞத்திளுல் என்னை ஆராதிப்பவர்களைப்பற்றிக் கூறுகிறேன் கேள். ஆளுல் அந்த வழியைப்பற்றி நீ முன்னுலேயே அறிவாய். அதைப்பற்றி நான் முன்பே கூறி இருக்கிறேன். இப்பொழுது அர்ஜுனன் கூறுவான், ஆமாம் ஸ்வாமி, அது உண்மை ஆளுல் அமிருதத்தை அடிக்கடி குடி என்ருல் யாராவது வேண்டாம் என்பார்களா? கிரீடியின் இவ் வார்த்தையைக் கேட்டு கிருஷ்ணன் புளகாங்கிதமடைந்தார். சபாஷ் பார்த்தா, இதைச்சொல்ல ஒரு காரணமா வேண்டும்? ஆளுலும் உனது உத்ஸாகம் என்னை ஊக்குவிக்கிறது.

இப்பொழுது அர்ஜுனன் கூறுவான், இதென்ன ஸ்வாமி, சகோரபக்ஷி இல்லாமல் நிலவு இருக்க முடியாதா? ஜகத்தைக் குளிர்வைப்பது நிலவின்வேலை. சகோரபக்ஷி தன் இச்சை யாலேயே அலகைத் தூக்கி நிலவைப் பருகுகிறது. அதைப்போல ஹே தேவ தேவ, கிருபாஸிந்தோ, மேகம் தனது மேன்மையான குணத்திளுல் ஜகத்தின் துக்கத்தை நீக்குகிறதே ஒழிய அது

சாதகபக்ஷிக்குத் தாகம் தணியவேண்டுமென்று பொழிகிறது? ஒரு கை ஜலம் குடிக்க இச்சை இருந்தாலும் அதற்காக கங்கைக்குப் போக வேண்டுமென்றே எனக்குத் தோன்றுகிறது அதனுல் எனது ஆவல் பெரியதானுலும் சரி. சிறியதானுலும் சரி. அதைத் தாங்கள்தான் தணிக்கவேண்டும். அப்பொழுது பகவான் கூறுவார். போதும் அப்பா, நான் ஏற்கெனவேயே ஸந்தோஷமாக இருக்கிறேன் அதனுல் நீ என்னைத் துதிக்க வேண்டிய அவசியமில்லை. நீ கவனமாகக் கேட்டுக்கொண்டிருந் தால் போதும். இவ்விதமாக ஸ்ரீ ஹரி உத்ஸாகத்துடன் மேலும் கூற ஆரம்பித்தார். (14)

**ज्ञानयज्ञेन चाप्यन्ये यजन्तो मामुपासते ।**
**एकत्वेन पृथक्त्वेन बहुधा विश्वतोमुखम् ॥ १५ ॥**

**ஞான யக்ஞேனசாப்யந்யே யஜந்தோ மாம் உபாஸதே।**
**ஏகத்வேந ப்ருதக்த்வேன பஹு‌தா விச்வதோமுகம் ॥**

சில யக்ஞங்களைப்பற்றிக் கூறுகிறேன் கேள். முதல் முதல் ஸங்கல்ப்பம் என்பது யக்ஞஸ்தம்பம். பஞ்சமகாபூதங்கள் மண்டபம். த்வைதம் என்பது யக்ஞபசு. இந்திரியங்கள் பிராணன்கள் இவைகள் யக்ஞ ஸாமக்ரிகள். அக்ஞானம் நெய் மனம் புத்தி என்னும் குண்டத்தில் ஞானுக்னி எரிகிறது. சம்பாவனை என்பதே வேதிகை. விவேகத்துடன் கூடிய புத்தியே மந்திரங்கள் ஆகும். வித்தையின் மகிமையான சாந்தியே ஆஹுதி செய்யும் அகப்பை. ஜீவனே யஜமானன் அவன் அநுபவமாகிற பாத்திரத்தினுல் விவேகமாகிற மந்திரத்தைக்கூறி ஞானமாகிற அக்னி ஹோத்ரத்தைச் செய்து பேதங்களை நாசம் செய்கிருன். அப்பொழுது அக்ஞானமாகிற நெய் ஸமாப்தியாகும் போது யக்ஞகிரியைகளுக்கும் யக்ஞம் செய்பவனுக்கும் பேதம் இல்லாமல் போய்விடும். அப்பொழுது ஜீவன் ஏகரஸரூபமான அவப்ருத ஸ்நானத்தைச் செய்கிருன்? அப்பொழுது பஞ்சமகா பூதங்களும் அதற்குரிய விஷயங்களும் வேறு வேருகத் தெரியாது. பூதங்களுக்கும் அது ஸம்பந்தமாக வந்த இந்திரியங்களுக்கும் வேற்றுமை தெரியாது. சுத்த ஆத்மபுத்தியினுல் எல்லாம் ஒன்ருகவே தோன்றும்.

ஹே அர்ஜுனு! விழித்தவுடன் மனிதனுக்கு தான் கண்ட கனவில் சதுரங்க ஸேனைகளையும் பார்த்துவிட்டு நானே கனவில்

அவைகளாகவே ஆகிவிட்டேன் என்று தெரிகிறது. உண்மையில் அவைகள் ஸேனைகள் அல்ல நானேதான் என்று அறிவதுபோல் ஞானி சகல விசுவமும் நானே என்று அறிகிறான். அவனுக்கு நான் ஜீவன் என்ற வேற்றுமையில்லாமல் எறும்பிலிருந்து பிரும்மா வரை நானே என்ற பரமார்த்த ஞானம் உண்டாகிறது இவ்விதமாக ஞானயக்ஞத்தினால் சிலர் என்னையடைகிறார்கள்.

உலகம் அநாதிகாலம் தொட்டு இயங்குகிறது. நம்மிலிருந்து வேறாகவும் காணப்படுகிறது. பொருள்கள் ஒன்றிலிருந்து ஒன்று வேறாகவேயாகிறது. நாமரூபங்களும் வேறு வேறே. அப்படியிருந்தபோதிலும் ஞானிக்கு அவைகளில் வேற்றுமை தெரியாது. அதாவது அவயவங்கள் வேறு வேறாக இருந்தாலும் சரீரம் ஒன்றாக இருப்பதைப்போல். கிளைகள் சிறிதும் பெரிதுமாகக் காணப்பட்டாலும் மரம் ஒன்றல்லவா? ஆயிரம் கிரணங்கள் வேறு வேறாகக் காணப்பட்டாலும் சூரியன் ஒருவனேதான் அதுபோல் உருவமும் பெயர்களும் கிரியைகளும் வேறு வேறாக இருக்கின்றன. ஆனால் பூதங்களில் நான் ஒருவனே அபின்னமாக இருக்கிறேன் என்ற ஞானம் அவர்களுக்கு இருக்கிறது.

ஹே பாண்டவ! இவ்விதமான வேற்றுமையினால் அவர்கள் ஞானயக்ஞம் செய்கிறார்கள். ஏனென்றால் அவர்கள் பின்னத்தையும் அபின்னத்தையும் அறிந்திருக்கிறார்கள். எந்த சமயத்தில் எந்த இடத்தில் எதைப் பார்க்கிறார்களோ அவைகளெல்லாம் என்னைத்தவிர வேறு இல்லை என்பதை அவர்கள் அறிந்திருக்கிறார்கள். நீர்க்குமிழிகள் நீரில் பற்பல வடிவில் எங்கு மிதந்து சென்றாலும் அவைகளுக்கு ஆதாரம் ஜலமேயல்லவா? காற்றினால் பரமாணுக்கள் உயரே பறந்தாலும் அவைகள் பூமிக்கு வேறுபட்டதல்ல. பிறகு பூமியில் விழுந்து மண்ணோடு மண்ணாகச் சேரத்தான்வேண்டும். அதுபோல் எந்தப் பொருள்கள் உத்பத்தியானாலும் நஷ்டமடைந்தாலும் அவைகள் என்னிடமே இருக்கின்றன என்று அவர்கள் அறிவார்கள். என்னுடைய வியாபகம் எங்கெங்கு பரவியிருக்கிறதோ அங்கங்கு அவர்கள் ஞானமும் பரவியிருக்கிறது. இந்தவிதமாக இந்தப் பெரிய வியாபக ஜகத்தில் எனது ரூபமாக இருந்து அவர்கள் செயல்படுகிறார்கள்.

ஹே தனஞ்ஜய, எல்லா தேசங்களிலும் எல்லோர் முன்னிலையிலும் ஒரே ஸூர்யன் தென்படுவதைப்போல் அவர்கள் எங்கும்

என்னேயே காண்கிருர்கள். வாயு இல்லாத இடம் ஆகாயத்தில் ஏது? அதுபோல் அவர்களுடைய ஞானம் உள்வெளியில்லாமல் பரவி இருக்கிறது. நான் எப்படி ஸம்பூர்ணமோ அதைப்போல் அவர்களுடைய பாவமும் ஸம்பூர்ணம். அவர்கள் எப்பொழுதும் என்னை பஜித்துக்கொண்டே இருக்கிருர்கள். உண்மையில் நானே எல்லாமாக ஆகிறேன். அதனுல் என்னுடைய உபாசனையை எங்கு யார் செய்யவில்லை? ஆனுல் ஞானமில்லா விட்டால் அங்கு நான் வெளிப்படமாட்டேன். அப்பொழுது அவர்களுடைய உபாசனை என்னைப்பொறுத்துச் செய்யப் படாததாக ஆகிறது. இவ்விதமான ஞானயக்ஞத்திஞல் எவர்கள் என்னை உபாஸிக்கிருர்களோ, அவர்களுடைய வர்ணனை இது தான். அவர்களுடைய எல்லாக்கர்மங்களும் எல்லா இடங்களிலி ருந்தும் என்னையே வந்தடைகிறது. ஆனுல் அக்ஞானிகள் இதை அறிவதில்லை அவர்கள் என்னை அடைவதும் இல்லை. (15)

**अहं क्रतुरहं यज्ञः स्वधाहमहमौषधम् ।**
**मन्त्रोऽहमहमेवाज्यमहमग्निरहं हुतम् ॥ १६ ॥**

*அஹம் க்ரது ரஹம் யக்ஞ: ஸ்வதாஹமஹம் ஔஷதம் ।*
*மந்த்ர: அஹமஹமேவாஜ்யம் அஹமக்னிரஹம் ஹுதம் ॥*

யாருக்கு இந்த ஞானம் உதயமாகிறதோ அதாவது முக்கியமான வேதம் நானே என்ற எண்ணம் தோன்றுகிறதோ அந்த வேதம் நானே. அந்த வேதம் வர்ணிக்கும் யக்ஞமும் நானே. அந்த யக்ஞகர்ம பலன்களும் நானே. ஸ்வாஹாவும் ஸ்வதாவும் நானும் ஒன்றே. ஸோமரஸ்மும் நானே. நெய்யும் சமித்தும் நானே. மந்திரமும் ஹோமதிரவியமும் நானே. ரித்விக்குகளும் நானே. யக்ஞம் செய்யப்படும் அக்னியும் நானே. எந்தெந்தப் பொருள்களை ஹோமம் செய்கிருர்களோ அந்தந்தப் பொருள்களும் நானே. (16)

**पिताऽहमस्य जगतो माता धाता पितामहः ।**
**वेद्यं पवित्रमोंकार ऋक्साम यजुरेव च ॥ १७ ॥**

பிதாऽஹமஸ்ய ஜகத: மாதா தாதா பிதாமஹ: ।
வேத்யம் பவித்ரம் ஓங்கார ருக்ஸாம யஜுரேவ ச ॥

எதனுடைய ஸம்பந்தத்தினால் எட்டுவித பிரகிருதி உண்டா கிறதோ அதன் பிதா நானே. அர்த்தநாரீ ரூபமாக ஜகத்துக்கு மாதாவும் நானே உற்பத்தியான ஜகத்தில் எந்த ஜீவர்கள் பெருகுகிறார்களோ அவர்கள் என்னைத்தவிர வேறு ஒன்றுமில்லை. அந்தப் பிரகிருதி புருஷர்கள் எந்த அந்தக் கரணத்துடன் ஜன்மம் எடுக்கிறார்களோ அந்த மூவுலகங்களுக்கும் நான்பிதாமகனாகவும் இருக்கிறேன். எல்லா ஞானமார்க்கங்களும் எதை நோக்கிச் செல்லுகிறதோ வேதங்களின் நாற்சந்தியில் எது கோஷிக்கப்படுகிறதோ, எங்கு நானாவிதமான மதாபிமானி களின் அறிவு மழுங்குகிறதோ சாஸ்திரங்கள் எங்கு ஒன்றை ஒன்று தழுவுகிறதோ மறைந்த ஞானம் எங்கு உதயமாகிறதோ அவைகள் நானே. பிரும்மரூபமான விதைக்கு அங்குரமும் பரா பச்யந்தி வாக்குகளுக்கு இருப்பிடமான ஓங்காரமும் நானே. அந்த ஓம் ஆகிய ஆகாரத்தின் வயிற்றில் அகார, உகார, மகார அக்ஷரங்களுடன் வேதமும் பிறக்கின்றன என்று ஆத்மா ராமனான ஸ்ரீ க்ருஷ்ணன் கூறினார். ருக். யஜுஸ், ஸாமமாகிய மூன்று வேதங்களும் நானே. வேதங்களின் வம்சபரம்பரையும் நானே என்று. (17)

गतिर्भर्ता प्रभुः साक्षी निवासः शरणं सुहृत् ।
प्रभवः प्रलयः स्थानं निधानं बीजमव्ययम् ॥ १८ ॥

கதிர்பர்தா ப்ரபு: ஸாக்ஷீ நிவாஸ: சரணம் ஸுஹ்ருத் ।
ப்ரபவ: ப்ரளய: ஸ்த்தானம் நிதானம் பீஜமவ்யயம் ॥

இந்த சராசர ஜகத் எந்த பிரக்ருதியில் லயமாகிறதோ அது களைப்படைந்து எங்கு இளைப்பாறுகிறதோ அந்தக்கடைசி கதியும் நானே. பிறகு பிரகிருதி எதிலிருந்து ஜீவனைத்தரு கிறதோ எதனுடைய ஸாரத்தால் புவனத்தைப் படைக்கிறதோ எதனால் இந்த பிரகிருதி வசப்பட்டு குணங்களை அனுபவிக் கிறார்களோ இந்த பிரகிருதியாகிய விசுவ லக்ஷ்மியின் பர்த் தாவும் நானே. இந்த பூர்ணமான மூவுலகுக்கும் நான் யஜமானன் ஆகாசம் எங்கும் நிறைந்திருக்கட்டும். வாயு க்ஷணம் கூட சும்மாஇராமல் இருக்கட்டும். அக்னி எரிக்கட்டும். மழை பொழியட்டும். பர்வதங்கள் இடம் பெயராமல் இருக்கட்டும். கடல் ஆணைக்கு அடங்கியே இருக்கட்டும். உலகம் பிராணி களுக்கு இடம் கொடுக்கட்டும் இவை எல்லாம் எனது ஆணையில்

தான். நான் பேசு என்றால் வேதம் பேசும். நான் பிரகாசிக்கச் செய்வதினால்தான் ஸூர்யன் பிரகாசிக்கிறான்

எந்த பிராணன் ஜகத் இயங்குவதற்குக் காரணமாக இருக்கிறதோ அதை நான் அசைப்பதினாலேயே அசைகிறது என்னுடைய ஆக்ஞையினாலேயே காலன் பிராணிகளை விழுங்குகிறான் ஹே பாண்டுஸுதா, இவர்கள் எல்லாரும் யாருடைய கிங்கரர்களோ எவ்விதத்திலும் சமர்த்தர்களோ, அவர்களால் நடத்தப்படும் ஜகத்துக்கு நாதன் நானே ஆகாசத்தைப்போல் ஸாக்ஷியாகப் பார்த்துக் கொண்டிருப்பவனும் நானே இந்த நாம ரூப ஜகத்தில் முழுவதும் நிரம்பி இருப்பதும் இந்த நாம ரூபங்களுக்குக் காரணமாக இருப்பதும் நானே அலைகள் ஜலத்தினுடையதும் ஜலம் அலைகளுடையதும் போல எங்கும் நிரம்பிய எல்லா வஸ்துக்களிடமும் நானே இருக்கிறேன்' யார் மற்ற கதிகளைத் தியாகம் செய்து என்னைச் சரணமடைகிறார்களோ அவர்களுடைய ஜனன மரணதுக்கத்தை நான் விலக்குகிறேன் 'சரணாகதர்களின் ஆசிரயம் நானே' நான் ஒருவனே அநேகம் ஆகி அவரவர் ஸ்வபாவத்துக்குத் தகுந்த விதம் இந்த ஜகத்தைப் பிராணன் மூலமாக ஆட்டிவைக்கிறேன். சமுத்ரமானாலும் சரி சாக்கடைக்குழியானாலும் சரி அவற்றை மனதில் பாராட்டாமல் சூர்யன் எப்படித் தனது பிம்பத்தை அதில் பிரதிபலிக்கச் செய்கிறானோ, அதுபோல் பிரும்மாவிலிருந்து எறும்புவரை நான் எல்லா ஜீவராசிகளுக்கும் மித்ரன்.

மூன்றுஉலகங்களுக்கும் ஜீவனும் அவற்றை அழிப்பதும், பின் உத்பத்தி செய்வதும் நானே. விதை கிளைகள் நிரம்பிய மரத்தை உத்பத்தி செய்கிறது. பிறகு அந்த விருக்ஷத்தன்மை ஒரு விதைக்குள் அடங்குகிறது. எல்லாம் என்னுடைய ஸங்கல்ப்பத்தினால் உண்டாகின்றன. என் ஸங்கல்ப்பத்தினால் அழிகின்றன. ஜகத்தின் விதை ஸங்கல்ப்பமாத்திரமே. கண்ணுக்குத் தெரியாததும் வாசனாரூபமுமான அந்த ஸங்கல்ப்பம் முடிவில் எங்கு அடைகிறதோ அந்த இடம் நானே. எப்பொழுது நாம ரூபங்கள் லயத்தை அடைகிறதோ வர்ணரூப பேதங்கள் அழிகின்றதோ, ஜாதி பேதங்கள் அழிகின்றதோ அந்த இடத்திலிருந்து ஸங்கல்பம் வாசனா ஸம்ஸ்கார்ரத்தினால் திரும்பவும் சிருஷ்டி ரசனைக்குக் காரணமாகிறது. அந்த விதைகள் எங்கு அழியாமல் பாதுகாக்கப்படுகிறதோ அந்தக் களஞ்சியம் நான்.

**तपाम्यहमहं वर्षं निगृह्णाम्युत्सृजामि च ।**
**अमृतं चैव मृत्युश्च सदसच्चाहमर्जुन ॥ १९ ॥**

**தபாம்யஹம் அஹம் வர்ஷம் நிக்ருஹ்ணாமி**
**உத்ஸ்ருஜாமி ச ।**
**அம்ருதம் சைவ ம்ருத்யுஸ்ச ஸதஸச்சாஹமர்ஜுன ॥**

நான் சூரியனாக உருவெடுத்து தகிக்கும்போது உலகம் உலர்ந்துபோகிறது. பிறகு இந்திரனாகி மழையைப் பொழியும் போது பசுமையாகிறது. அக்னியினால் எரிக்கப்பட்ட விறகும் அக்னியாவதுபோல் கொல்பவனும் கொல்லப்படுபவனும் எனது உருவேயாகிறான். இவ்விதமாக மரணத்தில் பங்கெடுத்துக் கொள்ளும் ஸர்வமும் எனது உருவே சுருங்கச்சொன்னால் மறைந்துள்ளதும் காண்பதும் ஸர்வமும் நானேதான். நான் இல்லாத இடம் எங்கு உள்ளது? ஆனாலும் அந்தோ! பிராணி களின் துர்பாக்யம் என்னே, அவர்கள் என்னைப் பார்ப்பதே இல்லையே. ஜலமில்லாமல் அலைகள் உலர்ந்துபோவது போலவும் சூர்யகிரணங்கள் இல்லாமல் ஒளி மறைந்து போவது போலவும் நான் இல்லாவிட்டால் ஜகமும் இருக்காது. இந்த உலகம் உள்ளும் வெளியும் என்னாலேயே நிரப்பப்பட்டிருக்கிறது. ஆனால் பிராணிகளின் கர்மம் அதற்கு நேர் விரோதமாக இருக்கிறது. அவர்கள் சொல்கிறார்கள் நான் இல்லவே இல்லை என்று அமிருதம் நிரம்பிய கிணற்றில் விழுந்து விட்டு எவனாவது வெளியேறத்துடிப்பானா? அப்படித்துடிப்பவனைப் பற்றி என்ன கூறுவது' ஒருகவளம் சோற்றுக்கு ஓடும் அந்தகனான பிச்சைக்காரன் காலில் இடறும் சிந்தாமணியை தடுக்கிவிட்டுப் போகிறான். அதைப்போல ஒருவன் ஞானத்தைத் தியாகம் செய்துவிட்டுச் சென்றானால் அவனது நிலையை என்னவென்று கூறுவது? அதாவது ஸாராம்சம் என்னவென்றால் ஞானமில்லாது செய்யும் எவ்வித கார்யமும் பலனளிக்காது. குருடனுக்கு கருடன் போல் சிறகு முளைத்திருந்தாலும் அதனால் அவன் அடையக்கூடிய லாபம் என்ன? அதுபோல் ஞானம் இல்லாமல் செய்யும் ஸத்கர்மம் யாவும் வீணே. (19)

**त्रैविद्या मां सोमपाः पूतपापा**
**यज्ञैरिष्ट्वा स्वर्गतिं प्रार्थयन्ते ।**

ते पुण्यमासाद्य सुरेन्द्रलोक-
मश्नन्ति दिव्यान्दिवि देवभोगान् ॥ २० ॥

த்ரைவித்யா மாம் ஸோமபா: பூதபாபா
யக்ஞைரிஷ்ட்வா ஸ்வர்கதிம் ப்ரார்த்தயந்தே ।
தே புண்ய மாஸாத்ய ஸுரேந்த்ர லோகம்
அச்னந்தி திவ்யான் திவி தேவ போகான் ॥

வர்ணாசிரமதர்மத்தை விரும்பியவர்கள் விதிமார்க்கத்துக்கு உரைகல்லாகத் திகழ்கிருர்கள். அவர்கள் குதூஹலத்துடன் யக்ஞம் செய்யும்பொழுது வேதங்கள் தலையிலடித்துக்கொள்ளு கின்றன. ஏனென்ருல் பலனேடு கூடிய கர்மத்தை எவன் செய்கிருனே, ஸோமபானம் செய்யும் தீக்ஷிதர்கள் எவர்களோ அவர்களே யக்ஞஸ்வரூபம்தானே. அவர்கள் புண்ணியம் செய்கிறேம் என்று எண்ணி பாபத்தையே சேகரிக்கிருர்கள் என்று எண்ணு. ஏனென்ருல் அவர்கள் மூன்று வேதங்களும் அறிந்தவர்கள். நூற்றுக்கணக்கான யக்ஞம் செய் கிருர்கள். ஆனுல் யக்ஞ புருஷனை என்னை மறந்து ஸ்வர்க் திருப்திக்கும் போகத்துக்கும் வேண்டி யக்ஞங்கள் செய்கிருர்கள் அது எப்படி இருக்கிறதென்ருல் கற்பதருவின் அடியில் உட் கார்ந்திருக்கும் ஒருவன் தனது கிழிந்த துணியை முடிச்சுப் போட்டுக் கொண்டு பிச்சை வாங்கப்போவது போல் இருக்கிறது அதைப்போல அவர்கள் நூறு யக்ஞங்களால் என்னை ஆராதித்து விட்டு ஸ்வர்கஸுகத்துக்கு ஆசைப்படுகிருர்கள், இதற்குப்பெயர் புண்யம்! இது பாபமல்லவா? அதனுல் என்னை விட்டு ஸ்வர்க் கத்தை அடைய இச்சிப்பவர்கள் அக்ஞானிகளே. அந்த ஸ்வர்க ஸுகத்தையே ஞானி தனக்குத் தீங்காகக் கருதுகிருன். இந்த அப்பாவிகள் நரகத்தின் துக்கத்தைக் கேட்டு விட்டு ஸ்வர்கத்தை ஸுகமென கருதுகிருர்கள். அவர்களுக்கு நித்யானந்த ஸுகம் வேண்டுமென்ருல் அது நானே. ஆனுல் ஒன்று ஹே அர்ஜுனு, என்னிடம் வருகிறவர்களுக்கு கோணல் மாணல்களான இரண்டு பாதைகள் செல்கின்றன. அவைகளே ஸ்வர்க நரகத்தின் பாதைகள் புண்ய ரூபமான பாபத்தினுல் ஸ்வர்கத்தை அடை கிருர்கள். பாபரூபமான பாபத்தினுல் நரகத்தை அடைகிருர்கள். இந்த இரண்டு பாதைகளுக்கும் நடுவே மிக ஸூக்ஷ்மமான ஒரு பாதை இருக்கிறது. அதுவே என்னிடம் வரும் சுத்த புண்ய

வழி. ஆனுல் என்னிடம் உறைந்து எனக்காகவே செய்யும் கர்மபலன்களை என்னையே வஞ்சித்து புண்யமென்று சொல்லு பவர்களுடைய நாக்கை ஏன் துண்டிக்கக் கூடாது? அது ஒருபுற மிருக்கட்டும்.

மேற்கூறியவிதமான இந்த தீக்ஷிதர்கள் யக்ஞம் செய்து ஸ்வர்கத்தை யாசிக்கிருர்கள். என்னையடையாமல் இந்த புண்ய பாபத்தினுல் ஸ்வர்கத்தையடைகிருர்கள். அங்கு அமரத்வம் என்ற ஸிம்மாஸனம் உள்ளது ஐராவதம் என்னும் யானை இருக்கிறது. அந்த ராஜதானிக்கு அமராவதி என்று பெயர். மகாஸித்திகளின் களஞ்சியம் அங்கே உள்ளது. அமிர்த ஊற்று இருக்கிறது. காமதேனுக்கள் கூட்டம் கூட்டமாக மேய்கின்றன தேவர்கள் இவனுக்கு வேலைக்காரர்களாகப் பணிவிடை செய்கின் றனர். நான்கு பக்கங்களிலும் சிந்தாமணி ரத்னத்தைப் பதித்திருக்கின்றனர். விளையாட்டு நந்தவனங்களில் கற்பக விருக்ஷங்கள் நிறைந்திருக்கின்றன. கந்தர்வர்கள் பாடுகிருர்கள் ரம்பை ஊர்வசி ஆடுகிருர்கள். படுக்கையில் படுத்தால் மன்மதன் காலைப் பிடிக்கிருன். சந்திரன் முற்றத்தில் தண்ணீர் தெளிக் கிருன். வாயு பகவான் காற்ருகப் பறந்து வேலை செய்கிருன். பிருஹஸ்பதி பகவானை முன்னிட்டுக்கொண்டு ஸ்துதிபாடகர் களான தேவதைகள் ஸ்வஸ்திவாசனம் கூறுகிருர்கள். லோக பாலர்கள் ஸர்தாரைப்போல் உச்சைசிரவஸ் என்ற குதிரையில் ஸவாரி வருகிறபோது சூழ்ந்துகொள்ளுகிருர்கள். இவ்விதமாக நூறு யக்ஞ பலன் முடியும்வரை இந்திர ஸ்வர்கத்தை அனுபவிக் கின்றனர். (20)

ते तं भुक्त्वा स्वर्गलोकं विशालं
क्षीणे पुण्ये मर्त्यलोकं विशन्ति ।
एवं त्रयीधर्ममनुप्रपन्ना
गतागतं कामकामा लभन्ते ॥ २१ ॥

தே தம் புக்த்வா ஸ்வர்கலோகம் விசாலம்
க்ஷீணே புண்யே மர்த்ய லோகம் விசந்தி ।
ஏவம் த்ரயீ தர்ம மநுப்ரபன்ன
கதாகதம் காமகாமா லபந்தே ॥

புண்யத்தின் படிகள் ஏறி முடிந்தவுடன் இந்திர பதவியின் ஸ்வரம் இறங்க ஆரம்பிக்கிறது. அங்கிருந்து நேரே தலைகீழாக மிருத்யுலோகமாகிய பூலோகத்துக்கு வருகிறார்கள். வேசியின் போகத்தை அனுபவித்து அனுபவித்துக் கைப்பணம் கரைந்தவுடன் சாத்தப்பட்டிருக்கும் அவள் வீட்டு வாசலிலிருந்து திரும்பி வருவதுபோல். என்ன சொல்வது! இந்த யக்ஞ கர்த்தாக்களின் நிலைமை வெட்கக்கேடானது. இவ்விதம் என்றுமிருக்கும் என்னை மறந்து புண்யத்தின் மூலமாக ஸ்வர்க்கத்தையடையும் அவர்களுடைய அமரத்தன்மை வீணாகிப்போகிறது. கடைசியில் திரும்பவும் அவர்களுக்கு மிருத்யுலோகமே கிடைக்கிறது. பிறகு அவர்கள் மாதாவின் உதரமாகிய குகையில் மலத்தினுடைய வேக்காட்டில் வெந்து ஒன்பது மாதம் தங்கிவிட்டுப் பிறந்து பிறந்து இறக்கிறார்கள். கனவில் பணம் கைக்கு வருகிறது, பிறகு மறைந்துவிடுகிறது. அதைப்போலவே இந்த யக்ஞம் செய்பவர்களின் ஸ்வர்க ஸுகம் என்று எண்ணு. வேதங்களில் சொல்லியிருக்கும் விதம் யக்ஞம் செய்தாலும் சரி என்னை எண்ணாமல் செய்யும் கர்மங்கள் இவ்விதம் வீணாகப்போகின்றன. தான்யத்தை எறிந்துவிட்டு உமியைஎடுத்துக் கொள்வது போல் ஆகின்றது இது. இவ்விதம் வேதோக்த கர்மமே நிஷ்ப்பலமாகும் என்று அறிந்து வேறு ஒன்றையும் நினைக்காமல் என்னை நினை. (21)

**अनन्याश्चिन्तयन्तो मां ये जनाः पर्युपासते ।**
**तेषां नित्याभियुक्तानां योगक्षेमं वहाम्यहम् ॥ २२ ॥**

**அநந்யாஸ்சிந்தயந்தோ மாம் யே ஜநா: பர்யுபாஸதே।**
**தேஷாம் நித்யாபியுக்தாநாம் யோக க்ஷேமம்**
**வஹாம்யஹம் ॥**

எவர்கள் தன்மயமாகச் சித்தத்தை என்னிடம் அர்ப்பணிக்கிறார்களோ. கர்ப்பபிண்டம் உலகையறியாதவாறுபோல் எவர்கள் என்னைத் தவிற வேறு ஒன்றையும் நன்மை தருவதாக அறியவில்லையோ, எவர்கள் வாழ்வையே எனக்கு அர்ப்பணித்து விடுகிறார்களோ அவர்கள் ஏகாக்ர சித்தத்துடன் என்னையே நினைத்து பக்தி பண்ணுகிறார்கள். அப்பொழுது எனக்கு அவர்களைப்பற்றிய சிந்தனையே எப்பொழுதும் உண்டாகிறது. அப்பொழுது அவர்களுடைய எல்லா வியவகாரங்களையும் நானே

நேரில் கவனிக்கிறேன். பறவைகள் இறகு முளையாத தன் குஞ்சுகளுக்குத் தன் ஜீவனைக் கொடுக்கிறது. தன்னுடைய பசி தாகங்களை அவைகள் அறிகிறதில்லை. தன் குஞ்சுகளின் நலமே அவைகளுக்குப் பெரிதாகத் தோன்றுகிறது. அதுபோல் எவர்கள் பஞ்சபிராணன்களையும் எனக்காக அர்ப்பணிக்கிறார்களோ, அவர்களுடைய பாரத்தைத் நான் வகிக்கிறேன். அவர்கள் ஸாயுஜ்ய பதவியை விரும்பினால் அதை அவர்களுக்குக் கொடுக்கிறேன். அல்லது எனது ஸேவையை விரும்பினால் அவர்களை எனது பிரிய பக்தர்களாக ஆக்குகிறேன். அவர்கள் அபிலாஷைகளைப் பூர்த்தி செய்கிறேன். அவர்களை மட்டுமா? அவர்கள் பொருள்களையும் காக்கிறேன். இவ்விதமாக அவர்களுடைய யோக க்ஷேமங்களை நான் விளையாட்டாகவே வகிக்கிறேன். (22)

**येऽप्यन्यदेवताभक्ता यजन्ते श्रद्धयान्विताः ।**
**तेऽपि मामेव कौन्तेय यजन्त्यविधिपूर्वकम् ॥ २३ ॥**

*யேऽப்யன்ய தேவதா பக்தா யஜந்தே ச்ரத்தயான்விதா:।*
*தேऽபி மாமேவ கௌந்தேய யஜந்த்ய விதிபூர்வகம்।*

மேலே குறிப்பிட்டதைத் தவிர இன்னும் எத்தனையோ ஸம்பிரதாயங்கள் இருக்கின்றன. அவர்கள் ஸமஷ்ட்டி ரூபமாக என்னை அறியாமல் வியஷ்ட்டி ரூபமாக ஸோமன் அக்னி இந்திரன் இவர்களை ஸந்தோஷப்படுத்துவதற்காக யக்ஞம் செய்கிறார்கள். ஆனால் உண்மையில் இவைகளும் எனக்காகச் செய்யும் யக்ஞங்களே. ஏனெனில் உலகம் முழுவதும் நானே அல்லவா? ஆனால் அவைகள் என்னை பஜிப்பதற்கு ஸுலபமான மார்க்கம் அல்ல. மரத்தின் கிளைகளும் தளிர்களும் ஒரே விதையிலிருந்து உண்டானவைகளே. ஆனால் ஜலத்தை கிரகிப்பது வேரின் கடமை. அதனால் வேரில் ஜலம் விடுகிறோம். இங்கே பத்து இந்திரியங்கள் இருக்கின்றன. அவை ஒரே தேகத்தைச் சேர்ந்தவையே. அவைகளால் கிரகிக்கப்படும் விஷயமும் ஒரே இடத்தையே சேருகின்றன. எல்லா இந்திரியங்களும் ஒன்று தான் என்பதற்காக அமிருதம் போல் உணவைத் தயாரித்து காதில் நிரப்பமுடியுமா? புஷ்பங்களைப் பறித்துக் கண்களால் முகரமுடியுமா? அதுபோல் என்னை அறியாமல் செய்யும் பஜனை வீணே. அதனால் கர்மத்துக்கு நேத்ரமாக இருக்கும் ஞானம் நிர்தோஷமாக இருக்கவேண்டும். (23)

अहं हि सर्वयज्ञानां भोक्ता च प्रभुरेव च ।
न तु मामभिजानन्ति तत्त्वेनातश्च्यवन्ति ते ॥ २४ ॥

அஹம் ஹி ஸர்வயக்ஞாநாம் போக்தா ச ப்ரபுரேவ ச।
நது மாம் அபிஜானந்தி தத்த்வேநாதஸ்ச்யவந்தி தே ||

இந்த ஸம்பூர்ண யக்ஞங்களின் உபசாரத்தைப் பெற்றுக் கொள்வது நானே. இந்த எல்லா யக்ஞத்துக்கும் ஆதிகாரணன் நானே. ஆனால், துர்புத்தியுள்ள ஜனங்கள் என்னை மறந்துவிட்டு மற்ற தேவரைப் பஜிக்கிறார்கள். கங்கா ஜலத்தை எடுத்துத் தேவர்களுக்கும் பித்ருக்களுக்கும் அர்பணம் செய்யும் நிமித்தம் கங்கையிலேயே விடுகிறார்கள். அதுபோல் எனது பொருளை எனக்கே அர்பணிக்கிறார்கள். ஆனால் வேறு வேறு எண்ணங் களுடன் கொடுக்கிறார்கள். அதனால் அவர்கள் என்னை அடைவ தில்லை. மனதில் என்ன ஆசையுடன் செய்கிறார்களோ அந்த ஆசையை அடைகிறார்கள். (24)

यान्ति देवव्रता देवान्पितॄन्यान्ति पितृव्रताः ।
भूतानि यान्ति भूतेज्या यान्ति मद्याजिनोऽपि माम् ॥

யாந்தி தேவவ்ரதா தேவான் பித்ருன் யாந்தி
பித்ருவ்ரதா:।
பூதாநி யாந்தி பூதேஜ்யா யாந்தி மத்யாஜிநோऽபி மாம் ||

மனது வாக்கு செய்கை இவைகளினால் தேவ ப்ரீதிக்காகச் செய்யப்படும் கர்மாக்கள் அவர்களை சரீரம் விட்டவுடன் தேவ ரூபமாக ஆக்குகின்றன. அதுபோல் பித்ருக்களை உத்தேசித்துக் கர்மம் செய்வதினால் பித்ரு லோகத்தையடைகிறார்கள். சிலர் க்ஷுத்ர தேவதைகளான பூத பிரேதங்களை ஜாரணமாரண கர்மங்களினால் பஜிக்கிறார்கள். அவர்கள் தேகத்தை விட்டவுடன் அந்தந்த ரூபங்களை அடைகிறார்கள். சங்கல்பத்தை உத்தே சித்துச்செய்யும் அவரவர்கள் கர்மங்களின்படி அந்தந்தப் பலனை அடைகிறார்கள். கண்களினால் என்னையே பார்ப்பதினாலும், காதுகளினால் எனது சரிதத்தைக் கேட்பதினாலும், மனதால் என்னையே சிந்திப்பதினாலும், வாக்கினால் எனது நாமத்தைக் கூறுவதினாலும், ஸர்வாங்கங்களினாலும் என்னையே வணங்கு வதினாலும், தான புண்யங்களை என்னை உத்தேசித்தே செய்வதி

ளுலும், என்னைப்பற்றியே அத்யயனம் செய்வதாலும்; உள்ளும் புறமும் என்னுலேயே திருப்தியடைவதாலும், வாழ்வே எனக்காக என்று கருதுவதாலும், ஹரியின் குணதிசயங்களைப் பாடவே நாம் பிறந்திருக்கிறோம் என்று எண்ணுவதினுலும். எனக்காகவே பணத்தைச் சேகரித்துவைத்து லோபி என்று பெயர்வாங்குவதாலும் அவர்கள் என்னையே அடைகிருர்கள்.

எவர்கள் எனக்காகக் காம்யகர்மங்களைச் செய்கிருர்களோ, என்னுடைய உலகு என்று உலகை நேசிக்கிருர்களோ, எவர்கள் என்னிடமுள்ள பிரேமையினுல் உலகை மறக்கிருர்களோ, எவர்கள் என்னை அடையலாம் என்று கருதியே சாஸ்திரங்களைப் படிக்கிருர்களோ, எனக்காகவே மந்திரங்களை ஜபிக்கிருர்களோ இவ்விதமாக சகல கிரியைகளாலும் என்னை பஜிப்பவர்கள் ம்ருத்யு நதியை தாண்டி அக்கரை சேர்ந்தவுடன் என்னை அடைகிருர்கள். பிறகு அவர்களுக்கு ஜன்மம் ஏது? அப்படி என்னை நேசிக்கும் எனது பக்தர்களுக்கு அவர்களுக்கு ஸேவை செய்ய வேண்டும் என்ற வ்யாஜத்தை வைத்துக்கொண்டு என்னையே அவர்களுக்கு அர்ப்பணிக்கிறேன். அவர்களுடன் ஒன்றுபட்டு விடுகிறேன். ஆனுல் ஆத்ம ஸமர்ப்பணம் பண்ணுமல் என்னிடம் பிரேமை ஏற்படாது. வேறுவிதமான எந்த உபசாரத்தாலும் நான் வசப்படமாட்டேன். அதில்லாமல் எவர்கள் தங்களை ஞானி என்று கருதுகிருர்களோ அவர்கள் உண்மையில் அக்ஞானிகளே. தற்புகழ்ச்சி செய்துகொள்ளுகிறவர்களே. அவர்கள் தங்களை கிருதகிருத்யனுக எண்ணுகிருர்கள். ஆனுல் அவர்கள் என்னை அடைவதில்லை.

தவம் தானம் யக்ஞம் இவைகளின் கீர்த்தியெல்லாம் ஆத்ம ஸமர்பணத்துக்கு முன் திருண மாத்திரமே. ஞானபலத்தைப் பார்க்கும்போது வேதங்களைவிட சிரேஷ்டமானது ஒன்றுஉண்டா? ஆதிசேஷனைவிடப் பேச்சு வன்மை படைத்தவர்கள் உண்டா? ஆனுல் அவனும் எனக்குப்படுக்கையாக அடங்கிக்கிடக்கிருன். வேதங்களே இன்னும் என்னை அறியவில்லை. நேதி, நேதி என்று ஒவ்வொன்றையும் திரஸ்கரித்துக்கொண்டு போகின்றன. இந்த விஷயத்தை அநுஸந்தானம் செய்யும் ஸனகாதிகள் பித்துப் பிடித்தவர் போல் திரிகின்றனர். தபஸ்விகளை எடுத்துக் கொண்டால் பகவான் சங்கரரைப்போல் யார் இருக்கிருர்கள்? அவரும் எனது சரணுமிருதத்தைத் தனது தலையில் தரித்துக் கொண்டிருக்கிருர்,

லக்ஷ்மியைவிட பாக்யவதி யார்? ருத்தி ஸித்திகளும் அவளுக்குப் பணிவிடை செய்கிறது. அவள் விளையாடிக் கொண்டே சிறு வீடு கட்டினால் அது அமராவதியாகிறது. இந்திரன் முதலிய தேவர்கள் அவளுக்கு விளையாட்டு பொம்மையாகிறார்கள். அவளுக்கு மனதுக்குப் பிடிக்கவில்லையானால் அரசுரிமையும் மண்ணோடு மண்ணாக மறைந்துவிடுகிறது. அப்பொழுது மஹேந்திரனும் தரித்திரனாகிறான். அவன் ஒருமரத்தைப் பார்த்தால் அது உடனேயே ஒரு கற்பக விருக்ஷமாகிறது. அத்தகைய பாக்யவதி லக்ஷ்மி கர்வத்தை விட்டு விட்டு எனது காலை வருடும் ஸேவையைச் செய்கிறாள். அதனால் கீர்த்தி புகழைத்தூர விலக்கி விடவேண்டும். வித்வத்தையும் பாண்டித்யத்தையும் மறந்துவிட வேண்டும். அப்பொழுது ஜகத்தில் நாம் அல்பத்திலும் அல்பம் என்ற எண்ணம் எழும். அவர்கள் என்னை அடைகிறார்கள். சூர்ய தேஜஸினால் சந்திர ஒளி மறைந்து விடுகிறதல்லவா? அங்கு மின்மினிப் பூச்சிக்கு என்ன வேலை? எங்கு லக்ஷ்மியின் கீர்த்தி மழுங்குகிறதோ, எங்கு சங்கரரின் தபஸ் பூர்த்தியடையவில்லையோ, அங்கு இயற்கையினால் சிருஷ்டிக்கப்பட்ட அக்ஞானப் பதர்கள் எப்படி என்னை அறிய முடியும்? அதனால் சரீர அபிமானத்தை விட்டுவிட வேண்டும். என்னால் கொடுக்கப்பட்ட சகல குணங்களையும் மீன மேஷம் பாராமல் என்னிடமே அர்பணித்துவிட்டு சகல செல்வங்களிலும் அபிமானத்தை விட்டு விட்டு என்னையடையவேண்டும்.

**पत्रं पुष्पं फलं तोयं यो मे भक्त्या प्रयच्छति ।**
**तदहं भक्त्युपहृतमश्नामि प्रयतात्मनः ॥ २६ ॥**

**பத்ரம் புஷ்பம் பலம் தோயம் யோ மே பக்த்யா ப்ரயச்சதி ।**
**ததஹம் பக்த்யுபஹ்ருதம் அச்நாமி ப்ரயதாத்மன: ॥**

எனது பக்தர்கள் அத்யந்த பிரேமையுடன்கூட எத்துணை அற்ப வஸ்துவானாலும் எனக்கு ஸமர்பித்தார்களானால் இரண்டு கைகளையும் நீட்டி வாங்கிக்கொள்ளுகிறேன். அது பழமாக இருந்தால் தோலிகூட உரிக்காமல் சாப்பிட்டுவிடுகிறேன். பக்தியினால் ஒருவன் ஒரு புஷ்பத்தைக் கொடுத்தானானாலும் பரவசமடைந்து நான் அதை முகர்ந்துபார்க்கக்கூட மறந்து போய் வாயில் போட்டுக்கொள்வேன். புஷ்பம் இருக்கட்டும் ஒரு இலையாகவாவது இருக்கட்டுமே அது உலர்ந்து இருந்

தாலும் அழுகி இருந்தாலும் அவன் பக்தி பரவசத்துடன் எனக்கு அர்பணம் பண்ணினுனல் பசித்தவன் அமிருதத்தை உண்பது போல் நான் அந்த இலையைச் சாப்பிட்டுவிடுகிறேன். இலையே இல்லை தண்ணீருக்கு எங்கும் குறைவு கிடையாது. அதுவும் கஷ்டப்படாமல் அகஸ்மாத்தாகக் கிடைத்ததாக இருந்தாலும் சரி. அந்தத் தண்ணீரை எனக்கு ஸமர்பித்தானுனல் அதை நான் வைகுண்டத்தைவிடச் சிறந்த கோயிலாக கௌஸ்துப மணியைவிடச் சிறந்த அலங்காரமாகக் கருதுகிறேன். க்ஷீரஸாகரத்தின் பாலின் நுரையினுலான படுக்கை எனக் கருதுகிறேன். அவனுடைய பக்தியை கற்பூரம் சந்தனம் இவைகளினுலான தூபத்தை ஸமர்பித்து சூரியனையே தீப ஆரத்தியாகச் சுழற்றினுல் எப்படியோ அப்படிக் கருதுகிறேன். கருடனைப் போன்ற வாகனமும் கற்பகத்தருவைப் போன்ற தோட்டமும் காமதேனுவைப் போன்ற பசுவும் சமர்ப்பித்தால் எப்படியோ அப்படி ஸந்தோஷிக்கிறேன். அமிருதத்தைப் போன்ற பக்வான்னங்களைச் சாப்பிட்டு விட்டு எத்தனை ஸந்தோஷம் இருக்குமோ அத்தனை ஸந்தோஷம் பக்தன் அளிக்கும் ஜலத்துளியினுல் இருக்கும். ஹே கிரீடி, குசேலர் பக்தியுடன் கொண்டுவந்த கந்தல் துணி மூட்டையிலுள்ள அவலினுல் நான் எவ்வளவு ஸந்தோஷம் அடைந்தேன் என்பது உனக்குத் தெரியாதா? கேவலம் பக்தி ஒன்றையே நான் விரும்புகிறேன். அது எவ்வளவு சிறியது, எவ்வளவு பெரியது என்பதை நான் பார்ப்பதில்லை. பாவபக்திக்காகவே நான் பசித்திருக்கிறேன். பத்ரம் புஷ்பம் பலம் எல்லாம் நிமித்த மாத்திரமே. எனக்கு நிஷ்களங்கமான பக்தி தத்வம் மாத்திரம் போதும். அதனுல் ஹே அர்ஜுனு, நீ புத்தியை ஸ்திரப்படுத்திக்கொண்டு உனது இதயக் கோவிலில் மறக்காமல் என்னை என்றும் பார்த்துக் கொண்டிரு. (26)

**यत्करोषि यदश्नासि यज्जुहोषि ददासि यत् ।**
**यत्तपस्यसि कौन्तेय तत्कुरुष्व मदर्पणम् ॥ २७ ॥**

*யத் கரோஷி யதச்நாஸி யஜ்ஜுஹோஷி ததாஸி யத்।*
*யத் தபஸ்யஸி கௌந்தேய தத் குருஷ்வ மதர்பணம்॥*

எந்தெந்த விவகாரங்களைச் செய்கிருயோ, எந்தெந்த போகங்களை நுகர்கிருயோ, எந்தெந்த யக்ஞங்களைச் செய்

கிருயோ, அவைகளை என்பொருட்டுச் செய்வாயாக. ஸத்பாத்திரத்தில் இடும் தானமும் வேலைக்காரர்களுக்குக் கொடுக்கும் கூலியும் தபஸ் விருதம் முதலிய ஸாதனங்களும் இயற்கையால் தூண்டப்பட்டுச் செய்யும் கர்மங்கள் அனைத்தும் எனது பிரீதியின் பொருட்டே என்று நினைப்பாயாக. ஆனால் இவைகளைச் செய்து முடித்ததும் இந்த ஞாபகத்தையே அந்தக்கரணத்திலிருந்து அகற்றிவிடு. இவ்விதமாக எல்லாக் கர்மங்களையும் எனக்கு அற்பணித்துவிடு. (27)

**शुभाशुभफलैरेवं मोक्ष्यसे कर्मबन्धनैः ।**
**संन्यासयोगयुक्तात्मा विमुक्तो मामुपैष्यसि ॥ २८ ॥**

*சுபாசுப பலைரேவம் மோக்ஷ்யஸே கர்ம பந்தனை:*
*ஸந்யாஸ யோக யுக்தாத்மா விமுக்தோ மாம் உபைஷ்யஸி ||*

அக்னி குண்டத்தில் விழுந்த விதை எப்படி முளைப்பதில்லையோ அப்படி எனக்கு அர்ப்பணம் செய்யப்பட்ட நல்லதும் கெட்டதுமான கர்மாக்கள் முளைப்பதில்லை (பலனைக் கொடுப்பதில்லை) கர்மா பிழைத்து இருக்குமானால் அவர்களுக்கு ஸுகதுக்க ரூபமான பலனைக் கொடுக்கும். அவைகளை அனுபவிக்க மறு பிறவி எடுக்கவேண்டும். ஆனால் எல்லா கர்மாக்களையும் என்னிடம் அர்பணம் செய்துவிட்டால் அவன் ஜன்ம மரணங்களிலிருந்து விடுபடுகிருன். பிறவித் துன்பம் அவனுக்கு கிடையாது என்பதை அறிந்துகொள் ஹே அர்ஜுனு ! இவ்விதமாக உனக்கு ஸந்யாஸத்திற்கு ஸுலபமான உபாயம் சொல்லப்படுகிறது. இதனுல் சீக்கிரம் ஆத்மானுபவம் ஏற்படும். இந்த யுக்தியால் நீ தேஹத்தின் கட்டிலிருந்து விடுபட்டு ஸுக துக்கக்கடலில் மூழ்காமல் என் ஆனந்தஸ்வரூபத்தில் அநாயாஸமாகக் கலந்து விடுவாய். (28)

**समोऽहं सर्वभूतेषु न मे द्वेष्योऽस्ति न प्रियः ।**
**ये भजन्ति तु मां भक्त्या मयि ते तेषु चाप्यहम् ॥ २९ ॥**

*ஸமோऽஹம் ஸர்வ பூதேஷு ந மே த்வேஷ்யோऽஸ்தி ந ப்ரிய:|*
*யே பஜந்தி து மாம் பக்த்யா மயி தே தேஷு சாப்யஹம் ||*

நான் எவ்விதம் இருப்பேன் என்று நீகேட்பாயானல் எல்லா பூதங்களிலும் ஸமமாக இருப்பேன். விருப்பு வெறுப்பென்ற பாவம் எனக்குக் கிடையாது. இவ்விதமாக என்னை அறிந்து அகங்காரத்தை விட்டு கர்மத்தை புரிந்து அந்தக்கரண சுத்தி யோடு என்னை பஜிக்கவேண்டும். எனது பக்தர்கள் சரீரத்திஞல் வியவகாரம் செய்பவர்களைப் போல் காணப்பட்டாலும் அவர்கள் என்னிடத்தில் லயித்திருக்கிருர்கள். நான் எனது முழுபாவத் துடன் அவர்களுடைய ஹ்ருதயத்தில் இருக்கிறேன். பெரிய ஆலமரத்தின் சிறிய விதைக்குள் ஸம்பூர்ண வடவிருக்ஷத்தின் தத்வம் முழுவதும் அடங்குவதுபோல் என்னுள் எல்லா ஜீவ ராசிகளும் அடக்கம், நாமரூப விவகாரத்தில் மாத்திரமே அவர்களுக்கும் எனக்கும் வித்யாசம். அந்தக்கரணத்தில் நாங்கள் ஒன்றே இரவல் நகைகளை அணிந்து கொண்டால் பார்வைக்கு அலங்காரமாகத் தோன்றுமே தவிர மனதுக்குள் உதாஸீன பாவமே நிரம்பி இருக்கும் அந்த இரவல் நகையைப் போலவே இவர்கள் ஜகத்தை எண்ணுகிருர்கள். வாயு புஷ்பத்தின் வாசனையைக் கவர்ந்ததும் அது காம்பிலேயேவாடி உதிர்வதுபோல் அவர்கள் தேஹத்தை ஆயுள் என்னும் காம்பில் தரிக்கிருர்கள். அவர்களுடைய சகல அகங்காரங்களும் என்னை அடைந்தபின் என்னிடம் லயித்து விடுகிறது. (29)

अपि चेत्सुदुराचारो भजते मामनन्यभाक् ।
साधुरेव स मन्तव्यः सम्यग्व्यवसितो हि सः ॥ ३० ॥

*அபி சேத் ஸுதுராசார: பஜதே மாமனந்யபாக்।*
*ஸாதுரேவ ஸ மந்தவ்ய: ஸம்யக் வ்யவஸிதோ ஹி ஸ:॥*

என்னைபஜிக்கின்ற பிரேமபாவத்திஞல் சரீரத்தை மறுபடியும் அடையாதவர்கள் எந்த வர்ணத்தைச் சேர்ந்தவர் களாஞலும் சரி, அவர்கள் மிகவும் கெட்ட நடத்தையுள்ளவர் களாஞலும் சரி, அவர்கள் வாழ்வை என்னிடம் ஸமர்ப்பித்து விட்டார்களாஞல் என்னையே அடைகிருர்கள். மரண ஸமயத்தில் புத்தி எங்கு செல்கிறதோ அதை அனுசரித்து அவர்கள் வருங் காலகதியும் இருக்கிறது. அதஞல் எவர்கள் தங்கள்வாழ்நாளை பக்திக்கு அர்ப்பணம் செய்துவிடுகிருர்களோ, அவர்கள் துராசாரம் உள்ளவர்களாக இருந்தாலும் என் விஷயத்தில் அவர்கள் ஸர்வோத்தமர்களேயாவார்கள். பெரும் வெள்ளத்தில்

ஒருவன் அடித்துக்கொண்டு போகப்படுகிருன் என்று வைத்துக் கொள். ஆனுல் அவன் இறக்கவில்லை. அகஸ்மாத்தாகக் கரையில் ஒதுக்கப்பட்டான். அப்பொழுது அவன் ஜலத்தில் மூழ்கவில்லை என்றுதானே கொள்ளவேண்டும். அதுபோல் முன்பு செய்த பாபங்களாகிய வெள்ளத்தில் மூழ்கினவன் அகஸ்மாத் தாக பக்தி என்னும் கரையில் ஒதுக்கப்படுவானுனல் அவனைப் பொறுத்தவரையில் பாபவெள்ளத்தில் மூழ்கியது வ்யர்த்தமே. அல்லது துஷ்கிருத்யங்களாகிய பாபங்களால் தகிக்கப்பட்டு பச்சாத்தாபமாகிய தீர்த்தத்தில் ஸ்னனம் செய்தானுனல் அவன் என்னை வந்தடைகிருன். இதனுல் அவனுடைய குலமே பவித்ரமாகிறது. அவர்களுடைய ஜாதி உயருகிறது. அவன் ஜன்மம் எடுத்த பயனை அடைகிருன். அவன் எல்லாவற்றையும் படித்தவனுகிருன். எல்லா தவங்களையும் செய்தவனுகிருன். அஷ்டாங்க யோகங்களையும் அப்யசித்தவனுகிருன். அவன் எப் பொழுதும் எல்லா கர்மங்களிலிருந்தும் விடுபட்டவனுகிருன். ஸம்பூர்ண மனம் புத்தி என்னும் திரவியங்களை ஏகநிஷ்டை யென்னும் பெட்டியில் வைத்து என்னிடம் அடைக்கலமாக வைத்துவிடுகிருன். (30)

**क्षिप्रं भवति धर्मात्मा शश्वच्छान्तिं निगच्छति ।**
**कौन्तेय प्रतिजानीहि न मे भक्तः प्रणश्यति ॥ ३१ ॥**

*க்ஷிப்ரம் பவதி தர்மாத்மா சஸ்வத் சாந்திம் நிகச்சதி ।*
*கௌந்தேய ப்ரதிஜாநீஹி ந மே பக்த: ப்ரணச்யதி ॥*

அவன் சிறிது காலத்துக்குப் பிறகு என்னைப்போலவே ஆகிருன். எவன் அமிருதத்தில் முழுகியிருக்கிருனே அவனுக்கு மரணம் எங்கிருந்து வரும்? சூர்யோதயம் ஆகாவிட்டால் அச் சமயத்தை ராத்திரி என்று கூறுகிருேம். எனது பக்தியில்லாமல் செய்யும் கர்மங்கள் வீணே. அதனுல் எவனுடைய சித்தத்தில் நான் ஸாந்நித்யமாகிறேனே அவன் எனது ஸ்வரூபமாகிருன் தீபத்திலிருந்து தீபத்தை ஏற்றினுல் முதல் தீபம்அணைந்துவிடுமா? அதுபோலவே பாவனுமயமான என்னை பஜித்தால் எனது உருவம் ஆகிருன். எனது நித்யஸாந்நித்யத்தை அவன் அடைகிருன். அதிகம் கூறுவானேன்? அவன் எனது உயிராகவே இருக்கிருன் என்று அறிந்துகொள். அதனுல் என்னை அடைய உனக்கு விருப்பமிருந்தால் எனது பக்தியை மறக்காதே. எனது குலம்

உயர்ந்தது என்று கர்வமடையாதே, நான் மற்றவரைவிட உயர்ந்தவன் என்று தற்புகழ்ச்சி கொள்ளாதே. நான் எல்லா வற்றிலும் பாண்டித்யம் அடையவேண்டும் என்று வீண் ஆசை கொள்ளாதே அழகிலும் யௌவனத்திலும் ஸம்பத்திலும் வீண்கர்வம் கொள்ளாதே. இவ்வளவும் இருந்தும் என்னிடம் பக்தி மாத்திரம் இல்லாவிட்டால் அத்தனையும் வீணே. அப்படி இருந்தால் தான்யத்தை நீக்கிவிட்டு உமியைச் சேர்ப்பது போலவும். அழகான வீட்டைக்கட்டி பாழடைந்து போவது போலவும், தாமரைத்தடாகம் உலர்ந்து போவதைப் போலவும், நிர்மானுஷ்யமான காட்டில் துக்கப்பட்ட ஒருவன் மற்றொரு துக்கப்பட்டவனுடன் சேர்வதைப் போலவும், காய்க்காத புஷ்பங் களுடன் கூடிய மரத்தைப் போலவும் அவனுடைய ஜாதியும் சம்பத்தும் வீணே, அழகான சரீரம் இருந்தும் அதில் உயிர் இல்லாவிட்டால்! எனதுபக்தியில்லாத வாழ்நாள் அப்படித்தான். உலகில் கற்களில்லையா ? அவைகளைப் போல்நினை. முள்நிறைந்த புதர்களுக்கு நடுவில் அழகான விருக்ஷம் இருந்தால் அதன் நிழல் யாருக்கு பிரயோஜனம்? ஸாதுக்கள் அம்மரத்தின் நிழலை அணுகுவார்களா ? அதுபோல் புண்யமும் பாபியைத்தீண்டாது. வேப்ப மரத்துப் பழங்களை எந்தப்பறவை விரும்பும்? அவைகளை காகம் ஒன்றுதான் தின்னும் அதுபோல் பக்தியில்லாதவர்களை பாபமே பீடிக்கும் மண்டை ஓட்டில் ஷட்ரஸ போஜனத்தைப் பறிமாறி அதை நாற்சந்தியில் வைத்தால் அது நாய்க்கே உணவாகும். பக்தியில்லாதவர்களுடைய வாழ்நாள் அவ்விதமே ஆகும், அவர்களை ஸஜ்ஜனர்கள் கொஞ்சமும் மதியார்கள். ஸம்ஸாரத்திலுள்ள துக்கம் அனைத்தும் அவர்களையே அடையும் என்னை பக்திபண்ணுபவர்களுக்கு உத்தமகுலம் இருக்கவேண்டு மென்று அவசியமில்லை. ஜாதியில் நீசனானாலும் சரி. சரீரத்தில் பிராணியானாலும் சரி அதனால் ஒரு தீங்கும் இல்லை. உனக்குத் தெரியாதா ? ஆதிமூலமேயென்று அலறிய யானை அன்புடன் என்னை நினைத்தது. அது என்னை அடைந்தது அதனுடைய மிருக சரீரமும் ஒழிந்தது. (31)

**मां हि पार्थ व्यपाश्रित्य येऽपि स्युः पापयोनयः ।**
**स्त्रियो वैश्यास्तथा शूद्रास्तेऽपि यान्ति परां गतिम् ॥ ३२ ॥**

மாம் ஹி பார்த்த வ்யபாச்ரித்ய யே஽பி ஸ்யு:
பாபயோநய: ।
ஸ்த்ரியோ வைச்யா: ததா சூத்ரா: தே஽பி யாந்தி பராம்
கதிம் ॥

யாருடைய பெயரை நினைப்பதே அனுசிதமோ, எல்லா அதர்மத்திலும் அதர்மமோ, எவர்கள் பாப யோநியில் பிறந்தவர்களோ அவர்கள் பாறையைப்போல் கடினமானவர்களாயினும் அவர்கள் என்னிடம் பக்தியுடன் கூடியவர்களாக இருந்தால், எனது புகழைப் பாடுபவர்களாக இருந்தால், எனது உருவைப் பார்ப்பதற்கே நமக்குக் கண்கள் இருக்கின்றன என்று எண்ணுபவர்களாக இருந்தால், என்னை தியானிப்பதுவே நமது ஸங்கல்பம் என்று நினைத்துக்கொண்டிருந்தால், காதுகள் எனது புகழைக் கேட்காவிட்டால் அழுபவர்களாக இருந்தால், எனக்கு ஸேவை செய்வதே தங்கள் தேகத்துக்கு அலங்காரம் என்று எண்ணுபவர்களாக இருந்தால், விஷயவாசனை அற்றவர்களாக இருந்தால், இப்படி இருப்பதே வாழ்வு மற்றவை மரணம் என்று எண்ணுபவர்களாக இருந்தால், அவர்கள் பாப யோநியில் பிறந்தவர்களாக இருந்தாலும் சரி, வேதங்களைப் படிக்காதவர்களாயினும் சரி, என்னை நினைப்பவர்களான அவர்களுக்கு யாதொரு குறையும் இல்லை.

பக்தியினாலேயே எத்தனையோ அசுரர்கள் தேவர்களைத் தோற்கடித்திருக்கிறார்கள். அப்படிப்பட்ட அஸுரன் ஒருவனுக்காகவே நான் நரஸிம்மரூபம் எடுத்தேன். அந்த பிரஹ்லாதனை என்னுடன் ஒப்பிடும்போது அவன் என்னைவிட மேலானவன். அவனுக்குக் கொடுப்பதற்கு என்னிடம்தான் பொருள்கள் இல்லை. அவன் குலத்தில் அசுரனானாலும் இந்திரனும் அவனுக்கு ஒப்பாக மாட்டான். இங்கு பக்திதான் உயர்ந்ததே தவிற ஜாதிப்ரமாணமில்லை. அ ர சா ங் க மு த் தி ரை பதிப்பிக்கப்பட்ட தோல்கூட நாணயத்தின் மதிப்பைப் பெறவில்லையா? அதற்குத் தங்கமும் வெள்ளியும் தேவை இல்லை. அரச முத்திரை ஒன்றே முக்யம். அரசாங்க முத்திரை பதித்த தோல் நாணயத்தினால் தங்கத்தையும் வெள்ளியையும் விலைக்கு வாங்கலாம். அதுபோல் மனமும் புத்தியும் எனது பிரேமையினால் முத்திரை இடப்படும்போது அவனே மேலாகிறான். எனது பக்தியினாலேயே அவன் கிருதார்த்தனாகிறான். பாவனை எதுவானாலும்சரி மனதுஎன்னிடம்

லயிக்கவேண்டும். அப்பொழுது சகல கர்ம பந்தங்களும் விடு படுகின்றன. கழிவுநீர் கங்கையில் சேருமளவும் சாக்கடைதான் பிறகு அது கங்கைதான். அக்னியில் போடாதவரைதான் சந்தனக் கட்டைகளுக்கும், வேறு கட்டைகளுக்கும் வித்யாசம், அதுபோல் என்னை அடையாதவரைதான் நான்கு வர்ணங்கள் ஸ்த்ரீஜாதி என்பதெல்லாம். உப்பினுல் செய்த பொம்மை ஸமுத்திரத்தில் கரைவதுபோல் என்னைச் சேர்ந்தால் சகல வர்ணுசிரம பேதங்களும் கரைந்துவிடும். உத்தரவாகினி, தக்ஷிணவாகினி, கங்கை, யமுனை என்ற பேதங்களெல்லாம் ஸமுத்திரத்தில் சென்று கலக்கும் வரைதான் காரணகாரியங்கள் எதுவாஞலும் மனம் என்னிடம் லயிக்கவேண்டும். அப்பொழுது அவன் நானேயாகிருன். ஸ்பர்சவேதிக்கல்லை உடைக்கவேண்டு மென்ருல் அதை எதில் போட்டாலும் தங்கமாகத்தானேயாகும் கோபிகைகள் பாதிவிரத்யத்தை விட்டு என்னைப்பதியாக எண்ணி ஞர்கள். அவர்கள் என்ரூபமாக ஆகவில்லையா? பயத்திஞல் கம்ஸனும் விரோதத்திஞல் சிசுபாலனும் எனது உருவமாக வில்லையா? ஸகோத்ரர்களான யாதவர்களும். இவன் என்னுடை யவன் என்று நினைத்த நந்தகோப வஸுதேவர்களும் அதன் காரணத்தால் என்னை அடையவில்லையா? நாரதர், துருவர், அக்ரூரர். சுகர், ஸனத்குமாரர்கள் இவர்கள் பக்தியினுல் என்னை யடையவில்லையா? எந்த மார்க்கமாஞலும் அடையவேண்டிய லக்ஷ்யம் நானே. அதனுல் என்னை அடைய வேண்டுமென்று விரும்பினுல் உலகில் வழிகளா இல்லை? அதனுல் எப்படிப்பட்ட பாபயோனியில் பிறந்தவர்களாயினும் என்னை பஜனம் செய்யும் வைசிய சூத்ரர்களும் என்னையடைகிருர்கள். (32)

**किं पुनर्ब्राह्मणाः पुण्या भक्ता राजर्षयस्तथा ।**
**अनित्यमसुखं लोकमिमं प्राप्य भजस्व माम् ॥ ३३ ॥**

கிம் புநః ப்ராஹ்மணுః புண்யா பக்தா ராஜர்ஷயః ததா ।
அநித்யம் அஸுகம் லோகம் இமம் ப்ராப்ய
பஜஸ்வ மாம் ॥

நான்கு வர்ணங்களிலும் சிரேஷ்டமான வர்ணத்தவர்களும் ஸ்வர்க்கத்தைப் பிறப்புரிமையாகக் கொண்டவர்களும் மந்திர வித்தையாகிய புவனங்களில் வஸிப்பவர்களும் பூஸுரர் என்று

கொண்டாடப்படுபவர்களும், தவமே உருவாக வந்தவர்களும், தீர்த்தங்களையே உருவாகக் கொண்டவர்களும், யக்ஞமாகிய கிராமத்தில் வஸிப்பவர்களும் வேதத்தைக் கவசமாக அணிந்திருப்பவர்களும் சுப காரியங்களைக்குழந்தையைப்போல் வளர்க்கிறவர்களும், தங்களுடைய சிரத்தையாலேயே ஸத்கர்மங்களை வளர்க்கிறவர்களும், ஸத்யமே ஸங்கல்பமாக உடையவர்களும் தங்களுடைய ஸங்கல்பத்தினால் அக்னியினுடைய ஆயுளை வளர்ப்பவர்களும், ஸமுத்ரத்தினால்கால் கழுவப்பட்டவர்களுமான பிராமணர்களுக்கு வேண்டி அவர்களுக்கு ப்ரீதி செய்வதற்காக நான் லக்ஷ்மியையே உதறித்தள்ளிவிடுகிறேன், அவர்களுடைய சரணதூளியை மார்பில் தரிப்பதற்காகக் கௌஸ்துபமணியையே நீக்கிவிடுகிறேன். அவர்களை ஆலிங்கனம் செய்வதற்காக மார்பை எப்பொழுதும் திறந்தே வைத்திருக்கிறேன். எனது மனசாந்திக்காகப் பிராமணச்ரேஷ்டர் ஒருவருடைய பாதச் சின்னத்தை மார்பில் தரித்துக்கொண்டிருக்கிறேன். அவர்கள் கோபம் கொண்டார்களானால் காலாக்னி ருத்ரர்கள் நடுங்குவார்கள். அவர்கள் சற்று சிரமப்பட்டார்களானால் ஸித்திகள் அவர்களுடைய காலடியில் குவியும். அப்பேர்ப்பட்ட பிராம்மண உத்தமர்கள் என்னைப்பற்றி அறிந்தவர்கள் அவர்கள் என்னை அடைவார்கள் என்பதில் ஸந்தேகமென்ன? சந்தன மரத்தை தழுவிய வேப்ப மரங்களும் வாசனையுடையதாகிறதன்றோ? அப்பொழுது அவைகளுக்கு தேவர்கள் தலையில் மகுடமாகும் பெருமை கிடைக்கும்போது சந்தன மரத்துக்கு இல்லாமலா போய்விடும்? இதைப்பற்றி நிரூபித்துக் காட்டவேண்டுமா என்ன?

சீதளத்தன்மைக்காக சங்கரர் சந்திரனைத் தலையில் தரித்துக் கொண்டிருக்கிறார். அந்த சந்திரனைவிட அதிகக் குளிர்ச்சியைக் கொடுக்கக்கூடிய பூஸுரர்களாகிய சந்தனத்தை நான் எப்போதும் மார்பில் தரித்துக்கொண்டிருக்கிறேன் வழியில் போய்க் கொண்டிருக்கும் ஓடைகளிலுள்ள ஜலத்துக்கெல்லாம் கங்கை என்று பெயர் கொடுக்கும் அந்த கங்காநதிக்கு ஸமுத்ரத்தைவிட வேறு கதி உண்டா? அதுபோல் ராஜரிஷியானாலும் தேவரிஷி ஆனாலும் ''நானே கதி'' என்று என்னிடம் புத்தியைச்செலுத்தி எவர்கள் சரணமடைகிறார்களோ, அவர்களுக்கு முக்தியும் புக்தியும் நானே. அதனால் ஆயிரம் துவாரமுள்ள படகானாலும் அதில் அவர்கள் கவலையில்லாமல் கங்கையைக் கடக்கலாம்,

அம்பு மழை பொழிந்தாலும் அவர்கள் திறந்த மார்புடன் இருக்கலாம். மலையே இடிந்து மேலே விழுந்தாலும் தடுக்க வேண்டிய அவசியமில்லை. வியாதியினால் பீடிக்கப்பட்டாலும் ஔஷதத்தைத் தேடவேண்டிய அவசியமில்லை. நான்குபுறமும் காட்டுத் தீ சூழ்ந்திருந்தபோதிலும் அதிலிருந்து தப்பித்துக் கொள்ள முயற்சிக்கவேண்டிய அவசியமில்லை.

மேற்கூறியவைகளிலெல்லாம் அகப்பட்டுக் கொண்டால் அவைகளிலிருந்தெல்லாம் தப்பித்துக்கொள்ள என்னென்ன பிரயத்னம் செய்யவேண்டுமோ அந்த பிரயத்னங்கள்யாவையும் ஒன்று சேர்த்து சுகதுக்கம் நிரம்பிய மனுஷ்ய லோகத்தில் பிறந்தவர்கள் என்னை பஜிப்பதால் அப்பிரயத்னங்களைச் செய்தவர்களாகிறார்கள். என்னை பஜிக்க வேண்டாமென்ற எண்ணம் உனக்கு இருக்கிறதா! வீட்டில் போகப் பொருள்கள் நிறைந்து கவலையற்றிருக்கிறாயா? அந்த ஜீவர்களுக்கு வித்தையும் யௌவனமும் சுகமும் நிலையாக இருக்கிறதென்ற நம்பிக்கை இருக்கிறதா? போகப் பொருள்கள் எவ்வளவு இருந்தாலும் சரீரம் ஆரோக்யமாக இருக்கும்வரைதான் அவைகள் உபயோகப்படும் நமது சரீரம் காலன் வாயில் அகப்பட்டுக் கொண்டிருக்கிறது. இதன் நடுவில் துக்கமாகிய பாரம் மலைபோல் வந்து குவிகிறது மிருத்யு என்னும் சுமை தலைமேல் ஏற்றப்பட்டிருக்கிறது. இதைச் சுமந்துகொண்டு மனமென்னும் சந்தையை நோக்கி அவர்கள் போய்க் கொண்டிருக்கிறார்கள். இவர்களுக்கு ஸுகத்தைக் கொடுக்க வேண்டுமென்ற வியாபாரத்தை எவன் செய்கிறான்? சாம்பலை ஊதுவதினால் தீ எரியுமா? விஷம் நிரம்பிய கந்தமூலங்களை அரைத்து சாரை எடுத்து அதை அமிர்தம் என்று நினைத்து அதன் ரஸத்தைக் குடிப்பதனால் அமரத்வம் கிடைக்குமா? அதைப்போலவே விஷய சுகம். அது பரமதுக்கம் ஆனால் என்ன செய்வது? முட்டாள்கள் அதைத்தானே சாப்பிடுகிறார்கள், மிருத்யுலோகத்தின் ஸுகம் எப்படி இருக்கிறதென்றால் தலையில் இருக்கும் சதையை அரைத்துக் காலில் வைத்துக் கட்டுவதுபோல் இருக்கிறது. மிருத்யு லோகசுகத்தின் கதையை காதால் கேட்கமுடியுமா?

அனலினாலான படுக்கையில் ஸுகமாகத் தூங்கமுடியுமா? இந்த உலகத்துச் சந்திரனுக்குப் பூர்ணத்வம் இல்லை. அவன் க்ஷயரோகி. ஸூர்யனும் அஸ்தமிப்பதற்கே உதயமாகிறான். துக்கமே ஸுகரூபமாகத் தன்னை மறைத்துக்கொண்டிருக்கிறது.

சுபம் என்னும் விதையை ஊன்றினுல் அது அசுப பலனைக்கொடுக்கிறது. மிருத்யு தாயின் கர்பத்தில் இருக்கும் கருவைத்தேடிப் பிடித்துவிடுகிறது. எது உண்மையில் இல்லையோ அதைப் பற்றி கவலை கொள்ளச் செய்கிறது. லபக் கென்று பாய்ந்து யம தூதர்கள் மூலமாகத் தூக்கிக்கொண்டு போய்விடுகிறது. எங்கு தூக்கிக்கொண்டு போகிருர்கள் என்று தெரியுமா? அதுவும் தெரியாது. எந்த வழியில் தேடினுலும்சரி. மரணத்திலிருந்து மீண்டுவந்த ஒருவரையும் நாம் கண்டதில்லை. மரணக்கதை இங்கு புராணமாக வாசிக்கப்படுகிறது. இவர்களுடைய அநித்யமாகிய கதையை வர்ணிப்பதானுல் அந்தக் கதை முடிய பிரும்மாவின் ஆயுளும் போதாது.

இப்படிப்பட்ட ரீதியுடைய இந்த உலகில் பிறந்து விட்டு நிச்சிந்தையாக இவர்கள் இருப்பதைப் பார்க்க ஆச்சர்யமாக இருக்கிறது. இகலோகத்துக்கும் பரலோகத்துக்கும் இவர்கள் முடிச்சிலிருந்து ஒரு காசு கூட செலவழிக்கப்படமாட்டாது. ஆனுல் எக்காரியம் தீங்களிக்குமோ அதற்கு கோடி கோடியாகச் செலவழிப்பார்கள். விஷய விலாசத்தில் சிக்கிக்கொண்டிருப்பவர்களை இவர்கள் சுகிகள் என்று எண்ணுகிருர்கள். லோப மாகிய சுமையை சுமப்பவர்களை ஞானி என்கிருர்கள். எவர்களுடைய ஆயுள் குறைகிறதோ அவர்களைப் பெரியவர்கள் என்கிருர்கள். அவர்கள காலில் விழுகிருர்கள். குழந்தை வளர வளரப் பெற்ரேருடைய ஸந்தோஷமும் வளருகிறது. ஆனுல் ஒவ்வொரு நாளும் அவனுடைய ஆயுள் குறைகிறது. என்பதை அவர்கள் அறிகிறதில்லை. ஒவ்வொரு ஜன்மதினம் கழியும் போதும் அவன் காலனை நோக்கி ஒவ்வொரு அடி எடுத்து வைக்கிருன். ஆனுல் பெற்ரோர்கள் ஆனந்தமாக அவனுக்கு பிறந்தநாள் கொண்டாடுகிருர்கள். கையில்கிடைத்த ஆயுள் நழுவிக்கொண்டிருப்பதை அவர்கள் முட்டாள்தனத்தினுல் உணருவதில்லை. மரணம் என்று உச்சரித்தாலே அக்ஞானம் என்று கருதுவார்கள். ஆனுல் மரணம்அடைந்ததும் ஓவெனக் கதறி அழுவார்கள்.

தவளைக்குப் பின்னுல் பாம்பு அதை விழுங்குவதற்கு தயாராக வாயைப் பிளந்து கொண்டு இருக்கிறது. ஆனுல் தவளை நாக்கினுல் ஈக்களைப் பிடித்துத் தின்றுகொண்டிருக்கிறது. அது போல் மனிதர்கள் பேராசையினுல் லோபத்தைப் பெருக்குகிருர்கள். ஐயோ! இந்த மிருத்யு லோகத்தில் எல்லாம் தலை

கீழாகவல்லவா இருக்கிறது! அர்ஜுனா! நீ அகஸ்மாத்தாக இவ்வுலகில் ஜன்மம் எடுத்துவிட்டாய் இங்கிருந்து சீக்கிரமாக ஒதுங்க வழிபார். பக்தி மார்க்கத்தில் செல் அழிவற்ற எனது உலகத்துக்கு வா. (33)

मन्मनाभव मद्भक्तो मद्याजी मां नमस्कुरु ।
मामेवैष्यसि युक्त्वैवं आत्मानं मत्परायणः ॥ ३४ ॥

மன்மநா பவ மத்பக்தோ மத்யாஜீ மாம் நமஸ்குரு।
மாமேவைஷ்யஸி யுக்த்வைவம் ஆத்மானம்
மத்பராயணே:॥

நீ என் உருவை மனதில்பார். என் பஜனையில் பிரேமைவை· எங்கும் நான் ஒருவனே உள்ளேன் என்று வணங்கு. என்னையே நினைத்து ஸங்கல்பத்தை மீதமின்றி எரித்து விடுபவர்கள் என்பொருட்டு நிஜமான யக்ஞத்தைச்செய்தவர்களாகிருர்கள். இவ்விதமாக பஜிப்பாயானல் என்னையடைவாய் என்று நிச்சயமாகச் சொல்லுகிறேன். ரகசியத்திலும் ரகசியமான இதை அறிந்து என் ஸகஸ்வரூபத்தையடை.

இந்த விதமாக மேகசியாமளமான அந்த கிருஷ்ண பிரும்மம், பக்தர்களுடைய மனோரதங்களுக்குக்கற்பகவிருக்ஷமான அந்த நாராயணன் அர்ஜுனனுக்குக் கூறியதை ஸஞ்ஜயன் வர்ணித்தார். இத்தனையையும் கேட்டுவிட்டு திருதராஷ்டிரன் என்னும் கிழவர் பேசாமல் உட்கார்ந்திருந்தார் எருமை அகழமான நீர்நிலையில் படுத்துக்கிடப்பதைப்போல். இதைக் கண்டு ஸஞ்ஜயன் தலையில் அடித்துக்கொண்டார். ஐயோ, இங்கு அமிர்தமழை பொழிகிறதே, இவர்மனம் எந்தச் சாக்கடையை நோக்கிச் செல்கிறது? ஆனாலும் இவர் எனது அன்னதாதா. இப்படி இவரைப்பற்றி நான் நினைப்பது தவறு. நான் மிகவும் பாக்கியசாலி அதனாலல்லவா வியாசபகவான் இந்தக்கதையைக் சொல்லும் பாக்யத்தை அளித்தார்.

இவ்விதமாக நிச்சயம் செய்துகொண்டு மனதில் நினைக்கும் பொழுதே எழும் ஆனந்தத்தை அவரால் அடக்கமுடியவில்லை. மனது பொங்கியது. வார்த்தைகள் வெளிவரவில்லை. காலிலிருந்து தலைவரை மயிர்கூச்சலெடுத்தது. பாதி மூடிய இமைகளுக்குள்ளிருந்து முத்துமுத்தாக கண்ணீர் உதிர்ந்தது.

உள்ளத்தில் எழும் ஆனந்தக் கடலின் அலைகளைத்தாங்காமல் சரீரம் நடுங்கியது. ஒவ்வொரு ரோமக்கால்களிலிருந்தும் பால் போன்ற சுவேதபிந்துக்கள் கிளம்பின. அது முத்துச்சட்டை தரித்ததுபோல் இருந்தது. இவ்விதமாக ஜீவநிலை உள் ளொடுங்கும்போது வியாசரால் ஒப்புவிக்கப்பட்ட ஆதேசமும் மறைந்தது. அப்போது கிருஷ்ணனின் அமிருத வசனம் திரும்பவும் காதுகளில் ஒலித்தது. தேகத்தில் சூடு உண்டாகியது. ஸ்மரணை வந்தது. கண்ணீரையும் சுவேத பிந்துக்களையும் துடைத்துக் கொண்டு திருதராஷ்டிரனைப் பார்த்து கூறினார். அவரா பேசு கிறார். கிருஷ்ண வசனங்கள் அல்லவா அது. அவ்வார்த்தைகள் நிர்மலமான விதைகள் ஸஞ்சயன் மனது பக்குவமான பூமி. அதில் தழைக்கும் பயிர்கள் ஸாதுக்கள் மனதில் ஆனந்தத்தை விளைவிக்கும். இன்று நமது பாக்யலக்ஷ்மியானவள் சிரவண இந்திரியங்களுக்கு ஜபமாலை அணிவித்திருக்கிறாள். இவ்வித மாக நிவிருத்திதாஸரான ஞானதேவர் கூறிவிட்டு, ஸ்ரீகிருஷ்ணன் அர்ஜுனனுக்கு கூறிய விபூதி மகிமைகளைப் பற்றிக் கூறத் தொடங்கினார்.

ஒன்பதாவது அத்யாயம் ஸம்பூர்ணம்.

## பத்தாம் அத்யாயம்

போதம் தரும் கருணைநிதே! வித்தையாகிற கமலத்தை மலரச்செய்பவனே! பராவித்தையுடன் போகம் நுகர்பவனே! உனக்கு நமஸ்காரம். அப்பா! அந்தகாரமான அக்ஞானத்தைப் போக்கும் சூரியனே! சமர்த்தனே! தருணசூரியனுடன் போட்டி இடுபவனே! உனக்கு வணக்கம். சுபமாகிற ரத்தினத்தின் களஞ்சியமே! ஸாதுக்கள் கூட்டமாகிற வனத்தில் முளைத்த சந்தனவிருக்ஷமே! ஆராதனஸ்வரூபமே! உனக்கு வணக்கம். ஞானிகளான சகோரபக்ஷிகளுக்குச்சந்திரனே! ஆத்மாநுபவ பிரஜைகளின் நரேந்திரனே, வேதமாகிற ஞானக்கடலே, மன்மதனை வெட்கமடையச் செய்பவனே, உனக்கு நமஸ்காரம். பிரேமியான பக்தஜனங்களால் பஜனை செய்யப்பட்டவனே! ஸம்ஸாரமாகிய யானையின் மஸ்தகத்தைப் பிளக்கும் சிங்கமே, விசுவத்தின் மூலமே, ஹே குருதேவ! உனக்கு நமஸ்காரம்.

உன்னுடைய அநுக்ரஹமாகிய பிரசாதத்தைப்பற்றி கணேசன் குழந்தைகளுக்கு வித்தை புகட்டுகிறார். குரு தனது உதாரமான வாக்கினால் அபயபிரதானம் அளித்தாரானால்

நவரசங்களாகிய ஸமுத்ரங்களையும் பசுவின் குளம்படிபோல் தாண்டலாம். உன்னுடைய பிரேமை ரூபமான ஸரஸ்வதி யானவள் ஒரு ஊமைக்கும் பிருகஸ்பதியின் இலக்கியங்களை பூராவாகப் புகட்டவல்லவள். உன்னுடைய கிருபா திருஷ்ட்டி யார்மேல் விழுகிறதோ, உன் அபயஹஸ்தம் யார்தலையின் மேல் வைக்கப்படுகிறதோ, அவன் ஸாதாரண ஜீவனாக இருந்தாலும், சங்கரனுக்கு ஸமமாக ஆகிறான். அத்தனை மகிமை பொருந்தியவரை எனது வாக்கினால் என்னவென்று வர்ணிப்பேன். சூரியனுடைய சரீரத்துக்கு யாராவது வாசனை திரவியங்களைப் பூசமுடியுமா? கற்பவிருக்ஷத்தைச் சுற்றி நந்தவனம் வைக்க முடியுமா? பாற்கடலுக்கு அலங்காரம் செய்ய முடியுமா? கற்பூரத்துக்கு ஸுகந்தத்தை ஊட்டமுடியுமா? சந்தனத்திற்கு லேபனம் பூசமுடியுமா? அமிருதத்துக்கு அறுசுவை உண்டி ஊட்டமுடியுமா? ஆகாசத்துக்குப் பந்தல் போடமுடியுமா? அதுபோல் ஸ்ரீ குருவின் மகிமைக்கு அளவுகோல் உண்டா? அதனால் ஒன்றுமே கூறாமல் சொல்லாமல் பேசாமல் வணங்கு கிறேன்.

எனது வித்தையின் பெருமையால் நான் குருவை வர்ணிக்கத் தொடங்கினேனானால் முத்துக்குக் காக்காய்ப் பொன்னைச்சுற்றி பளபளப்பை உண்டாக்க நினைப்பது போலவும், அசல் தங்கத்துக்கு வெள்ளி பூசுவது போலவும் ஆகும். அதனால் பேசாமல் சரணங்களை வணங்குவதே மேலானதாகும் இவ்விதம் கூறிவிட்டு ஞானேஸ்வரர் மேலும் கூறுவார். ஹே ஸ்வாமி! தங்களுடைய கிருபாதிருஷ்டியினால் இந்த கிருஷ்ணார்ஜுன ஸம்வாதமாகிய பிரயாகையில் நான் வடவிருக்ஷமாகிவிட்டேன். அந்த காலத்தில் பக்தன் உபமன்யு பால் கேட்டவுடன் சங்கரர் க்ஷீரஸாகரத்தை ஒரு கிண்ணத்தில் அடக்கி அவருக்குக் கொடுத்தார். கோபித்துக் கொண்ட சிறுவனை துருவனை ஸமாதானப்படுத்த எண்ணி துருவபதமான மிட்டாயை கிருஷ்ணன் அளித்தார். அதுபோல் தங்களுடைய கிருபையினால் பிரும்மவித்தையில் சிரேஷ்டமானதும் எல்லா சாஸ்திரங் களுக்கும் இளைப்பாறும் ஸ்தானமும் ஆகிற பகவத் கீதையை நான் பாட எனக்கு அனுமதியாகிய வரத்தையளித்தீர்கள்.

எந்த வாக்ரூபமான வனத்தில் அலைந்துகொண்டு அக்ஷர ரூபமான பலத்தை அடைந்ததாகக் கேள்விப்படவில்லையோ. அந்த அக்ஷரத்தை நீங்கள் எனக்கு கற்பகக்கொடியாக அளித்தீர்கள். எனதுதேகபுத்தியை ஆனந்த களஞ்சியமாக ஆக்கி

விட்டீர்கள். மனதை கீதார்த்த ரூபமான க்ஷீரஸாகரத்தில் ஸயனிக்கச்செய்தீர்கள். இதைப்போல் இன்னும் தங்கள் அநுக்ரகம் கொஞ்சம் நஞ்சமா? இதை வர்ணனை செய்ய எனக்கு என்ன தெரியும்? தைரியத்தினால் ஏதோ கொஞ்சம் உளறி வைத்தேன். அபராதத்தை மன்னித்தருளவேண்டும்.

இதுவரை தங்களுடைய கிருபையினால் நான் பகவத் கீதையின் பூர்வபாகத்தை வர்ணித்து முடித்துவிட்டேன் முதல் அத்யாயத்தில் அர்ஜுனனுடைய திகில், குழப்பம், வருத்தம் இரண்டாம் அத்யாயத்தில் நிர்மலயோகத்துக்கும் ஸாங்கியத்துக்கும் உள்ள பேதம். மூன்றாம் அத்யாயத்தில் கர்மத்தின் மகிமை. நான்காம் அத்யாயத்தில் ஞானத்துடன் கூடிய கர்மம். ஐந்தாம் அத்யாயத்தில் யோகதத்வம் ஆறுவதில் யோகாஸனங்களிலிருந்து ஆரம்பித்து ஜீவாத்ம ஐக்யத்தைப் பற்றிய வர்ணனை. அத்துடன் யோகத்தின் ஸ்திதி, யோக பிரஷ்டர்களின்கதி இவைகள். ஏழாம்அத்யாயத்தில் பிரகிருதியின் செயல், புருஷோத்தமனை நான்குவிதமாகபஜிக்கும் சாதனைகளின் வர்ணனை. ஏழுவிதமான கேள்விகளுக்குப்பதிலும் தேகாந்த சமயத்தில் ஏற்படும் சித்த சுத்தியைப்பற்றியும் எட்டாவது அத்யாயத்தில் கூறியிருக்கிறேன். பிறகு வேதங்களில் கூறி இருக்கும் அபிப்ராயங்களைப்பற்றியும், லக்ஷசுலோகங்களுள்ள மகாபாரதத்தைப்பற்றியும் மகாபாரதத்திலுள்ள கிருஷ்ணார்ஜுன ஸம்வாதத்தைப்பற்றியும் கீதையின் எழுநூறு சுலோகங்களிலுள்ள அபிப்ராயங்களைப்பற்றியும், ஒன்பதாவது அத்யாயத்தில் வெளி இட்டிருக்கிறேன். ஆனால் ஒன்பதாவது அத்யாயத்தைப்பற்றி ஸ்பஷ்டமாக வெளியிடுவதற்கு வேதமே பயப்படுகிறது. அதனால் நான் ஏன் வீணாகர்வம் கொள்ளவேண்டும்.

சர்க்கரையும் வெல்லமும் ஒரே கரும்பிலிருந்து உண்டானவைகள்தான் என்றாலும் அவைகள் ருசியில் வேறுபட்டிருக்கிறதல்லவா? அதுபோல் ஒவ்வொரு அத்யாயமும் கீதையில் பிரும்மஸ்வரூபத்தையே பிரதிபாதித்தாலும் ஒன்று தன்னிடமிருந்தே பிரும்ம ஸ்வரூபத்தைக் காட்டுகிறது. ஒன்று அறிவதற்கு ப்ரயத்னப்பட்டுக்கொண்டு குணங்களுடன் கூட பிரும்மமாகிறது. இவ்விதமாகக் கீதையில் ஒவ்வொரு அத்யாயமும் உயர்ந்ததுதான். ஆனால் ஒன்பதாவது அத்யாயம் வர்ணனைக்கப்பாற்பட்டது. அதை நான் வர்ணித்தேன் என்றால் அது தங்களுடைய ஸாமர்த்யம்,

ஸ்வாமி! ஒருவன் அங்கவஸ்த்ரத்தினுல் சூரியனின்வேலையைச் செய்தான். ஒருவன் சிருஷ்டிக்குமேல் சிருஷ்டியைச் செய்தான். ஒருவன் கற்களினுல் கடலில் அணைகட்டி ஸேனையை அக்கரை சேர்த்தான். ஒருவன் சூரியனை நிறுத்தினுன். ஒருவர் உள்ளங் கையில் ஸமுத்ர ஜலத்தை எடுத்து அதை வற்றடித்தார். அது போல் தாங்கள் ஊமையாகிய என்னை அநிர்வசனீயமான பிரும்மத்தை வர்ணிக்கச்செய்தீர்கள். ஆனுல் இதெல்லாம் இருக்கட்டும். ராம-ராவணர்களுக்கு ஏற்பட்ட யுத்தம் எப்படி உண்டாயிற்று என்ருல், இருவர்களும் கைகலந்ததால் உண்டாயிற்று. அதுபோல் நான்சொல்கிறேன்— ஒன்பதாவது அத்யாயத்தில் ஸ்ரீ கிருஷ்ணன் கூறுகிருர். 'நானே ஒன்பதாவது அத்யாயமாக இருக்கிறேன்' என்று. இந்த நிர்ணயத்தைத் தத்வக்ஞர்களே அறிவார்கள். அவர்களுக்கு இந்த கீதார்த்தம் கைக்கிளிபோல்.

இவ்விதமாக என் புத்திக்கு எட்டியபடி ஒன்பது அத்யாயத்தையும் வர்ணித்து முடித்திருக்கிறேன். இப்பொழுது உத்தரபாகத்தை வர்ணிக்கிறேன் கேளுங்கள். இனிமேல் அர்ஜுனனுக்குக் கிருஷ்ணன் முக்யமானதும் சில்லரை யானதுமான தன் மகிமைகளைக் கூறுகிருர். அதையும் தங்களுக்கு நான் எடுத்துக் கூறுகிறேன். இதில் பாஷையின் நடை எப்படி இருக்கிறதென்ருல் சாந்தரஸம் சிருங்கார ரஸத்தை ஜயித்துவிடுகிறது. இலக்கியக் கோர்வைகள் சாஸ்திரத்துக்கு அலங்காரமாகிறது. மூல ஸம்ஸ்க்ருத சுலோகத்துடன் வ்யாக்யானத்தை ஒத்திட்டுப்பார்த்தால் மூலகிரந்தம் எது? வ்யாக்யானம் எது? என்றே தெரியாது. அழகான சரீரம், நகைகளுக்கு அழகு செய்வதுபோல் யாரே அழகுக்குஅழகு செய்வார்? அதுபோல் பாஷையும் வியாக்யானமும் வாக்கும் அர்த்தமும்போல ஒன்று சேர்ந்துகொண்டு மிகுந்த பிரேமை யுடன் ஒரே ஆசனத்தில் வீற்றிருந்து சோபை அளிக்கிறது. பாவார்த்தங்கள் தெளிவாகும்போது ரஸப்பெருக்கு மழையென வர்ஷிக்கிறது. சாதுர்யத்தன்மையோ தனக்கே பிரதிஷ்டை என்று கூறுகிறது. இவ்விதமாக பாஷையும் பாவார்த்தமும் ரஸமும் சாதுர்யமும் ஒன்று சேர்ந்து கீதாதத்வம் என்ற இலக்கியமாகப் பரிணமித்திருக்கிறது. பிறகு சராசத்தின் உருவமும் ஞானிகளின் சித்தஜோதியும் யாதவகுல சக்ர வர்த்தியுமான ஸ்ரீ கிருஷ்ணன் மறுபடிகூற ஆரம்பித்தார் என்று நிவிருத்திதாஸரான ஞானதேவர் கூறுவதைக்கேளுங்கள்.

श्रीभगवानुवाच —

**भूय एव महाबाहो शृणु मे परमं वचः ।**
**यत्तेऽहं प्रीयमाणाय वक्ष्यामि हितकाम्यया ॥ १ ॥**

ஸ்ரீ பகவானுவாச :—

*பூய ஏவ மஹாபாஹோ ச்ருணு மே பரமம் வச:*
*யத்தேஹம் ப்ரீயமாணாய வக்ஷ்யாமி ஹிதகாம்யயா.*

பகவான் கூறுகிருர். ஹே அர்ஜுனு! இதுவரை உனக்கு என்ன சொல்லிவந்தேனே, அதில் உன்னை பரீக்ஷித்தேன். அதில் ஒருகுறைவும் இல்லாமல் நீ நிறைவாய் இருப்பதைப்பார்த்தேன். மண்பாண்டத்தில் கொஞ்சம் நீரை ஊற்றி அது ஒழுகுகிறதா என்று பார்த்து மறுபடியும் விடுகிரேம். அதேபோல் உனக்குச் சிலவற்றை நிரூபணம் செய்து பாாத்துவிட்டு அதை உனக்கு அறியும் சக்தி இருக்கிறது என்று கண்டுகொண்டு மறுபடியும உனக்குக் கூறுகிறேன். அகஸ்மாத்தாக வழியில்கண்ட ஒரு மனிதன் அவன் நம்பிக்கைக்கு உகந்தவன்தானு என்று தெரிந்துகொண்டு, கொஞ்சம் திரவியத்தை அவன் கையில் கொடுத்துவிட்டு, அவன் நாணயஸ்தன் என்பதை தெரிந்து கொண்டு அவனையே பொக்கிஷதார் ஆக்கிவிடுவதைப்போல், உன்னை இப்பொழுது நான் என்னுடையவனுக ஆக்கிக்கொண்டு விட்டேன்.

இவ்விதம் கூறிவிட்டு கிருஷ்ணன் மேகம் பர்வதத்தைத் தழுவுவதுபோல் அர்ஜுனனைத்தழுவிக் கொண்டார். பின்பு கூறுவார். ஒவ்வொரு வருஷமும் குடியானவன் விதையை விதைக்கிருன். அறுவடையை எதிர்பார்க்கிருன். அறுவடை ஆனதும் மறுபடி விதைக்கிருன். அதைப்பற்றி அவன் அலுத்துக் கொள்கிருனு ? அடிக்கடி புடம்போடுவதால் தங்கத்தின் மாற்று அதிகரிக்கத்தானே செய்யும். சுத்தமான தங்கத்தையே எல்லோரும் விரும்புகிருர்கள் அல்லவா! அதனுல் நான் கூறுவதை உனக்கு உபகாரம் என்று நினைக்காதே. எனது நலத்துக்காகவே நான் கூறுகிறேன் என்று நினைத்துக்கொள். சிறுகுழந்தைக்கு நகைகள் அணிவித்து அலங்காரம் செய்தால் அதற்கு என்ன தெரியும் அதன் அலங்காரத்தைப் பார்த்துத் தாயல்லவா ஸந்தோஷப்பட்டுக்கொள்கிருள். அதுபோல் நீ

உனது நன்மையை அறிந்து அறிவைப்பெருக்கிக்கொள்ளும் பொழுது எனது சந்தோஷம் இரட்டிப்பு அதிகமாகிறது. இந்த அலங்காரபாஷை இருக்கட்டும். எனக்கு உன்னிடமுள்ள பிரேமையினுல் எவ்வளவு கூறினுலும் அலுப்பே தட்டவில்லை. அதனுலேயே உனக்குத்திரும்பத்திரும்பக் கூறுகிறேன். இப்பொழுது அந்தக்கரண சுத்தியுடன்கேள். அக்ஷரங்களால் அலங்காரம் செய்து கொண்ட ஸாக்ஷாத் பரபிரும்மமே உன்னை ஆலிங்கனம் செய்துகொள்ள வருவதாக எண்ணிக்கொள். என்னை இனியும் நீ உள்ளபடி அறியவில்லை. நான் யாரென்ருல் நானே இம்மூவுலகமும் என்று அறிந்துகொள்.

**न मे विदुः सुरगणाः प्रभवं न महर्षयः ।**
**अहमादिर्हि देवानां महर्षीणां च सर्वशः ॥ २ ॥**

ந மே விது: ஸுரகணு: ப்ரபவம் ந மஹர்ஷய:
அஹமாதிர்ஹி தேவாநாம் மஹர்ஷீணும ச ஸர்வச:

என்னை அறியும் விஷயத்தில் வேதங்கள் ஊமையாகி விட்டன. மனதும் பிராணனும் நொண்டியாகிவிடும். ஸூர்யனும் சந்திரனும் இரவாகாமலேயே அஸ்தமித்து விடுவார்கள்; கர்ப்பத்திலிருக்கும் சிசு தனது மாதாவை அறியாததுபோல் ஸமஸ்ததேவர்களும் என்னை அறியார்கள். ஜலசரங்கள் ஸமுத்திரத்தின் பிரமாணத்தை அறியாதவாறுபோல், கொசு ஆகாசத்தைத்தாண்ட முடியாதவாறுபோல், மகரிஷிகளும் என்னை அறியார்கள. நான் யார்? எங்கிருநது பிறந்தேன்? எவ்வளவு பெரியவன்? என்பதை அறியாமலேயே கலப்பங்கள் கடந்து கொண்டிருக்கின்றன. ஏனெனில் மகரிஷிகளுக்கும் தேவர்களுக்கும பிராணிகளுக்கும் ஆதிகாரணம் நானே. அதனுல் என்னை அறிவதென்பது நடக்காத காரியம.

நதிகள் கடலிலிருந்து திரும்பிப்பருவதத்தில் ஏறினுல், மரங்கள் தலைகீழாகப் பூமியை நோக்கிப்போகுமென்ருல், என்னிடமிருந்து உத்பத்தியான உலகம் ஒருவாறு என்னை அறியலாம்! அல்லது வடவிருக்ஷத்தை அதன் விதைக்குள் பூருவாகப்பார்க்க முடியுமானுல், அலைக்குள் ஸமுத்திரம் அடங்குமானுல், பரமாணுவுக்குள் பூகோளம் அடங்குமானுல் அப்பொழுது பிராணிகள் தேவர்கள் மகரிஷிகள் என்னைத்தெரிந்துகொள்ள அவகாசம் கிடைக்கும். அல்லது வெளியில் செல்லும்

இந்திரியங்களைத் திருப்பித் தனக்குள் பார்க்கவேண்டும். அவ்வித முயற்சிசெய்தால் அவன் தேகத்தை விட்டுவிட்டு பஞ்சமகா பூதங்களின் சிகரத்துக்கு வேண்டுமானல் செல்லலாமே ஒழிய உள்ளபடி என்னை அறியமாட்டான். (2)

**यो मामजमनादिं च वेत्ति लोकमहेश्वरम् ।**
**असंमूढः स मर्त्येषु सर्वपापैः प्रमुच्यते ॥ ३ ॥**

யோ மாமஜமநாதிம் ச வேத்தி லோக மஹேச்வரம்
அஸம்மூட: ஸ மர்த்யேஷு ஸர்வபாபை: ப்ரமுச்யதே

அங்கு ஸ்திரமாக இருந்து நிர்மலமான தன் நேத்ர பிரகாசத்தால் என்னை பார்ப்பான். எவன் என்னை ஆரம்பத்தி லிருந்து பூர்ணமானவன் என்றோ ஸகலலோகங்களுக்கும் ஈசுவரன் என்றோ அறிகிருனே அவன் கற்களுக்குள் பரிசவேதி போல் ஆவான். ரஸங்களுக்குள் அமிர்தத்தைப்போல் ஆவான். அவனை எனது அம்சமென்றே அறி. அவன் நடமாடும் ஞானத்தின் பிரதிபிம்பம். அவனுடைய அவயவங்கள் ஸுகத்தின் அம்சங்கள். எவர்கள் லௌகிக திருஷ்டியினுல் அவனுடைய மனிதத்தன்மையை ஆராய்கிருர்களோ அவர்கள் பிரமையடை கிருர்கள். கற்பூரம் இருக்கிறது, அகஸ்மாத்தாக அதில் ஒரு வைரக்கல் விழுகிறது. அதன் மேலாகத் தண்ணீர் விழுந்தால் வைரக்கல்லை அறியமுடியுமா?

மனித உலகில் லௌகிக திருஷ்டியில் அவன் மனிதனுகவே காணப்பட்டாலும் அவன் பிரகிருதியின் குற்றத்துக்கு ஆளாக மாட்டான். பாபம் அவனைப்பார்த்து நடுங்கி ஓடிவிடும். எரியும் சந்தனமரத்தைவிட்டு ஸர்ப்பங்கள் ஓடுவதுபோல் ஸங்கல்ப் பங்கள் அவனைவிட்டு ஓடிவிடும். என்னுடைய ஞானம் எவ்வித மானது என்பது கற்பனையால்கூட அறியத்தக்கது அன்று. என்னுடைய தர்மம் வெவ்வேறு பூதங்களின் பிரகிருதியுடன் இணைந்து உலகம் முழுவதும் பரவிக்கிடக்கின்றது. (3)

**बुद्धिर्ज्ञानमसंमोहः क्षमा सत्यं दमः शमः ।**
**सुखं दुःखं भवोऽभावो भयं चाभयमेव च ॥ ४ ॥**

**अहिंसा समता तुष्टिस्तपो दानं यशोऽयशः ।**
**भवन्ति भावा भूतानां मत्त एव पृथग्विधाः ॥ ५ ॥**

புத்திர் ஞாநமஸம்மோஹ: க்ஷமா ஸத்யம் தம: சம: ।
ஸுகம் துக்கம் பவோZபாவோ பயம் சாபயமேவ ச ॥

அஹிம்ஸா ஸமதா துஷ்டிஸ் தபோ தாநம் யசோZயச: ।
பவந்தி பாவா பூதாநாம் மத்த ஏவ ப்ருதக்விதா: ॥

அவைகளில் புத்தியை முதலாவதாக அறி. ஞானம் எல்லை இல்லாமல் இருக்கிறது. ஸஹிப்புத்தன்மையும் க்ஷமையும் ஸத்யமும் நிர்மோகத்தை அடைகிறது. மனோநிக்ரகமும், இந்திரியநிக்ரகமும், ஸுகதுக்கமும் ஜகத்தில் இயங்கிய வண்ணம் இருக்கின்றன. ஜனனமும் மரணமும் கைகோர்த்து விளையாடுகின்றன. பயம் நிர்பயம் அஹிம்ஸை ஸமத்வம் ஸந்தோஷம் தபஸ் தானம் புண்யம் கீர்த்தி, அபகீர்த்தி என எத்தனைவித பாவங்கள் உண்டோ அவையனைத்தும் என்னிடம் உண்டு. எத்தனை எத்தனை பிராணிகள் உண்டோ அவைகளின் பிரகிருதிக்கு ஏற்ப இவைகள் இயங்கும், சிலபிராணிகள் எனது ஞானத்திலிருந்து உற்பத்தியாகின்றன. அக்ஞானத்திலிருந்து சில. பிரகாசமும் இருளும் சூர்யனிடமிருந்து உற்பத்தியாகின்றன. பிரகாசம் உதயத்திலும் அந்தகாரம் அஸ்தமனத்திலும் பிறக்கிறது. என்னுடைய ஞானமும் அக்ஞானமும் பிராணிகளின் எண்ணத்தின் பயனே. அவைகளுடைய மன எண்ணங்களைப் பொறுத்தே அவற்றில் வேற்றுமை காணப்படுகின்றது. என்னுடைய பாவத்தினால் கட்டுப்பட்டதே இந்த ஸம்பூர்ணசிருஷ்டி. அவைகளில் பதினொன்று முக்யமானவை. அவைகளைக் கூறுகிறேன் கேள். (4–5)

महर्षयः सप्त पूर्वे चत्वारो मनवस्तथा ।
मद्भावा मानसा जाता येषां लोक इमाः प्रजाः ॥ ६ ॥

மஹர்ஷய: ஸப்த பூர்வே சத்வாரோ மநவஸ் ததா ।
மத்பாவா மாநஸா ஜாதா யேஷாம் லோக இமா:
ப்ரஜா: ॥

குணவான்களில் சிரேஷ்டமானவர்களும் மகரிஷிகளுக்குள் ஞானிகளுமான கச்யபர் முதலிய ஏழு ரிஷிகள் இருக்கிறார்கள். பதினான்கு முக்யநரசிரேஷ்டர்களுக்குள் ஸ்வாயம்புவமனுவைப் போன்ற நான்கு மனுக்கள் இருக்கிறார்கள். இவர்களே எனது முற்கூறிய பதினொரு பாவதத்வத்திலிருந்து உண்டானவர்கள்.

அதாவது இவர்களே எனது எண்ணங்களிலிருந்து பிறந்தவர்கள் சிருஷ்டியின் நிமித்தம் இவர்கள் எனது மனதின் எண்ணங் களிலிருந்து பிறந்தனர் உலகம் இப்படிப்பட்டதென்று ஏற்படு முன், மூன்றுலகங்களும் தோன்றுவதற்குமுன், பஞ்சமகாபூதங் களும் தன்மயமாகச் செயலற்றுக்கிடக்கும் நாளில், என்னுடைய எண்ணத்தினல் மேற்கூறிய பதினெருவரும் உண்டாயினர். பிறகு இவர்கள் உலகை சிருஷ்டித்தார்கள். அவைகளில் முக்ய சிருஷ்டி மனிதன். இப்பதினெருவரும் அரசர்கள், மீதமுள்ள இந்த ஜகத்சிருஷ்டிகள் இவர்களுடைய பிரஜைகள்.

இவ்விதமாக இந்த விஸ்வவிஸ்த்தாரம் எனது அம்சமே. பார்! முதலில் ஒரு விதை இருக்கிறது. விதை வெடித்து முளை கிளம்புகிறது. அது செடியாகிறது அதிலிருந்து கிளைகள் உத்பத்தியாகின்றன. அந்தக்கிளைகளிலிருந்து அநேக உப கிளைகள் உண்டாகின்றன. அந்த உபகிளைகளிலிருந்து தளிர் களும் இலைகளும் தோன்றுகின்றன. இலைகளுக்கு மத்தியிலிருந்து பூவும், பழமும் உண்டாகின்றன. இவ்விதமாக மரம் வளர்ந்து முதிர்ச்சி பெருகிறது. சிந்தனைசெய்து பார்த்தாயானல் இந்த விருக்ஷம் முழுவதும் ஒரே விதை என்பதை அறிவாய் விதையைப் போன்றவன் நான். என்னிடமிருந்து மனம் பிறந்தது. அம் மனதிலிருந்து ஏழு ரிஷிகளும் நான்குமனுக்களும் உண்டாயினர். இவர்கள் லோகபாலகர்களைத் தோற்றுவித்தார்கள் லோக பாலகர்கள் அநேக உலகங்களைத் தோற்றுவித்தார்கள். அந்த உலகங்களிலிருந்து எல்லா பிராணிகளும் உண்டாயின. இந்த மாதிரியாக இவ்வுலகம் முழுவதும் நவீன விஸ்தாரமாகப்பரவி இருக்கின்றது. ஆனல் அந்தோ இவைகளை மனோபாவத்தால் ஊகித்து அறிவதைத்தவிர வேறு என்ன இருக்கிறது? (6)

**एतां विभूतिं योगं च मम यो वेत्ति तत्त्वतः ।**
**सोऽविकम्पेन योगेन युज्यते नात्र संशयः ॥ ७ ॥**

***ஏதாம் விபூதிம் யோகம் ச மம யோ வேத்தி தத்த்வத: ।***
***ஸோऽவிகம்பேந யோகேந யுஜ்யதே நாத்ர ஸம்சய: ॥***

ஹே ஸுபத்ராபதி என் மனதிலிருந்து இந்த என் மகிமை முழுவதும் மகிமையிலிருந்து இந்த ஜகத்து முழுவதும் உண்டாகிப் பரவியிருக்கிறது. இவ்விதமாகப் பரமாத்மாவி லிருந்து எறும்பு ஈருக என்னைத்தவிற வேறு ஒரு பொருளும்

இல்லை. எவன் இதை உள்ளவாறு அறிகிருனே அவனது ஞானம் விழித்தெழுந்ததை உணர்வாயாக. அவன் என்னை ஆசிரயித்திருக்கும் மகிமையையும், மகிமையை ஆசிரயித்திருக்கும் ஜகத்தையும் ஜகத்தை ஆசிரயித்திருக்கும் பிராணிகளையும் யோகத்தின் மூலமாக ஒன்ருகவே காண்கிருன். இந்த மகா யோகத்தின் மூலமாக அவன் அந்தக்கரணத்துடனும் என்னில் ஒன்றிவிடுகிருன். இதனுல் அவன் கிருதார்த்தனுகிருன்.

ஹே கிரீடி, இந்தவிதமாக அவன் என்னை அபேத திருஷ்ட்டியினுல் பஜிக்கிருன். இந்த பஜனையினுல் அவன் என்னையே அடைகிருன். என்னிடம் அபின்னமாகும் இந்த பக்தியோகத்தினுல் நிச்சயமாக அவனுடைய இதயத்தில் ஒரு குறைவும் கிடையாது. இந்த அப்யாசத்தைச் செய்து செய்து இந்த பக்தி யோகத்தில் வெற்றிகாண்பதற்குமுன் அவனுக்குத் தீங்கு நேரிடுமாகில் ஒருவித நஷ்டமும் அவனுக்கு ஏற்படாது. (இவ் விஷயத்தைப்பற்றி ஆருவது அத்யாயத்தில் விபரமாகக் கூறப்பட்டுள்ளது.) இந்த அபின்னத் தன்மை எவ்விதமாக ஏற்பட்டுள்ளது என்பதை இன்னும் சற்று விவரித்துச் சொல்வேன். (7)

अहं सर्वस्य प्रभवो मत्तः सर्वं प्रवर्तते ।
इति मत्वा भजन्ते मां बुधा भावसमन्विताः ॥ ८ ॥

அஹம் ஸர்வஸ்ய ப்ரபவோ மத்த: ஸர்வம் ப்ரவர்ததே ।
இதி மத்வா பஜந்தே மாம் புதா பாவ ஸமந்விதா: ॥

ஹே பாண்டவா! உலகம் முழுவதும் என்னிடமிருந்தே தோன்றியது. இதன் நிர்வாகமும் என்னுல் செய்யப்படுகிறது. கடலில் அநேக அலைகள் ஜலத்திலிருந்து உண்டாகின்றன. அவைகளின் ஆசிரயமும் வாழ்வும் ஜலத்தைப் பொறுத்து இருக்கின்றன. இவ்விதமாக அலைகள் ஜலத்திலிருந்து வேறில்லை அதே போல் உலகம் என்னைவிட வேறில்லை. இவ்விதமாக எங்கும் நிரம்பியவனுக என்னைக் கண்டு கொண்டு எவன் எங்கு எப்படி வேண்டுமானுலும் பஜிக்கட்டும். அதில் ஆதுரமும் பிரேமையும் நிச்சயமாக நிரம்பி இருக்கும்.

வாயு ஆகாசத்தின் உருவமாக ஆகாசத்திலேயே ஸஞ்சரிப்பதைப் போல் தேச கால வர்த்தமானங்களிலிருந்து என்னை வேறில்லாதவனுகக் கண்டு கொண்டு எவன் என்னை பஜிக்

கின்றுனே. அந்த ஆத்ம ஞானி மூன்றுலகங்களிலும் ஸுகமாக விளையாடிக்கொண்டு நானே இந்த ஜகத் என்பதை மனதில் உறுதி செய்து கொண்டு பார்க்கும் இடங்களையெல்லாம் பக்திக் கண்ணுலேயே பார்க்கிறுன். இவ்விதம் பார்க்கும் இடம் எங்கும் நீக்கமற நிறைந்த என்னைத் காண்பதே பக்தியோகம் எனப்படும்.

**मच्चित्ता मद्गतप्राणा बोधयन्तः परस्परम् ।**
**कथयन्तश्च मां नित्यं तुष्यन्ति च रमन्ति च ॥ ९ ॥**

மச்சித்தா மத்கத ப்ராணு போதயந்த: பரஸ்பரம் ।
கதயந்தஸ்ச மாம் நித்யம் துஷ்யந்தி ச ரமந்தி ச ॥

இந்த பக்தர்கள் மனதில் எனது உருவைத்தரிக்கிறுர்கள். என்னுல் அவர்கள் சந்தோஷம் அடைகிறுர்கள். ஞானமது வருந்தி ஜனனமரணத்தை விலக்குகிறுர்கள். அந்தமயக்கத்தில் அவர்கள் என்னைப்பற்றி ஸம்பாஷித்துக்கொண்டு ஸந்தோஷமாக ஆடுகிறுர்கள். தங்களுக்குள் ஞானத்தைக்கொடுத்து வாங்குகிறுர்கள். இரண்டு தடாகங்கள் பக்கத்துக்குப் பக்கத்தில் இருந்துகொண்டு இரண்டின் அலைகளும் ஒன்றுடன் ஒன்று மோதிக்கொண்டு இருப்பதைப்போல் காணப்படுகிறுர்கள். இதைப்போல் அவர்களுடைய ஆனந்த அலைகள் திரிவேணி ஸங்கமம்போல் ஆகின்றன. ஞானம் ஞானரூபமாகி ஞானத்துக்கே அலங்காரமாகிறது. சூரியன் சூரியனுக்கே ஹாரத்தி எடுப்பதுபோலவும், சந்திரன் சந்திரனை ஆலிங்கனம் செய்துகொள்வதுபோலவும், இரண்டு நதிப்ரவாகங்கள் ஒன்றுடன் ஒன்று மோதுவதுபோலவும் ஆகின்றன.

இப்படியாக அவர்கள் பிரயாகையாகிய புண்யக்ஷேத்ரமாகிறுர்கள். ஸாத்விகபாவம் அலைமோதுகின்றது. சம்வாதமாகிய நாற்சந்தியில் ஸ்தாபிக்கப்பட்ட கணேசமூர்த்தி ஆகிறுர்கள். மகாஸுகமாகிய தேகத்தை தரித்து என்னையடைய ஆவேசத்துடன் கர்ஜிக்கிறுர்கள். குருசிஷ்யர்கள் ஏகாந்தத்தில் எந்த ஏகாக்ஷரமந்திரத்தை ஜபிக்கிறுர்களோ அதை அவர்கள் மூன்று உலகங்களிலும் மேகத்தைப்போல் கர்ஜித்து விளம்பரப் படுத்துகிறுர்கள். கமலபுஷ்பம் விகஸித்ததும் மகரந்தத்தைத் தனக்குள் வைக்காது. ஏழை, பணக்காரர்கள் என்று பாராமல் அது தனது வாசனையைப்பகிர்ந்தளிக்கும் அது போல் அவர்கள் என்னை வர்ணிக்கிறுர்கள். எனது கதையின் ஸந்தோஷத்தில்

கதையையே மறக்கிறார்கள். இதுபோல் அதிகமான பிரேமையினால் இரவு பகல்களை மறக்கிறார்கள் என்னுடைய பூர்ணஸுகத்தைப் பெறுகிறார்கள். (9)

तेषां सततयुक्तानां भजतां प्रीतिपूर्वकम् ।
ददामि बुद्धियोगं तं येन मामुपयान्ति ते ॥ १० ॥

தேஷாம் ஸதத யுக்தாநாம் பஜதாம் ப்ரீதிபூர்வகம் ।
ததாமி புத்தியோகம் தம் யேந மாமுபயாந்தி தே ।

ஹே அர்ஜுனா! அவர்களுக்கு நான் என்ன கொடுக்க வேண்டுமென்று விரும்புகிறேனோ அதை அவர்கள் முன்னதாகவே பெற்றுக்கொள்கிறார்கள். அவர்கள் போகும் மார்க்கத்துக்கு முன்னால் ஸ்வர்கமும் மோக்ஷமும் குறுகிய வழிகளாகின்றன. அவர்கள் வழி ப்ரேமைவழி. அதை அவர்களுக்கு நான் கொடுப்பதாகக்கருது. ஆனால் நானே அவர்கள் அதீனம் தானே. என்வேலை என்னவென்றால் அவர்களுக்கு ஸுகமதிகரிக்கட்டும் காலனுடைய கொடும் நோக்கு அவர்கள்மேல் விழாமல் இருக்கட்டும் விளையாடிக்கொண்டிருக்கும் பிள்ளையைப் ப்ரேமையினால் பார்த்துக்கொண்டு அவனைக்காப்பாற்றுவதற்காக தாயார் அவன் பின்னாலேயே ஓடுகிறாள். அவன் கேட்கும் விளையாட்டுப் பொருட்களை உடனேயே வாங்கி அவன் கையில் கொடுக்கிறாள். அதைப்போல் பக்திமார்க்கத்தை நான் கூறுகிறேன்.

எந்த மார்க்கத்தைப் போஷிப்பதினால் அவர்கள் என்னை ஸுகமாக அடைகிறார்களோ அந்த மார்க்கத்தில் அவர்களைச் செலுத்துவதே எனக்குப் பிடிக்கிறது. பக்தர்கள் என்னை நேசிக்கிறார்கள். அனந்யபாவத்துடன் சிந்திக்கிறார்கள். எனது வீடே பிரேமையின் விளையாட்டு ஸ்தலம் அல்லவா. நான் ஸ்வர்கத்தையும் மோக்ஷத்தையும் உற்பத்தி செய்கிறேன். இரண்டையும் அவர்களுக்கு அதீனமாக்கிவிட்டேன். கடைசியில் லக்ஷ்மி ஸஹிதம் எனது சரீரத்தையே அவர்களுக்கு அர்ப்பணித்துவிட்டேன். அகந்தையில்லாத எந்த ஸுகம் உண்டோ எனது பிரேமிகளுக்கு அதைப்பற்றி அறிவித்து அவர்களைப் பூர்ணமாக்குகிறேன். எவ்வளவு சொல்லுவேன்? என்னையே அழித்து அவர்களை அங்கீகாரம் செய்துகொள்கிறேன். இவைகளெல்லாம் சொல்லிக்கொண்டிருக்கும் விஷயங்களல்ல. (10)

तेषामेवानुकम्पार्थमहमज्ञानजं तमः ।
नाशयाम्यात्मभावस्थो ज्ञानदीपेन भास्वता ॥ ११ ॥

தேஷாமேவாநுகம்பார்த்தமஹமக்ஞாநஜம் தம: ।
நாசயாம்யாத்ம பாவஸ்தோ ஞாந தீபேந பாஸ்வதா ।

அதனால் அவர்கள் பிரேமையினால் என்னை ஆசிரயிக்கிறார்கள். அவர்கள் என்னைத்தவிர மற்றவைகளை எல்லாம் பொய்யாகக் கருதுகிறார்கள். அவர்களுடைய சுத்த தத்வஞானம் கற்பூர தீபம்போல் ஆகிறது. நான் அந்த தீபத்தைப் பிடித்துக்கொண்டு அவர்களுக்கு வழிகாட்டுகிறேன். அக்ஞானமாகிற இருட்டில் தமஸாகிற திருடர் கூட்டத்தை நாசம்செய்து அவர்களுக்கு நித்யஸுகமென்னும் பொருளை மீட்டுக்கொடுக்கிறேன்.

பக்தர்களுக்கு பிரியனான புருஷோத்தமன் இவ்வாறு கூறிய உடன் அர்ஜுனன் நான் மிகவும் திருப்தியுற்றேன் என்ற மனோபாவத்துடன் கூறினான். தாங்கள் ஸம்ஸாரமாகிய மலத்தை போக்கடித்து விட்டீர்கள். நான் ஜனனமரணத்திலிருந்து முக்தியடைந்து விட்டேன். நான் இந்த ஜன்மத்தை இந்த என் கண்களாலேயே கண்டு கொண்டு விட்டேன். நான் பிறந்த பலனை யெய்திவிட்டேன். இன்று எனது ஆயுள் பலன் அடைந்தது. எனது தெய்வீகயோகம் விழித்தெழுந்தது எனது தெய்வமாகிய நீங்கள் கிருபையை வர்ஷித்தீர்கள். தங்களுடைய இந்த வசனத்தினால் எனது உள்ளும் புறமும் உள்ள அந்தகாரம் ஒழிந்தது. தங்களுடைய யதார்த்த ஸ்வரூபத்தை உள்ளபடி கண்டேன். (11)

अर्जुन उवाच —

परं ब्रह्म परं धाम पवित्रं परमं भवान् ।
पुरुषं शाश्वतं दिव्यमादिदेवमजं विभुम् ॥ १२ ॥

அர்ஜுந உவாச:—

பரம் ப்ரஹ்ம பரம் தாம பவித்ரம் பரமம் பவான் ।
புருஷம் சாச்வதம் திவ்யமாதிதேவமஜம் விபும் ॥

ஹே ஜகன்னாத ! தாங்கள் பரப்பிரம்மம். பஞ்சபூதங்களுக்கும் பவித்ரமான விச்ராந்திஸ்தலம். தாங்கள் மூன்று தெய்வங்

களுக்கும் மேலான தெய்வம் 24 தத்வங்களுக்கும் மேலான தத்வம் தாங்கள் மாயாபாவத்துக்கும்மேல் உயர்ந்த திவ்ய புருஷர். தாங்கள் அநாதி ஸித்தர். ஜனன மரணத்தைத் தாண்டியவர். இதை நான் அறிந்துகொண்டேன் காலரூப மான யந்திரத்தைச் சுழற்றுகிறீர்கள். நீங்களே ஜீவகலைக்கு முக்கிய தேவதை. நீங்கள் பிரும்மாண்டத்துக்கு ஆசிரய ஸ்தானம். (12)

आहुस्त्वामृषयः सर्वे देवर्षिर्नारदस्तथा ।
असितो देवलो व्यासः स्वयं चैव ब्रवीषि मे ॥ १३ ॥

ஆஹுஸ்த்வாம் ருஷய: ஸர்வே தேவர்ஷிர் நாரதஸ் ததா ।
அஸிதோ தேவலோ வ்யாஸ: ஸ்வயம் சைவ ப்ரவீஷி மே ॥

ஹே ஜகந்நாத ! இது அநுபவஸித்தமாக எனக்குத் தெரிகிறது. பூர்வகாலத்து ருஷிகள் தங்களை இவ்விதமாக வர்ணித்து இருக்கிறார்கள். அவ்வர்ணனையின் யதார்த்தத் தன்மையை இன்றே உணர்ந்தேன். அதுவும் தங்களுடைய கிருபையால். இதற்கு முன்பு நாரதமுனி எத்தனையோ தடவைகள் வந்து போயுள்ளார். அமிருதமயமான கானத்தினால் தங்களுடைய புகழை வர்ணித்திருக்கிறார். அப்பொழுது இதன் உட்பொருளை நான் உணராமல் வெறும் கீதஸுகத்தை அநுபவித்துக்கொண்டு இருந்தேன். அந்தகர்களின் கிராமத்தில் திடீரென்று சூர்ய வெளிச்சம் ஏற்பட்டால் எப்படியோ அப்படி இருக்கிறது எனக்கு. தேவரிஷி ஆத்மஞானத்தைப் பாடினார். நான் ராகத்தின் மதுரத்தில் ஆழ்ந்து போனேன். ஞானத்தைப்பற்றி அப்பொழுது நான் ஒன்றும் அறிந்துகொள்ளவில்லை.

அஸிதர் தேவலர் இவர்கள் வாயாலும் தங்கள் புகழைக் கேட்டிருக்கிறேன். அப்பொழுது எனது புத்தி விஷயரூபமான விஷத்தால் நனைக்கப்பட்டிருந்தது. விஷய விருக்ஷத்தின் மகிமை எப்படியென்றால் மதுரமும் கசப்பாகவேபடும். கசப்பும் இனிக்கும் மற்றவர்களைப்பற்றிச் சொல்வானேன்? வ்யாஸ பகவானே அடிக்கடி கோவிலுக்கு வந்து தங்களுடைய புகழை வர்ணிப்பார். ஒருவனுக்கு இருட்டில் சிந்தாமணி கிடைத்தால் அதை அறியாமல் உதறித்தள்ளிவிட்டு சூர்யவெளிச்சத்தில்

பார்க்கும்போது அது சிந்தாமணி என்று அறிகிருன். அதுபோல் வியாசருடைய வசனங்கள் இருட்டில் சிந்தாம்மணியைப்போல் எனக்கு இருந்தது. தாங்களே எனக்கு ஸூர்ய பிரகாசம் தாங்களே சிந்தாமணி. இப்பொழுது தங்களுடைய வசனங்களாகிய ஸூர்யபிரகாசத்தினுல் ரிஷிகளால் வர்ணிக்கப்படாத விஷயங்களையும் தெளிவாக அறிகிறேன். (13)

सर्वमेतदृतं मन्ये यन्मां वदसि केशव ।
न हि ते भगवन्व्यक्तिं विदुर्देवा न दानवाः ॥ १४ ॥

*ஸர்வமேதத் ருதம் மன்யே யன் மாம் வதஸி கேசவ* ।
*ந ஹி தே பகவன் வ்யக்திம் விதுர் தேவா ந தாநவா:* ॥

அவர்களுடைய வசனம் ஞானவிதை. என்னுடைய இதயமாகிய பூமியில் அவை ஆழமாகப்பதிந்திருந்தன. இப்பொழுது தங்கள் கிருபையாகிய மழை அதில் நன்ருகப்பொழிந்து பாக்ய ருபமானபலன் கிடைத்திருக்கிறது. வ்யாசர் நாரதர் முதலான ரிஷிகளின் வசனருபமான நதிகளுக்கு நான் இப்பொழுது கடலாய் விட்டேன். இந்த ஜன்மத்தில் நான் என்ன புண்யம செய்து விட்டேன். ஹே ஸத்குரு, தாங்கள் என்னை விட்டுப் பிரியாமல் இருந்தும்கூட ஒரு உபகாரத்தையும் நான் பெற வில்லை. பெரியவர்கள் வாயிலாகத் தங்கள் குணங்களைப்பற்றி நான் கேள்விப்பட்டிருக்கிறேன். தங்கள் கிருபை கிடைக்காத வரைக்கும் அவைகளின் அர்த்தம் எனக்கு விளங்கவில்லை. பாக்யம் அனுகூலமாக இருக்கும்போதுதான் நம்முடைய முயற்சியும் பலனளிக்கின்றன. குருகிருபை ஏற்பட்ட பிறகுதான் படித்ததும் கேட்டதும் நினைவுக்கு வருகின்றன.

தோட்டக்காரன் வருஷம் முழுவதும் தோட்டத்துக்கு நீர் பாய்ச்சுகிருன். உயிரைவிட்டுப் பாடுபடுகிருன். ஆனுல் வஸந்த ருதுவில்தான் அவைகள் புஷ்பித்துப்பலன் அளிக்கின்றன. விஷஜ்வரம் நீங்கியபிறகுதான் மதுரமான வஸ்து நாக்குக்கு இனிக்கிறது. சரீரம் ஆரோக்கியமாக இருந்தால்தான் உணவு ருசிக்கிறது. இந்திரியங்களும் வாக்கும் பிராணனும் இருந்தாலும் சைதன்யம் இல்லாவிட்டால் அவைகள் பிரகாசிக்கிறதில்லை. வேதசாஸ்திரங்களை நன்கு கற்ருலும் யோகாப்யாசம் செய்தாலும் குருகிருபை இருந்தால்தான் அவை பலனளிக்கும்.

இவ்விதமாக அனுபவமாகிற மயக்கத்தில் ஆழ்ந்து அர்ஜுனன் சிரத்தையுடன் ஆனந்த நடனம் புரிந்துகொண்டே மேலும் கூறுவான். கைவல்யபதியே, உமது வார்த்தையைப் புரிந்துகொண்டேன். தேவர் தானவர்கள்கூட தங்களை அறிந்து கொள்ளவில்லையென்பது இப்பொழுதுதான் புரிகிறது. ஒருவன் தங்களுடைய வார்த்தையை மாத்திரம் வைத்துக்கொண்டு தங்களை அறிய முயற்சித்தால் அவன் ஒருபொழுதும் தங்களை அறியான். (14)

**स्वयमेवात्मनात्मानं वेत्थ त्वं पुरुषोत्तम ।**
**भूतभावन भूतेश देवदेव जगत्पते ॥ १५ ॥**

**ஸ்வயமேவாத்மநாத்மாநம் வேத்த த்வம் புருஷோத்தம ।**
**பூதபாவன பூதேச தேவதேவ ஜகத்பதே ॥**

தங்களது மகிமையைத் தாங்களே அறிவீர்கள். பிருதிவியின் கனத்தன்மையைப் பிருதிவியே அறியும். தங்களது ஸர்வ சக்தியைத் தாங்களே அறிவீர்கள். வேதங்களால் அறியும் அறிவுகூட வீணே. ஓடிக்கொண்டிருக்கும்போது மனதை மட்டும் பின்னுக்குவிட்டு ஓடமுடியுமா? காற்றைப்பிடித்துப் பக்கத்தில் வைத்துக்கொள்ள முடியுமா? புஜங்களினால் நீந்தி மாயா சமுத்திரத்தைத் தாண்டமுடியுமா? அதைப்போலவே தங்களுடைய ஞானம். அதை ஒருவராலும் அறியமுடியாது. தங்களைத்தாங்களே அறிவீர்கள். மற்றவர்களுக்கு உபதேசிக்கத் தாங்களே ஸமர்த்தர்.

இப்பொழுது நான் சொல்லவேண்டியதையும் சற்று கேட்க வேண்டுமென்று விரும்புகிறேன். ஹே பிராணிகளின் ஸ்ருஷ்டிகர்த்தாவே, ஸம்ஸாரமாகிய யானைக்கூட்டத்துக்குச் சிங்கமே. தேவதேவர்களுக்கும பூஜ்யமானவனே. ஹே ஜகன்னாயக, தங்கள் மகிமைகளுக்கு முன்னால் தங்கள் பக்கத்தில் நிற்கவும நான் தகுதியுள்ளவன் அல்ல தங்களிடம் விண்ணப்பித்துக்கொள்ள பயமாக இருந்தாலும் வேறுவழி இல்லை. நான்கு பக்கங்களிலும் நதிகளும் ஸமுத்திரமும் பரவி இருந்தாலும் சாதகபக்ஷிக்கு அதனால் ஒரு பிரயோஜனமும் இல்லை. மேகத்திலிருந்து விழும் ஒரு துளியினால்தான் அதன் தாகம் அடங்கும். அதைப்போல் ஸத்குருவே, தாங்களே எனக்கு கதி. (15)

वक्तुमर्हस्यशेषेण दिव्या ह्यात्मविभूतयः ।
याभिर्विभूतिभिर्लोकानिमांस्त्वं व्याप्य तिष्ठसि ॥ १६ ॥

வக்துமர்ஹஸ்யசேஷேண திவ்யா ஹ்யாத்ம விபூதய: I
யாபிர் விபூதிபிர் லோகான் இமாம்ஸ் த்வம் வ்யாப்ய
திஷ்டஸி ||

எல்லாமே தங்களுடைய மகிமைதான். ஆனாலும் சிலசில இடங்களில் தங்கள் திவ்யசக்தி அதிகமாக வ்யாபித்திருக்குமல்லவா? அவைகளின் முக்யமான பெயரைக் கூறுங்கள். (16)

कथं विद्यामहं योगिंस्त्वां सदा परिचिन्तयन् ।
केषु केषु च भावेषु चिन्त्योऽसि भगवन्मया १७ ॥

கதம் வித்யாமஹம் யோகின் த்வாம் ஸதா பரிசிந்தயன் I
கேஷு கேஷு ச பாவேஷு சிந்த்யோஸி பகவன்
மயா ||

நான் தங்களுடைய எந்த ரூபத்தை அறிவேன்? எந்த ரூபத்தை அறிந்து எப்பொழுதும் சிந்தனை செய்வேன்? எல்லாம் தாங்களே என்று நினைத்து தியானம் செய்வது கஷ்டமாக இருக்காதா? ஆதலால் தாங்கள் அப்பொழுது சுருக்கிக்கூறியதை இப்பொழுது விவரித்துக் கூறுங்கள். தங்களுடைய உருவத்தைச் சிந்திப்பதில் எனக்குக் கஷ்டம் இருக்கக்கூடாது. அதைத் தாங்கள் தெளிவாகக்கூறுங்கள். (17)

विस्तरेणात्मनो योगं विभूतिं च जनार्दन ।
भूयः कथय तृप्तिर्हि शृण्वतो नास्ति मेऽमृतम् ॥ १८ ॥

விஸ்தரேணாத்மநோ யோகம் விபூதிம் ச ஜநார்தந I
பூய: கதய த்ருப்திர் ஹி ச்ருண்வதோ நாஸ்தி
மேऽம்ருதம் ||

இவ்விதமாக நான் கேட்கும் தங்களுடைய மகிமைகளை எனக்கு உபதேசியுங்கள். ஹே பூபதி, அடிக்கடி கேட்கிறேனே என்று நினைக்காதீர்கள். இதைத்தாங்கள் மனதால்கூடக் கருதக் கூடாது. அமிருதபானம் பண்ணும்போது போதும்என்றோ திருப்தி என்றோ சொல்லக்கூடாது. அப்படி இருக்கும்போது காலகூட

விஷத்தின் சகோதரனை அமிருதத்தை மரணத்துக்குப் பயந்துகொண்டு தேவர்கள் குடித்துவிட்டபோதிலும் பிரம்மாவின் ஆயுளின் ஒருநாளில் பதினன்கு இந்திரர்கள் அழிகிருர்கள். அமிருதமோ க்ஷீரஸாகத்தின் ரஸம். பதினன்கு இந்திரர்கள் விஷயத்தில் பொய்யாகவன்ருே தீர்ந்தது? அந்த ஆபத்தான வஸ்துவின் மதுரத்தன்மையில் என்ன மகிமை இருக்கிறது?

ஆனல் தங்களுடைய வாக்கோ பரமாமிருதம். இந்த அமிர்தத்தைப்பருக மந்தரமலையை அசைக்கவேண்டாம். க்ஷீர சமுத்திரத்தைக் கலக்கவேண்டாம். இது இயற்கையாகவே அநாதிகாலம்தொட்டு இருக்கிறது. இது பெருகிப்போகாது, அழுகிப்போகாது, உறைந்துவிடாது சுவையோ கந்தமோ கிடையாது நினைத்தவுடனேயே கிடைக்கிறது. இதனுடைய வர்ணனையைக் கேட்டவுடனேயே உலகம் பொய்யென்று தெரிகிறது. வலுக்கட்டாயமாக நமக்கு நித்யத்தன்மையை உணர்த்துகிறது. ஜனன மரண பிரச்னை ஒழிந்துவிடுகிறது. உள்ளும் வெளியும் மஹாஸுகம் விருத்தியாகிறது. தெய்வாதீனத்தினல் அதை ஸேவிக்கிறவர்களுக்கு அது அதனுடைய ஸ்வரூபத்தையே கொடுத்து விடுகிறது. அந்த பரமாமிருதத்தைத் தாங்கள் எனக்கு அளிக்கிறீர்கள்.

தங்களுடைய பெயரோ எனக்கு பிரியமானது. தங்களைப் பிரத்யக்ஷமாகப் பார்க்கவும் செய்கிறேன். தங்களுடைய சேர்க்கையினல் லாபம் அடைந்திருக்கிறேன். தாங்கள் எப்பொழுதும் ஆனந்தத்தை அளித்துக் கொண்டிருக்கிறீர்கள், இந்த ஸுகத்துக்கு ஈடுண்டா? இந்த ஸந்தோஷத்துக்குக் காரணம் என்னல் கூறமுடியாது. ஆனல் இதை மறுபடியும் மறுபடியும் கூறும்படி கேட்டுக்கொள்ளுகிறேன். சூரியன் என்ருவது பழமையாகப் போவானு? அக்னி என்ருவது அபவித்ரமாகுமா? தினம் ஓடுகிற கங்கா ஜலம் அபவித்ரமாகிவிடுமா? தாங்கள் எதை திருவாய் மலர்ந்தருளுகிறீர்களோ, அது நாத பிரும்மத்தைப்போல் என் காதில் ஒலித்துக்கொண்டேயிருக்கிறது. சந்தன மரம்போல வாசனை வீசுகிறது, பார்த்தனுடைய வார்த்தைகளைக் கேட்டு கிருஷ்ணன் மகிழ்ச்சியால் ஆடத்துடங்கினர். 'அர்ஜுனு! இப்பொழுதுதான் பக்தியும் ஞானமும் ஒன்றுசேருகிறது என்று கூறிவிட்டுப் பொங்கிவரும் பிரேமையைக் கட்டுப்படுத்திக்கொண்டு கிருஷ்ணன் கூறுவதைக் கேளுங்கள்,

श्रीभगवानुवाच —

हन्त ते कथयिष्यामि दिव्या ह्यात्मविभूतयः ।
प्राधान्यतः कुरुश्रेष्ठ नास्त्यन्तो विस्तरस्य मे ॥ १९ ॥

ஸ்ரீ பகவானுவாச :—

ஹந்த தே கதயிஷ்யாமி திவ்யா ஹ்யாத்ம விபூதய: ।
ப்ராதான்யத: குருச்ரேஷ்ட நாஸ்த்யந்தோ
விஸ்தரஸ்ய மே ॥

இதைக் கூறும்போது அவர் தாம் பிரும்மதேவனுக்கும் பிதா என்பதை மறந்துவிட்டார். அர்ஜுனனைத் தட்டிக்கொடுத்து ஸபாஷ் பாண்டுஸுதா! என்று கூறினார். அர்ஜுனனை அப்பா என்று அழைத்தார். இதில் ஆச்சர்யம் என்ன இருக்கிறது? சரீரத்தினால் அவர் நந்தபாபாவின் பிள்ளையல்லவா! பிரேமை யின் மிகுதியினால் கூறும் வார்த்தைகள் இவைகள். ஹே ஸுபத்ராபதி! என்னுடைய மகிமைகள் எண்ணிக்கைக்கு அடங் காதது. நானே எனது சரீரத்திலுள்ள மயிற்கால்களை எண்ண முடியுமா? அதேபோல் என்னுடைய மகிமைகளையும் என்னால் எண்ண முடியாது. நான் எப்படி இருக்கிறேன், எங்கெல்லாம் இருக்கிறேன் என்பது கணக்கிலடங்காது. அதனால் அவைகளில் முக்யமானவைகளை மாத்திரம் கூறுகிறேன் கேள். அவைகளை அறிந்தாலே என்னுடைய மகிமைகளை முழுதும் அறியலாம். ஒரு விதையை அறிந்துகொண்டால் அதனின்று வரும் விருக்ஷத் தையும் அறிந்துகொண்டதுபோல. ஒரு தோட்டத்தை விலைக்கு வாங்கிக்கொண்டால் அதிலிருக்கும் புஷ்பங்களும் பழங்களும் நம்முடையவைகள்தானே. அதுபோல் என்னுடைய மகிமைகளை அறிவதினால் இவ்வுலக முழுவதும் அறிந்தவனாகிறாய். (19)

अहमात्मा गुडाकेश सर्वभूताशयस्थितः ।
अहमादिश्च मध्यं च भूतानामन्त एव च ॥ २० ॥

அஹமாத்மா குடாகேச ஸர்வ பூதாசய ஸ்தித: ।
அஹமாதிஸ்ச மத்யம் ச பூதாநாமந்த ஏவ ச ॥

ஹே தநுர்தரா கேள்! நான் ஒவ்வொரு பிராணிக்கும் ஆத் மாவாக இருக்கிறேன். ஒவ்வொரு பிராணிகளின் அந்தக்

கரணத்திலும் நான் இருக்கிறேன். வெளியிலும் அவர்களை அரவணைத்துக் கொண்டிருக்கிறேன். ஆதியும் அந்தமும் மத்தியும் நானே. மேகங்களுக்கு மேலேயும் கீழேயும் உள்ளும் வெளியும் ஆகாசமே இருக்கிறது. ஆகாசத்திலேயே அது உத்பத்தியாகிறது. ஆகாசத்திலேயே லயமடைகிறது. லயமானவுடன் ஆகாசரூபமாகவே காண்கிறது. அதுபோல் பிராணிகளுடைய உத்பத்தி ஸ்திதி லயம் மூன்றும் நானேதான் இவ்விதமாக எனது விஸ்தாரத்தையும் எனது வியாபகத் தன்மையையும் என்னுடைய விபூதியோகத்தினால் அறிந்துகொள். ஹ்ருதயத்தைக் காதுகளாக ஆக்கிக்கொண்டு அடிக்கடிகேள். (20)

आदित्यानामहं विष्णुर्ज्योतिषां रविरंशुमान् ।
मरीचिर्मरुतामस्मि नक्षत्राणामहं शशी ॥ २१ ॥

ஆதித்யாநாமஹம் விஷ்ணுர் ஜ்யோதிஷாம் ரவிரம்சுமான் ।
மரீசிர் மருதாமஸ்மி நக்ஷத்ராணாமஹம் சசீ ॥

ஹே அர்ஜுனா ! பனிரெண்டு ஆதித்யர்களில் நான் விஷ்ணு பிரகாசமான பொருள்களில் நான் சூரியன். மருத்கணங்களில் நான் மரீசி. ஆகாசத்தில் நக்ஷத்ரங்களுக்கு மத்தியில் நான் சந்திரன். (21)

वेदानां सामवेदोऽस्मि देवानामस्मि वासवः ।
इन्द्रियाणां मनश्चास्मि भूतानामस्मि चेतना ॥ २२ ॥

வேதாநாம் ஸாமவேதோஸ்மி தேவாநாமஸ்மி வாஸவ: ।
இந்த்ரியாணாம் மநஸ்சாஸ்மி பூதாநாமஸ்மி சேதநா ॥

வேதங்களில் நான் ஸாமவேதம். தேவர்களில் மஹேந்த்ரன். இந்திரியங்களில் பதினோராவது இந்திரியமான மனமே நான். பிராணிகளின் ஜீவகலை என்று கூறும் உயிரே நான். (22)

रुद्राणां शंकरश्चास्मि वित्तेशो यक्षरक्षसाम् ।
वसूनां पावकश्चास्मि मेरुः शिखरिणामहम् ॥ २३ ॥

ருத்ராணாம் சங்கரஸ்சாஸ்மி வித்தேசோ யக்ஷ ரக்ஷஸாம் ।
வஸூநாம் பாவகஸ்சாஸ்மி மேரு: சிகரிணாமஹம் ॥

ருத்ரர்களில் மன்மதனை ஸம்ஹரித்த சங்கரன் நான். யக்ஷ ராக்ஷஸகணங்களில் சங்கரமித்ரனை குபேரன் நானே. எட்டு வஸுக்களில் அக்னி நானே. உயர்ந்த சிகரங்களுள்ள பர்வதங் களில் மேருகிரி நான். (23)

**पुरोधसां च मुख्यं मां विद्धि पार्थ बृहस्पतिम् ।**
**सेनानीनामहं स्कन्दः सरसामस्मि सागरः ॥ २४ ॥**

**महर्षीणां भृगुरहं गिरामस्म्येकमक्षरम् ।**
**यज्ञानां जपयज्ञोऽस्मि स्थावराणां हिमालयः ॥ २५ ॥**

*புரோதஸாம் ச முக்யம் மாம் வித்தி பார்த்த ப்ருஹஸ்பதிம் ।*
*ஸேநாநீநாமஹம் ஸ்கந்த: ஸரஸாமஸ்மி ஸாகர: ॥*

*மஹர்ஷீணாம் ப்ருகுரஹம் கிராமஸ்ம்யேகமக்ஷரம் ।*
*யஜ்ஞாநாம் ஜபயக்ஞோஸ்மி ஸ்தாவராணாம் ஹிமாலய:॥*

இந்திரனுக்குக் குருவும் ஸர்வக்ஞத்வத்தின் பீடாதிபதியும் புரோகிதர்களில் சிரேஷ்டருமான பிருஹஸ்பதி நானே. மூன்று லோகங்களின் ஸேனைக்கு அதிபதியான கார்த்திகேயனும் நானே. உலகிலுள்ள நதிகள் தடாகங்கள் இவைகளுக்கு நாயகனான ஸமுத்ரம் நானே. தபோராசியின் இருப்பிடமான ரிஷிகளுக்குள் பிருகு நானே. ஸம்பூர்ண வாக்குக் கலைகளில் எங்கு ஸத்யம் பிரகாசிக்கிறதோ அந்த ஸத்யம் நானே. இவ் வுலகில் செய்யப்படும் யக்ஞங்களில் கர்மத்யாகத்தின் மூலமாக ஓங்காரத்தை முன்னிட்டுச் செய்யப்படும் ஜபயக்ஞமும் நானே. நாமரூபமான ஜபயக்ஞம் சிரேஷ்டமானது. இதில் ஸ்நானம் செய்யவேண்டும் கிரியைசெய்யவேண்டும் என்ற இடையூறுகள் கிடையாது நாமத்தினால் தர்மமும் அதர்மமும் பவித்ரமாகிறது. வேதம் நாமத்தைப் பரம்பிரும்மம் என்று கூறுகிறது. உலகில் பர்வதங்களில் சிரேஷ்டமான ஹிமாலயம் நானே என்று கூறுவார். (24–25)

**अश्वत्थः सर्ववृक्षाणां देवर्षीणां च नारदः ।**
**गन्धर्वाणां चित्ररथः सिद्धानां कपिलो मुनिः ॥ २६ ॥**

उच्चैःश्रवसमश्वानां विद्धि माममृतोद्भवम् ।
ऐरावतं गजेन्द्राणां नराणां च नराधिपम् ॥ २७ ॥

அச்வத்த: ஸர்வ வ்ருக்ஷாணும் தேவர்ஷீணும் ச நாரத:
கந்தர்வாணும் சித்ரரத: ஸித்தாநாம் கபிலோ முநி: ॥

உச்சை:ச்ரவஸமச்வாநாம் வித்தி மாமம்ருதோத்பவம் ।
ஐராவதம் கஜேந்த்ராணும் நராணும் ச நராதிபம் ॥

கற்பகவிருக்ஷம் பாரிஜாதம் சந்தானம் இவைகள் தங்கள் தங்கள் குணங்களினல் பிரஸித்திபெற்றிருந்த போதிலும் விருக்ஷங்களில் நான் அசுவத்த விருக்ஷமாகவே இருக்கிறேன். தேவரிஷிகளில் நாரதர் நான். கந்தர்வர்களில் சித்ரரதனும் நானே. ஸித்தர்களில் கபிலாசார்யரும் குதிரைகளில் உச்சை சிரவஸ் என்ற இந்திரனின் குதிரையும் நானே. அரசர்களின் பெருமையைக் கணக்கிடும் யானைக்கூட்டங்களில் க்ஷீரஸாகரத்தைக்கடையும்போது அதிலிருந்து வந்த ஐராவதமும் நானே. மனிதர்களில் பிரஜைகளை அன்பாகப்பாலிக்கும் அரசன் நானே.

आयुधानामहं वज्रं धेनूनामस्मि कामधुक् ।
प्रजनश्चास्मि कन्दर्पः सर्पाणामस्मि वासुकिः ॥ २८ ॥

अनन्तश्चास्मि नागानां वरुणो यादसामहम् ।
पितॄणामर्यमा चास्मि यमः संयमतामहम् ॥ २९ ॥

ஆயுதாநாமஹம் வஜ்ரம் தேநூநாமஸ்மி காமதுக் ।
ப்ரஜநஸ்சாஸ்மி கந்தர்ப: ஸர்பாணுமஸ்மி வாஸுகி: ॥

அநந்தஸ்சாஸ்மி நாகாநாம் வருணே யாதஸாமஹம் ।
பித்ருணுமர்யமா சாஸ்மி யம: ஸம்யமதாமஹம் ॥

நூறுயக்ஞங்கள் பண்ணி கிருதார்த்தனுகி ஒருவன் இந்திரன் ஆகிருன். அவன் கையில் வஜ்ராயுதம் இருக்கிறது ஆயுதங்களில் சிறந்த வஜ்ராயுதம் நானே. பசுக்களில் காமதேனுவும் ஜன்மதாதாக்களில் மன்மதனும் நானே. ஸர்ப்பகுலத்தில் வாஸுகியும் நாகர்களின் தலைவனை அனந்தனும் நானே. ஜலத்துக்கு அதிபதியான வருணன் நானே. பிதுர்லோகத்தின்

தலைவனான அர்யமா நானே. ஜகத்திலுள்ள மாந்தர்களின் சுபாசுபகர்மங்களை எழுதுபவரும் பிராணிகளின் மனதிலுள்ள எண்ணங்களை எளிதில் அறியக்கூடியவரும் கர்மத்தை அனுசரித்து அவர்களுக்குப் போகத்தைக் கொடுப்பவரும் ஆன யமராஜர் நானே. கர்மங்களுக்கு ஸாக்ஷியான தர்மம் நானே. (28–29)

प्रह्लादश्चास्मि दैत्यानां कालः कलयतामहम् ।
मृगाणां च मृगेन्द्रोऽहं वैनतेयश्च पक्षिणाम् ॥ ३० ॥

ப்ரஹ்லாதஸ்சாஸ்மி தைத்யாநாம் கால: கலயதா
மஹம் ׀
ம்ருகாணும் ச ம்ருகேந்த்ரோஹம் வைநதேயஸ்ச
பக்ஷிணும் ׀׀

தைத்யர்களில் பிரஹ்லாதனும் பிராணிகளை அபஹரித்துச் செல்லும் மஹாகாலனும் நானே. கொடிய மிருகங்களில் நான் சிங்கமாக இருக்கிறேன். பக்ஷிகளில் கருடன் நான். (30)

पवनः पवतामस्मि रामः शस्त्रभृतामहम् ।
झषाणां मकरश्चास्मि स्रोतसामस्मि जाह्नवी ॥ ३१ ॥

பவந: பவதாமஸ்மி ராம: சஸ்த்ரப்ருதாமஹம் ׀
ஜஷாணும் மகரஸ்சாஸ்மி ஸ்ரோதஸாமஸ்மி ஜாஹ்நவீ ׀׀

இந்த விஸ்தாரமான உலகில் ஒரு நாழிப்பொழுதுகூட தங்காதவனும் ஒருக்ஷணத்தில் ஏழுஸமுத்திரங்களையும் சுற்றிச் சுற்றி வருகிறவனும் மிக வேகமுள்ளவனுமான வாயுவும் நானே அஸ்த்ரசஸ்திரம் தரித்தவர்களில் ராமன் நானே. திரேதா யுகத்தில் பூவுலகில் சங்கடங்கள் அதிகம் தோன்றியபொழுது அவதரித்து ஒருபொழுதும் உடையாத ஒரே வில்லைத்தாங்கி விஜய லக்ஷ்மியை அடைய ஒரேமார்க்கத்தை வகுத்த ராமன் நானே. கீர்த்தியாகிய பர்வதத்தில் ஏறிக்கொண்டு ஆகாசம் எதி ரொலிக்கும்படி ஜயகோஷம் செய்துகொண்டு பிராணிகளை ஆட்டிவைத்துக்கொண்டு இருந்த ராவணனுடைய வரிசையான தலைகளை பலியிட்டவன் நானே. தேவர்களுடைய புகழுக்குப் பாத்திரமானவன் நான். தர்மத்தை ஜீர்ணோத்தாரணம் செய்த வனும் சூர்யவம்சத்துக்கு சூர்யனுமான ராமனே நான். கடலில் வாழும் ஜந்துக்களில் மகரம் நான். நதிகளுக்குள் கங்கை நான்.

இந்த கங்கையை ஜஹ்னுமகரிஷி குடித்துவிட்டுக் காதினுல் வெளி யிட்டார். அதனுல் இதற்கு ஜாஹ்னவீ என்று ஒருபெயர். இது மூன்று உலகங்களிலும் ஓடும்நதி. (31)

सर्गाणामादिरन्तश्च मध्यं चैवाहमर्जुन ।
अध्यात्मविद्या विद्यानां वादः प्रवदतामहम् ।। ३२ ।।

अक्षराणामकारोऽस्मि द्वन्द्वः सामासिकस्य च ।
अहमेवाक्षयः कालो धाताहं विश्वतोमुखः ।। ३३ ।।

ஸர்காணுமாதிரந்தஸ்ச மத்யம் சைவாஹமர்ஜுந ।
அத்யாத்ம வித்யா வித்யாநாம் வாத: ப்ரவததாமஹம் ॥

அக்ஷராணுமகாரோஸ்மி த்வந்த்வ: ஸாமாஸிகஸ்ய ச ।
அஹமேவாக்ஷய: கால: தாதாஹம் விச்வதோமுக: ॥

ஸம்பூர்ண ஆகாசத்திலுள்ள நக்ஷத்ரங்களை எல்லாம் எண்ண வேண்டும் என்ற எண்ணம் மனதில் எழுந்தால் முடியுமா? பூமியிலிருக்கும் பரமாணுக்களை எண்ண முடியுமா? பூகோளத்தை அக்குளில் இடுக்கிக்கொள்ள முடியுமா? என்னுடைய மகிமைகளை அறியவேண்டுமென்றுல் என்னை முதலாவது அறியவேண்டும். கிளைபுஷ்பம் காய் பழம் முதலியவைகளோடுகூட ஒரு விருக்ஷத்தை அறியவேண்டுமென்றுல் அதை வேருடன் பெயர்த்துக்கையில் வைத்துக்கொள்ள வேண்டும் அதேபோல் எனது விபூதி மகிமைகளை அறியவேண்டுமென்றுல் எனது சுத்தஸ்வரூபத்தைத் தெரிந்து கொள்ள வேண்டும்.

இந்த சிருஷ்டியின் ஆதிமத்யம் அந்தமும் நானே. அதாவது வஸ்த்ரத்தில் நூல்பரவி இருப்பதுபோல். அப்படி அறிந்து கொண்டால் விபூதியையும் மகிமையையும் அறிந்துகொள்ள என்ன சிரமம்? ஆனுல் அதை அறிய உனக்கு இன்னும் பக்குவம் வரவில்லை. வித்தைகளில் அத்யாத்ம வித்தை நான் பேசுபவர்களில் வாதம் செய்பவன் நான். எல்லா சாஸ்த்ரங் களையும் ஒரே வாக்யத்தினுல் வெல்பவன் நான். அதை அளவிற்குள் சுருக்கினுமானுல் விரிக்கத்தோன்றும் கேட்பவர் களின் புத்தி தீக்ஷண்யமாகும். அதனுல் கேட்பவர்களின் மதுரமான வாக்யும் தாரையாக பிரவர்த்திக்கிறது.

இந்தவிதமாக ஸ்ரீ கோவிந்தன் கூறி இன்னும் கூறுவார். அக்ஷரங்களில் அகாரம் நானே. ஸம்ஸ்க்ருதபாஷையில் உள்ள ஸமாஸங்களில் துவந்த்வஸமாஸம் நானே. கொசுவிலிருந்து பிரும்மதேவன்வரை எல்லாவற்றையும் விழுங்குபவன் நானே. பூமியிலுள்ள சகலபதார்த்தங்களும் உருகுகிறது. பிரளய காலத்து ஸமுத்திரமும் உலருகிறது. காற்றைத்துளிகூட மிச்சமில்லாமல் விழுங்குகிறது. ஆகாசம் வயிற்றுக்குள் அடங்கி விடுகிறது. அப்படிப்பட்ட அமாரகாலபுருஷனும் நானே. பிறகு சிருஷ்டியை உத்பத்தி செய்பவனும் நானே. (32–33)

**मृत्युः सर्वहरश्चाहमुद्भवश्च भविष्यताम् ।**
**कीर्तिः श्रीर्वाक्च नारीणां स्मृतिर्मेधा धृतिः क्षमा ॥ ३४ ॥**

*ம்ருத்யு: ஸர்வ ஹரஸ்சாஹமுத்பவஸ்ச பவிஷ்யதாம் ।*
*கீர்த்தி: ச்ரீர் வாக் ச நாரீணாம் ஸ்ம்ருதிர் மேதா த்ருதி: க்ஷமா ॥*

உத்பத்திசெய்த பிராணிகளை ரக்ஷிப்பவனும் நானே. நானே அவைகளின் ஜீவன். கடைசியில் அவர்களை ஸம்ஹரிப்பவனும் நானே. நானே அவைகளின் மிருத்தியுதேவன் இதுவரை கூறி வந்தது ஆண்பால் வகையைச் சேர்ந்ததாகும். பெண்பால் வகையிலுள்ள என்னுடைய ஏழு மகிமைகளையும் கேள். தினம் தினம் நவநவமாக தோற்றமளிக்கும் கீர்த்தி நானே. உதாரத் தன்மையுடைய ஸம்பத்தும் நானே. நியாயத்தின் ஸிம்ஹா ஸனத்தில் வீற்றிருந்து விவேகத்தினால் தீர்ப்புச்செய்யும் நீதியும் நானே. பொருள்களைப்பார்த்தவுடன் நினைவு என்று ஒன்று வருகிறதல்லவா அந்த நினைவும் நானே. ஆத்மதத்வத்தை தீக்ஷண்யமாக அறிந்து கொள்ளும் புத்தியும் நானே. தைரியமும் நானே. பொறுமையும் நானே. ஸகிப்புத்தன்மையும் நானே. இவைகள் பெண் இனத்தைச்சேர்ந்த எனது சக்திகள்.

**बृहत्साम तथा साम्नां गायत्री छन्दसामहम् ।**
**मासानां मार्गशीर्षोऽहमृतूनां कुसुमाकरः ॥ ३५ ॥**

*ப்ருஹத் ஸாம ததா ஸாம்நாம் காயத்ரீ சந்தஸாமஹம் ।*
*மாஸாநாம் மார்கசீர்ஷோऽஹம் ருதூநாம் குஸுமாகர: ॥*

ரமாபதி பின்னும் கூறுவர். ஹே பிரியோத்தம, ஸாமாக்களில் பிருஹத் என்னும் ஸாம நான். சந்தஸ்களில் காயத்ரி

நான். மாதங்களில் மார்கழியும் ருதுக்களில் புஷ்பக் களஞ்சியமான வஸந்தமும் நானே. (35)

द्यूतं छलयतामस्मि तेजस्तेजस्विनामहम् ।
जयोऽस्मि व्यवसायोऽस्मि सत्त्वं सत्त्ववतामहम् ॥ ३६ ॥

*த்யூதம் சலயதாமஸ்மி தேஜஸ் தேஜஸ்விநாமஹம் ।*
*ஜயோஸ்மி வ்யவஸாயோஸ்மி ஸத்வம்*
*ஸத்வவதாமஹம் ॥*

கபடநாடகமாடுபவர்களில் சூதாடி நானே. இது சட்ட ரீதியாக ஒப்புக்கொள்ளப்பட்ட திருட்டு தேஜஸைக்கொடுக்கும் பதார்த்தங்களில் உள்ள தேஜஸூம் நானே. கர்ம பலன்களில் வெற்றி நானே. வியாபாரிகளின் மத்தியில் நியாயம் நானே. ஸாத்விகர்களின் ஸத்யம் நான். (36)

वृष्णीनां वासुदेवोऽस्मि पाण्डवानां धनञ्जयः ।
मुनीनामप्यहं व्यासः कवीनामुशना कविः ॥ ३७ ॥

*வ்ருஷ்ணீநாம் வாஸுதேவோஸ்மி பாண்டவாநாம்*
*தநஞ்ஜய: ।*
*முநீநாமப்யஹம் வ்யாஸ: கவீநாமுசநா கவி: ॥*

யாதவர்களில் ச்ரீமந்தன் என்னும் பெயருள்ளவன் நான் அவன் தேவகி வஸூதேவர்களுக்குப் பிறந்தான். கோபியர்களுக்காக கோகுலம் சென்றான். பூதனையிடம் ஸ்தன்யபானம் செய்து அவளைக்கொன்றான். பாலப்பருவத்தின் மொட்டு விரியுமுன்பேயே பூமியை துஷ்டர்கள் இல்லாமல் ஆக்கினான். கையில் பர்வதத்தை ஏந்தி இந்திரனின் மகிமையை அளந்தான். காளிந்தி நதியின் இதயத்தைத் தபித்துக் கொண்டிருக்கும் காளிங்கனைக் கொன்றான். காட்டுத்தீயால் எரியும் கோகுலத்தை ரக்ஷித்தான் தானேகன்றுகளும் பசுக்களும் ஆகி பிரும்மாவைப் பயித்யமாக்கினான் பாலபருவத்திலேயே கம்ஸன் என்னும் பலவானைக்கொன்றான், நீ இவ்வகளை எல்லாம் கேட்டிருக்கிறாய். அதனால் திரும்பவும் விவரிக்க வேண்டாம். தாத்பர்யம் என்னவென்றால் யாதவர்களின் மூங்களமே நான், அது மட்டுமா?

ஸோமவம்சத்தில் பாண்டவர்களில் அர்ஜுனன் நான். அதனுலேயே நமது பிரேமையும் பாசமும் வளர்ந்து வருகின்றன. நீ செய்யத்தகாத கார்யத்தைச் செய்தாலும் எனக்கு கோபமே வருவதில்லை. ஸந்யாசி வேஷத்துடன் எனது சகோதரியை அபகரித்துச் சென்ருய். அதனுல் எனக்குக் கோபம் ஏற்பட்டதா? ஏனென்ருல் நீயும் நானும் ஒரே உருவம்தானே. என்னைக்கேள் உனது முன்னேரான வியாசதேவரும் நானே. கவிகளில் மகாதீரனை சுக்ராசார்யனும் நானே. (37)

**दण्डो दमयतामस्मि नीतिरस्मि जीगीषताम् ।**
**मौनं चैवास्मि गुह्यानां ज्ञानं ज्ञानवतामहम् ॥ ३८ ॥**

*தண்டோ தமயதாமஸ்மி நீதிரஸ்மி ஜிகீஷதாம் ।*
*மௌநம் சைவாஸ்மி குஹ்யாநாம் ஞாநம்*
*ஞாநவதாமஹம் ॥*

அடக்கி ஆள்பவர்களின் தண்டனை நானே. எறும்பிலிருந்து பிரும்மா பர்யந்தம் உசிதமான ஸமயங்களில் அவர்களுக்குத் தண்டனை கொடுக்கிறேன் ஸாரத்தையும் அஸாரத்தையும் அலசி தர்மஞானத்தை அனுசரித்த சாஸ்த்ரங்களில் நீதிசாஸ்த்ரம் நானே. ரகஸ்யாதிரகஸ்ய விஷயங்களில் மௌனம் நானே. அதனுலேயே பேசாதவன் முன் பிரும்மதேவனும் அக்ஞானியாகிருன். ஞானிகளுடைய ஞானம் நான். (38)

**यच्चापि सर्वभूतानां बीजं तदहमर्जुन ।**
**न तदस्ति विना यत्स्यान्मया भूतं चराचरम् ॥ ३९ ॥**

**नान्तोऽस्ति मम दिव्यानां विभूतीनां परंतप ।**
**एष तूद्देशतः प्रोक्तो विभूतेर्विस्तरो मया ॥ ४० ॥**

*யச்சாபி ஸர்வ பூதாநாம் பீஜம் ததஹமர்ஜுந ।*
*ந ததஸ்தி விநா யத் ஸ்யான் மயா பூதம் சராசரம் ॥*

*நாந்தோஸ்தி மம திவ்யாநாம் விபூதீநாம் பரந்தப ।*
*ஏஷ தூத்தேசதः ப்ரோக்தோ விபூதேர்*
*விஸ்தரோ மயா ॥*

மழைதாரையை எண்ணலாம் பூமியில் இருக்கும் புற்பூண்டுகளை எண்ணலாம். சமுத்திரத்தில் அலைகளை எண்ணலாம். என் மகிமைகளை எண்ணமுடியாது. இருந்தாலும் உனக்காக எனது எழுபத்தைந்து மகிமைகளை வர்ணித்ததும் விருதாவாகத்தான் எனக்குப்படுகிறது. நீ எதுவரை கேட்டாயோ அதுவரை நன்றே. இதுவரையில் உண்டான என்னுடைய மர்மத்தைக் கூறிவிட்டேன். சராசரத்தில் முளைக்கும் எல்லா சேதன அசேதனப் பொருள்களுக்கும் விதை நானே. இவைகளில் பெரியது சிறியது என்ற வித்யாசம் கிடையாது. உயர்வு தாழ்வு இல்லை எல்லாம் எனது ஸ்வரூபமே. (39–40)

**यद्यद्विभूतिमत्सत्त्वं श्रीमदूर्जितमेव वा ।**
**तत्तदेवावगच्छ त्वं मम तेजोंऽशसंभवम् ॥ ४१ ॥**

யத் யத் விபூதிமத் ஸத்வம் ச்ரீமதூர்ஜிதமேவ வா ।
தத்ததேவாவகச்ச த்வம் மம தேஜோம்ச ஸம்பவம் ॥

எங்கு செல்வமும் அத்துடன் தயையும்கூடி இருக்கிறதோ அவ்விடத்தில் நான் வஸிக்கிறேன் என்று அறி. அதாவது அவைகள் எனது அம்சமே. (41)

**अथवा बहुनैतेन किं ज्ञातेन तवार्जुन ।**
**विष्टभ्याहमिदं कृत्स्नमेकांशेन स्थितो जगत् ॥ ४२ ॥**

அதவா பஹுநைதேந கிம் ஞாதேந தவார்ஜுந ।
விஷ்டப்யாஹமிதம் க்ருத்ஸ்நமேகாம்சேந ஸ்திதோ
ஜகத் ॥

ஆகாசத்தில் ஸூர்யபிம்பம் ஒன்று. அதன் பிரகாசம் மூன்று உலகங்களிலும் பரவியிருக்கிறது. அதுபோல் எங்கும் எனது ஆக்ஞையாளுகிறது. காமதேனுவுடன்கூட அதன் ஸாமக்ரிகளைக் கட்டிக்கொண்டு போகவேண்டுமா? அதுவே எங்கு சென்றாலும் எப்பொருளைக்கேட்டாலும் தரும் அல்லவா? அதுபோல் இவ்வுலகில் உள்ள எல்லா ஐசுவர்யங்களும் என்னால் நிரப்பப் பட்டிருக்கின்றன. என்னை அறிவதன் லக்ஷணம் இதுதான். அதாவது ஜகத் எவருடைய ஆக்ஞைக்குத் தலைவணங்குகிறதோ அவரை எனது அவதாரமாக எண்ணு. இது ஸாதாரணமானது இது விசேஷமானது என்று எண்ணுவது மகாபாவம். மத்தியமம்

உத்தமம் என்ற பேதமும் கிடையாது. வீணுக உன் புத்தியைப் பேதங்களால் கலக்கப்படுத்திக்கொள்ளாதே நெய்யை யாராவது கடைவார்களா? அமிர்தத்தைக்காய்ச்சித் திரட்டிப்பால் செய்வார்களா? வாயுவுக்கு இடம் வலம் உண்டா? ஸூர்யனுக்கு வயிறும் முதுகும் உண்டா? அதுபோல் எனது ஸ்வரூபத்தை ஸாமான்யமென்றும் விசேஷமென்றும் பேதப்படுத்தி அறிய முடியாது. வெவ்வேருன மகிமைகளினுல் என்னை வேறுபடுத்த முடியாது. என் விபூதிகளை தனித்தனியாக முழுவதும் கூறுவதற்கு என்னுலும் முடியாது. அதிகமாகச் சொல்வானேன்! இவ்விதம் சுருக்கமாக அறிந்துகொள். பரந்த இந்த உலகம் முழுவதும் என் ஒரு அம்சம்தான். அதனுல் வேற்றுமை இல்லாமல் எல்லாவற்றையும் ஸமமாக ஒன்ருக எண்ணி என்னை பஜனம்செய்.

இவ்விதமாக ஞானரூபமான வனத்தின் வசந்தமும் விரக்தர்கள் அடைந்து இளைப்பாறும் இடமுமான ஸ்ரீ கிருஷ்ணர் கூறிஞர். அப்பொழுது அர்ஜுனன் கூறுவான். நீங்கள் கூறியது அநுசிதம் பேதம் என்று ஒருபொருள் இருக்கிறதென்றும், அதனுல் நாம் வேறு என்றும் நாம் ஏன் கொள்ளவேண்டும்? சூர்யன் ஆந்தையிடம் ஹே ஆந்தையே நீ இருட்டை விரட்டு பிறகு நான் வருகிறேன் என்று கூறமுடியுமா? தங்களை விசாரிக்காதவன் என்று கூறுவது அதிகப்ரசங்கித்தனம் அல்லவா? தங்கள் பெயரை ஒருதரம் சொன்னுலும் காதால் கேட்டாலும் இதயத்திலிருந்து பேதம் என்பது நிச்சயமாக ஓடிவிடும். தாங்கள் என் கையில் நீரை வார்த்துப் பரபிரும்மத்தையல்லவா எனக்கு அளித்துவிட்டீர்கள். அதில் யார் எங்கு பேதத்தைக்காணமுடியும்? சந்திர பிம்பத்தின் இதயத்தில் பிரவேசித்தபிறகு உஷ்ணத்தைக் காணமுடியுமா? ஹே சார்ங்கதரா! தாங்களே மேலானவர்.

இவ்விதம் கூறிய அர்ஜுனனை ஸ்ரீ கிருஷ்ணர் ஸந்தோஷ மிகுதியினுல் ஆலிங்கனம் செய்துகொண்டார். நான் உன்னிடம் விபூதிமகிமைகளைப் பேதப்படுத்தி வர்ணித்துக் கூறினுலும் நீ அபேத புத்தியினுலேயே கிரகித்துக்கொண்டாய் அல்லவா? இதை அறியவேதான் நான் இவ்விதம் கூறினேன். இப்பொழுது எனது மகிமைகளை உள்ளது உள்ளபடி அறிந்துகொண்டாய் என்று அறிந்தேன்.

இதற்கு அர்ஜுனன் கூறினுன் அறிந்தேனே இல்லையோ. ஆனுல் நீரே ஜகத் என்பதை அறிந்துகொண்டேன்.

ஸஞ்சயன் கூறுவார் அர்ஜுனனுக்கு இதை அறிய யோக்யதை இல்லாவிட்டால் வேறுயாருக்கு உண்டு? இதைக் கேட்டுவிட்டு திருதராஷ்டிரர் மௌனமாக இருந்தார். இதனுல் ஸஞ்சயன் மிகவும் துக்கித்து மனதிற்குள்ளேயே கூறிக் கொண்டான். இந்த விபூதி மகிமைகளை இந்த அரசன் இவ்வாறு என்று அறியவில்லை என்ருல் இதில் ஆச்சர்யம் என்ன இருக்கிறது? இவர் கண் குருடாக இருப்பதுபோல் அந்தக் கரணமும் குருடாக இருக்கிறது என்று எண்ணினுன் நிற்க.

இவ்விதமாக அர்ஜுனன் தனது கல்யாணகுணங்களை விருத்தி செய்து கொண்டான். இப்பொழுது அர்ஜுனனுக்கு ஒன்று கேட்கவேண்டுமென்ற ஆசை தனக்கு இருப்பதாக தோன்றியது. இவ்விதமாக இவரே எல்லாம் என்று அறிந்தோமே அந்தக்கரணத்தில் அறிந்த விருத்திக்கு வெளியில் உருவம் கொடுத்து ஊனக்கண்களால் பார்க்க முடியுமா? அவன் அறிவில் இந்தப்பேராசை எழுந்தது. இந்த ஊனக்கண்களால் இந்த உருவத்தைப்பார்த்து வெளியில் ஆலிங்கனம் செய்துகொள்ள முடியுமா? அவன் பாக்யவான்தான். அதனுலேயே இப்படிப் பட்ட பேராசை ஏற்பட்டது. அவன் இன்று கற்பக விருக்ஷத்தின் ஒருகிளையாக ஆகிவிட்டானல்லவா? அதனுல் அதில் காயில்லாத வெறும் மலட்டுப்பூ பூக்குமா? அவன் வாயில் வரும் வார்த்தைகளுக்கெல்லாம் கிருஷ்ணன் உண்மை உருக்கொடுத்துக் காட்டுகிருர் அல்லவா பிரஹ்லாதனுக்காக விஷமாகக்கூட ஆனுர் அல்லவா? அந்தப்பரமாத்மா அர்ஜுனனுக்கு ஸகுணமாக வெளிப்பட்டிருக்கிருர். இதை ஞானதேவர் கூறுகிருர். அர்ஜுனன் கிருஷ்ணருடைய விசுவ ரூபத்தை அறிய எவ்விதம் முயற்சித்தான் என்கிற கதையை அடுத்த அத்யாயத்தில் கூறுவோம் என்கிருர். (42)

பகவத்கீதை பத்தாவது அத்யாயம் ஸம்பூர்ணம்.



# பதினொன்றாவது அத்யாயம்

இதற்குப்பிறகு இந்த அத்யாயத்தில் சாந்தம், அத்புதம் என்ற இரண்டு ரஸங்களையும் பற்றி வர்ணித்திருக்கிறது. இதில் பார்த்தன் பகவானின் விசுவரூபத்தை தரிசிக்கிறுன். சாந்த ரஸம் என்னும் வீட்டில் அத்புதரஸம் என்னும் அலங்காரப் பூச்சுடன் அந்நிய ரஸங்களின் கலவையும் மனோகரமாக அமைந்துள்ளன. மணமக்களின் விவாகத்தின்போது ஸம்பந்திகள் ஆடை ஆபரணங்களினுல் அலங்கரித்துக் கொள்ளுகிறுர்கள். அதுபோல இந்த பாஷை என்னும் பல்லக்கில் ஊர்வலம் வரும் போது எல்லாரஸங்களும் அணிகலன்களுடன் விளங்குகின்றன. ஆனுல் இதில் சாந்தரஸமும் அத்புதரஸமும் மிகவும் உத்தமமாக அமைந்துள்ளன.

விஷ்ணுவும் சங்கரரும் பிரேமையுடன் ஆலிங்கனம் செய்து கொள்வதுபோல் இது அமைந்திருக்கிறது. அமாவாஸையன்று சந்திர, ஸூர்யர்கள் ஒன்று சேருவதுபோல் இந்த அத்யாயத்தில் இரண்டு ரஸங்களும் ஒன்றியிருக்கின்றன. கங்கை, யமுனை போல் சாந்த அத்புதரஸங்களும் சரஸ்வதியைப்போல் அந்நிய ரஸங்களும் கலந்த பிரயாகை க்ஷேத்ரமே இந்தப் பதினோராவது அத்யாயம் இதைப் படிப்பதினுல் ஜகத்து பவித்ரமாகிறது. கீதாரூபமான ஸரஸ்வதியையே மூன்ருவது நதியாகவும் கூறலாம். மற்ற இரண்டு ரஸங்களும் இதையே பின்னிப் பிணைந்திருக்கின்றன. இதனுல் இங்கு நமக்குத் திரிவேணி கிடைத்திருக்கிறது.

எனது ஸத்குரு இந்தத்தீர்த்தத்தில் சிரவண ரூபமாக பிரவேசித்து இதைப்பின்னும் தூய்மையடையச் செய்திருக்கிறுர். இந்நதியில் பண்பாடு என்னும் கடினமான கரையைச்சீர்படுத்தி சப்தங்களாகிய படிக்கட்டுகளை அமைத்திருக்கிறுர். இதனுல் யாவரும் சுலபமாக த்ரிவேணியில் ஸ்னுனம் செய்யலாம். விசுவாகாரமான வேணீமாதவரை இங்கு தரிசிக்கலாம். ஸம்ஸாரமாகிய திலதர்பணத்தை இங்கு அற்பணிக்கலாம். ரஸ பாவங்கள் இங்கு மூர்த்தீகரித்த வஸந்தருதுவாகப் பரிணமித்திருக்கிறது. சிரவணஸுகமாகிய ஸாம்ராஜ்யம் கிடைத்திருக்கிறது. இந்த உவமைகள் மிகவும் அல்பமே. அஸ்பஷ்டரூபமான மோக்ஷஸுகமும் இதில் கலந்திருக்கின்றது.

இந்தப்பதினேருவது அத்யாயமே ஸ்ரீ கிருஷ்ணனுடைய விச்ராந்திஸ்தலமாகும். அர்ஜுனன் அரசர்களில் பாக்யவான். அதனல் அவன் இங்கு இளைப்பாற வந்துசேருகிருன். அர்ஜுனன் மாத்திரம்தான் வந்து சேர்ந்திருக்கிருன் என்று ஏன் கூறவேண்டும்? இக்கலியில் பாக்யம் செய்தவர்கள் அனைவரும் இதில் வந்துசேரலாம். ஏனென்ருல் கீதை இதில் பாஷா ரூபத்தில் வெளிவந்துள்ளது. ஸஜ்ஜனங்கள் இதைச் சற்றுக் கவனிக்கவேண்டும். ஸன்மகாத்மாக்களாகிற உங்களுக்கு எதிரில் நான் பிடிவாதம் செய்வது முறையல்ல. ஆனல் நீங்கள் பிரேமையினல் என்னைப் பாலகனைக் கருதுங்கள் கிளிப்பிள்ளைக்கு நீங்கள்தானே கற்றுக்கொடுக்கிறீர்கள். அதுபேசும்போது நீங்கள்தானே ஸந்தோஷப்படுகிறீர்கள்? குழந்தை செய்யும் சேஷ்டைகளைப் பார்த்து மாதா சந்தோஷப்படுவதில்லையா? அதனல் ஸாதுக்களே! நான் என்னவெல்லாம் கூறுகிறேனே அவைகள் எல்லாம் தாங்கள் கற்பித்ததுதான். அதனல் தங்களுடைய வார்த்தைகளையே என்மூலமாகக் கேட்கிறீர்கள். இந்த வித்யா ரூபமான மதுரமான விருக்ஷத்தை தாங்களே நட்டிருக்கிறீர்கள். அவதானம் என்னும் அமிர்தத்தைப் பாய்ச்சி இதை வளர்த்திருக்கிறீர்கள் ரஸபாவங்களாகிய புஷ்பத்தினல் இது பூத்துக்குலுங்குகிறது. அநேக அர்த்த பேதங்களாகிய பழங்கள் இதில் பழுத்துத் தொங்குகின்றன. தங்களால் இது ஜகத்துக்கே ஹிதகரமாக இருக்கிறது.

இந்த வார்த்தைகளைக் கேட்ட ஸாது மகாத்மாக்கள் மெத்த ஸந்தோஷமடைந்தார்கள். சபாஷ்! சபாஷ்!! ஞானதேவா! எங்களுக்கு மிகவும் திருப்தியாயிற்று என்று கூறினர்கள். இப்பொழுது அர்ஜுனன் என்ன கூறினன்? அதை முதலில் கூறு என்ருர்கள். அப்பொழுது நிவிருத்திதாஸரான ஞானேசுவரர் கூறுகிருர். கிருஷ்ணார்ஜுன ஸம்வாதத்தை நான் அல்பமநிதன் எப்படிக் கூறமுடியும்? தாங்களே என் நாக்கிலிருந்து கூறுவிக்கிறீர்கள். காட்டிலுள்ள இலைகளைத் தின்னும் வானரங்கள் லங்கேசுவரனை ராவணனைத் தோல்வியடையச் செய்யவில்லையா? தனியாக அர்ஜுனன் பதினேரு அக்ஷௌகிணிகளையும் ஜயிக்கவில்லையா? பகவானுக ஸமர்த்தன் ஆக்கினல் எல்லோரும் ஸமர்த்தர்கள்தான். அதுபோல நீங்கள் என் மூலமாக கீதாவிளக்கம் செய்விக்கிறீர்கள். இப்பொழுது கேளுங்கள்.

வைகுண்டபதி கிருஷ்ணனுடைய முககமலத்திலிருந்து கீதை அமிருதமாக வெளி வந்ததைப் பருகுங்கள். கீதா கிரந்தம் தன்

நிகரற்றது. வேதங்களே போற்றும் ஸ்ரீ கிருஷ்ணனே பிரவசன கர்த்தா. அதனுடைய மகிமையை நான் என்னவென்று சொல்ல! சங்கரருடைய புத்தியாலும் கீதையின் ஆழத்தை அளக்கமுடியாது. அதனால் ஜீவர்களாகிய நாம் இதை பாவ பக்தியுடன் வந்தனம் செய்வதே மேல். இப்பொழுது விசுவரூப தரிசனத்தைக் காணவேண்டி அர்ஜுனன் ஸம்வாதத்தை எப்படித் தொடங்குகிறான் என்று கேளுங்கள். ஸமஸ்த உலகும் ஈசுவரன் என்னும் அநுபவஸித்தமான நம்பிக்கை அவனுக்கு ஏற்பட்டுவிட்டது. ஆனால் இப்பொழுது அதை அவன் ஊனக் கண்களால் பார்க்க விரும்பினான். இதைத் தேவ தேவனிடம் எப்படிக் கூறுவது? ஏனென்றால் விசுவரூபமென்பது மிகவும் ரகஸ்யமானதல்லவா? அவரிடம் எப்படிக் கேட்பது? ஒரு பக்தனும் இதுவரை இதைப்பற்றிக் கேட்டதில்லையே, எனக்குக் காண்பியுங்கள் என்று எப்படிக் கூறுவது?

நான் அவருக்கு உயிர்த்தோழன்தான். ஆனால் லக்ஷ்மீ தேவியைவிடவா நான் பிரியமானவன்? ஆனால் அவள்கூட இவ் விஷயத்தைக்கேட்க பயப்படுவாள். நான் இவருக்கு எவ்வளவோ ஸேவை செய்திருக்கிறேன். ஆனால் கருடனைவிடவா? ஆனால் அவன்கூட இவ்விஷயத்தைப்பற்றிக் கேட்டதில்லையே! ஸனகாதிகளைவிட நான் இவருக்குப் பிரியமானவனா என்ன? அவர்களுக்குக்கூட இந்தப்பைத்தியக்கார எண்ணம் தோன்றவில்லையே! அல்லது கோகுலவாஸிகளைவிடவா நான் பிரியமானவன்? பாலப்பருவத்திலிருந்து அவர்கள் மத்தியில் வளர்ந்தவர் இவர்- அவர்களிடமிருந்தும்கூட இதை மறைத்து வைத்திருக்கிறார். ஒருவளுடைய கர்ப்பத்தில் வாசத்தை ஸகித்தார். அவளிடமும் இதை ரகஸியமாக வைத்திருந்தார். இதுவரை ஒருவருக்கும் காண்பித்ததில்லை. மிகவும் ரகஸ்யமாக அவர் அந்தக்கரணத்தில் ஒளித்து வைத்துக்கொண்டிருந்ததை நான் எப்படிக்கேட்பது? கேட்காவிட்டால் விசுவரூபத்தைக் காணமுடியாது. இந்த ஜன்மமும் வியர்த்தம்தான். அதனால் கேட்டே விடுகிறேனே! அவர் இச்சைப்படி செய்யட்டும்.

இப்படியாக அர்ஜுனன் துணிவை வரவழைத்துக் கொண்டான். மிகுந்த பிரேமையுடன் அவன் கேட்டவிதம் எப்படி இருந்ததென்றால் அவனுடைய இரண்டொரு வார்த்தையிலேயே விசுவரூபத்தைத் திறந்து திறந்து காட்டிவிட்டார் பகவான், படுத்திருக்கும் தாய்ப்பசு தன்கன்றைக் கண்டவுடன்

படபடவென்று எழுந்திருக்கிறது. கன்று மடியில் வாயைவைத்த உடன் பால் சுரக்காமல் இருக்குமா? பாண்டவர்களுக்கு துன்பம் வந்தவுடன் கிருஷ்ணன் வனத்தில் அவர்களை ரக்ஷிக்க ஓட வில்லையா? இப்படி இருக்க அர்ஜுனன் கேள்வியும் கேட்டு விட்டான். அவரால் பேசாமல் இருக்க முடியுமா? அவரே பிரேமைஸ்வரூபம். பிரேமை மதுவை அருந்தியவர். அர்ஜுனன் அவருக்கு மயக்கத்தையும் ஊட்டினன். இப்படி இருக்கும்போது பேதம் அங்கு எப்படி இருக்க முடியும்? அர்ஜுனன் கேட்டவுடனேயே அவர் தன் முயற்சியில்லாமலேயே விசுவரூபி ஆகிவிட்டார் என்று கொள்ளலாம். இதுவே முதல் தடவை இதன் வர்ணனையைக் கேளுங்கள்.

अर्जुन उवाच —

मदनुग्रहाय परमं गुह्यमध्यात्मसंज्ञितम् ।
यत्त्वयोक्तं वचस्तेन मोहोऽयं विगतो मम ॥ १ ॥

அர்ஜுந உவாச :—

மதநுக்ரஹாய பரமம் குஹ்யமத்யாத்மஸம்ஞிதம் 1
யத்த்வயோக்தம் வசஸ் தேந மோஹோயம்
விகதோ மம ||

பார்த்தன் ஸ்ரீ கிருஷ்ணரிடம் கூறுவான். ஹே கிருபாநிதே தாங்கள் வாக்குக்கெட்டாத பொருளை வெளிப்படுத்தினீர்கள். மகா பூதங்கள் பிரும்மத்தினிடம் லயமடையும்போது மகத்தத்வம் முதலியவைகளின் ஆடம்பரங்கள் அழியும்போது தாங்கள் எந்த உருவத்தில் இருக்கிறீர்கள்? கடைசியில் தங்களுடைய விச்ராம ஸ்தானம்தான் எது? ஒரு லோபி தனத்தைப் பாதுகாப்பதுபோல் எதைத் தங்களுடைய அந்தரங்கத்தில் இதுவரை பாதுகாத்து வந்தீர்களோ, வேதங்களிடமிருந்தும் மறைத்து வைத்திருந்தீர்களோ அந்த அந்தரங்கத்தை என் முன்னல் திறந்து காட்டி விட்டீர்கள். இந்த அத்யாத்மதத்வத்தைக் காணவே சங்கரர் தனது ஸகலத்தையும் துறந்தார் அல்லவா! அந்த வஸ்துவைத் தாங்கள் ஒரே அடியாக எனக்குக் கொடுத்துவிட்டீர்கள். நான் தங்களிடமிருந்து என்னை வேருக எண்ணிக்கொண்டிருந்தேன். இப்பொழுது அபின்னமாகக் காண்கிறேன். மகா மோகமாகிற வெள்ளப் பெருக்கில் தலைவரை முழுகிக்கிடக்கிற என்னைப் பார்த்துவிட்டு ஹே ஹரி! நீங்களல்லவா என்னை வெளியில்

இழுத்துவிட்டீர்கள். உங்களைத் தவிர உலகில் வேறு ஒரு பொருள் இருக்கவா செய்கிறது? என்னுடைய கர்மம் இதுவரை என்னை வேறாக எண்ணிக்கொண்டிருந்தேன்.

நான் உலகில் அர்ஜுனன் என்ற ஒருவன் என்று அபிமானம் கொண்டிருந்தேன். இந்தக் கௌரவர்கள் எனது உறவினர் என்று எண்ணியிருந்தேன். ஐயோ! இவர்களைக் கொன்றால் எவ்வளவு துக்கப்படுவேன் என்று வீண் பிரமை கொண்டிருந்தேன். ஹே பிரபு! தாங்கள் என்னை இந்த கெட்ட கனவிலிருந்து விழிப்படையச் செய்தீர்கள். அதுமட்டுமா ஹே லக்ஷ்மீபதி! மாயாஜாலமான கந்தர்வநகரில் குடிகொண்டிருந்த நான் தண்ணீர் குடிக்கும் இச்சையினால் கானல் நீரை நோக்கி அலைந்துகொண்டிருந்தேன். பாம்பு துணியால் ஆனது என்று அறியாமல் அதைக் கண்டு பயந்து ஓடினேன். இப்படி பயத்தினால் அடிக்கடி செத்துக்கொண்டிருந்த எனக்கு தைரியமாகிய ஜீவதானம் அருளினீர்கள்.

தன்நிழலை மற்றொரு சிங்கம் என்று நினைத்துக் கிணற்றில் விழவிருந்த சிங்கத்தைத் தடுப்பதுபோல் என்னைத்தடுத்தருளினீர்கள் இல்லாவிட்டால் கேளுங்கள் ஏழுசமுத்திரங்களும் ஒன்றுகூடினாலும் இந்த உலகம் முழுவதும் அதில் முழுகி விட்டாலும் ஆகாயம் இடிந்து விழுந்தாலும் நான் இந்த உறவினர்களுடன் யுத்தம் செய்யமாட்டேன் என்று கூறினேன் அல்லவா? இப்படி அகங்காரம் மிஞ்சிப்போய் நான் ஆக்ரகமாகிய ஜலத்தில் தத்தளித்துக் கொண்டிருந்தேன். தாங்கள் அருகில் இருந்தீர்களோ பிழைத்தேனோ, இல்லாவிட்டால் யார் என்னைக்கைதூக்கி விடுவார்கள்? இருப்பு என்பதே இல்லாத இந்த மாயஉலகில் நான்தான் ஸ்திரம் என்று எண்ணிக் கொண்டிருந்தேன். இப்படி வெறிபிடித்திருந்த என்னைத் தாங்கள் ரக்ஷித்தீர்கள்.

முன்பு என் ஸ்தூலதேகத்தை அரக்குமாளிகையிலிருந்து ரக்ஷித்தீர்கள். அப்பொழுது உடலோடு தியங்கி மயங்கிக் கொண்டிருந்தேன். ஆனால் இப்பொழுது எனது அறிவே அழியும் தறுவாயில் இருந்ததல்லவா? துராக்ரகரூபியான ஹிரண்யாக்ஷன் எனது புத்திரூபமான பூமியைச்சுருட்டிக்கொண்டு மோகமாகிற கடலில் மூழ்கிவிட்டான். வராகரூபியான தாங்களே என்னைத் தனது ஸாமர்த்யத்தினால் ரக்ஷித்தீர்கள். இதைப்போல்

இன்னும் எத்தனை உபகாரம் செய்தருளியிருக்கிறீர்கள்? அதை இந்த ஒரே நாக்கால் வர்ணிக்கமுடியுமா? தாங்கள் எனது பஞ்ச பிராணனையும் மீட்டருளினீர்கள். எனது மாயை அழிந்தது. தங்களுடைய கீர்த்தி விளங்கிற்று. ஆனந்த ஸரோவரத்தில் மலரும் கமலம்போன்ற தங்கள் கண்களுக்கு ஸந்தோஷமாகிய கோவிலைக்கட்டுவேன். இனி எனக்கேது மோஹம்? வடவா அனலத்தை கானல் நீரைப்பொழிந்து அணைக்க முடியுமா? தங்கள் கிருபையாகிற கிண்ணத்தில் பிரும்ம ரஸமாகிய மதுவை நான் அருந்துகிறேன். இதனால் என்மோகம் அழிந்துவிட்டது என்பதில் என்ன ஆச்சர்யம்? (1)

**भवाप्ययौ हि भूतानां श्रुतौ विस्तरशो मया ।**
**त्वत्तः कमलपत्राक्ष माहात्म्यमपि चाव्ययम् ॥ २ ॥**

*பவாப்யயௌ ஹி பூதாநாம் ச்ருதௌ விஸ்தரசோ மயா ।*
*த்வத்த: கமல பத்ராக்ஷ மாஹாத்ம்யமபி சாவ்யயம் ॥*

ஹே கமலக்கண்ணா, கோடி சூர்ய ப்ரகாசா, தங்களுடைய விளக்கத்தை நான் கருத்துடன் கேட்டேன். தாங்கள் கூறினீர்கள். எதிலிருந்து இந்த பிராணிகள் உற்பத்தியாகிறதென்றும் எதில் லயமாகிறதென்றும் அதற்குக் காரணம் பிரகிருதிதான் என்றும் கூறினீர்கள். பிரகிருதியைப்பற்றி நன்றாக வர்ணித்தீர்கள். இந்தப் புருஷனையும் சுட்டிக் காண்பித்தீர்கள். அந்தப் புருஷனுக்கே வேதங்கள் வஸ்திரமாக இருக்கின்றன. சப்தஸமூகங்கள் அதனால் விருத்தியடைகின்றன. வாழ்வு ஒளிர்கிறது. தர்மமாகிற ரத்னம் அதிலிருந்து பிறந்தது. இத்தனைக்கும் காரணம் அவைகள் தங்கள் தேஜோமயமான சரணத்தை ஆசிரயமாக அடைந்ததினால்தான். தங்கள் மகிமை அளவிடமுடியாதது. மார்க்கம் அநேகம் அடையவேண்டிய இடம் ஒன்றே. ஆத்மானுபவமும் ஒன்றே அதை அடையவேண்டிய மார்க்கம் அனந்தம். இவ்விதமாகத் தாங்கள் எனக்குக் கூறி அருளினீர்கள்.

ஆகாயத்திலிருந்து மேகங்கள் விலகும்போது சூர்ய மண்டலம் காணப்படுகிறது. குளத்துப் பாசியைக் கையால் விலக்கினால் தெளிந்த நீர் காணப்படுகிறது. சுற்றியிருந்த பாம்பை விலக்கியதும் சந்தன மரம் காணப்படுகிறது. பூதம் விலகியதும் புதையல் கைக்குக்கிட்டுகிறது. பிரகிருதியாகிய திரை இதுவரை

மூடியிருந்தது அதைத் தாங்கள் விலக்கிவிட்டு எனது புத்தியாகிய கன்னிகையை பிரும்மரூபமான படுக்கையில் படுக்கவைத்தீர்கள். இதுவிஷயங்கள் எல்லாம் நன்ருக அறிந்துகொண்டேன். ஆனுல் இப்பொழுது புதிதாக ஒரு ஆசை பிறந்திருக்கிறது. ஸங்கோசவசத்திஞல் அதை இப்பொழுது தங்களிடம் கேட்கா விட்டால் பிறகு யாரிடம் அதைக்கேட்பது? தங்களைத்தவிர எனக்கு வேறுயார் இருக்கிருர்கள்? ஜலத்தில் வாழும் ஜந்துக்கள் ஜலத்தை சுமையாகக்கருதிஞல், பாலகன் மாதாவிடம் பால் குடிக்க மறுத்தால் அவைகளுக்கு வேறுகதியேது? அதஞல் ஸங்கோசப்படுவதில் பிரயோஜனமில்லை என்று துணிந்து விட்டேன். மனதில் தோன்றியதை கூறிவிடுகிறேன் என்ருன் பார்த்தன். கிருஷ்ணன் புன்சிரிப்புடன் தடுத்தார் இருக்கட்டும் புகழ்மாலைபோதும். அது என்ன இச்சை அதைக்கூறு முதலில் என்ருர். (2)

**एवमेतद्यथात्थ त्वमात्मानं परमेश्वर ।**
**द्रष्टुमिच्छामि ते रूपमैश्वरं पुरुषोत्तम ॥ ३ ॥**

ஏவமேதத் யதாத்த த்வமாத்மாநம் பரமேச்வர ।
த்ரஷ்டுமிச்சாமி தே ரூபமைச்வரம் புருஷோத்தம ॥

அப்பொழுது கிரீடி கூறுவான். தங்களுடைய அறிவுரையால் சமாதானம் அடைந்தேன். இப்பொழுது யாருடைய ஸங்கல்ப் பத்திஞல் இந்த யோகபரம்பரை உத்பத்தியாகி லயமடை கின்றதோ, எந்த ஸ்தானத்தைத் தாங்கள் நான் என்று கூறு கிறீர்களோ அந்த மூலஸ்வரூபம் எது? தாங்கள் எந்த இடத்திலிருந்து இரண்டு கைகளுடனும், சிலஸமயம் நான்கு கைகளுடனும் தேவகார்யத்தை வ்யாஜமாக வைத்துக்கொண்டு அவதாரம் எடுத்து வருகிறீர்கள்? நாடகத்தில் வேஷமிடுபவர் களைப்போல் சேஷசாயியாகவும் மத்ஸ்யம் கூர்மம் முதலியலீலா வேஷத்துடனும் விளையாடிவிட்டுப் பிறகு எங்கு அதை மறைத்து விடுகிறீர்கள்?

உபநிஷத்துகள் எதைப்பாடுகிறதோ, எதை யோகிகள் ஹ்ருதயத்தில் பார்க்கிருர்களோ ஸனகாதிகள் எதை ஆலிங்கனம் செய்துகொள்ளுகிருர்களோ இதுவரை எதைக்காதிஞல் மாத் திரம்கேட்டு வந்தேனே அந்த விசுவரூபத்தைப்பார்க்க வேண்டு மென்ற ஆசை அதிகமாக இருக்கிறது. தேவா! என்னை ஸங்

கோசத்திலிருந்து விடுவித்து என் விருப்பத்தைக் கேட்டீர்கள் அல்லவா? அதுவே எனது ஆசையை வளர்க்கிறது. என் மனதில் இந்த அபிலாஷை வளர்ந்து கற்பனைக் கண்ணில் உங்களுடைய ஸ்வரூபத்தை நிறுத்துகிறது.' (3)

मन्यसे यदि तच्छक्यं मया द्रष्टुमिति प्रभो ।
योगेश्वर ततो मे त्वं दर्शयात्मानमव्ययम् ॥ ४ ॥

*மன்யஸே யதி தத் சக்யம் மயா த்ரஷ்டுமிதி ப்ரபோ ।*
*யோகேச்வர ததோ மே த்வம் தர்சயாத்மாநமவ்யயம் ॥*

ஹே யோகேச்வரா! இதில் மற்றொரு விஷயம் தங்களுடைய ஸ்வரூபத்தைப்பார்க்க எனக்கு யோக்யதை இருக்கிறதோ இல்லையோ அது எனக்குத்தெரியாது. ஏன் தெரியாது என்று தாங்கள் கேட்டீர்களானால் ரோகி தன் வியாதியைப்பற்றி அறிந்துகொள்கிறனா? ஒரு ஆபத்தில் சிக்கியவன் தன் யோக்யதையை உணர்ந்து கொள்கிறனா? அதிகதாகம் உள்ளவன் ஸமுத்ரஜலமும் போதாது என்று எண்ணவில்லையா! அதுபோல் ஒரு உத்வேகத்தினால் தூண்டப்பட்டநான் மரியாதை கட்டுப்பாடு இவைகளை மீறி இருக்கிறேன். தாய்தானே குழந்தையின் தகுதியை அறிவாள்? தாங்கள்தான் எனது தகுதியை அறிவீர்கள். அறிந்து விசுவரூபத்தைக் காட்டுங்கள். இல்லாவிட்டால் அத்தரிசனத்திற்கு நீ யோக்யதை உடையவன் அல்ல என்று கூறிவிடுங்கள் செவிடன் காதில் பஞ்சமஸ்வரம் பாடுவதும் வீண்தான்.

ஒரு சாதகபக்ஷி தாகத்தால் தவிக்கிறது. அதற்காகப் பெய்யும்மழை ஸகலஜகத்துக்கும் தானல்லவா? மழை பெய்யத் தான் செய்யும் பாறைகளில் விழுந்து வீணகத்தான் செய்யும். சகோரபக்ஷி சந்திர அமுதைப்பருகுகிறது. அந்நியர்கள் அதை அடைவதற்குச்சபதம் செய்தமாதிரித் தடுக்கப்பட்டிருக்கிறார்கள் கண்கள் இல்லாதவனுக்குப் பிரகாசம் வீணே. தாங்கள் நிச்சயமாக விஸ்வரூபத்தைக் காண்பிப்பீர்கள் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது. ஏன் என்றால் தாங்கள் ஞானிகளுக்கும் முட்டாள்களுக்கும் சமமானவரே. தங்களுடைய உதாரத் தன்மை எனக்குத்தெரியும். கொடுக்கும்போது தகுதியை எதிர் பார்க்கமாட்டீர்கள். தங்களுடைய உத்தமமான கைவல்யப் பதவியை சத்துருக்களுக்கும் அளிப்பீர்கள். மோக்ஷம் என்பது

மிகவும் கஷ்டப்பட்டு அடையவேண்டிய ஒன்று. அந்த மோக்ஷமே தங்களுக்கு ஸேவை செய்கிறது. தூதனைப்போல் தாங்கள் எங்கு அனுப்புகிறீர்களோ அங்கெல்லாம் செல்கிறது.

பூதனை ஸ்தனத்தில் விஷத்தை நிரப்பிக்கொண்டு தங்களைக்கொல்ல வந்தாள். அவளை ஸனகாதிகளைப்போல நினைத்து அவளுக்கு ஸாயுஜ்யபதவியைக் கொடுத்தீர்கள். ராஜஸூய யக்ஞதத்தின்போது ஆயிரக்கணக்கான ஸதஸ்யர்களுக்கு முன்னால் சிசுபாலன் தங்களை எப்படி அவமானப்படுத்தினான்? அக்கொடியவனுக்கும்கூடத் தாங்கள் தங்கள் பதவியை அளித்தீர்கள். உத்தானபாதரின் மகன் துருவப்பதவிக்கு ஆசைப்பட்டா தங்களிடம் வந்தான்! அந்தக் குழந்தை பாவம் தன் தகப்பனார் மடியில் உட்காரவேண்டுமென்று கேட்கத்தானே வந்தது. ஆனால் அவனுக்குத் தாங்கள் ஸூர்ய, சந்திரர்களைவிட மேலான பதவியை அளித்தீர்கள். ஹே தாத, புத்திரனைக் கூப்பிட்டு அஜாமிளனுக்கு முக்தியளித்தீர்கள். கோபத்தால் தங்களை உதைத்த முனிவரின் பதசின்னத்தைப் பதக்கம்போல் மார்பில் தரித்தீர்கள். சங்கசூடனென்னும் தங்களுடைய வைரியின் ஞாபகச்சின்னமாகப் பாஞ்ச ஜன்யத்தையும் தரித்தீர்கள். இவ்விதம் அபகாரம் செய்தவர்களுக்கும் உபகாரம் செய்தீர்கள்.

பலிசக்ரவர்த்தி தங்களுக்குத் தானமளித்தான். அவனுடைய வாசல் காப்போனாகப் பணிபுரிந்தீர்கள் இந்தக் கணிகை ஒருவள் இருக்கிறாளே. இவள் தங்களைப்பற்றி அறிந்தவளும் அல்ல. தங்களைப் பூஜிக்கவும் இல்லை. ஆனால் கேவலம் குதூகலவசத்தால் கிளிக்குத் தங்கள் பெயரை கற்பித்தாள். அவளுக்கும் வைகுண்டபதவியளித்தீர்கள். இது போல் ஏதோ ஒருசாக்கை வைத்துக்கொண்டு எல்லோருக்கும் ஸாயுஜ்யபதவி அளிக்கிறீர்கள். எனக்கு மட்டும் தாங்கள் வேறு விதம் செய்வீர்களா? நினைத்ததெல்லாம் கறக்கக்கூடிய காமதேனுவின் கன்றுமாத்திரம் பசித்திருக்குமா? அதனால் எனது விண்ணப்பத்தைத் தாங்கள் பூர்த்தி செய்யவேண்டும். ஆனால் அதற்கு முன்னால் விசுவரூபத்தைக்காணும் தகுதியை எனக்கு அளியுங்கள். இந்த ஊனக்கண்களுக்கு அந்த யோக்யதை ஸித்திக்கட்டும்.

சுபத்ராபதி இப்படி விண்ணப்பித்துக் கொண்டு வாயை மூடிக்கொண்டான். இதைக்கேட்டுவிட்டு ஷட்குண சக்ரவர்த்தி

யாகிய கிருஷ்ணனால் பேசாமல் இருக்க முடியவில்லை. அது தயையென்னும் அமிருதத்தால் நிரம்பிய மேகம் அல்லவா? அர்ஜுனனோ அடுத்துவந்த மழைக்காலம். ஸ்ரீ கிருஷ்ணன் கோகிலம், பார்த்தன் வசந்தம். பூர்ணசந்திரன் அர்ஜுனன், க்ஷீரஸாகரம் கிருஷ்ணன். க்ஷீரஸாகரம் சந்திரனைக்கண்டு கொந்தளிக்காதா? ஏற்கெனவே உத்ஸாகியான அவருக்கு உத்ஸாஹம் இருமடங்காகப் பெருகியது. எனவே மேககர்ஜனையைப் போல் கூறத்தொடங்கினார். பார்—பார்—பார்த்தா எனது விசுவ ரூபத்தைப்பார்.

அர்ஜுனன் பாவம் ஒரு விசுவரூபத்தைத்தான் பார்க்க ஆசைகொண்டான். அவர் எல்லாவற்றையும் விசுவரூபமாக்கி விட்டார். யாசகர்களின் இச்சையைவிட ஆயிரமடங்கு அதிகம் கொடுக்கும் தாதாவல்லவா அவர். ஆதிசேஷனின் கண்களுக்கும் மறைந்திருந்ததும் வேதத்தைக்கூட வஞ்சித்ததும் ஹ்ருதயத்திலுள்ள லக்ஷ்மியைக்கூட ஏமாற்றியதுமான விசுவ ரூபத்தை விதவிதமாக அநேகபிரகாரமாக பாக்யக்கடலான அர்ஜுனனுக்குக் காட்டத் தயாரானார். விழித்துக்கொண்டே கனவுகாண்பது போலவும் அவனே கனவில் எல்லாம் தானாக இருப்பதுபோலவும் ஸ்ரீ கிருஷ்ணன் தானே அகிலபிரும்மாண்டங்களாகவும் ஆனார். அர்ஜுனனின் ஞானக்ககண்ணை மூடியிருந்த திரையை ஒரேயடியாக விலக்கினார் தனது சகலசெல்வங்களையும் அவன் பொருட்டு வாரி வாரி இறைத்தார். இந்த ஸந்தோஷத்தில் அர்ஜுனனால் இதைப்பார்க்கமுடியுமா, முடியாதா என்ற எண்ணமே அவருக்கு மறந்துவிட்டது. பிரேமையினால் தழுதழுத்த குரலில் கூறத்தொடங்கினார், (4)

**श्रीभगवानुवाच —**

> पश्य मे पार्थ रूपाणि शतशोऽथ सहस्रशः ।
> नानाविधानि दिव्यानि नानावर्णाकृतीनि च ॥ ५ ॥

ஸ்ரீ பகவானுவாச :—

*பச்ய மே பார்த்த ரூபாணி சதசோऽத ஸஹஸ்ரச: |*
*நாநாவிதானி திவ்யானி நாநா வர்ணாக்ருதீநி ச ||*

ஹே அர்ஜுனா! நீ ஒரு உருவையே பார்க்கவேண்டும் என்று கூறினாய். அது ஒன்றை மாத்திரம் பார்ப்பதென்றால்

அது என்னது? இப்பொழுது பார், எல்லா உலகமும் எனது ஸ்வரூபத்தால் நிறைந்திருக்கிறது. ஒன்று மெலிந்துள்ளது ஒன்று பருத்துள்ளது. ஒன்று குட்டையாக இருக்கிறது ஒன்று நீளமாக இருக்கிறது. ஒருவன் மகிழ்கிறான், ஒருவன் வருந்துகிறான். ஒருவன் வியாபாரம் செய்கிறான் ஒருவன் சும்மா இருக்கிறான். ஒருவன் ஒன்றிலும் ஒட்டாமல் இருக்கிறான் ஒருவன் எல்லோருடனும் பிரியமாக இருக்கிறான். ஒருவன் மந்தமாகவும் ஒருவன் ஜாக்கிரதையாகவும் இருக்கிறான். ஒருவன் கம்பீரமாகவும் ஒருவன் எளிமையாகவும் இருக்கிறான். ஒருவன் லோபியாகவும் ஒருவன் உதாரனாகவும் இருக்கிறான். ஒருவன் சாந்தமாக இருக்கிறான். ஒருவன் கோபமாக இருக்கிறான். ஒருவன் டம்பமாக இருக்கிறான் ஒருவன் மௌனமாக இருக்கிறான். ஒருவன் ஆனந்தமாக இருக்கிறான் ஒருவன் கர்ஜிக்கிறான். ஒருவன் மெதுவாகப் பேசுகிறான். ஒருவன் ஸௌம்யமாக இருக்கிறான். ஒருவன் காமியாக இருக்கிறான் ஒருவன் விரக்தனாக இருக்கிறான். ஒருவன் தூங்குகிறான். ஒருவன் அழுகிறான். ஒருவன் நிராயுதபாணியாகவும் ஒருவன் ஆயுதங்களுடனும் இருக்கிறான். ஒருவன் உக்ரமாயிருக்கிறான். ஒருவன் சாந்தமாக இருக்கிறான். ஒருவன் பயங்கரமாயிருக்கிறான் ஒருவன் விசித்ரமாக இருக்கிறான் ஒருவன் ஸமாதியில் இருக்கிறான், ஒருவன் உத்பத்தி செய்கிறான் ஒருவன் ஸம்ரக்ஷிக்கிறான். ஒருவன் கொல்லுகிறான் ஒருவன் ஸாக்ஷியாகப் பார்த்துக்கொண்டிருக்கிறான்.

இவ்விதமாக ஒவ்வொருவரும் நானாவிதமான காரியங்களுடனும் நானாவித ஸ்வபாவங்களோடும் இருக்கிறார்கள். நிறமும் ஒருவரைப்போல் ஒருவருக்கு இருப்பதில்லை. ஒருவன் தங்கவர்ணமாக இருக்கிறான். ஒருவன் ஸிந்தூர வர்ணமாக இருக்கிறான். ஒருவன் மாணிக்கம் பதித்ததுபோல் அழகாக இருக்கிறான். ஒருவன் ஸ்படிகம்போலும், ஒருவன் இந்திரநீல மணியைப்போலும் இருக்கிறான். ஒருவன் மையைப்போல கருப்பாக இருக்கிறான். ஒருவன் நீருண்ட மேகம் போலும் கருப்பாக இருக்கிறான். ஒருவன் சண்பகப்பூவின் நிறம்போலவும் ஒருவன் பசுமை நிறமாகவும் இருக்கிறான் ஒருவன் உருக்கிய செம்புவர்ணம் போலவும் ஒருவன் சந்திரனைப்போல் தாவள்யமாகவும் இருக்கிறான்.

இவ்விதம் வர்ணங்கள் வெவ்வேறாக இருப்பதுபோல் உருவத்தின் ஆக்ருதியும் வெவ்வேறாக இருக்கிறது. ஒருவ

னுடைய உருவம் மன்மதனே அடிபணியும்படி அமைந்து இருக்கிறது. ஒருவனிடம் லாவண்யம் ஒளிவீசுகிறது. ஒருவன் தேஜோராசியாகவும் மனோகரமாகவும் இருக்கிறான். ஒருவன் சிருங்காரலக்ஷ்மி கடைபரப்பியதுபோல் இருக்கிறான். ஒருவன் புஷ்டியாகவும் ஒருவன் மெலிந்தும் காணப்படுகிறான். ஒருவன் விகாரமாக இருக்கிறான். ஒருவன் நீண்ட கழுத்துள்ளவனாகவும் ஒருவன் பெரியதலை உள்ளவனாகவும் ஒருவன் பயங்கரமாகவும் இருக்கிறான் இவைகளுக்கு ஒரு எல்லையே இல்லை. இவ்விதம் ஒவ்வொருவருடைய அங்கபிரதேசத்திலும் ஒவ்வொரு உலகம் இருக்கிறது. (5)

**पश्यादित्यान्वसून्रुद्रानश्विनौ मरुतस्तथा ।**
**बहून्यदृष्टपूर्वाणि पश्याश्चर्याणि भारत ॥ ६ ॥**

*பச்யாதித்யான் வஸூன் ருத்ரா நச்விநௌ மருதஸ்ததா ।*
*பஹூந்யத்ருஷ்ட பூர்வாணி பச்யாஸ்சர்யாணி பாரத ॥*

நான் கண்விழித்தேனானால் ஆதித்யர்கள் உதிக்கிறார்கள். நான் கண்மூடினால் அவர்கள் லயமடைகிறார்கள். என்வாயி லிருந்து வரும் ஆவியால் எங்கும் ஜ்வாலாமயமாய்விடும். அக்னி முதலான எட்டு வஸுக்களும் அதிலிருந்து உண்டாகிறார்கள். நான் கோபத்தினால் புருவத்தை நெரித்தேனானால் அதிலிருந்து ருத்ரகணங்கள் உத்பத்தியாகின்றன. எனது ஸௌம்யஸ்வ ரூபத்திலிருந்து அசுவினி குமாரர்கள் உத்பத்தியானார்கள். எனது காதிலிருந்து வாயுகணங்கள் உத்பத்தியானார்கள். இவ் விதமாக எனது ஒவ்வொரு அவயவத்தின் அசைவிலிருந்தும் தேவர்களும் ஸித்தர்களும் உண்டானார்கள். அவர்களுடைய உருவம் அபாரமானது, விசாலமானது அவைகளை வர்ணிப் பதற்கு வேதங்களாலும் முடியாது. அவைகளைப்பார்ப்பதற்குக் காலதேவனுக்கே ஆயுள் காணாது. அவர்களை மதிப்பதற்கு பிரும்மதேவராலும் முடியாது. நான்கு வேதங்களுமே அறிந் திராத எனது அநேக ரூபங்கள் இருக்கின்றன. அவைகளை நீ இப்பொழுது கண்கூடாகப் பார்ப்பாய் அந்த லீலையின் மகாஸுகத்தை அநுபவிப்பாய். (6)

**इहैकस्थं जगत्कृत्स्नं पश्याद्य सचराचरम् ।**
**मम देहे गुडाकेश यच्चान्यद्द्रष्टुमिच्छसि ॥ ७ ॥**

இஹைகஸ்த்தம் ஜகத் க்ருத்ஸ்நம் பச்யாத்ய
ஸசராசரம் ।
மம தேஹே குடாகேச யச்சாந்யத் த்ரஷ்டுமிச்சஸி ॥

ஹே கிரீடி பார்! இந்த மூர்த்திகளின் ஒவ்வொரு ரோமக் கால்களிலும் சிருஷ்டிதத்வம் நிரம்பி இருக்கின்றது. கற்ப விருக்ஷத்தின் அடியில் தளிர்கள் துளிர்த்ததுபோல், ஜன்னல் வழியாக வரும் வெளிச்சத்தில் பரமாணுக்கள் மிதப்பதுபோல் நமக்குத்தெரிகிறது. அப்படியே அவயவங்களின் சேர்க்கை களில் பிரும்மாண்டம் சுழன்று கொண்டிருக்கிறது. ஒவ்வொரு அவயவங்களின் ஒவ்வொரு சிறுபாகங்களிலும் ஸம்பூர்ணஜகத் நிரம்பியிருக்கிறது. இந்த விசுவத்துக்கும் அப்பால் பார்க்க மனதில் இச்சை எழுந்தால் அது ஒன்றும் முடியாத காரியம் இல்லை. நீ எதை விரும்புகிறாயோ அதை இந்த என்னுடைய விராட்தேகத்தில் காண்பாய். இவ்விதமாக விசுவாதாரமான ஸ்ரீ கிருஷ்ணன் கூறினார். ஆனாலும் அர்ஜுனன் நான் கண்டேன் என்றோ, காணவில்லை என்றோ ஒன்றுமே கூறவில்லை அவன் ஏன் பேசாமல் இருக்கிறான்? என்று கிருஷ்ணன் யோஜித்தார். ஆவேசமான பக்தியினால் புளகாங்கிதத்தினால் அலக்கழிக்கப்பட்டுப் பேச்சற்று நிற்பதைக்கண்டார். (7)

न तु मां शक्यसे द्रष्टुमनेनैव स्वचक्षुषा ।
दिव्यं ददामि ते चक्षुः पश्य मे योगमैश्वरम् ॥ ८ ॥

நது மாம் சக்யஸே த்ரஷ்டுமநேநைவ ஸ்வசக்ஷுஷா ।
திவ்யம் ததாமி தே சக்ஷு: பச்ய மே யோகமைச்வரம் ॥

அப்பொழுது ஸ்ரீ கிருஷ்ணன் கண்டார். இவன் ஆவல் இன்னும் தணியவில்லை என்பதை. இந்தக் காக்ஷியினாலும் அவன் வேண்டிய பரம ஸுகம் அடையவில்லை. நாம் காட்டிய இந்த உண்மையான காக்ஷி இன்னும் அறிவுக்கு எட்டவில்லை. இதை அறிந்த பகவான் நகைத்தார். பேச்சற்று விழித்துக்கொண்டி ருக்கும் பார்த்தனை நோக்கிக் கூறுவார். என்ன பார்த்தா? என்னுடைய விசவரூபத்தை இன்னும் நீ பார்க்காமல் நிற்கிறாய்? புத்திசாலியான அர்ஜுனன் இந்தச் சொல்லைக் கேட்டுத் திடுக் கிட்டுக் கூறுவான். மகாராஜ், நான் இன்னும் உள்ளபடி கண்டு கொள்ளவில்லை என்பது என்குற்றமா என்ன? தாங்கள் எனக்குப் பின்புறம் மாத்திரம் நிலவை உண்டுபண்ணி விட்டு

ரஸிக்கத் தெரியவில்லையே என்கிறீர்கள். நீங்கள் கண்ணாடியைத் துடைத்துத் துடைத்துக் குருடனைக் காணச் சொல்கிறீர்கள். தாங்கள் செவிடன் காதில் சங்கு ஊதுகிறீர்கள். புஷ்ப மகரந்தத்தைத் தவளையின் முன்னால் இறைத்து அதை நுகரும்படிக் கூறுகிறீர்கள், பிறகு ஏன் நுகரவில்லை என்று கோபப்படுகிறீர்கள். எவ்விஷயம் இந்திரியங்களுக்கு அப்பாற் பட்டதோ, எதைப் பார்ப்பதற்கு ஞானதிருஷ்டி ஒன்றே தகுதி யானதோ அதைத் தாங்கள் இந்த ஊனக்கண்களுக்கு முன்னால் வைத்துப்பார் என்கிறீர்கள். நான் எப்படிக் காணமுடியும்? இதைத் தங்களுடைய குற்றம் என்று கூறுவதும் உசிதமில்லை. அதனால் பேசாமல் இருப்பதே உசிதம் என்று சும்மாயிருக் கிறேன் என்றான்.

இப்பொழுது பகவான் கூறுவார்: அப்பனே! நன்று கூறினாய். இதை நான் ஒப்புக்கொண்டேன். உண்மையே உனக்கு விசுவரூபத்தைக் காட்டவேண்டுமென்றால் முதலில் உனக்கு அதைக் காணும் திறமையை அல்லவா நான் அளிக்க வேண்டும்? ஆனால் அன்பு மிகுதியால் அதை நான் மறந்து விட்டேன். என்ன செய்வது? பூமியை முதலில் உழுது பிறகு உரம் இட்டு பண்படுத்தாமல் அதில் விதை விதைப்பது வீணே அல்லவா! அதனால் நான் இப்பொழுது உனக்கு ஞானதிருஷ்டியைத் தருகிறேன். அதனால் நீ எனது விசுவ ரூபத்தைக் காண்பாய். எனது இந்த ஸம்பூர்ண ஐசுவர்ய யோகத்தைக் கண்டு அனுபவித்து உன்னுள் லயித்துக்கொள். வேதாந்தத்தினால் அறியத்தகுந்ததும் எல்லா உலகங்களுக்கும் ஆதிகாரணமுமான பகவான் இவ்விதம் கூறினார். (8)

**संजय उवाच —**

**एवमुक्त्वा ततो राजन्महायोगेश्वरो हरिः ।**
**दर्शयामास पार्थाय परमं रूपमैश्वरम् ।। ९ ।।**

*ஸஞ்ஜய உவாச:—*

*ஏவமுக்த்வா ததோ ராஜன் மஹாயோகேச்வரோ ஹரி: ।*
*தர்சயாமாஸ பார்த்தாய பரமம் ரூபமைச்வரம் ॥*

இப்பொழுது ஸஞ்சயன் கூறுகிறான்; ஹே கௌரவகுலத்தின் சக்ரவர்த்தியே! எனக்கு அடிக்கடி ஆச்சர்யமுண்டாகிறது. மூவுலகிலும் லக்ஷ்மீதேவியைவிட பாக்யசாலி உண்டோ!

இங்கிதத்தினாலும் ஸம்க்ஞையினாலும் வர்ணிக்கவேண்டிய விஷயத்தையே சுருதி ஒன்றைத்தவிர வேறொன்றினால் சுட்டிக் காண்பிக்க முடியுமா? ஸேவை சுச்ரூஷையினால் அறியலாம் என்றால் அதை ஆதிசேஷனைத்தவிர யாரால் அறியமுடியும்? அல்லது யோகத்தால் அறியவேண்டுமென்றால் தன்மயமாக ததேகத்யானமாக எட்டு ஜாமமும் அருகில் இருந்து யோகம் பண்ணும் கருடனைத்தவிர வேறுயாரால் அறியமுடியும்? ஆனால் ஆச்சர்யம்! இவர்கள் எல்லோரும் இப்பொழுது அகற்றப் பட்டார்கள். எப்பொழுது இந்தப்பாண்டவர்கள் பிறந் தார்களோ, அன்றிலிருந்து இந்தப்பாண்டவர்கள் வழி யொன்றையே பின்பற்றிப்போவது இந்த கிருஷ்ணனுடைய வேலையாகிவிட்டது.

ஆனால் இந்த பஞ்சபாண்டவர்களிலும் அர்ஜுனனிடம் தான் இவர் அதிக பாரபக்ஷம் காட்டுகிறார். ஒரு காமுகன் தனது காந்தையிடம் அடிமையாவதுபோல் அல்லவா இது இருக்கிறது கற்றுக்கொடுத்த கிளிப்பிள்ளைகூட இத்தனை சரியாகப்பேசியது இல்லை. வளர்ப்பு மிருகங்கள்கூட இப்படிச் சொன்னபடி கேட்ட தில்லை. அர்ஜுனனுடைய பாக்யம்தான் அவனுக்கு எத்தனை அநுகூலமாக இருக்கிறது? இன்று இந்த ஸம்பூர்ண பிரும் மத்தை அநுபவிக்கும்பொருட்டு இந்த ஒருவனுடைய கண்கள் தானே பாக்யம் செய்திருக்கின்றன! கிருஷ்ணன் இவனுடைய கொஞ்சும் மொழிகளுக்கல்லவா மதிப்புக்கொடுக்கிறார்! இவன் கோபித்துக்கொண்டால் பேசாமல் ஸகித்துக்கொள்ளுகிறானே! சண்டையிட்டால் ஸமாதானப்படுத்துகிறார். கிருஷ்ணன் அர்ஜுனப்பயித்யம் பிடித்தல்லவா அலைகிறார்.

இதற்கு முன்னால் சுகர் முதலியவர்கள் விஷயசுகங்களை ஜயித்து மகாத்மாவானார்கள். அவர்கள் இன்று இந்த அர்ஜுனனுக்கு ஸ்துதி பாடகர்களாக அல்லவா ஆகப்போ கிறார்கள்? இந்த யோகிகளுக்கு ஸமாதி ஒன்றினாலேயே அடையக்கூடிய தனமாகிய கிருஷ்ணன் இன்று அர்ஜுனனுக்கு அதீனமாக இருக்கிறார் பாருங்கள் இதைப்பார்த்துவிட்டு என் மனது ஆச்சர்யத்தினால் நிரம்பி வழிகிறது. இதில் ஆச்சர்ய மடைவதற்கு என்ன காரணம் இருக்கிறது? என்பதுதான் எனக்குப் புரியவில்லை. ஸ்ரீ கிருஷ்ணன் யாரைத்தனதாக்கிக் கொள்ளுகிறானோ அவனுக்கு பாக்யசூரியன் உதயமாகிறான். சரி மேலே கூறுகிறேன் கேளுங்கள்.

பகவான் அர்ஜுனனிடம் கூறுவார்: பார்த்தா! உனக்கு நான் திவ்ய திருஷ்டியைக் கொடுத்துவிட்டேன். இப்பொழுது எனது விசுவரூபத்தை நன்ருகக் காண்பாய். கிருஷ்ணன் வாயி லிருந்து இந்த வார்த்தைகள் வெளிவந்ததோ இல்லையோ, அர்ஜுனனுடைய மயக்கம் அக்ஞானம் இருள் என்னும் திரை அற்று விழுந்தது, இது வெறும் வார்த்தையல்ல, ஸ்ரீ கிருஷ்ணன் அர்ஜுனனுக்காக பிரம்மத்தின் ஐசுவர்யத்தைக் காண்பிக்க அவனது அறிவில் ஞானதீபத்தை ஏற்றிவைத்து விட்டார். பிறகு திவ்ய நேத்ரங்கள் திறந்தன. அவனுடைய ஞானதிருஷ்டி விகாஸமடைந்தது. இவ்விதமாகக் கிருஷ்ணன் அர்ஜுனனுக்குத் தன் திவ்யரூபத்தைக் காண்பித்தார்.

இந்த அவதாரங்கள் இருக்கின்றனவே அவைகள் எல்லாம் ஸ்ரீ கிருஷ்ண ஸமுத்திரத்தின் அலைகள் இந்த உலகமான கானல்நீர் கிருஷ்ணசூர்யனுடைய கிரணங்களால் காணப்படு கிறது. அநாதிகாலரூபமான திரையில் இந்த சராசரரூபமான சித்திரம் தெளிவாகத் தீட்டப்பட்டிருக்கிறது. அதன் உண்மை யான விசுவரூபத்தைப்பகவான் அர்ஜுனனுக்குக் காண்பித்தார் இவர் சிறுபிராயத்தில் ஒருதரம் மண்ணைத் தின்ருர். யசோதை கோபத்துடன் குழந்தையை அடித்தாள். மண்ணை எடுத்து சுத்தம் செய்ய வாயைத்திறக்கச் சொன்னுள். அதைசாக்காக வைத்துக் கொண்டு இந்தப்பிள்ளை பயப்படுவதுபோல் பாசாங்கு செய்து கொண்டு வாயைத்திறந்தது. அன்னை யசோதை அந்தத் திறந்த வாய்க்குள் பதினன்கு உலகங்களையும் கண்டாள்.

இதுபோல் மதுவனத்தில் பாலகன் துருவன் தவம்புரியும் போது ஸ்ரீ ஹரி பிரத்யக்ஷமாகி வாத்ஸல்யத்துடன் குழந்தையின் கன்னத்தில் தன் கையிலிருக்கும் பாஞ்சஜன்யம் என்னும் சங் கினுல் மெதுவாகத்தட்டினுர். அப்பொழுது வேதங்களும் தமது புத்தியை செலுத்தாமல் மழுங்கிப்போகும் அந்த திவ்யதரி சனத்தைக் குழந்தை கண்டது. அதைப்போன்ற அனுபவம் இப்பொழுது இந்த தனஞ்சயனுக்குக் கிடைத்தது அவனுடைய பாக்யம். இதனுல் மாயை என்பது அர்ஜுனனைவிட்டு வெகு தூரம் பின்னுல் விலகிவிட்டது. ஐசுவர்யதேஜஸினுல் அர்ஜுனன் ஜ்வலித்தான். இங்கும் அங்கும் திவ்யபாவனு ஸமுத்திரத்தின் அலைகள் பொங்கியெழுந்தன. ஆச்சர்யக்கடலில் அர்ஜுன னுடைய மனம் முழுகியது. பிரும்மலோகம்வரை கொந்தளிக்கும் கடலில் இப்படித்தான் முன் ஒரு காலத்தில் மார்க்கண்டேயர்

நீந்திக்கொண்டிருந்தார். அதுபோல் பார்த்தன் இப்பொழுது ஆச்சர்யக்கடலில் மூழ்கிக்கொண்டிருந்தான்.

அவன் மனதில் எண்ணினன். அட! சற்றுமுன் எனது முன்னால் எத்தனை பெரிய ஆகாசம் தெரிந்தது. அதை இப்பொழுது யார் சுருட்டிக்கொண்டு போனார்கள்? சராசரங்களின் ஐந்து மகாபூதங்களும் என்னவாயிற்று? திக்குதிசை தெரியவில்லையே, ஆகாசம் பாதாளம் பூமி எங்கு போயின? லோக வ்யவகாரம் விழித்துக்கொண்டேகாணும் கனவுபோல் எங்கு மறைந்தது? சூர்யபிரகாசத்தின்முன் நிற்க முடியாமல் சந்திர கிரணங்களும் தாரா கணங்களும் மறைவதுபோல் பிரபஞ்சப் படைப்பை இந்த விசுவரூபம் மறைத்துவிட்டதா என்ன? மனம் தனது கார்யமாகிய சிந்தித்தலை இழந்தது. புத்தி தனது அறிவை அடக்கிவைக்க முடியாமல் தவித்தது. இந்திரியவிருத்திகள் பகிர்முகத்திலிருந்து ஒடுங்கி அந்தர்முகமாயின. இயற்கை மௌனமாக ஸ்தம்பித்தது ஒரு வீரன் மோகனாஸ்திரத்தைப் போட்டு எதிரியை மயக்கமடையச் செய்வதுபோல் அர்ஜுனன் ஒரே மயக்கமானான். ஆனால் உள்ளுணர்வு போகவில்லை. பிரேமையும் ஆச்சர்யமும் பொங்கிவழிந்தன. எதிரில் இருக்கும் சதுர்புஜஉருவம் காணப்படவில்லை. ஆனால் எங்கு நோக்கினாலும் அவ்வுருவமே நெருக்கமாக நிறைந்திருந்தது. மழைகாலத்தில் மேகம் பரவியிருப்பதுபோல், மகாபிரளயம் ஸமீபித்ததுபோல் அந்த சதுர்புஜ உருவம் எங்கும் நெருக்கமாக தன்னையே விஸ்தரித்துக்கொண்டதுபோல் இருந்தது. முதலாவது அந்தக்கரணத்தில் அவ்வுருவைக்கண்டு அர்ஜுனனும் சற்று ஸமாதானமடைந்ததுபோல் காணப்பட்டான். பிறகு கண்களைத்திறக்கும் போது எங்கும் அவ்வுருவமே நிறைந்திருந்தது. அவன் அந்தரங்கத்துடன் இந்த ஊனக்கண்களால் விசுவரூபத்தைக் காண விரும்பினான். பகவான் அவனுடைய ஆசையைப் பூர்த்தி செய்துவைத்தார். (௯)

**अनेकवक्त्रनयनमनेकाद्भुतदर्शनम् ।**

**अनेकदिव्याभरणं दिव्यानेकोद्यतायुधम् ॥ १० ॥**

அநேக வக்த்ர நயனம் அநேகாத்புத தர்சனம் ।
அநேக திவ்யாபரணம் திவ்யாநேகோத்யதாயுதம் ॥

பிறகு அர்ஜுனன் அந்த விசுவரூபத்தில் அநேகமுகங்களைக் கண்டான். ஒரு ராஜபவனத்தில் அநேக கிருஷ்ணர்கள் நிறைந்திருப்பதைப்போல, லாவண்யலக்ஷ்மி நான்குபுறமும் ஜ்வலித்துக்கொண்டிருப்பதைப்போல் கண்டான். அவைகள் முகமா? அல்ல அல்ல ஆனந்தவனமே திரண்டு அம்முகங்களாகப்பரிணமித்ததுபோலும், அழகு தனது ராஜ்யத்தை ஸ்தாபித்தது போலும் கிருஷ்ணனுடைய மனோகர உருவத்தை அர்ஜுனன் எங்கும் கண்டான். ஆனால் அவைகளில் சில சில பயங்கரமாக இருக்கக்கண்டான். மாதா காளராத்ரி தன் ஸேனைகள் புடைசூழ அம்முகங்களின் நெருக்கத்தில் நிற்பதுபோல் கண்டான். அல்லது மரணதேவனே இத்தனை முகங்களுடன் ஆவிற்பவித்தானா! பயம் தன்னை ஒரு கோட்டையாகப்பரிணமித்துக்கொண்டுவிட்டதா? அல்லது பிரளயாக்னி மகாயக்ஞம் பண்ண ஹோமகுண்டத்தைத் தயாரித்துக் கொண்டிருக்கிறதா? அர்ஜுனன் இன்னும் அக்கூட்டத்தில் அத்புதமானதும் பயங்கரமானதுமான முகங்களை கண்டான். அத்துடன் அசாதாரணமாக அலங்கரிக்கப்பட்ட ஸௌம்யமான முகங்களையும் கண்டான். அவன் ஞானதிருஷ்டியினால்தான் இவைகளைக் காண்கிறான். ஆனால் இவைகளுக்கு முடிவே கிடையாதா? என்று அவனுடைய மனம் பிரமிப்படைகிறது.

ஆவலுடன் அம்முகங்களிலிருக்கும் கண்களை உற்று நோக்குகிறான். சூர்யர்கள் வரிசைகிரமமாக நிற்பதுபோல் தோன்றுகிறது. ஏழாவது வர்ணத்தில் விதவிதமான பத்மமலர்கள் மலர்ந்திருப்பதுபோல் தோன்றுகிறது. கிருஷ்ணமேகத்துக்கு மத்தியில் கல்பாந்தகாலத்து மின்னல் மின்னுகின்றது. அக்னி கொழுந்துவிட்டெரிகிறதா? புருவங்களின்கீழ் தெரியும் அந்த ஜ்வலிக்கும் அக்னியான இவைகள் கண்களா என்ன? இப்படி ஒவ்வொன்றாகப்பார்த்த அர்ஜுனன் அவ்வுருவங்களில் பலபல காக்ஷிகளைக்கண்டான்.

அப்பொழுது அர்ஜுனன் சிந்தித்தான். சரணம் எங்கு இருக்கிறது? மகுடம் எங்கு இருக்கிறது? புஜங்கள் எங்கே? இப்படியாகப் பார்க்கும் இச்சை அவனுக்குத்தீவிரமாக அதிகரித்தது. பாக்யநிதியான அந்த அர்ஜுனனின் மனோரதம் வீண்போய்விடுமா? சங்கரருடைய அம்புறத்தூணியில் வீணாகப் போகும் பாணம் ஒன்றாவது இருக்குமா? பிரும்மதேவருடைய வாக்கில் பொய் இருக்குமா? அதுபோல் அந்த அபாரஉருவம்

கொஞ்சம் கொஞ்சமாக அவனுடைய கண்களுக்குப்புலனாயிற்று வேதமே காணாத முடிவுள்ளதும், ஆதிசேஷனாலும் வர்ணிக்க முடியாததுமான அப்பெரிய உருவம் கொஞ்சம் கொஞ்சமாக அர்ஜுனன் கண்களுக்குத் தெரியத்தொடங்கியது. சரணத்தி லிருந்து மகுடம்வரை அவன் விசுவரூபத்தினுடைய மகிமையைப் பார்த்தான். நானாவித ரத்தினங்களினால் அந்த விசுவரூபம் அலங்கரிக்கப்பட்டிருந்தது. தன் சரீரத்தில் விதவிதமான அலங்காரங்களாக அந்தப்பரபிரும்மம் தன்னைத்தானே ஆக்கிக் கொண்டது. அதற்கு நான் எதை உவமைகூற? எந்தப் பிரபையினால் சந்திரமண்டலத்திற்கும் சூர்யமண்டலத்திற்கும் பிரகாசம் ஏற்படுகிறதோ, எது மகாதேஜஸினுடைய உயிரோ, எதனால் உலகம் கண்களுக்குப் புலனாகிறதோ அந்த திவ்யதேஜஸின் மகிமை யாருடைய புத்திக்கு எட்டும்?

பிரும்மம் தன்னைத்தானே அலங்கரித்துக் கொள்வதை அர்ஜுனன் கண்டான். அதன் கைகளைக்கண்டான். அதில் பளபளக்கும் ஆயுதங்களைக் கவனித்தான் கல்பாந்த முடிவின் அக்னியைப்போல் அவைகள் ஜ்வலிக்கக்கண்டான். தானே சரீரம், தானே அலங்காரம், தானே ஆயுதம், தானே உயிர், தானே தேகம் இப்படியாகச் சராசரமெல்லாம் கிருஷ்ணமயமாகக்கண்டான். அவ்வுருவத்தின் ஜோதி பிரபையினால் நக்ஷத்ரங்கள் கடலைகளைப்போல் சடசடவென்று பொரிந்து விழுவதைக்கண்டான். அந்த தேஜஸைத் தாங்கமாட்டாமல் அக்னி ஸமுத்ரத்தில் விழுவதற்கு ஓடியது. காலகூட விஷமும் தீவிரம் தாங்காமல் ஸமுத்திரத்தின் அடித்தளத்தில் ஒளிந்து கொண்டது. மின்னல் தனது கடையை விரித்ததுபோல் இருந்தது. கைகளில் அஸ்திரங்கள் தரித்து உயரத்தூக்கிய அவ்வுருவத்தை அர்ஜுனன் கண்டான். (10)

**दिव्यमाल्याम्बरधरं दिव्यगन्धानुलेपनम् ।**
**सर्वाश्चर्यमयं देवमनन्तं विश्वतोमुखम् ।। ११ ।।**

*திவ்ய மால்யாம்பர தரம் திவ்ய கந்தானுலேபனம் ।*
*ஸர்வாஸ்சர்யமயம் தேவமநந்தம் விச்வதோ முகம் ॥*

அர்ஜுனன் பயந்துவிட்டான் மெள்ள மெள்ள மனதையும் கவனத்தையும் வேறுபக்கம் செலுத்த முயற்சித்தான். கழுத்

ஜதயும் மகுடத்தையும் கவனித்தான். அதிலிருந்துதான் கற்பவிருக்ஷம் பிறந்தநுபோலும் மகாஸித்திகளுக்கு உத்பத்தி ஸ்தானம் போலும் களைப்படைந்த லக்ஷ்மி அங்கேயே இளைப் பாறுகிருள்போலும் நிர்மலமான புஷ்பங்களால் அலங்கரிக்கப் பட்ட அப்படிப்பட்ட கழுத்தையும் மகுடத்தையும் அர்ஜுனன் கண்டான். மகுடத்தின்மேல் புஷ்பச்செண்டுகள் அலங்கரித்தன. கழுத்தில் வர்ணவிசித்ரமான புஷ்பமாலைகள் ஒரே சேர்பிதமாக அசைந்தாடின ஸ்வர்க்கம் ஸூர்ய பிரகாசத்தை மறைக்கப் பிரயாசைப்படுவதுபோல் இருந்தது அந்தக்காக்ஷி மேரு பர்வதத்தைத் தங்கத்திஞல் மூடுவதற்கு முயற்சித்ததுபோல் இருந்தது என்று கூறலாமா?

அரையிலுள்ள பீதாம்பரத்தைப்பார்த்த அர்ஜுனனுக்கு இவ்வாறுதான் தோன்றியது. ஸ்ரீ சங்கரருக்குக் கற்பூரலேபனம் பூசியதுபோலும், கைலாசபர்வதத்தை வெள்ளியால் மூடுவதற்குப் பிரயாசை எடுப்பதுபோலும் க்ஷீரஸாகரத்தை வெள்ளை வஸ்த் ரத்தால் மூடுவதுபோலும், சந்திரிகையை விண்டுபார்ப்பது போலவும், ஆகாசம் நிலவிஞல் ஆன துணியைப்போர்த்தி இருப்பதுபோலவும், அந்த விசுவரூபத்தின் தேகத்தில் சந்தனம் பூசப்பட்டிருந்தது. எந்த ஸுகந்தத்திஞல் பிரகாசத்தின் காந்தியும் அதிகப்படுமோ, பிரும்மானந்தத்தின் தாகமும் தணியுமோ எந்த ஸுகந்தத்திஞல் பூமிக்கு உயிர் உண்டாயிற்றே எதைப்பூசிக்கொண்டால் தூய்மை மேலும் மேலும் அதிகரிக் கின்றதோ எதை சரீரமில்லாத பிரும்மமும் ஸர்வாங்கங்களையும் கற்பனை பண்ணிக்கொண்டு ஏற்றுக்கொள்கிறதோ, அந்த வாசனையின் மகிமையை யாரால்தான் உரைக்க முடியும்?

இவ்விதமாக ஒவ்வொரு சிருங்கார சோபையையும் பார்த்துக்கொண்டு அர்ஜுனன் பயத்தால் நடுங்கிஞன். பிரும்மம் நிற்கிறதா? உட்கார்ந்து கொண்டிருக்கிறதா? முன் புறம் காணப்படுகிறதா? கண்களைத் திறந்துகொண்டு பார்த்தால் ஒரே மூர்த்திமயமாகத் தெரிகிறது. கண்களை மூடிக்கொண்டு பார்த்தாலும் அதே காக்ஷிதான் தெரிகிறது. வெளியில் கணக்கிலடங்காத முகங்கள். அதைக்கண்டு பயந்துகொண்டு கண்களை மூடிக்கொண்டால் உள்ளேயும் அதேமுகங்கள், கைகள் கால்களும் காணப்படுகின்றன என்பதில் என்ன ஆச்சர்யம் இருக்கிறது? ஆஞல் இதில் என்னவென்ருல் பாராவிட்டாலும் நினைக்காவிட்டாலும் அது காணப்படுகிறது. அநுக்ரகம் என்பது

லேசான காரியமா? பார்த்தன் காண்பதற்கு என்ன ஆச்சர்யம்? பார்த்தனை நாராயணனாகப்பரிணமிக்க வல்லவா செய்திருக்கிறான்?

ஆச்சர்யக்கடலில் மூழ்கிய அர்ஜுனன் ஒருவாறு கரை சேர்ந்தோம் என்று பெருமூச்சு விட்டான். ஆனால் இன்னொரு ஆச்சர்யக்கடல் அவனுக்காகக் காத்திருந்தது. அனந்த ரூபனான கிருஷ்ணன் அர்ஜுனனுக்கு இவ்விதமாகத்தன் அசாதாரண உருவைக் காண்பித்து அதில் அவனை மயக்கி வைத்துக்கொண்டு இருந்தான். அவன் விசுவரூபனல்லவா? அர்ஜுனன் விசுவரூபத்தைப்பார்க்க வேண்டுமென்று பிரார்த்தனை செய்தான் அல்லவா? அதனால் கிருஷ்ணன் ஸம்பூர்ண விசுவமயமாக ஆனார். அர்ஜுனனுக்கு அவன் கொடுத்த ஞானதிருஷ்டி என்ன லேசானதா? ஸூர்யவெளிச்சமும் தீபமும் கொண்டா அதைக்காணவேண்டும் கண்களை மூடிக்கொண்டால் இருள் அடைந்து அது மறைந்து விடுமா? அதனால் அர்ஜுனனுக்கு உள்ளும் வெளியும் விசுவரூபம் அவன் முயற்சிக்காமலேயே தானாகவே தெரிந்தது. இந்த விஷயத்தை அஸ்தினாபுரத்தில் ஸஞ்சயர் திருதராஷ்டிரனுக்கு விவரித்துக் கூறுகிறார். இன்னும் சொல்லுவதற்கு என்ன இருக்கிறது? இவ்விதமாக நானா அலங்காரங்களுடன் கூடிய விசுவரூபத்தைப் பார்த்தன் பார்த்துக் கொண்டே இருந்தான்! (11)

दिवि सूर्यसहस्रस्य भवेद्युगपदुत्थिता ।
यदि भाः सदृशी सा स्याद्भासस्तस्य महात्मनः ॥ १२ ॥

*திவி ஸூர்ய ஸஹஸ்ரஸ்ய பவேத் யுகபதுத்திதா ।*
*யதி பா: ஸத்ருசீ ஸா ஸ்யாத் பாஸஸ் தஸ்ய மஹாத்மந: ॥*

அரசே, அந்த அலங்காரசோபையை எவ்விதம் வர்ணிப்பேன்? கல்பாந்த முடிவில் பன்னிரண்டு ஆதித்யர்களும் உதயமாவார்கள். அதைப்போன்ற ஆயிரம் திவ்ய ஸூர்யர்கள் உதயமானால் அந்த தேஜஸைக்கூட இதற்கு உவமை கூற முடியாது. மின்னல் கோடிகளை ஒன்று சேருங்கள். பிரளயாக்னியைக் கற்பித்துக் கொள்ளுங்கள். அதைப்பத்து மடங்காகப் பெருக்குங்கள். அதுவும் இந்த சோபைக்குமுன்

அற்பமே. இவ்வித மகிமையுடன்கூடிய ஹரியின் தேஜஸ் ஸகல அங்கங்களிலிருந்தும் விகஸித்துக் கொண்டிருந்தது. வியாச முனிவரின் கிருபையினால் எனக்கும் கண்களுக்கு நன்றாகத் தெரிகிறது. (12)

**तत्रैकस्थं जगत्कृत्स्नं प्रविभक्तमनेकधा ।**
**अपश्यद्देवदेवस्य शरीरे पाण्डवस्तदा ॥ १३ ॥**

தத்ரைகஸ்த்தம் ஜகத் க்ருத்ஸ்நம் ப்ரவிபக்தமநேகதா ।
அபச்யத் தேவதேவஸ்ய சரீரே பாண்டவஸ் ததா ॥

இந்த விசுவரூபத்தில் ஸம்பூர்ண உலகம் விஸ்தாரமாகக் காணப்படுகிறது. மகாஸமுத்ரத்தில் அலைகளின் நுரையைப் போலவும் ஆகாசத்தில் கந்தர்வநகரைப்போலவும், பூமியில் எறும்புகளினால் ஆக்கப்பட்ட சிறு சிறு புற்றுக்களைப்போலவும், மேருபர்வதத்தில் பரமாணுக்களைப்போலவும் அந்த தேவசக்ர வர்த்தியின் சரீரத்தில் அர்ஜுனன் இந்த ஸம்பூர்ண ஜகத்தைக் கண்டான். (13)

**ततः स विस्मयाविष्टो हृष्टरोमा धनञ्जयः ।**
**प्रणम्य शिरसा देवं कृताञ्जलिरभाषत ॥ १४ ॥**

ததः ஸ விஸ்மயாவிஷ்டோ ஹ்ருஷ்ட ரோமா தநஞ்ஜயः ।
ப்ரணம்ய சிரஸா தேவம் க்ருதாஞ்ஜலிரபாஷத ॥

இதனால் அர்ஜுனன் மனதில் கொஞ்சம் ஒட்டிக்கொண்டு இருந்த துவைதபாவமும் அகன்றது. உலகம் அகண்டமான ஒருபொருள், நான்வேறு என்ற பாவம் அகன்றது. அந்தக் கரணம் என்ற ஒன்று இருந்த இடமே தெரியவில்லை. அந்தர்கதமான ஆனந்தத்தின் விழிப்பு ஏற்பட்டது. வெளி அவயவங்களின் பலம் நாசமடைந்தது. தலையிலிருந்து கால் வரை மயிர்க்கூச்செடுத்தது. மழைகால ஆரம்பத்தில் மழை பெய்ததும் பர்வதங்களில் எப்படி சிறு சிறு பச்சை முளைகள் எழும்புமோ அதுபோல் அவன் சரீரத்தில் மயிர்கள் குத்திட்டு நின்றன. சந்திர கிரணம் பட்டவுடன் சந்திரகாந்தக்கல் உருகுவதுபோல் அவனுடைய சரீரத்தில் வியர்வை துளிர்த்தது மலர்ந்த தாமரையின் மதுவை அருந்தி வண்டு அதிலேயே

மயங்கிக்கிடக்கும்போது மாலையில் தாமரை மூடுகிறது. அந்த இறுக்கத்தினுல் விழித்துக்கொண்ட வண்டு அசைகிறது. அந்த அசைவினுல் தாமரை ஆடுகிறது. அதுபோல்உள்ளே ஸுகத்தின் அலைகளினுல் அர்ஜுனனுடைய சரீரம் நடுங்கத்தொடங்கியது க்ற்பூரகிழங்கின்தோலை உரித்தவுடன் உள்ளே நிரம்பியிருக்கும் கற்பூரதுளிகள் சொட்டுவதைப்போல் அவனுடைய கண்களி லிருந்து கண்ணீர்துளிகள் கொட்டியது. சந்திரஉதயமானதும் ஸமுத்ரம் பொங்கியெழுவதைப்போல் அவன் உள்ளத்திலிருந்து ஆனந்த அலைகள் பொங்கியெழுந்தன. இவ்விதமாக எட்டுவித ஸாத்விகபாவங்களும் அவனுடைய உள்ளத்தில் அலைமோது வதால் அவனுக்கு பிரும்மானந்தஸாம்ராஜ்யம் கிடைத்தது. இந்த பிரும்மானந்தத்தைச் சற்றுநேரம் அநுபவித்தபிறகு அவனுடைய துவைதபாவம் திரும்பியது. மெள்ளக் கண்களை விழித்தான். பகவான் எந்தப்பக்கம் உட்கார்ந்திருந்தாரோ அந்தப்பக்கமாகத் தலைவணங்கி கைக்கூப்பிக்கொண்டு சொல்லலானுன். (14)

**अर्जुन उवाच —**

**पश्यामि देवांस्तव देव देहे सर्वांस्तथा भूतविशेषसङ्घान् ।**
**ब्रह्माणमीशं कमलासनस्थमृषींश्च सर्वानुरगांश्च दिव्यान् ॥ १५ ॥**

அர்ஜுந உவாச:—

பச்யாமி தேவாம் ஸ்தவ தேவ தேஹே
ஸர்வாம்ஸ்ததா பூத விசேஷ ஸங்கான் ।
ப்ரஹ்மாணமீசம் கமலாஸநஸ்த்தம்
ருஷீம்ஸ்ச ஸர்வாநுரகாம்ஸ்ச திவ்யான் ॥

ஸ்வாமி ஜய! ஜய! பிரபுவே! ஜய! ஜய! தங்க ளுடைய எல்லையற்ற கிருபையினுல் சாதாரண மனிதஞன எனக்குத் தங்களுடைய எல்லையற்ற விசுவரூபத்தைக்காண முடிந்தது. ஹே ஸ்வாமி! எனக்குத்தாங்கள் உண்மையாகவே பெரிய உபகாரத்தைச் செய்தீர்கள். சிருஷ்டிக்கு ஆசிரயதாதா வான தங்களை இந்த உருவில் பார்த்துவிட்டு எனக்கு எல்லை யற்ற ஆனந்தமுண்டாயிற்று. மந்தரமலையில் உள்ள அநேக சிறுசிறு காடுகளைப்போல் நான் தங்கள் தேகத்தில் அநேக புவனங்களைப்பார்க்கிறேன். ஆகாசத்தில் கிரஹநக்ஷத்ரக்

கூட்டங்கள் போலவும், பெரியமரத்தில் பறவைகளின் கூடு களைப்போலவும், அவைதென்படுகின்றன இவ்விதமாகத் தங்கள் விசுவரூபத்தில் தேவகணங்களுடன் கூடிய ஸ்வர்க்கமும் காணப் படுகிறது. அதேபோல மகாபூத பஞ்சகங்களும் பூதசிருஷ்டி ஸமுதாயங்களும் காணப்படுகின்றன.

அதுமட்டுமா! அதில் உறையும் ஸத்யலோகத்தையும் அதில் பிரும்மதேவரையும் தரிசிக்கிறேன். மற்றொருபக்கம் பார்த்தால் கைலாசம் காணப்படுகிறது. பார்வதீஸமேதரான சங்கரர் அதில் காக்ஷியளிக்கிறார். தாங்களும் தங்களது உருவில் காக்ஷியளிக்கிறீர்கள். கசியபாதி ரிஷிகளும் தங்களுடைய மற்ற அவதார உருவங்களும், ஸர்ப்பங்களுடன் கூடிய பாதாளமும் காணப்படுகின்றன. ஹே த்ரைலோக்யபதியே, அதிகமாக என்ன சொல்லட்டும்? அவயவரூபமான ஒவ்வொரு அஸ்தி வாரத்திலும் பதினான்கு புவனங்களும் சித்திரபடலத்தில் எழுதியதுபோல் காணப்படுகின்றன. அந்தந்த புவனங்களில் உள்ள வெவ்வேறு உலகங்களும் சிறுசிறு படங்கள்போல் காக்ஷி யளிக்கின்றன. அளக்கமுடியாத இந்த தங்கள் கம்பீரத்தை யாரே அளவிடுவார்? (15)

अनेकबाहूदरवक्त्रनेत्रं पश्यामि त्वां सर्वतोऽनन्तरूपम् ।
नान्तं न मध्यं न पुनस्तवादिं पश्यामि विश्वेश्वर विश्वरूप ।। १६ ।।

அநேகபாஹூதர வக்த்ர நேத்ரம்
பச்யாமி த்வா ஸர்வதோऽநந்த ரூபம் ।
நாந்தம் ந மத்யம் த புநஸ்தவாதிம்
பச்யாமி விச்வேச்வர விச்வரூப ॥

எந்த திவ்யதிருஷ்டியின் மகிமையினால் நாற்புறமும் பார்க் கிறேனோ அங்கெல்லாம் தங்கள் பாஹுதண்டம் ஆகாசத்தில் மரம் முளைத்தாற்போல் காணப்படுகின்றது. அதுபோல் தங்கள் கைகள் ஒரேசமயத்தில் அநேக வேலைகளைச் செய்வ தாகக் காண்கிறேன். தங்களுடைய கம்பீரமான ஆழம் காண் முடியாத உதரத்தை நோக்கும்பொழுது அவ்யக்தமான பிரும் மத்தின் களஞ்சியம் முழுதும் அதனுள் அடங்கி இருப்பதைக் காண்கிறேன். தங்களுடைய ஆயிரக்கணக்கான மஸ்தகங்களை ஒரே வரிசையில் பார்க்கிறேன். பரபிரும்மமே! முகங்களாகிய

பழத்தின் பாரத்தால் மகிழ்ந்து தோன்றும் ஒரு விருக்ஷம்போல் இருப்பதாகக் காண்கிறேன். இதுபோல் ஹே விசுவமூர்த்தி! எங்கு எங்கு தங்களுடைய முகங்கள் காணப்படுகின்றனவோ அங்கெல்லாம் அநேக கண்வரிசைகளையும் காண்கிறேன். அதிகம் என்ன சொல்வது? ஸ்வர்க்கம் பாதாளம் பூமி, திசைகள் ஆகாசம் முதலிய தனித்தனி வஸ்துக்களே காணப்படுகிற தில்லை. எங்கும் தங்கள் மூர்த்திமயமாகவே இருக்கிறது. மிக மிக நுட்பமாகப் பார்த்தாலும் தங்களைத்தவிர ஒரு பரமாணு தங்கும் இடம்கூடக்காலியாகக் காணப்படவில்லை. இவ்வித மாகத்தாங்கள் எங்கும் நிறைந்திருக்கிறீர்கள்.

ஹே அனந்தா! இது எத்தனை நானுவிதமான எண்ணிக்கை யற்ற மகாபூதங்களின் ஸமுதாயமோ தெரியவில்லை. அவைக ளெல்லாம் தாங்களாகவே நிறைந்து நிற்கிறீர்கள். இப்படித் தாங்கள் எங்கிருந்து ஆவிர்பவித்தீர்கள்? உட்கார்ந்திருக் கிறீர்கள்? நின்றுகொண்டிருக்கிறீர்கள்? தெரியவில்லை எந்த மாதாவின் கர்ப்பத்தில் தாங்கள் அடங்கியிருந்தீர்கள்? தங்கள் உருவத்தை இத்தனைபெரிது என்று யாரால் அளவிட்டுக்கூற முடியும்? தங்கள் அழகும் வயதும் எதற்கொப்பாகும்? தங்களுக்கு அப்பால் பின்புறத்தில் என்ன இருக்கிறது? எந்த ஆதாரத்தில் தாங்கள் ஸ்திரமாக நிற்கிறீர்கள் என்பதை என்னுல் எண்ணிக் கூடப்பார்க்கமுடியவில்லை. அப்படி பார்த்தாலும் தங்களுடைய ஆதாரஸ்தானம் தாங்கள்தான். தாங்கள் எதிலிருந்தும் உத் பத்தியாகவில்லை. தாங்கள் அநாதிகாலம் தொட்டு இவ்விதமே இருக்கிறீர்கள்.

தாங்கள் நிற்கவுமில்லை, உட்காரவுமில்லை, உயரமுமில்லை, குட்டையுமில்லை. ஹே வைகுண்டா! தங்களுக்குக் கீழேயும் மேலேயும் தாங்களே நிறைந்திருக்கிறீர்கள். ஸ்வரூபத்திலும் தாங்களே தங்களுக்குள் காணப்படுகிறீர்கள். தங்களுக்கு முன்னுலும் பின்னுலும் தாங்களே. எங்கும் தாங்கள்தான் நான் நன்ருக அடிக்கடி பார்த்துவிட்டேன். தாங்களே தங்களுடைய எல்லாமாக இருக்கிறீர்கள். ஆனுல் தங்களது உருவத்தில் குறைகாணவேண்டுமென்ருல், ஆதி மத்யம் அந்தம் இல்லை என்று வேண்டுமானுல் குறைகூறலாம் எங்கும் நிரம்பியுள்ளீர்கள். ஆனுல் எங்கே தேடினுலும் காணப்படுவதுமில்லை. அதனுல் இந்த மூன்று விஷயங்களும் தங்களிடம் இல்லை என்று நினைக் கிறேன்.

இந்தவிதமாக ஹே ஆதிமத்யாந்தரஹித, அபரிமித ஈசுவரா; ஹே விசுவரூப, நான் தங்களைத் தத்வபரமாக உள்ளபடி பார்த்து விட்டேன். தங்களுடைய மகாமூர்த்தியிலிருந்தே வேறு வேறு விதங்களான மூர்த்திகள் வெளிப்பட்டுள்ளன. அதனால் அநேகவித வர்ணங்களினால் தங்களை அலங்கரித்துக் கொண்டிருப்பதுபோல் தோன்றுகிறது. தங்களுடைய வேறு வேறு தோற்றங்களும் உருவங்களும் விருக்ஷங்களும் கொடிகளும்போலத் தோன்றுகின்றன. தங்களுடைய நிஜஸ்வரூபமான பர்வதத்தில் திவ்யாலங்காரமாக அவைகள் பூத்துப்பழுத்து நிரம்பியிருப்பதுபோல் தோன்றுகிறது. அப்படியில்லாவிட்டால் தாங்கள் மகாஸமுத்ரம் அதில் தாங்களே அநேகமூர்த்திரூபமான அலைகளாகப்பரிணமித்திருக்கிறீர்கள். அப்படியில்லாவிட்டால் தாங்கள் ஒரு விருக்ஷம் மூர்த்திகளாகிய பழங்களால் நிரம்பியிருக்கிறீர்கள். எப்படி பூமி பஞ்சபூதங்களால் நிரம்பி இருக்கிறதோ, ஆகாசம் எப்படி நக்ஷத்ரக்கூட்டங்களால் நிரம்பியுள்ளதோ, அப்படியே தங்களுடைய உருவம் விதவிதமான மூர்த்திகளால் நிரம்பியுள்ளதுபோல் இருககிறது.

தங்களுடைய சரீரத்திலுள்ள ரோமத்திலிருந்து எப்படிப் பெரிய பெரிய மூர்த்திகள் தோன்றுகிறார்கள்? ஒவ்வொரு அங்க ப்ரதேசத்திலிருந்தும் மூன்று உலகங்களும் உத்பத்தியாகி அதிலேயே லயமடையவும் செய்கின்றன. இதைப் பார்த்தால் உலகத்தை இத்தனை விஸ்தரித்தவரான தாஙகள் யார்? யாருடையவர்? நீங்கள் எனனுடையவர் அல்லவா! என் ரதத்தை ஸாரத்யம் செய்கிறவரல்லவா! ஹே முகுந்தா! தாங்களே எங்கும் வியாபித்திருக்கிறீர்கள். பக்தனை எனனிடம் கிருபைபண்ணி இந்த ப்ரேமமய உருவத்தைத் தரித்திருக்கிறீர்கள். இந்த சதுர்புஜ திவ்யமூர்த்திதான் எனன அழகு! அஙகு கண்ணும் மனமும் ஒருஙகேயலலவா குவிகிறது! கணணினாலும மனத்தாலும் வேண்டுமானால் இந்த விசுவரூபத்தைப் பிடிதது ஒரு கையில் அடக்கிவிடலாம் போல் இருக்கிறதே. என்ன ஆச்சர்யம்! என்ன ஆச்சர்யம்! ஹே விசுவரூப, இந்த ஸுந்தர உருவை பக்தர்களின் க்ஷேமத்தின் பொருட்டு கிருபையினால தாங்கள் தரித்துள்ளீர்கள் அல்லவா! எஙகள் பார்வையும் அறிவும் குறுகியவை. அதனால் உலகாயத ஸாமான்ய திருஷ்டியினால் தங்களைப் பார்த்து மதிப்பிடுகிறோம். இப்பொழுது எனது திருஷ்டியின் தோஷம் விலகிவிட்டது. தாங்கள் மிக எளிதாக

திவ்ய திருஷ்டி கொடுத்தருளினீர்கள். அதனுல் தங்களுடைய மகிமையை உள்ளது உள்ளபடி காண்கிறேன். (16)

किरीटिनं गदिनं चक्रिणं च तेजोराशिं सर्वतोदीप्तिमन्तम् ।
पश्यामि त्वां दुर्निरीक्ष्यं समन्ताद्दीप्तानलार्कद्युतिमप्रमेयम् ॥ १७ ॥

கிரீடிநம் கதினம் சக்ரிணம் ச
தேஜோ ராசிம் ஸர்வதோ தீப்திமந்தம் ।
பச்யாமி த்வாம் துர்நிரீக்ஷ்யம் ஸமந்தாத்
தீப்தாநலார்க த்யுதிமப்ரமேயம் ॥

ஹே ஹரி, தாங்கள் தலையில் தரித்திருப்பது அதேமகுடம் தானு? அதனுடைய மகிமையும் தேஜஸும் அளவிட முடியாமல் இருக்கிறதே, ஹே விசுவமூர்த்தி, உயரத்தூக்கிய இருகைகளில் ஒன்றில் அநேக சக்ரங்களை யார்மேல் வீசுவதற்குத் தயாராகச் சுழற்றிக் கொண்டிருக்கிறீர்கள். மற்றொரு கையிலும் அதேகதைதானு? அதையும் ஏன் உயரத்தூக்கிப் பிடித்துக்கொண்டிருக்கிறீர்கள். கீழேயிருக்கும் இருகைகளும் குதிரைகளின் கடிவாளங்களை மிகவும் ஸாமர்த்தியமாகச் சமாளித்துக் கொண்டிருக்கின்றன. இந்த நிலையிலேயே எனது மனேரதத்தைப் பூர்த்திசெய்வதற்காக விசுவரூபம் எடுத்துவிட்டீர்கள் இதை நான் நன்ருக அறிந்துகொண்டேன் என்று எப்படி கூறுவேன்? இந்தப்புதுவிஷயத்தை அறிந்துகொள்ளக் கூடிய யோக்யதை எனது புத்திக்கு இல்லை. என்மனது ஆச்சர்யத்தினுல் மோகமடைந்திருக்கிறது.

தங்கள் அங்கப்ரபையின் சோபை நான்கு பக்கங்களிலும் ஒளிவீசுகிறது. இந்த சோபைக்குள் தங்களுடைய திருவுருவம் எங்கு இருக்கிறது என்றே என்னுல் நிச்சயம் செய்யமுடியவில்லை. இப்பிரபையின் முன் அக்னியின் ஒளியும் மந்தமாகி விடுகிறது சூர்யன் மின்மினிபூச்சியைப்போல் ஒளிமழுங்கி விட்டான். இந்த அத்புத தேஜஸின் தீவிரத்தன்மை அப்படி இருக்கிறது மகாதேஜஸின் மகாஸமுத்ரத்தில் ஸகலசிருஷ்டிகளும் அமுங்கிவிடும்போல் தோன்றுகிறது. அல்லது பிரளயகாலத்து மின்னல் கூட்டங்களினுல் ஆகாசமே மறைந்துவிட்டதா? ஸம்ஹாரமூர்த்தி தன் தேஜஸைக் கண்டித்துக் கண்டித்து

ஆகாசத்தில் ஒரு மண்டபம் அமைத்திருக்கிறாரா? இப்பொழுது இந்த திவ்யஞான நேத்ரத்தினாலும்கூட என்னால் பார்க்க முடியவில்லையே; தேஜஸ் அதிகமாக அதிகமாக என் தாபமும் அதிகமாகிறதே. மஹாபிரளயத்தின் வெப்பக்காற்று காலாக்னி ரூபியான சங்கரரிடம் அடங்கியிருந்தது. இப்பொழுது மொட்டுப் போன்ற அவருடைய மூன்றாவது கண்ணிலிருந்து அது வெடித்துக்கொண்டு கிளம்பிவிட்டதா? தங்களுடைய நான்கு பக்கங்களிலும் பரவியிருக்கும் மகாதேஜஸினால் பிரும்மாண்டங்கள் கருகிவிட்டனவா? எனது ஜன்மத்தில் கண்டிராத காக்ஷியை முதல் தடவையாகக் காண்கிறேன். தங்களுடைய வியாபகமும் தேஜஸும் என்னால் அளவிடக்கூடியதா? (17)

**त्वमक्षरं परमं वेदितव्यं त्वमस्य विश्वस्य परं निधानम् ।**
**त्वमव्ययः शाश्वतधर्मगोप्ता सनातनस्त्वं पुरुषो मतो मे ॥ १८ ॥**

த்வமக்ஷரம் பரமம் வேதிதவ்யம்
த்வமஸ்ய விச்வஸ்ய பரம் நிதானம் ।
த்வமவ்யய: சாச்வத தர்ம கோப்தா
ஸநாதநஸ்த்வம் புருஷோ மதோ மே ॥

ஹே தேவ, தாங்கள் அழிவில்லாதவர். மூன்றரை மாத்திரைகளுக்கும் அப்பாற்பட்டவர். சுருதி தங்கள் இருப்பிடத்தை இன்னும் தேடிக்கொண்டிருக்கிறது. ஓங்காரத்துக்கு ஆசிரய ஸ்தானமும் ஸம்பூர்ண உலகை ஒன்றுசேர்த்து வைக்கப்பட்ட இடமுமான தாங்கள் அளவிடமுடியாத கம்பீரமானவர். தினம் நவநவமாகத் தோன்றுகிறவர் தாங்கள் முதலானவர். முப்பத்திரண்டையும் தள்ளி முப்பத்து மூன்றாவதான புருஷ லக்ஷணம் பொருந்தியவர். (18)

**अनादिमध्यान्तमनन्तवीर्यमनन्तबाहुं शशिसूर्यनेत्रम् ।**
**पश्यामि त्वां दीप्तहुताशवक्त्रं स्वतेजसा विश्वमिदं तपन्तम् ॥ १९ ॥**

அநாதி மத்யாந்தமநந்த வீர்யம்
அநந்த பாஹும் சசி ஸூர்ய நேத்ரம் ।
பச்யாமி த்வாம் தீப்த ஹுதாச வக்த்ரம்
ஸ்வதேஜஸா விச்வமிதம் தபந்தம் ॥

தாங்கள் ஆதிமத்யாந்தரஹிதர் தாங்கள் ஸர்வபராக்ரமமுள்ளவர் அனந்தர் விசுவபாஹு அபரிமிதர் உலகை அளந்த பாதங்களை உடையவர். சந்திர, ஸூர்யர்களாகிய இரண்டு நேத்ரங்களினால் ஸந்தோஷத்தையும் கோபத்தையும் வெளிப்படுத்துகிறீர்கள். தமோரூப குணத்தினால் எங்களை ஆளுகிறீர்கள். சில பாக்யவான்களை கிருபாதிருஷ்டியினால் நோக்குகிறீர்கள். இவ்விதமாகத் தங்களை நான் ஸ்பஷ்டமாகக்காண்கிறேன். பிரளயகால அக்னிபோன்ற தங்கள் முகத்தைத் தெளிவாகக்காண்கிறேன். காட்டுத்தீயினால் எரியும் பர்வதத்தைத்தழுவிக்கொண்டு எப்படி ஜ்வாலைகள் நாக்கை நீட்டுகின்றனவோ அதுபோல் பற்களையும் உதடுகளையும் நக்கித் தடவிக்கொண்டு தங்களுடைய நாக்கு வெளியில் தொங்கிக் கொண்டிருக்கிறது. தங்களுடைய உடம்பின் தகிப்பினாலும் சுவாஸங்களிலிருந்து ஒளிவீசும் பிரபையினாலும் உலகம் வரண்டு சுருங்கி ஒடுங்குகிறது. (19)

द्यावापृथिव्योरिदमन्तरं हि व्याप्तं त्वयैकेन दिशश्च सर्वाः ।
दृष्ट्वाद्भुतं रूपमिदं तवोग्रं लोकत्रयं प्रव्यथितं महात्मन् ॥ २० ॥

த்யாவா ப்ருதிவ்யோரிதமந்தரம் ஹி
வ்யாப்தம் த்வயைகேந திசஸ்ச ஸர்வா: ।
த்ருஷ்ட்வாத்புதம் ரூபமிதம் தவோக்ரம்
லோக த்ரயம் ப்ரவ்யதிதம் மஹாத்மன் ॥

ஸ்வர்கம் பாதாளம் பூமி பத்துதிசைகள் ஆகிய ஸம்பூர்ண திசாசக்ரங்கள், இவைகள் தங்களாலேயே நிரப்பப்பட்டிருப்பதை ஸம்பூர்ணமாகக்காண்கிறேன். ஆனால் தங்களுடைய பயங்கர உருவத்தில் ஆகாசமே மறைந்துவிட்டது போலல்லவா தோன்றுகிறது? அல்லது அத்புதம் என்னும் அலைவரிசைகளின் மத்தியில் பதிநான்கு புவனங்களும் வலைவிரித்ததுபோல் காணப்படுகிறது என்று நினைத்துக்கொள்கிறேன். இவ்விதமாக எங்கெங்கு நோக்குகிறேனோ அங்கங்கு ஆச்சர்யமே காண்கிறேன் இந்த அசாதாரணமான வியாபகசக்தியை சுருக்கக்கூடமுடியாதுபோல் அல்லவா தோன்றுகிறது? தங்கள் உருவத்தின் உக்ரத்தை என்னால் தாங்கமுடியவில்லையே, ஜகத்துக்கும் இதனால் ஸுகம் ஏற்படப்போவதில்லை, பிராணனுக்கும் இதுமிகுந்த கஷ்டமாக

வல்லவா இருக்கிறது? தங்களுடைய இந்த பயங்கர உருவத்தைப் பார்த்துவிட்டுப் பயம் நதியின் வெள்ளம்போல் பெருக்கெடுத்து ஓடுகிறது. மூன்று உலகங்களும் துக்கஅலைகளில் மூழ்குகின்றன.

தாங்கள் மகாத்மா, தங்களுடைய தரிசனத்தால் துக்கமும் பயமும் ஏன் ஏற்படவேண்டும்? இங்கு என்னுல் காணப்பட்ட இவ்வுருவம் ஸுகத்தைத்தரவில்லை. திவ்யதிருஷ்டியினுல் தங்களுடைய உருவத்தைப்பாராத வரைக்கும் உலகதிருஷ்டி ஸுகரமாகவேதான் தோன்றிக்கொண்டிருந்தது. இப்பொழுது தங்களுடைய இந்த உருவத்தைப் பார்த்துவிட்டு விஷய வாசனையின் துர்கந்தம் ஸகிக்கமுடியாமல் எழுகிறது. தங்களை கண்டு முன்போல் என்னுல் ஆலிங்கனம் செய்துகொள்ள முடியுமா? இந்தப்புதுவிதமான சங்கடத்தில் எப்படித்தவிப்பது? இதிலிருந்து தப்பிப் பின்வாங்கினுல் தடுக்கமுடியாத ஜனனமரண சக்ரத்தில் சிக்கிக்கொள்ளவேண்டும். முன்னேறினுல் அபார விஸ்தாரமான தங்களை எவ்விதம் ஆலிங்கனம் செய்துகொள்வது- இவ்விதமான இரண்டுவித சங்கடங்களில் மாட்டிக்கொண்டு அப்பாவிகளான மூன்று உலகங்களும் தவிக்கின்றன. இதை நன்முக அறிந்துகொண்டுவிட்டேன். ஒருவன் தீயினுல் வெந்த புண்ணை குளிர்ந்த ஜலத்தில் கழுவநினைத்து ஸமுத்ரத்தில் விழுந்து அதன் அலைகளுக்குப் பயப்படுவதுபோல் இருக்கிறது எனது செய்கை உலகமே தங்களைக்கண்டு அலறுகிறது. (20)

**अमी हि त्वा सुरसङ्घा विशन्ति केचिद्भीताः प्राञ्जलयो गृणन्ति ।**
**स्वस्तीत्युक्त्वा महर्षिसिद्धसङ्घाः स्तुवन्ति त्वां स्तुतिभिः पुष्कलाभिः ॥**

அமீ ஹி த்வா ஸுரஸங்கா விசந்தி
கேசித் பீதா: ப்ராஞ்ஜலயோ க்ருணந்தி ।
ஸ்வஸ்தீத்யுக்த்வா மஹர்ஷி ஸித்த ஸங்கா:
ஸ்துவந்தி த்வாம் ஸ்துதிபி: புஷ்கலாபி: ॥

இந்த விசுவரூபத்தில் ஒருபுறம் தேவஸமுதாயம் இருக்கின்றதே அது ஸுகமாகத்தான் தோன்றுகிறது. இவர்கள் தங்கள் தேஜஸினுல் எல்லா கர்வவிதைகளையும் சுட்டெரித்து விட்டுத் தங்களிடம் ஒன்றி இருக்கிருர்கள். இயற்கையிலேயே பயந்த ஸ்வபாவம் உடையவர்கள், தங்கள் திருமுன் கரம்

குவித்துப்பிரார்த்தனை செய்கிறார்கள். ஹே தேவ நாங்கள் அவித்யாசமுத்திரத்தில் வீழ்ந்து கிடக்கிறோமே, விஷயமாகிய நதித்திடலில் சிக்கி அவஸ்தைப்படுகிறோம். ஒருபக்கம் ஸம்ஸாரம் மறுபக்கம் ஸ்வர்க்கம் இதில் சிக்கி அவதிப்படுகிறோம். இதிலிருந்து எங்களை விடுதலைசெய்ய உங்களைத்தவிர யாரால் முடியும்? நாங்கள் எல்லோரும் பிராணனுடன் உங்களைசரணமடைகிறோம். மகரிஷிகள், ஸித்தர்கள், வித்யாதரர்கள் எல்லோரும் மங்களகரமான வாக்குகளால் உங்களைத்துதிக்கிறார்கள். (21)

**रुद्रादित्या वसवो ये च साध्या विश्वेऽश्विनौ मरुतश्चोष्मपाश्च ।**
**गन्धर्वयक्षासुरसिद्धसङ्घा वीक्षन्ते त्वां विस्मिताश्चैव सर्वे ॥ २२ ॥**

ருத்ராதித்யா வஸவோ யே ச ஸாத்யா
விச்வேऽச்வினௌ மருதஸ்சோஷ்மபாஸ்ச ।
கந்தர்வ யக்ஷாஸுர ஸித்த ஸங்கா
வீக்ஷந்தே த்வாம் விஸ்மிதாஸ்சைவ ஸர்வே ॥

இந்த ருத்ர ஆதித்யர்களுடைய ஸமுதாயம், வஸுக்களுடன் சேர்ந்த தேவக்கூட்டம், இரு அசுவினி குமாரர்கள் தங்கள் வைபவங்களுடன்கூடிய வாயுபகவான், பிதருக்கள் யக்ஷர்கள் கந்தர்வர்கள, ராக்ஷஸர்கள், இந்திரனை முன்னிட்ட ஸித்த கணங்கள் எல்லோரும மிக்கத்திகிலுடனும் ஆவலுடனும் தங்கள் தங்கள் உலகங்களிலிருந்து பிரபுவின் மகாமூர்த்தியைப்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். பார்த்துப்பார்த்து ஒவ்வொருக்ஷணமும அந்தக்கரணத்தில் ஆச்சர்யம் நிறைந்தவர்களாய் மகுடமணிகளினால் தங்களுக்கு ஹாரத்தி காட்டுகிறார்கள். இனிய மிருதுவான சப்தத்தால் ஜயகோஷம்செய்து ஸம்பூர்ண ஸ்வர்க்கத்தை எதிரொலிக்கச்செய்கின்றனர். கைகளைத் தலைமேல் குவித்துக கொள்கிறார்கள். அவர்களுடைய விநயரூபமான விருக்ஷங்கள் நிரம்பியவனத்தில் ஸாத்விகபாவமான வசந்தம் தளிர்த்திருக்கிறது. அவர்களின் குவிந்த கரங்களாகிய தளிர்களின் மத்தியில் பழ ஸ்வரூபமாகததங்களைக காண்கிறேன். (22)

**रूपं महत्ते बहुवक्त्रनेत्रं महाबाहो बहुबाहूरुपादम् ।**
**बहूदरं बहुदंष्ट्राकरालं दृष्ट्वा लोकाः प्रव्यथितास्तथाहम् ॥ २३ ॥**

ரூபம் மஹத்தே பஹு வக்த்ர நேத்ரம்
மஹாபாஹோ பஹு பாஹூரு பாதம் ।
பஹூதரம் பஹு தம்ஷ்ட்ரா கராளம்
த்ருஷ்ட்வா லோகா: ப்ரவ்யதிதாஸ் ததாஹம் ॥

மகராஜ், எங்களுடைய கண்களுக்கு பாக்யம் உதயமாகி இருக்கிறது. மனதில் ஸுகமாகிய வஸந்தம் வீசுகிறது. தாங்கள் இன்று எங்களுக்காக அபார விசுவரூபத்தைக் காண்பிக்கிறீர்கள். மூன்று உலகங்களிலும் தங்களுடைய விசுவ ரூபத்தைக்கண்டு தேவர்களும் பயமடைகின்றனர். எந்தப்பக்கம் திரும்பினாலும் இந்த உருவம் எதிரில் நிற்பதுபோலவே தோன்றுகிறது. இவ்விதமாக இவ்வுருவம் ஒன்றாகவே இருந்தாலும் இதில் அநேக விசித்ர பயங்கர முகங்களும் இருக்கின்றன. அநேக கண்களும் அஸ்த்ரசஸ்திரங்களுடன் கூடிய அநேக கைகளும் இருக்கின்றன. அநேக தொடைகளும் கால்களும் அநேக வயிறுகளும் நானாவித வர்ணங்களில் காணப்படுகின்றன. ஒவ்வொரு முகத்திலும் ஆவேசமான உன்மத்தம் நிரம்பி இருக்கிறது.

மகாகல்பத்தின் முடிவில் கோபமடைந்த யமன் பிரளயாக்னியாகிய அடுப்பை மூட்டிவிட்டதுபோல் அல்லவா இருக்கிறது? அல்லது இம்முகங்கள் சங்கரபகவானுடைய ஸம்ஹாரம் செய்யும் யந்திரங்களா? பிரளயபைரவ ஸமுதாயமா? அன்னமாகச்சமைத்துப் பரிமாறுவதற்கு எடுத்து வைக்கப்பட்ட யுகாந்த சக்தியின் பாத்திரங்களா? எங்கெங்கெல்லாம் தங்களுடைய முகங்கள் காணப்படுகின்றனவோ, அங்கங்கெல்லாம் குகைகளைப்போலத் திறக்கப்பட்ட வாயில் நுழைந்த சிங்கங்களென தங்கள் பற்கள் காணப்படுகின்றன. நாசப்படுத்தும் கொள்ளிவாய் பிசாசு காளராத்திரியை ஆசிரயமாக அடைந்து ஆனந்தத்துடன் வெளிக்கிளம்பியதுபோல தங்களுடைய தாடைகள் இரண்டும் பிரளயகாலத்தின் ரத்தத்தினால் பூசப்பட்டதுபோல் காணப்படுகின்றன. யுத்தத்தைக் காலன் விரும்பி அழைத்தது போல் அல்லவா இருக்கிறது? எல்லாவற்றையும் ஸம்ஹரிக்கும் மிருத்யு உன்மத்தனாகப் புறப்பட்டிருக்கிறானா? அசாதாரணமான பயங்கரமாகவல்லவா தங்களது உருவம் காணப்படுகிறது.

இந்த தீனமான லோக சிருஷ்டியின் பக்கம் சற்றுத் திரும்பிப் பார்த்தால், துக்க ரூபமான காளிந்தி நதிக்கரையில் அவள்

விருக்ஷமாக நின்று கொண்டிருப்பதுபோல் இருக்கிறது. நிச்சய மாகத் தங்களுடைய உருவம் மஹாமிருத்யு ஸாகரம்தான். அதில் த்ரைலோக்ய வாழ்வான தோணி சோகரூபமான அலை களால் தாக்கப்பட்டுப் புரண்டுவிடும்போல் ஆடுகிறது. ஹே வைகுண்டா, தாங்கள் என்னிடம் இப்படி கூறினால், அதாவது ' அட ! உனக்கு மூவுலகங்களைப்பற்றியும் மற்றவர்களைப்பற்றியும் என்ன கவலை வந்தது? நீ உன் பாட்டில் தியானஸுகத்தை திவ்யதிருஷ்டியோடு அநுபவி '' தாங்கள் இவ்விதம் கூறினீர் களானால் நான் ஸாதாரண ஜனங்களைக் காப்பாற்றத் தங்கள் முன் கேடயமாக நிற்பது வீணே, உண்மையாகச் சொன்னால் எனது உயிரே நடுங்குகிறது. ஒருகாலத்தில் பிரளயகால ருத்ரர்கள் என்னைக்கண்டு நடுங்குவார்கள். என்னைக்கண்டால் மிருத்யுதேவன் ஒளிந்து கொள்வான். இப்படிப்பட்ட நான் இன்று பயத்தால் நடுங்குகிறேன். தாங்கள் என்னை இந் நிலைக்கு உள்ளாக்கிவிட்டீர்கள். ஹே பகவன்! தங்களது இவ் வுருவம் விசித்ரமகாமாரியைப் போலல்லவா இருக்கிறது? இதற்குப்பெயர் விசுவரூபமா? இது பயங்கரத்துக்குமல்லவா பயத்தை அளிக்கிறது? (23)

नभःस्पृशं दीप्तमनेकवर्णं व्यात्ताननं दीप्तविशालनेत्रम् ।
दृष्ट्वा हि त्वां प्रव्यथितान्तरात्मा धृतिं न विन्दामि शमं च विष्णो ॥

நப:ஸ்ப்ருசம் தீப்தமநேகவர்ணம்
வ்யாத்தாநநம் தீப்த விசால நேத்ரம் |
த்ருஷ்ட்வா ஹி த்வாம் ப்ரவ்யதிதாந்தராத்மா
த்ருதிம் ந விந்தாமி சமம் ச விஷ்ணோ ||

தங்களது அப்படிப்பட்ட முகங்கள் எங்கும் பரவியிருப்பதைப் பார்க்கும்போது ஆகாசமே அற்பமாகத் தோன்றுகிறது. அவை ஆகாசத்தின் விஸ்தாரத்திலும் அடங்காமல் மூன்று உலகங்களின் வாயுக்களாலும் மறைக்கப்படாமலல்லவா இருக்கின்றன? இவைகளிலிருந்து கிளம்பும் பெருமூச்சினால் அக்னிக்கும் எரிச்சல் உண்டாகிறது. இவைகள் எப்படி அங்கும் இங்கும் சிதறிக் கிடப்பதாகத்தோன்றுகிறதோ அதைப்போல் ஒன்றைப்போல் ஒன்று இருப்பதில்லை. பிரளய காலத்து ஊழித்தீ இவைகளி லிருந்து பிரகாசத்தைக் கடன் வாங்கிக்கொண்டது போலும்

மூன்றுலகங்களையும் இவைகள் சாம்பலாக்க வல்லவைகள் போலும், இம்முகத்துக்குள் பற்களும் வேறுமுகங்களும் தாடைகளும் இருக்கின்றனவே, ஆழித்தீ இந்த முகங்களிலிருந்தே உத்பத்தியாகியதா? வாயுவின் பிரசண்டமாருதத்துக்கு இருப்பிடமா இவைகள்? வடவானலத்தை நாசமாக்குவதற்கு எழுந்த விஷஜ்வாலைகளா இவைகள். அக்னி காளகூட விஷத்தைக் குடித்துவிட்டதா? புதுவிதமான மிருத்யு தேவனின் படைப்பா? எத்தனை விசாலமான முகங்கள்? திசைகள் விண்டுபோய் ஆகாசத்தில் நாற்புறமும் சிதறிக்கிடக்கின்றனவா!

பூமியை பாயாகச்சுருட்டி ஹிரண்யாக்ஷன் எடுத்துக்கொண்டு பாதாள குகையில் நுழைந்தபோது சங்கரர் அக்குகைகளைக் காண்பித்தார் அல்லவா! அதுபோல் இருக்கின்றன இம்முகங்களின் வாய்கள். நடுவிலிருக்கும் நாக்குகள் வெளிநீட்டி அலை பாயும்போது உலகம் முழுவதையும் இவைகள் ருசி பார்த்தாலும் திருப்தியடையாதுபோல் இருக்கின்றன. தாங்கள் வேண்டுமென்றே அவைகளின் பசியை அதிகமாக்கி விட்டீர்களா? பாதாள ஸர்ப்பங்கள் அனைத்தினுடயவும் விஷ ஜ்வாலைகள் வெளி வந்தாற்போல் இந்த முகத்தின் வாய்கள் ரூபமான குகைகளிலிருந்து நாக்காகிய ஸர்ப்பங்கள் வெளிப்பட்டு ஜ்வாலைகளை வீசுகின்றன. பிரளயகாலத்து மின்னல்களினால் ஆகாசத்தில் சித்திரக் கோலங்கள் இழைத்ததுபோல் தங்கள் உதடுகளைக் கிழித்துக்கொண்டு வெளியில் நீட்டிக்கொண்டு நிற்கும் கோரப் பற்கள் பயங்கரச் சித்திரங்கள் மாதிரி தென்படுகின்றன, தங்கள் நெற்றியிலேறி பயத்துக்கும் பயத்தை விளைவித்துக் கொண்டிருக்கின்றன. அல்லது மகாமிருத்யுவின் பிரவாகம் இருட்டில் மறைந்து பெருகுகிறதா? இவ்வித பயங்கர உருவம் எடுத்துக்கொண்டு தாங்கள் என்ன கார்யம் செய்யப்போகிறீர்களோ தெரியாது! ஆனால் பிராணபயமான மரணம் என்னைச் சூழ்ந்துகொண்டது போலல்லவா தோன்றுகிறது.

ஹே தேவ! நான் விசுவரூபம் பார்க்க வேண்டுமென்று இச்சைப்பட்ட பலன் கைமேல் கிடைத்துவிட்டது. நான தங்கள் உருவத்தைப் பார்த்தாகிவிட்டது. கண்கள் திருப்தியடைந்து விட்டன. இந்த மண்ணாலான தேஹம அழிந்தாலென்ன; அதனால் என்ன துக்கம்? ஆனால் எனது சைதன்யமான அறிவும் அழிந்துவிடும்போலல்லவா இருக்கிறது. சரீரம் பயத்தினால் நடுங்குகிறது, மனது தபிக்கிறது, புத்தி மறைகிறது; அபிமானம்

காற்றாகப் பறந்துவிட்டது. ஆனால் இவைகளிலிருந்து எந்த ஆனந்தம் என்னும் மொட்டு மலருமோ அந்த ஆனந்தத்தை அனுபவிக்கும் எனது அந்தராத்மாவும் அல்லவா நடுங்கிக் கொண்டிருக்கிறது. ஸாக்ஷாத்காரத்தின் பிரமாதம் அபரிமிதம். ஞானம் எல்லை கடந்துவிட்டது. குரு சிஷ்ய ஸம்பந்தமும் இனி குலைந்துவிடுமோ என்று பயமாக இருக்கிறது.

தங்களுடைய தரிசனத்தினால் ஹ்ருதயத்தில் வ்யாகூலமும் பயமுமே ஏற்பட்டிருக்கிறது. அதற்கு தைரியம் என்னும் மறைப்பை என்னால் ஆனமட்டும் போர்த்தி மூடுகிறேன். ஆனால் எனது பேரைக் கேட்டதுமே தைரியமும் மறைந்துவிடுகிறது. அதற்கும் விசுவரூப தரிசனம் காணக் கிடைத்ததுபோல் அல்லவா இருக்கிறது. தாங்கள் எனக்கு உபதேசித்து உபதேசித்து என்னைக் கலவரப்படுத்திச் சிக்கவே வைத்துவிட்டீர்கள். பாவம் உயிர் இதிலிருந்து தப்பி இளைப்பாற நான்கு பக்கமும் ஓடுகிறது. ஆனால் அதற்கு ஒருபுறமும் இளைப்பாற இடம் கிடைக்கவில்லை. இந்தவிதமாக விசுவரூபமாகிய கோடரியினால் சராசரத்தின் உயிர்கள் அனைத்தும் அழிந்துவருகின்றனவே, தங்களிடம் கூறவே பயமாக இருக்கிறது. எப்படிக் கூறாமல் இருப்பது? தப்பி எங்கு ஓடுவது? (24)

**दंष्ट्राकरालानि च ते मुखानि दृष्ट्वैव कालानलसन्निभानि ।**
**दिशो न जाने न लभे च शर्म प्रसीद देवेश जगन्निवास ॥ २५ ॥**

தம்ஷ்ட்ரா கராளானி ச தே முகாநி
த்ருஷ்ட்வைவ காலாநல ஸந்நிபானி।
திசோ ந ஜாநே ந லபே ச சர்ம
ப்ரஸீத தேவேச ஜகந்நிவாஸ॥

கண்களுக்கு முன்னாலேயே அகண்டமகாபயம் என்னும் ஆகாசம் இடிந்து தலையில் விழக்காத்துக் கொண்டிருக்கும்போது எப்படி இருக்குமோ அப்படி இருக்கிறது இந்த முகங்களைப் பார்த்து. இகறுகளும் பற்களும் இடியோசை போன்ற சப்தத்தை உண்டாக்குகின்றன. உதடுகள் மூடவே இல்லை. பிரளயகாலத்தில் அஸ்திரமழை பொழிந்தாற்போல் நாற்புறமும் பிரபை வீசுகிறது. தக்ஷகன் விஷத்தைக் குடித்தது போலவும் காளராத்ரிக்கு பூதாவேசம் வந்ததுபோலவும் அக்னி அஸ்

திரத்தை மின்னல் எதிர்த்து அணைப்பதற்கு முயற்சிசெய்வது போலவும் தங்கள் முகங்கள் பயங்கரத்தோற்றத்தை அளிக்கின்றன. மரண ரூபமான ஜலபிரவாஹத்திலிருந்து ஆவேச அலைகள் கிளம்பிக் கொண்டிருக்கின்றன. ஸம்ஹார ஸமயத்தில் பிரசண்டவாயுவும் கல்பாந்த காலத்து அக்னியும் ஒன்றுக்கொன்று கலந்ததுபோல் இருக்கிறது.

ஸம்ஹாரசக்தியான தங்கள் முகங்களைப்பார்த்து எனக்கு அவ்விதபயமே தோன்றுகிறது. பிரமையினால் திக்குதிசை தெரியவில்லை. நினைவு தப்பிவிடும்போல் இருக்கிறது. விசுவ ரூபதரிசனம் கண்டது போதும், போதும், அதனால் எனது நாக்கு உலருகிறது இப்பொழுது தங்களுடைய ஸ்வரூபத்தைத் தங்களுக்குள் அடக்கிக் கொள்ளுங்கள். இப்படி பயங்கரமாக இருக்குமென்று தெரிந்தால் தங்களிடம் கேட்டிருக்கவே மாட்டேன். இந்த விஸ்வரூபமாகிய பிரளயத்திலிருந்து என்னைக் காப்பாற்றுங்கள். ஹே தேவதேவ தாங்கள் சைதன்யத்தினால் உலகுக்கு உயிர் அளித்தீர்கள். இதைத்தாங்கள் மறந்து விட்டீர்களா? மாறாக அதை அழிக்க நிச்சயம் கொண்டீர்களா? ஹே தேவ, சீக்கிரமாக பிரஸன்ன சித்தத்துடன் சாந்தமடையுங்கள். தங்கள் மாயையை மறைத்துக்கொள்ளுங்கள். என்னை இந்த மகாபயத்திலிருந்து விடுவியுங்கள். நான் வியாகூலமடைந்து தங்களை அடிக்கடி வேண்டிக் கொள்ளுகிறேன்.

அமராவதியை அசுரர்கள் எதிர்த்தபோது நான் ஒருவனாகவே அதை எதிர்க்கவில்லையா! எனக்கு காலனுடைய வாயில் விழக்கூட பயம் இல்லை. ஆனால் இது அதுமாதிரியல்ல. இதில் தாங்கள் மிருத்யுவை ஜயித்துவிட்டு உலகை ஒரு துளி ஜலம்போல் பருகத் தயாராக இருக்கிறீர்கள். பிரளயகாலம் வரும் முன்பே தாங்கள் அந்தக் காலத்தை உத்பத்தி செய்துவிட்டீர்கள். அப்பாவிகளான இம்மூன்று உலகங்களும் அற்பாயுஸாக ஆகிவிட்டன. ஐயோ எத்தனை துர்பாக்யம்! சாந்தியை விரும்பிய எனக்கு இப்பொழுது இடையூறு ஏற்பட்டுவிட்டதே. (25)

**अमी च त्वां धृतराष्ट्रस्य पुत्राः सर्वे सहैवावनिपालसङ्घैः ।**
**भीष्मो द्रोणः सूतपुत्रस्तथासौ सहास्मदीयैरपि योधमुख्यैः ॥ २६ ॥**

அமீ ச த்வாம் த்ருதராஷ்ட்ரஸ்ய புத்ரா:
ஸர்வே ஸஹைவாவநிபால ஸங்கை: ।
பீஷ்மோ த்ரோண: ஸூதபுத்ரஸ் ததாஸௌ
ஸஹாஸ்மதீயைரபி யோத முக்யை: ॥

இவ்வுலகங்கள் இப்பொழுது விழுங்கப்பட இருக்கிறதே. தாங்கள் இதைக் கொஞ்சம் கொஞ்சமாக விழுங்கிக்கொண்டுதான் இருக்கிறீர்கள். தாங்களே வாயைத் திறந்துகொண்டு எதிரிலிருக்கும் இந்த ஸேனைகளை கொஞ்சம் கொஞ்சமாக விழுங்கிக் கொண்டிருப்பதை எனது கண்கூடாகப் பார்க்கிறேன். இந்த கௌரவகுல வீரனும் அந்தகனை திருதராஷ்டிரனின் புதல்வனுமான துரியோதனன் தன் பரிவாரங்களுடன் தங்களுடைய வாய்க்குள் நுழைந்துகொண்டிருக்கிறன். அவனுக்கு உதவியாக தேச தேசங்களிலிருந்து வந்திருக்கும் ஸேனைகளைத் தாங்கள் கடித்து விழுங்குவதைப் பார்க்கிறேன். யானைக் கூட்டங்களை ஜலம் குடிப்பதுபோல் விழுங்குகிறீர்கள். மற்ற ஸைன்யங்களைத் தேனை நக்குவதுபோல் நக்கிக் காலிபண்ணுகிறீர்கள். பீரங்கி முதலிய மரண யந்திரங்களும் காலாட்படைகளும் தங்கள் வாய்களுக்குள் மறைகின்றன. யமனுடைய சகோதரர்களும் உலகை நாசம் செய்வதுமான கோடி கோடி அஸ்த்ரங்களை விழுங்குகிறீர்கள். சதுரங்க ஸேனைகளையும் குதிரை பூட்டிய ரதங்களையும் பல்லில் படாமல் விழுங்கி தாங்கள் எவ்வளவோ ஸந்தோஷம் அடைகிறீர்கள்.

ஸத்யநெறியிலும் சூரத்தன்மையிலும் பீஷ்மரைப்போல் யார் இருக்கிறார்கள்? அவரையும் மகாவீரரான பிராம்மணர் துரோணரையும் தாங்கள் விழுங்கிவிட்டீர்கள். சூர்ய புத்ரனை கர்ணனும் இப்பொழுது சென்றுவிட்டான். எங்களையும்கூட வெள்ளரிக்காயைப்போல் தின்றுவிடுவீர்கள். ஐயோ தெய்வமே! இது என்ன! இவ்வாறு நேர்ந்துவிட்டதே. நான் தங்களிடம் வரம் கேட்கப்போய் உலகத்திற்கல்லவா நாசம் விளைந்துவிட்டது! முதலில் தாங்கள் தங்களுடைய அபார மகிமைகளில் சிலவற்றைக் காட்டியருளினீர்கள். அவைகள் இப்படிப் பார்க்க பயங்கரமாக இராமல் குதூகலமளிப்பதாக இருந்தன. அதனாலேயே நான் விசுவரூபத்தைப் பார்ப்பதற்குக் கேட்டுவிட்டேன். பிராரப்தத்தைத் தடுப்பதற்கு முடியாது என்பது நிச்சயமாகத் தெரிந்திருக்கும்போது புத்தி எப்படி வரப்போவதைப்பற்றி

யோஜிக்கும்? என்றால் உலகம் மரணம் அடையும் பாபத்தை நான் தலையில் சுமப்பதை எப்படித் தடுக்கமுடியும்?

முன்னால் தேவர்கள் அமிர்தம் கடைந்தனர் அமிருதமும் காலகூட விஷமும் தோன்றின. அமிருதத்தால் திருப்தியடைய முடியாமல் தேவர்கள் காலகூடத்தால் நடுங்கினார்கள். பகவான் சங்கரர் அந்த சங்கடத்தைப் போக்கும் பொறுப்பை ஏற்றுக் கொண்டார். இதைப் பார்க்கும்பொழுது அந்த ஆபத்து மிகவும் துச்சமாகத் தோன்றுகிறது. இப்பொழுது இந்த ஊழித்தீயை யார் அணைப்பார்கள்? விஷத்தால் மூடப்பட்ட இந்த ஆகாசத்தை யார் விழுங்குவார்கள்? மகாகாலனுடன் விளையாட யாருக்கு ஸாமர்த்யம் இருக்கிறது?

அர்ஜுனன் இவ்வாறு துக்கித்துப் பலவாறு வியாகூலத்தால் சோகமடைந்தான். ஆனால் பகவானுடைய இந்த விசுவரூபத்தின் அபிப்ராயம் அவனுடைய புத்தியில் எட்டவே இல்லை. அர்ஜுனன் தான் கொல்பவன் என்பதையும் கௌரவர்கள் தன்னால் கொல்லப்படுபவர்கள் என்பதையும் எண்ணி எந்த மகா மோஹத்தை அடைந்திருந்தானோ அதை விலக்கவே பகவான் இந்த விசுவரூபத்தை எடுத்தார் என்பதை அவன் அறவே மறந்துவிட்டான். உலகில் ஒருவரையும் ஒருவரும் அழிக்கவில்லை. நானே யாவரையும் கொல்லுகிறேன் என்பதை உணர்த்தும் பொருட்டு அவர் இந்த விசுவரூபம் எடுத்தார். அர்ஜுனன் அதை மறந்து வீணாக இப்போது துக்கித்துக் கொண்டிருக்கிறான். அவனுடைய அறிவிற்கு இவ்விஷயம் எட்டவே இல்லை. வீணாக நடுங்கிக்கொண்டிருக்கிறான். (26)

**वक्त्राणि ते त्वरमाणा विशन्ति दंष्ट्राकरालानि भयानकानि ।**
**केचिद्विलग्ना दशनान्तरेषु संदृश्यन्ते चूर्णितैरुत्तमाङ्गैः ॥ २७ ॥**

வக்த்ராணி தே த்வரமாணா விசந்தி
தம்ஷ்ட்ரா கராளானி பயாநகானி ।
கேசித் விலக்னா தசநாந்தரேஷு
ஸந்த்ருச்யந்தே சூர்ணிதைருத்தமாங்கை: ॥

அர்ஜுனன் திரும்பவும் கூறுகிறான். வாளும் கவசமும் தரித்த வீரர்கள் இருபக்கத்து ஸேனைகளிலிருந்தும் ஆகாசத்தைச்

சூழ்ந்த மேகபடலங்கள் மறைவதைப்போல் மறைகின்றனர். மகாகல்பத்தின் முடிவில் கிருதாந்தனை ஸம்ஹாரமூர்த்தி கோபித்தெழும்போது பாதாளம் முதலிய 14 உலகங்களும் நாசம் அடைகின்றன. அதைப்போலவும், பாக்யம் பிரதிகூலமாகும் பொழுது சேர்த்துவைத்த தனம் ஒரு நொடியில் மறைவதுபோல வும், இந்த விஸ்தாரமான ஸேனைகள் தங்கள் வாயில் நுழைந்து கொண்டிருக்கின்றன. ஒருவர்கூட இதில் மீறமாட்டார்கள் ஒட்டகம் அசோக விருக்ஷத்தின் இலைகளைச் சுவைத்துத் தின் பதைப்போல் இவர்கள் தங்களால் சுவைக்கப்படுகின்றனர். முகுடங்களுடன் கூடிய தலைகள் தங்களுடைய பற்களுக்கும் இகறுகளுக்கும் நடுவே அகப்பட்டு நறநறவென்று கடிக்கப்படு கின்றன. முகுடங்களிலுள்ள ரத்னங்கள் தங்களுடைய பற்களின் இடுக்கில் பளபளக்கின்றன. அவைகளுடைய பொடிகள் தங்க ளுடைய நாக்கில் விதவிதமான வர்ணங்களை ஏற்படுத்துகின்றன.

விசுவரூபியான காலன் ஜனங்களது சரீரத்தையும் பலத் தையும் கபளீகரித்துவிட்டான். அவர்களுடைய தேகங்களில் வெறும் தோலைமட்டும் விட்டுவைத்திருக்கிருன். உத்தம அங்கம் என்று கூறப்படுகிற இச்சரீரத்தின் தலைகள் கபளீகரிக்கப்பட்டு விட்டன. அவைகளுடைய முண்டங்கள் மட்டும் மீதியாக உள்ளன. ஜன்மத்தையடைந்த பிராணிகளுக்கு வேறுமார்க்கமே கிடையாதா! எல்லா பிராணிகளும் முகரூபமான குகையில் பிரவேசிக்கின்றனவே, பரமாத்மாவான தாங்கள் பேசாமல் அவைகளை விழுங்கிக்கொண்டே இருக்கிறீர்களே! பிரும்மா முதலிய தேவர்களும் இந்த வாயில் அங்கும் இங்கும் ஓடிக் கொண்டிருக்கிருர்கள். வேறு ஸாமான்ய ஜனங்கள் குகைமாதிரி யுள்ள தொண்டைக்குள் மறைகிருர்கள். வேறு இதரப் பிராணி கள் வாய்க்குள் சென்றதுமே நாசமடைகின்றன. இவ்விதமாக நிச்சயமாக ஒரு பிராணியும் இம்முகத்திலிருந்து தப்புவதில்லை.

**यथा नदीनां बहवोऽम्बुवेगाः समुद्रमेवाभिमुखा द्रवन्ति ।**
**तथा तवामी नरलोकवीरा विशन्ति वक्त्राण्यभिविज्वलन्ति ॥ २८ ॥**

யதா நதீநாம் பஹவோZம்பு வேகா:
ஸமுத்ரமேவாபிமுகா த்ரவந்தி ।
ததா தவாமீ நரலோக வீரா
விசந்தி வக்த்ராண்யபிவிஜ்வலந்தி ॥

மஹாநதி பிரவாகம் ஸமுத்ரத்தில் விழுவதுபோல எல்லா ஜகத்துப்பிராணிகளும் இம்முகத்துள்வந்து விழுகின்றன. பிராணிகள் ஆயுள்மார்க்கத்தில் இரவுபகல் என்னும் ஏணிப்படி வழியாக ஏறி ஏறி வேகமாக இம்முகத்தை அடைய வந்து கொண்டிருக்கிறார்கள். (28)

**यथा प्रदीप्तं ज्वलनं पतङ्गा विशन्ति नाशाय समृद्धवेगाः ।**
**तथैव नाशाय विशन्ति लोकास्तवापि वक्त्राणि समृद्धवेगाः ॥ २९ ॥**

யதா ப்ரதீப்தம் ஜ்வலநம் பதங்கா
விசந்தி நாசாய ஸம்ருத்த வேகா: ।
ததைவ நாசாய விசந்தி லோகாஸ்
தவாபி வக்த்ராணி ஸம்ருத்த வேகா: ॥

எரிந்துகொண்டிருக்கும் பர்வத குகையில் விட்டில் பூச்சிகள் வந்துவிழுவதுபோல் ஜனங்கள் இவ்வாயில்வந்து விழுந்து கொண்டிருக்கிறார்கள். இவ்வாயில் நுழைந்த பிராணிகள் சுட்ட தோசைக்கல்லில் விழுந்த ஜலம்போல் சுவறிவிடுகிறார்கள். அவர்களுடைய நாமரூப விகாரங்கள் பிறகு ஏது? (29)

**लेलिह्यसे ग्रसमानः समन्ताल्लोकान्समग्रान्वदनैर्ज्वलद्भिः ।**
**तेजोभिरापूर्य जगत्समग्रं भासस्तवोग्राः प्रतपन्ति विष्णो ॥ ३० ॥**

லேலிஹ்யஸே க்ரஸமாந: ஸமந்தாத்
லோகான் ஸமக்ரான் வதனைர் ஜ்வலத்பி:
தேஜோபிராபூர்ய ஜகத் ஸமக்ரம்
பாஸஸ் தவோக்ரா: ப்ரதபந்தி விஷ்ணோ ॥

இவ்வளவு விழுங்கிய பிறகும் தங்கள் பசி ஆறவில்லையா? அஸாதாரணமான இப்பசி எவ்வாறு ஏற்பட்டது உங்களுக்கு? ரோகி ஜ்வரத்தில் விழுந்ததுபோலும், பிச்சைக்காரனுக்குப் பஞ்சம் வந்தது போலும், உதடுகளை நக்கிக்கொண்டு நாக்குகள் துடிதுடித்துக்கொண்டிருக்கின்றனவே, இந்த நாக்கிலிருந்து ஒன்றும் தப்பிப்பிழைக்க முடியாது என்று தோன்றுகிறது. ஸமுத்ரத்தை ஒருதுளிபோல் நக்குவதும் பர்வதங்களைக்கவளங்களாக வாரி வாயில் போட்டுக்கொண்டு சுவைப்பதும் ஸம்

பூர்ணபிரும்மாண்டங்களை கற்கண்டு கட்டிகள்போல் தாடையில் அடக்கிக்கொள்வதும் இது என்ன பசியோ! நாக்கின்துடிப்பைப் பார்த்தால் திசைகளை நக்கிவிடுவோமா? நக்ஷத்திரங்களை நக்கித் துடைத்துவிடுவோமா? என்றல்லவா தோன்றுகிறது. போகவாசனையால் காமத்துக்குப் பசி இன்னும் தீவிரமாவது போலும், விறகினுல் அக்னியின் ஜ்வாலை அதிகமாவது போலும் இப்பிரும்மாண்டங்களைப் புஜித்துப் புஜித்துத் தங்களுடைய பசி இன்னும் தீவிரமாகிவிட்டது போலும்!

பிரமையால் ஒருமுகம் நானுவித முகமாகத் தோன்றுகிறது. அதன் விசாலமோ இம்மூன்று உலகமும் இந்த நாக்குநுனியில் தங்கும்படியல்லவா இருக்கிறது? வடவாக்னியைச் சுருக்கி இந்த நாக்கு நுனியில் வைத்ததுபோல் அல்லவா இருக்கிறது? இதுபோல் இனனும் எத்தனையோ முகங்கள் தங்களுக்கு இருக்கலாம். ஆனுல் திரிபுவனங்கள் மூன்றுதானே உள்ளன? இந்தத் தீனமான உலகத்தைத் தங்கள் பசியாகிய தீ சூழ்ந்து கொண்டிருக்கிறது. மான் கூட்டங்கள் காட்டுத்தீயில் சிக்கிக் கொண்டதைப்போல். நீங்கள் தேவனல்ல இந்த ஜகதது செய்த கர்மமெல்லாம் திரண்டு ஒரு உருவெடுதது வந்ததுபோன்று இருக்கிறீர்கள். உலக ரூபமான ஜலத்தில் வளரும் ஜந்துக் களுக்குக் காலன் விரித்த வலையாகத் தாங்கள் இருக்கிறீர்கள். இந்த வலையிலிருந்து எந்த வழியாக இந்த ஜகத்து தப்ப முடியும்?

பாண்டவர்களுக்கு அமைந்த அரக்கு மாளிகையேதான் இது. அக்னி தன் தாகத்தன்மையைப் பற்றிஅறியாது. ஆனுல் அதன் வாயில் அகப்பட்ட ஜகத்து பிராணனை விட்டு அதன் தாகத்தைத் தணித்தாலும் அது திருப்தியுறுவதாகத் தெரிய வில்லை. அமபுக்குத் தன் கூர்மையினுல் வீரர்கள் மரணம் அடைகிருர்கள் என்பது எங்காவது தெரியுமா! விஷத்துக்குத் தன் கொல்லும் தன்மை எங்காவது தெரியுமா? அதுபோல் தங்களுக்குத் தங்கள் பயங்கரத் தனமை தெரியவில்லை. ஆனுல் தங்கள் வாயில் ஜகம் சாம்பலாகிக்கொண்டிருக்கிறது. தாஙகள் ஜகத் பூருவாகவும் வியாபித்துள்ளீர்கள். அப்படி இருக்கும் போது எங்களை அழிப்பது என்பது தன்னைத் தானே அழித்துக் கொள்வதாக அல்லவா ஆகும்? நானும் வாழும் ஆசையை விட்டு விட்டேன் தாஙகளும் மனதில நினைப்பதை ஒளிவுமறைவு இல்லாமல் கூறிவிடுங்கள். இந்த உக்ர ரூபத்தை இனியும்

மேலும் மேலும் வளர்த்துக் கொண்டே போகப்போகிறீர்களா? தாங்கள் பகவான் என்பதையும் தீனரக்ஷகர் என்பதையும் தயவுசெய்து ஞாபகத்துக்கு கொண்டு வாருங்கள். தயைபுரிந்து என் மேல் கிருபைசெய்யுங்கள். (30)

आख्याहि मे को भवानुग्ररूपो नमोऽस्तु ते देववर प्रसीद।
विज्ञातुमिच्छामि भवन्तमाद्यं नहि प्रजानामि तव प्रवृत्तिम् ॥ ३१ ॥

ஆக்யாஹி மே கோ பவாநுக்ரரூபோ
நமோஸ்து தே தேவவர ப்ரஸீத ।
விஜ்ஞாதுமிச்சாமி பவந்தமாத்யம்
ந ஹி ப்ரஜாநாமி தவ ப்ரவ்ருத்திம் ॥

ஹே வேதங்களாலும் அறியப்படாதவரே! திரிபுவனங்களுக்கும் ஆதிகாரணரே, விசுவவந்தியரே, ஒரு தடவையாவது என் விண்ணப்பத்தை கேளுங்கள். இப்படிச்சொல்லி அர்ஜுனன் வணங்கினன். பகவன்! என் மனதின் குதூகலத்தின் ஸமாதானத்தின் பொருட்டு விசுவரூபத்தை வேண்டினேன். தாங்கள் உடனேயே மூன்று உலகங்களையும் விழுங்குவதற்குத் தயாராகப் பயங்கர உருவம் எடுத்து விட்டீர்கள். இப்படிப்பட்ட தாங்கள் யார்? இப்படிப்பட்ட பயங்கரமான உருவங்களை எங்கிருந்து ஒன்று சேர்த்தீர்கள்? எல்லாக் கைகளிலும் இத்தனை அஸ்த்ர சஸ்திரங்களை ஏன் வைத்துக் கொண்டிருக்கிறீர்கள்? எப்பொழுதும் கோபத்தால் துடித்துக் கொண்டு ஆகாசத்தையே அழித்துக் கொண்டு வருகிறீர்கள். இத்தனை பயங்கரமான கண்களால் என்னை ஏன் பயமுறுத்துகிறீர்கள்? யமனுடன்தான் ஏன் போட்டி போடுகிறீர்கள்? தங்கள் அபிப்ருயத்தை என்னிடம் கூறுங்கள் என்ருன் அவன். கிருஷ்ணன் கூறுகிருர். உண்மையில் நான் யார் என்பதையும் ஏன் இந்த பயங்கர உருவுடன் வளர்ந்து வருகிறேன் என்பதையும் உனக்குக் கூறுகிறேன். (31)

श्रीभगवानुवाच —

कालोऽस्मि लोकक्षयकृत्प्रवृद्धो लोकान् समाहर्तुमिह प्रवृत्तः।
ऋतेऽपि त्वा न भविष्यन्ति सर्वे येऽवस्थिताः प्रत्यनीकेषु योधाः ॥

ஸ்ரீ பகவானுவாச :—

> காலோஸ்மி லோக க்ஷயக்ருத் ப்ரவ்ருத்தோ
> லோகான் ஸமாஹர்துமிஹ ப்ரவ்ருத்த: ।
> ருதேபி த்வாம் ந பவிஷ்யந்தி ஸர்வே
> யேவஸ்திதா: ப்ரத்யநீகேஷு யோதா: ॥

பார்த்தா! உண்மையில் நான்தான் காலன். உலகை அழிக்கவே இவ்விதம் வளர்ந்துவருகிறேன். நான்குபுறமும் வாயை அகல விரித்துக்கொண்டு இருக்கிறேன். இந்த ஸம்பூர்ண உலகை நான் விழுங்கி விடுவேன் அப்பொழுது அர்ஜுனன் கூறுவான். அந்தோ! நடந்த சங்கடங்களைக் கண்டு நான் பயந்து முறையிட்டால் இன்னும் புதுப்புது கஷ்டங்கள் வந்து குவியுப்போல் இருக்கிறதே. அர்ஜுனன் இவ்விதம் அங்கலாய்ப்பதைக்கண்டு பகவான் பின்னும் கூறுவார். அப்பனே! மற்றொரு விஷயம் கேள். நீங்கள் பாண்டவர்கள் இந்த ஆபத்திலிருந்து காக்கப்படுவீர்கள். இந்த வார்த்தையைக் கேட்டதும் அர்ஜுனனுக்குப்போன உயிர் திரும்பிவந்ததைப் போல் இருந்தது. அவன் மரணமாகிய மகாமாரியின் சிக்கலில் சிக்கித் திண்டாடிக் கொண்டிருந்தான். கிருஷ்ணன் வசனத்தினல் சற்று ஆசுவாசமடைந்து அவனுக்குப் போன உயிர் திரும்பிவந்தது.

அப்பொழுது பகவான் பின்னும் கூறுவார். பார்த்தா! நீ எனக்கு மிகவும் பிரியமானவனல்லவா உன்னைத்தவிர மற்றவர்களை விழுங்க நான் தயாராக இருக்கிறேன். பிரசண்ட அக்னியில் பந்துபோல் வெண்ணெயை உருட்டிப்போட்டால்? அதுபோலவே இப்பிரபஞ்சம் முழுவதும் என்வாயில் சிக்கிக் கொண்டிருக்கிறது. இதை நீ பார்த்தாய் இதில் கொஞ்சம்கூட வித்யாசமில்லை. இந்த ஸேனையைப்பார் வீணாக வீருப்புடன் ஜயகோஷம் செய்கிறது. சதுரங்கஸேனைகளின் தலைவர்கள் வீணாக மார்தட்டுகிறார்கள் இவர்கள் மகா காலனுடன் போட்டி போடப்போகிறார்களா? இவர்கள் எல்லோரும் ஒன்றுசேர்ந்து கர்வத்துடன் கர்ஜிக்கிறார்கள். நாங்கள் புதுவுலகை நிர்மாணிப்போம். பிரதிக்ஞை மூலமாக மிருத்யுவையும் கொல்வோம். ஜகத்தைக் கசக்கிப்பிழிந்து குடிப்போம். உலகை விழுங்குவோம் ஆகாசத்தை எரிப்போம் வாயு எங்களுக்கு எம்மாத்திரம்? அதைப்பாண வருஷங்களால் சிதரடிப்போம்.

அவர்களுடைய சொற்கள் அஸ்திரத்தைவிட தீக்ஷண்யம் உடையவைகளாக இருக்கின்றன. அக்னியைவிட தகிக்கின்றன காலகூடத்தை அவர்கள் அமிருதம் என்று கூறுகிருர்கள். இவர்கள் எல்லோரும் ஆகாசத்தில் தோன்றும் கந்தர்வ நகரத்துக்குத் துல்யமானவர்கள். உள்ளே காலியான வெற்றுக் குண்டுக்கு ஸமானமானவர்கள். சித்திரத்தில் எழுதிய பொம்மைகள் துணியினுல் செய்த பாம்பைப்போல் வீரிய மற்றவர்கள் கர்னல்பெருக்கைப்போல் பொய்யானவர்கள். அலங்கரித்து வைக்கப்பட்டுள்ள பொம்மைகள் இவர்கள். (32)

**तस्मात्त्वमुत्तिष्ठ यशो लभस्व जित्वा शत्रून्भुङ्क्ष्व राज्यं समृद्धम् ।**
**मयैवैते निहताः पूर्वमेव निमित्तमात्रं भव सव्यसाचिन् ॥ ३३ ॥**

தஸ்மாத் த்வமுத்திஷ்ட யசோ லபஸ்வ
ஜித்வா சத்ரூன் புங்க்ஷ்வ ராஜ்யம் ஸம்ருத்தம் ।
மயைவைதே நிஹதா: பூர்வமேவ
நிமித்தமாத்ரம் பவ ஸவ்ய ஸாசின் ॥

இவர்கள் எதனுடைய கர்வத்தால் இப்படி உளறுகிருர்களோ அந்த பலத்தை நான் முன்னுலேயே கவர்ந்து விட்டேன். இப்பொழுது இவர்கள் குயவனுல் செய்த வெறும் மண்ணுருவங்கள் கயிறு அறுந்துபோனதும் பொம்மைகள் விழுவதுபோல் தாறுமாருக விழப்போகிருர்கள். ஒரு நிமிஷத்தில்இந்த சேனை அழிந்து விடும். அதனுல் எழுந்திரு புத்தியைத்தீட்டிக்கொள். நினைவை ஸ்வாதாரித்துக்கொள். நீ மாட்டுச் சண்டையின்போது மோகன அஸ்த்ரத்தைப் போட்டு பயப்படும் விராடகுமாரனை முன்னிட்டுக் கொண்டு சத்ருக்களுடைய வஸ்திரங்களை கிரகித்துக்கொள்ள வில்லையா? இச் சேனைகள் அதைவிட மோசமான நிலையில் இந்த ரணகளத்தில் நிற்கின்றன. இவைகளைக் கொன்று அர்ஜுனன் ஒருவனுகவே யுத்தத்தில் ஜயித்தான் என்ற புகழைக் கட்டிக்கொள். வெறும் கீர்த்தி மட்டுமல்ல, ராஜ்யமும் கிட்டும். ஆனுல் ஹே ஸவ்யஸாசி, நீ கேவலம் நிமித்தமாக மாத்திரம் இரு போதும். (33)

**द्रोणं च भीष्मं च जयद्रथं च कर्णं तथान्यानपि योधवीरान् ।**
**मया हतांस्त्वं जहि मा व्यथिष्ठा युद्ध्यस्व जेतासि रणे सपत्नान् ॥**

த்ரோணம் ச பீஷ்மம் ச ஜயத்ரதம் ச
கர்ணம் ததாந்யாநபி யோத வீரான் ।
மயா ஹதாம்ஸ்த்வம் ஜஹி மா வ்யதிஷ்டா
யுத்யஸ்வ ஜேதாஸி ரணே ஸபத்நான் ॥

துரோணரின் திறமையைக்கண்டு பயப்படாதே. பீஷ்மரைத் துச்சமாக நினை. கர்ணன் மேல் உத்ஸாகத்துடன் அம்பைச் செலுத்து. ஜயத்ரகனை எந்த உபாயத்தால் அடிக்கலாம் என்று ஆலோசிக்காதே. வேறு எல்லா வீரர்களையும் சித்திரத்தில் எழுதிய சிங்கம் என்று எண்ணு. வெறும் ஈரத்துணியினால் இந்தச் சித்திரம் அழிந்துவிடும். இந்த வீர சமுதாயம் எம் மட்டு? இவர்களுடைய ரஸத்தை நான் உறிஞ்சிவிட்டேன். வெறும் தோல்மாத்திரம் மீதம் உள்ளது. இவர்களை என்வாயில் விழுந்தவர்களாக எப்பொழுது பார்த்தாயோ அப்பொழுதே இவர் களுடைய ஆயுள் முடிந்துவிட்டது. இப்பொழுது இவர்களி தான்யம் நீங்கிய வெறும் உமியே அதனால் விரைவில் எழுந்திரு எவர்களை நான் முன்பே கொன்றுவிட்டேனோ அவர்களை நீயும் சீக்கிரமாக வதம் செய். வீணாக சோக ஸங்கடத்தில் மூழ்காதே. விளையாட்டில் அம்புகளால் குறியைஎப்படி அடித்து வீழ்த்தினையோ அப்படியே இதையும் வீழ்த்திவிடு. நீ கேவலம் நிமித்த மாத்திரமே உனது வைரிகளை அவர்கள் சண்டைக்குக்கிளம்பின போதே இந்த சிங்கமாகிய நான் தூக்கிக்கொண்டுபோய் விட்டேன். நீ இப்பொழுது ராஜ்யத்துடன் கட்டாயம் ஸம் பூர்ண கீர்த்தியை அநுபவி உன்மத்தர்களான உனது பந்துக் களையும் பலவான்களையும் துஷ்டர்களையும் நான் அநாயாஸமாக வதம் செய்துவிட்டேன் உலகில் வசனரூபமான சித்ரப்படலத்தில் நீ ஜயித்தாய் என்பதை எழுதிவைக்கலாம். (34)

सञ्जय उवाच —

एतच्छ्रुत्वा वचनं केशवस्य कृताञ्जलिः वेपमानः किरीटी ।
नमस्कृत्वा भूय एवाह कृष्णं सगद्गदं भीतभीतः प्रणम्य ॥ ३५ ॥

ஸஞ்ஜய உவாச :—

ஏதத் ச்ருத்வா வசநம் கேசவஸ்ய
க்ருதாஞ்ஜலிர் வேபமாநः கிரீடீ ।

நமஸ்க்ருத்வா பூய ஏவாஹ க்ருஷ்ணம்
ஸகத்கதம் பீதபீத: ப்ரணம்ய ||

ஸஞ்சயன் கூறியதை ஞானதேவர் கூறுகிருர்: அதாவது ஞானதேவர் இந்த ஸம்பூர்ண கதையை பூர்ணமாகாத ஆசையை உடைய திருதராஷ்டிரனுக்கு ஸஞ்சயன் கூறுகிருர் என்கிருர். ஸத்யலோகத்திலிருந்து கிளம்பிய கங்கை கலகல சப்தத்துடன் ஓடுவதைப்போல் வசனங்களாகிய கங்கையை கலகலவென்று ஓடவிட்டுக் கொண்டும் மகாமேகங்கள்போல் சடசடவென சப்தித்துக்கொண்டும் கடையும் க்ஷீரஸாகரம்போல் கோஷித்துக்கொண்டும் கம்பீரமகாநாதத்துடன் விசுவமூல காரணரும் அனந்தரூபருமான ஸ்ரீ கிருஷ்ணன் எந்த வார்த்தைகளைக்கூறினுரோ, அவைகளை அர்ஜுனன் மிகவும் சொற்பமாகவே அறிந்துகொண்டான். அர்ஜுனனுக்கு விசுவரூபத்தால் ஏற்பட்ட மகிழ்ச்சி எப்படி இரண்டுமடங்காயிற்ருே, அப்படி பயமும் இரண்டுமடங்காயிற்று. அவனுடைய சரீரம் நடுங்கியது கிருஷ்ணன்முன் அவன் துணிமூட்டையைப்போல் விழுந்தான். கைகளைக்கூப்பினுன் அடிக்கடி தலை தரையில் இடிபடும்படி வணங்கினுன். ஏதாவது பேச நினைத்தால் தொண்டை அடைத்து விடுகிறது. இது ஸுகமா, பயமா என்பதை வாசகர்களுடைய யூகத்துக்கு விட்டுவிடுகிறேன். ஆனுல் நான் சுலோகங்களின் பதச்சேர்க்கையிலிருந்து அறிந்துகொண்டது அர்ஜுனனுடைய நிலை இவ்வாறு இருந்தது என்பது தான் மிகவும் பயந்துகொண்டு குளறியடித்துக்கொண்டு அவன் சொன்னதாவது :— (35)

अर्जुन उवाच—

स्थाने हृषीकेश तव प्रकीर्त्या जगत्प्रहृष्यत्यनुरज्यते च ।
रक्षांसि भीतानि दिशो द्रवन्ति सर्वे नमस्यन्ति च सिद्धसङ्घाः ॥

அர்ஜுந உவாச :—

ஸ்தாநே ஹ்ருஷீகேச தவ ப்ரகீர்த்யா
ஜகத் ப்ரஹ்ருஷ்யத்யநுரஜ்யதே ச |
ரக்ஷாம்ஸி பீதாநி திசோ த்ரவந்தி
ஸர்வே நமஸ்யந்தி ச ஸித்த ஸங்கா: ||

ஹே மகராஜ் ! தாங்கள் என்ன கூறினீர்கள் ஹே அர்ஜுனு ! நான் காலன் உலகை விழுங்குவது எனது விளையாட்டு என்று தாங்கள் கூறுவது உண்மையே. ஆனால் இப்பொழுது ரக்ஷிக்க வேண்டிய சமயத்தில் ஸம்ஹாரம் செய்வதுதான் புரியாத புதிராக இருக்கிறது. சரீரத்தின் யௌவன தசையில் அதை எடுத்துவிட்டு வயோதிகப்பருவத்தை எப்படித்திணிப்பது? அதனால் தாங்கள் இப்பொழுது செய்யும் காரியம் கொஞ்சம்கூட பொருந்தவில்லை. நான்கு யாமங்களும் பூர்ணமாகுமுன்பே சூர்யன் அஸ்தமித்து விட்டால், தங்களால் ஏற்படுத்தப்பட்ட காலத்தின் மூன்று பாகங்களும் அதனதன் ஸமயத்தில் பலம் பொருந்தியவைகளே உத்பத்திஸமயத்தில் ஸ்திதியும் பிரளயமும் ஒடுங்குகிறது. ஸ்திதிஸமயத்தில் உத்பத்தியும் பிரளயமும் நேருகிறதில்லை. ப்ரளய சமயத்தில் உத்பத்தியும் ஸ்திதியும் மறைந்து விடுகிறது அநாதிகாலம் தொட்டுவரும் இந்த பரிபாடியில் இதுவரை ஒரு வித்யாசமும் நேரவில்லை. இப்பொழுது ஸ்திதியின் காலம் இந்த சமயத்தில் நீங்கள் உலகையழிக்கத்தயாராக இருக்கிறீர்கள். இதுதான் எனக்குப் புரியவில்லை.

அப்பொழுது கிருஷ்ணன் அர்ஜுனனுக்கு ஸம்ஞையினல் தெரிவித்ததாவது. அப்பனே ! இந்த இருதரத்து ஸேனைகளுடைய ஸ்திதிகாலமும் போஷணைகளும் முடிந்துவிட்டது என்பதை உனக்கு நேரிடையாகக் காட்டியிருக்கிறேன். மற்றவர்களுடைய மரணம் உசிதமான காலத்தில்தான் நேரும் பகவான் இவ்விதம் ஸம்க்ஞைமூலம் அறிவித்தாரோ இல்லையோ அர்ஜுனன் இருதரப்புஸேனைகளும் முன்போல்இருக்கக் கண்டான். அப்பொழுது அவன் கூறுவான் ஹே பிரபு ! தாங்கள் விசுவத்தைப்பாலிப்பவர் அல்லவா ? அதனல் இந்த எல்லா உலகங்களும் தன் பூர்வஸ்திதிக்கு வந்துவிட்டது. தங்கள் கீர்த்தி எப்படிப்பட்டது ? துக்கஸாகரத்தில் முழுகுபவர்களை ஒரு நிமிஷத்தில் கரைஏற்றிவிடுகிறீர்கள். இக்கீர்த்தியை இவ்வுலகால் மறக்க முடியுமா ? தங்களுடைய கீர்த்தியையும் அடிக்கடி நினைவு படுத்திக்கொண்டு இது அடிக்கடி ஆனந்த ஸாகரத்தில் முழுகிக் கொண்டிருக்கிறது. ஸந்தோஷ அலைகளில் புரண்டு களிக்கிறது. ஜீவதானம்பெற்ற உலகு தங்களை அதிகம் நேசிக்கிறது. துஷ்டர்களையும் அடிக்கடி அழிக்கிறீர்கள். ஹே ரிஷீகேசா ! தாங்கள் முடிவாக துஷ்டர்களுக்கு மகாபயங்கரமானவர்,

அதனால் அந்த துஷ்டராக்ஷஸர்கள் எல்லேகடந்து ஓடிக்கொண்டிருக்கிறார்கள். அதனால் ஸுரர், நரர், ஸித்தர், கின்னரர் அதிகம் கூறுவானேன் சராசரங்கள் அனைத்தும் ஆனந்தமடைந்து அடிக்கடி வணங்குகிறது. (36)

**कस्माच्च ते न नमेरन्महात्मन्गरीयसे ब्रह्मणोऽप्यादिकर्त्रे ।**
**अनन्त देवेश जगन्निवास त्वमक्षरं सदसत्तत्परं यत् ॥ ३७ ॥**

கஸ்மாச்ச தே ந நமேரன் மஹாத்மன்
கரீயஸே ப்ரஹ்மணோऽப்யாதிகர்த்ரே ।
அநந்த தேவேச ஜகந்நிவாஸ
த்வமக்ஷரம் ஸதஸத் தத்பரம் யத் ॥

ஹே நாராயணா! இந்த ராக்ஷஸர்கள் தங்களுடைய சரணங்களின்கீழ் அகப்படாமல் ஓடிக்கொண்டிருக்கிறார்களே, இதைத் தங்களிடம் ஏன் கேட்கவேண்டும்? ஸூர்யன் உதயமானால் அங்கு இருட்டு தங்குமா? தாங்கள் ஆத்மப்ரகாசத்தின் களஞ்சியம். எங்கள்மேல் இரக்கம் கொண்டு எங்கள் கண்களுக்குப் புலனாகிறீர்கள், அதனால் நிசாசர ரூபமான இருட்டுத் தன்மை தானே விலகிவிடுகிறது. இத்தனை நாட்கள வரை இது ஒன்றும் அறிநதுகொள்ளாமல்போனேனே! இப்பொழுது தங்களுடைய கம்பீரமான மகிமைகளை அறிந்துகொண்டேன். எங்கிருந்து பூதசமுதாயமான கொடிகள் சிருஷ்டிக்ரமமாகப் வருகிறது? அந்த மகத்வமான பாத்தி தாங்கள்தானல்லவா! ஹே தேவ! தாங்கள் எல்லேயில்லாத் தவத்தால் நிரம்பியிருக்கிறீர்கள். தாஙகள் தேவர்களுக்கும் தேவர். மூன்று ஜகத்திற்கும் பிராணன். தாங்கள் அவிநாசி. ஸத், அஸத் இரண்டும தாஙகளே. அதற்கப்பாலுள்ள துரீய நிலேயும் தாங்களே. (37)

**त्वमादिदेवः पुरुषः पुराणस्त्वमस्य विश्वस्य परं निधानम् ।**
**वेत्तासि वेद्यं च परं च धाम त्वया ततं विश्वमनन्तरूप ॥ ३८ ॥**

த்வமாதிதேவ: புருஷ: புராண
ஸ்த்வமஸ்ய விச்வஸ்ய பரம் நிதானம் ।
வேத்தாஸி வேத்யம் ச பரம் ச தாம
த்வயா ததம் விச்வமநந்த ரூப ॥

தாங்களே பிரகிருதி புருஷர்களுக்கு ஆதிகாரணர். தாங்களே சுத்த தத்வத்துன் எல்லே. தாங்களே புராண மான ஆதிகாரணம், அநாதி. எல்லாப் பிராணிகளுடைய ஜீவனும் தாங்களே. பிராணிகளுடைய முடிவும் தாங்களே. பூதபவிஷ்யத்தின் நிர்ணயம் தங்கள் கைக்குள்ளேயே இருக்கிறது. சுருதியின் கண்களுக்கு எநத ரூபத்தால் திருப்தியுண்டாகுமோ அந்த அபின்ன உருவம் தாங்களே. திரிபுவனங்களின் ஆசிர யத்துக்கும் தாங்களே ஆசிரயஸ்தானம். அதனுலேயே தங்களை மகாதாமம், பரமபதம் என்றெல்லாம் கூறுகிருர்கள். கல்பாந்த காலத்தில் மகத்தத்வம் தங்களிடமே பிரவேசிக்கிறது. தங்களை இதைவிட வேறு எவ்விதம் வர்ணிப்பது? (38)

वायुर्यमोऽग्निर्वरुणः शशाङ्कः प्रजापतिस्त्वं प्रपितामहश्च ।
नमो नमस्तेऽस्तु सहस्रकृत्वः पुनश्च भूयोऽपि नमो नमस्ते ॥

नमः पुरस्तादथ पृष्ठतस्ते नमोऽस्तु ते सर्वत एव सर्व ।
अनन्तवीर्यामितविक्रमस्त्वं सर्वं समाप्नोषि ततोऽसि सर्वः ॥ ४० ॥

வாயுர் யமோக்நிர் வருண: சசாங்க:
ப்ரஜாபதிஸ் த்வம் ப்ரபிதாமஹஸ்ச ।
நமோ நமஸ்தே஽ஸ்து ஸஹஸ்ர க்ருத்வ:
புநஸ்ச பூயோபி நமோ நமஸ்தே ॥

நம: புரஸ்தாதத ப்ருஷ்டதஸ்தே
நமோஸ்து தே ஸர்வத ஏவ ஸர்வ ।
அநந்த வீர்யாமித விக்ரமஸ் த்வம்
ஸர்வம் ஸமாப்நோஷி தத்தோஸி ஸர்வ: ॥

அய்யா! தாங்கள் எதில் இல்லே? எந்த இடத்தில் இல்லே? தாங்கள் எங்கு இருக்கிறீர்களோ அங்கெல்லாம் நான் வணங்கு கிறேன். ஹே அனந்த! தாங்கள் வாயு, சாஸனகர்த்தாவான யமன் பிராணிகளின் வயிற்றுள் இருக்கும் ஜாடராக்னி வருணன் ஸோமன் சிருஷ்டி கர்த்தாவான பிரும்மதேவன். அவருக்கும் ஆதிஜனகா. தங்களது உருவமும் அருவமும் எது நிஜம் எது இல்லே? அவைகளுக்கு எல்லாம் நமஸ்காரம். இவ் விதமாக அர்ஜுனன் பிரேமை நிரம்பிய அந்தக்கரணத்துடன்

வணங்கினான். பிறகு அந்தத் திருமூர்த்தியை அடியிலிருந்து நுனி வரை கண்டான். நமஸ்தே நமஸ்தே என்று புலம்பினான். ஒவ்வொரு அவயவமாக நோக்கினான். மனம் ஸமாதான மடைந்தது. பிறகும் நமஸ்தே நமஸ்தே என்ற பிதற்றல்தான். சராசரமான அகில ஜீவராசிகளிடத்திலும் அந்த மூர்த்தியைக் கண்டான் அதியத்புத ரூபம் ஆச்சர்யத்துடன் வெளிப்படை யாகக் காணும்போதெல்லாம் நமஸ்தே நமஸ்தேதான். துதிக்க வேண்டும் என்ற நினைவு இல்லை அவனுக்கு. பேசாமல் இருக் கவும் முடியவில்லை. பிரேமபாவம் இப்படி அவன் மனதில் எதிர்த்து பிரதிபலித்துக் கரைபுரண்டு ஓடிக்கொண்டிருந்தது ஆயிரம் தடவைகள் அர்ஜுனன் இவ்வாறு வணங்கினான்.

ஹே ஹரி! தங்களை முன்னால் வணங்குகிறேன். பின்னா லும் பக்கத்திலும் வணங்குகிறேன். ஜகத்துக்கு முன்னாலேயும் பின்னாலேயும் தங்களை வணங்குகிறேன். வேறு அவயவங்களை என்னால் எப்படி வர்ணிக்கமுடியும்? அதனால் ஸர்வமும் தாங் களே என்று வணங்குகிறேன் ஹே அனந்தபலத்துக்கும் உறைவிடமே! அமிதபராக்ரமியே! ஸர்வகாலத்துக்கும் ஸமான மானவனே. ஸர்வவ்யாபியே உனக்கு வணக்கம் வணக்கம். ஸம்பூர்ண ஆகாசத்துக்கும் ஆகாசமே ஸர்வஸ்வரூபமே. ஹே இறைவா. க்ஷீரஸமுத்ரத்தில் பாலேதான் நிரம்பி இருக்கும். இவ்விஷயம் எனக்கு இப்பொழுதுதான் நன்றாகத்தெரிகிறது. அதாவது தாங்கள் பொருள்களிலிருந்து வேறல்ல. தாங்களே எல்லாமும் ஸர்வமும் அதனால் ஸர்வக்ஞரான தங்களை வணங்கு கிறேன். (39-40)

सखेति मत्वा प्रसभं यदुक्तं हे कृष्ण हे यादव हे सखेति ।
अजानता महिमानं तवेदं मया प्रमादात्प्रणयेन वापि ॥ ४१ ॥

ஸகேதி மத்வா ப்ரஸபம் யதுக்தம்
ஹே க்ருஷ்ண ஹே யாதவ ஹே ஸகேதி ।
அஜாநதா மஹிமாநம் தவேதம்
மயா ப்ரமாதாத் ப்ரணயேந வாபி ॥

ஆனால் ஸ்வாமி, தங்கள் மகிமையை நான் உணர்ந்தவனல்ல அதனால் என் ஸகோதரர்களைப்போல் தங்களிடமும் தாராள மாகப் பழகிவந்தேன். மிகவும் பிழை செய்துவிட்டேன் ஸ்வாமி,

எனக்கு அமிருதம் கிடைத்தும் வாசலில் தெளிக்கும் நீரைப் போல் வீணுக்கிவிட்டேன். குதிரைக்குப்பதில் எனக்குக் காமதேனு கிடைத்தது. ஸ்பர்ச வேதிக்கல்லினாலான பர்வதம் எனக்கு அகஸ்மாத்தாகக்கிட்டியபோதும், அதை உடைத்து வீடுகட்ட அஸ்திவாரக்கல்லாகப் போட்டுவிட்டேன். கற்பக விருக்ஷத்தை வெட்டி வயலுக்கு எருவாகப் போட்டுவிட்டேன். அகஸ்மாத்தாகக் கிடைத்த சிந்தாமணி சுரங்கத்தை அற்ப அறிவினால் மூடிவிட்டேனே. அதைப்போல் அரிதில் கிடைத்த தங்கள் ஸங்கபாக்யத்தை அற்ப ஸ்நேகமாக நினைத்து வீண் விளையாட்டில் பொழுதைப் போக்கிவிட்டேனே. இன்றைய யுத்தத்தைத்தான் எடுத்துக்கொள்வோம். இந்த மகத்தான காக்ஷிக்கு முன் இது எத்துணை அற்பவிஷயம். இதில் தங்களை வேண்டுமென்றே குதிரைப்பாகனாக ஆக்கிவிட்டேனே. இந்த கௌரவர்களிடம் உம்மை தூதாக வேறு அனுப்பிவைத்தேனே. ஹே ஜகதீசுவர! இம்மாதிரியான அல்பவிஷயங்களுக்கு தங்களை உபயோகப்படுத்திவிட்டேனே, தாங்களே யோகிகளின் ஸமாதி லக்ஷ்யம், ஸுகத்தின் எல்லை என்பதை முட்டாளாகிய நான் அறியாமல் போய்விட்டேனே, தங்களுக்கு நான் எப்படிப்பட்ட அபராதம் செய்துவிட்டேன். (41)

यच्चावहासार्थमसत्कृतोऽसि विहारशय्यासनभोजनेषु ।
एकोऽथवाप्यच्युत तत्समक्षं तत्क्षामये त्वामहमप्रमेयम् ॥ ४२ ॥

யச்சாவஹாஸார்த்தமஸத்க்ருதோऽஸி
விஹார சய்யாஸந போஜநேஷு ।
ஏகோதவாப்யச்யுத தத் ஸமக்ஷம்
தத் க்ஷாமயே த்வாமஹமப்ரமேயம் ॥

தாங்கள் இவ்வுலகுக்கு ஆதிகாரணம். ஆனால் தங்களுடன் ஸபையில் உட்கார்ந்திருக்கும்போதுகூட நான் கேலிபேசி வம்புக்கிழுத்திருக்கிறேன். கோயிலைப்போன்ற தங்களுடைய மாளிகைக்கு வரும்போதெல்லாம் தங்களிடமிருந்து வெகுமானத்தை இச்சித்தேன். தாங்கள் ஸன்மானிக்காவிட்டால் வெகுநேரம் வரையில் நண்பன் என்ற முறையில் கோபித்துக் கொண்டிருக்கிறேன். ஹே சாரங்கபாணி! நான் இதுபோல கணக்கிலடங்காத அபராதம் செய்திருக்கிறேன். அதற்காக இப்பொழுது தங்கள் சரணங்களில் வணங்கி மன்னிப்புக்

கேட்டுக்கொள்கிறேன். அத்யந்தபந்து என்ற முறையில் தங்களுக்கு முதுகைக் காட்டிக்கொண்டு உட்கார்ந்திருக்கிறேன். அயோக்யனை நான் மிகவும் பிழை செய்து விட்டேன். தேவா! தங்களுடன் நான் மல்யுத்தம் செய்திருக்கிறேன். சொக்கட்டான் ஆடியிருக்கிறேன், விளையாட்டில் எத்தனையோ முறை ஏமாற்றியிருக்கிறேன். எந்தப்பொருளைக் கண்டாலும் இது முதலில் எனக்குத்தான் வேண்டும் என்று பறித்துக் கொண்டிருக்கிறேன். ஸர்வக்ஞனை தங்களுக்கு நான் எத்தனை முறை புத்திசொல்லி இருக்கிறேன்? உன்னால் எனக்கு ஆக வேண்டிய காரியம் ஒன்றுமில்லை என்று எத்தனைமுறைகூறி இருக்கிறேன். இத்தகைய அபராதங்கள் அனந்தம் இவற்றை மூவுலகும் கொள்ளாது சிற்றறிவினால் செய்த இந்த அபராதங்களை க்ஷமித்தருளுங்கள்.

ஹே தேவ! எத்தனை தடவை உண்ணும்போது அபிமானத்துடன் அழைத்திருக்கிறீர்கள் ஆனால் நான் வீண்கர்வத்துடன் கோபித்து எனக்குச் சாப்பாடு வேண்டாம் என்று மறுத்திருக்கிறேன். தங்களுடைய கேளிகிருகங்களில் தடையின்றி விளையாடி இருக்கிறேன். தங்கள் படுக்கையில் தங்கள் அருகில் படுத்து உறங்கியிருக்கிறேன். ஏ யாதவா! ஏ மாதவா! என்று நச்சரித்துத் தாங்கள் கவனிக்காவிட்டால் தங்கள்மேல் ஆணையிட்டிருக்கிறேன். ஒரே ஆசனத்தில் தங்களுடன் அமர்வது தாங்கள் சொல்வதைக் கேட்காமலிருப்பது இம்மாதிரி எத்தனையோ காரியங்களை செய்திருக்கிறேன். ஹே அனந்த! என் அபராதங்களும் அனந்தம் இதை நான் எப்படி விண்ணப்பித்துக்கொள்வேன்? தங்களுக்கு முன்னாலும் தங்களுக்கு புறம்பாலும் எத்தனையோ குற்றங்களை இழைத்திருக்கிறேன். தாய் தனது குழந்தையை வயிற்றில் சுமப்பதுபோல் அவைகளைப் பொறுத்துக் கொள்ளுங்கள். கங்கா நதியில் சாக்கடைநீர் கலந்தால் அதையும் கங்கை சமுத்திரத்தில் கொண்டுசேர்க்கிறதல்லவா? வேறு வழியில்லை, அதைப்போல் நான் பிரேமையாலோ, வருத்தத்தாலோ, கோபத்தாலோ எது கூறியிருந்தாலும் அவைகளை க்ஷமித்தருளவேண்டும். தங்களுடைய சகிப்புத்தன்மையினாலல்லவா இந்தபூமி எல்லா பிராணிகளையும் தாங்குகிறது. தங்களிடம் எவ்வளவு விண்ணப்பித்துக் கொண்டாலும் போதாது. ஆனாலும் ஹே அப்ரமேய! சரணாகதியடைந்த தீனனை என்னை க்ஷமித்தருளவேண்டும். (42)

पितासि लोकस्य चराचरस्य त्वमस्य पूज्यश्च गुरुर्गरीयान् ।
न त्वत्समोऽस्त्यभ्यधिकः कुतोऽन्यो लोकत्रयेऽप्यप्रतिमप्रभाव ॥

பிதாஸி லோகஸ்ய சராசரஸ்ய
த்வமஸ்ய பூஜ்யஸ்ச குருர் கரீயான் ।
ந த்வத்ஸமோஸ்த்யப்யதிக: குதோऽந்யோ
லோகத்ரயேப்யப்ரதிம ப்ரபாவ ॥

அய்யனே! தங்கள் மகிமையை நான் உள்ளவாறு அறிந்து கொண்டேன். ஹே தேவ! தாங்கள் சராசரத்துக்கு உயிர் நிலையம். தாங்கள் ஹரி, ஹரன் முதலான ஸமஸ்த தேவர்களுக்கும் பரமதேவர். தாங்கள் தேவாதி தேவர் வேதங்களுக்கும் பாடம் கற்றுக்கொடுக்கும் ஆதிகுரு. கம்பீரமான தாங்கள் நானாவிதமான பூதங்களுக்கும் மூலதத்வம் எல்லா குணங்களாலும் உவமை கூறமுடியாத அத்விதீயர். தங்களுக்கு நிகர் தாங்கள்தான் என்று கூறுவதற்கு என்ன அவசியமிருக்கிறது? தங்களாலேயே இந்த ஜகத்து ஆகாசத்தின் ஆதாரத்தில் நிற்கிறது. தங்களைப்போல் மற்றொரு வஸ்து இருக்கிறது என்று கூறவே லஜ்ஜையாக இருக்கிறது. தங்களுடைய அபூர்வமான குணங்களை வர்ணிக்க அற்பனாகிய நான் யார்? (43)

तस्मात्प्रणम्य प्रणिधाय कायं प्रसादये त्वामहमीशमीड्यम् ।
पितेव पुत्रस्य सखेव सख्युः प्रियः प्रियायार्हसि देव सोढुम् ॥

தஸ்மாத் ப்ரணம்ய ப்ரணிதாய காயம்
ப்ரஸாதயே த்வாமஹமீசமீட்யம் ।
பிதேவ புத்ரஸ்ய ஸகேவ ஸக்யு:
ப்ரிய: ப்ரியாயார்ஹஸி தேவ ஸோடும் ॥

இவ்வாறு கூறிய அர்ஜுனன் அடியற்ற மரம்போல் வீழ்ந்து தண்டனிட்டான். ஸத்வகுணப் பெருக்கு வெள்ளமென அவனை ஆழ்த்தியது. கிருபை செய்யுங்கள், தயை செய்யுங்கள், பிரபு, என்று அடிக்கடி கதறலானான். நாத்தழுதழுத்தது, என்னை இந்த அபராத ஸமுத்ரத்திலிருந்து கரையேற்றுங்கள்

என்று துடித்தான். தாங்கள் ஜகத்துக்கே மித்ரன். ஆனால், என் பந்து என்ற அபிமானத்தால் கர்வமடைந்த நான் அதை ஒப்புக்கொள்ளவில்லை தாங்கள் விசுவஸம்பத்து. உங்கள் முன்னால் எனது வறட்டு ஐச்வர்யத்தை காண்பித்துக் கொண்டேன். தங்களை வர்ணிக்க ஆதிசேஷனாலும் முடியாது. ஆனால், தாங்கள் நிறைந்த ஸபையில் அடிக்கடி எனது புகழை வர்ணித்தீர்கள். நான் பேராசையினால் அடிக்கடி அதிகமாகத் தங்களை ஆவலாதி கூறியிருக்கிறேன். ஹே முகுந்த! இந்த அபராதங்களுக்கு ஒரு எல்லை உண்டோ? என்னை இந்தச் செருக்கிலிருந்து விடுவியுங்கள். தங்களிடம் விண்ணப்பித்துக் கொள்ள எனக்கு என்ன யோக்யதை இருக்கிறது? ஆனால், அன்பினால் பிள்ளை தகப்பனிடம் பிடிவாதம் பிடிக்கவில்லையா? மகன் பெரிய பெரிய அபராதம் செய்தாலும் தந்தை மன்னிக்கவில்லையா? அதுபோல் எனது அபராதங்களைத் தாங்கள் க்ஷமிக்கவேண்டும். நண்பனுடைய கடுஞ்சொற்களை நண்பன் பொறுமையுடன் ஸஹித்துக்கொள்வதில்லையா? அது போல் தாங்கள் என்னை க்ஷமிக்கவேண்டும். அன்புக்குரியவர்கள் தாம் அன்பு செலுத்துபவரிடத்திலிருந்து வெகுமானம் எதிர் பார்ப்பார்களா? அன்பினால் எனது எச்சிலை எத்தனைமுறை உண்டிருக்கிறீர்கள்? அந்த அபராதத்தை மன்னியுங்கள், பிராணஸ்நேகிதனிடம் தனது மனதைத் திறந்து குற்றம் குறைகளைக் கூற ஒருவரும் ஸங்கோஜப்படமாட்டார்கள். தனது உயிரையும் வாழ்வையும் அன்பையும் தன் பதியின் காலடியில் ஸமர்ப்பித்த ஒரு பதிவ்ரதை அவனிடம் தனது மனதைத் திறந்து காட்ட ஸங்கோஜப்படுவாளா? அதைப் போல் தங்களிடம் விண்ணப்பித்துக்கொள்கிறேன். இன்னும் ஒரு விஷயம் கூற விரும்புகிறேன். (44)

**अदृष्टपूर्वं हृषितोऽस्मि दृष्ट्वा भयेन च प्रव्यथितं मनो मे ।**
**तदेव मे दर्शय देव रूपं प्रसीद देवेश जगन्निवास ॥ ४५ ॥**

அத்ருஷ்டபூர்வம் ஹ்ருஷிதோஸ்மி த்ருஷ்ட்வா
பயேந ச ப்ரவ்யதிதம் மநோ மே।
ததேவ மே தர்சய தேவ ரூபம்
ப்ரஸீத தேவேச ஜகந்நிவாஸ ||

நான் தங்களிடம் மிகவும் பிடிவாதம் பிடித்து விச்வ ரூபத்தைக் காட்டவேண்டுமென்று அடம்பிடித்தேன். எனது மாதா, பிதாவான தாங்கள் அதைப்பூர்த்தி செய்தீர்கள் அன்பினால் எனது வீட்டு முற்றத்தில் கற்பகத்தருவை நட்டு வைத்தீர்கள். காமதேனுவின் கன்றை எனக்கு விளையாடக் கொடுத்தீர்கள். எனக்குப் பொழுது போக்கு விளையாட்டுக்காக நக்ஷத்திரங்களைப் பகடையாகத் தந்தருளினீர்கள். பந்துக்குப் பதில் விளையாடுவதற்குச் சந்திரனைக்கேட்பேன். தந்து விடு வீர்கள் ஒரு அமிருதத் துளிக்காக தேவர்கள் மிகமிகக் கஷ்டப் பட்டார்கள் தாங்கள் வருஷக்கணக்காக அமிருத மழையைப் பொழிந்தீர்கள், அமிருதத்தினால் நனைந்த மனமாகிய பூமியில் சிந்தாமணி ரத்னத்தை விதைத்தீர்கள் இவ்விதமாக எனது பாலப்பருவத்தில் எத்தனையோ விதமாக அருளைப்பொழிந்தீர்கள். பிரும்மா சங்கரர் முதலானவர்கள்கூட காதினால் கேட்டிருந தங்களுடைய விசுவரூபத்தைக் காட்டியருளினீர்கள். உபநிட தங்கள் எதை அவிழ்க்க இன்னும் பிரயாசைப்படுகின்றனவோ அந்த ஹ்ருதய முடிச்சை அநாயாஸமாக எனக்கு அவிழ்த்துக் காட்டியருளினீர்கள்.

கல்பகாலம்தொட்டு இந்த விநாடிவரை எனக்கு எத்தனை ஜன்மங்கள் கழிந்திருக்கின்றனவோ அவைகளை ஞானதிருஷ்டி யினால் பார்த்தாலும் இம்மாதிரியான ஒரு காக்ஷியைக் கண்டதாக நினைக்கவும் முடியவில்லை. எனது புத்தியின் அறிவு இந்த ஸ்வரூபம் இருக்கும் அரண்மனையின் வாயிற் படியைக்கூடத் தாண்டவில்லை. அந்தக்கரணத்தில் இந்த நிழல்கூட விழுந்ததில்லை. என் கண்களால் பிரத்யக்ஷமாகப் பார்த்தேன் என்று எவ்விதம் கூறுவது? அதிகம் கூறுவானேன் இவ்வுருவத்தை இதற்கு முன்பு ஒருவரும் பார்த்ததில்லை கேட்டதுமில்லை. தாங்களே தயைசெய்து இந்த விசுவரூபத்தை எனக்குக்காட்டி அதைதரிசிக்க ஞானக்கண்களையும் அளித்தீர்கள் இதனால் எனது மனம் மகிழ்ச்சியடைந்தது. ஆனால் எனது இதயம் இப்பொழுது தங்களுடைய அருகில் நெருங்க விரும்பு கிறது. தங்களை ஆலிங்கனம் செய்துகொள்ளத் துடிக்கிறது. இந்த ஸ்வரூபத்தை ஆலிங்கனம் செய்துகொள்ளவேண்டு மென்று எந்த வாயால் கூறுவேன்? இது கட்டுக்கு அடங்குமா? அதனால் வாயுவுடன் போட்டியிட்டு ஓடுவது போலவும் ஆகா சத்தைத்தழுவிக்கொள்வது போலவும் ஸமுத்திரத்தில் ஜலக்ரீடை

செய்வதுபோலவும் இருக்கின்றது எனது செய்கை. இவ்வுருவைப்பார்த்து நான் பயத்தால் நடுங்குகிறேன். தயவு செய்து இந்த உருவை மறைத்துக் கொள்ளுங்கள். ஸந்தோஷமாகச் சராசரத்தைப் பார்க்கிறதும், ஆனந்தம் நெஞ்சில் தவழும்படி செய்கிறதும் எங்களுக்கு இளைப்பாறும் இடமுமான சதுர்புஜ உருவை எடுத்துக் கொள்ளுங்கள். நாங்கள் யோகம் முதலியவைகள் செய்வது இந்தச்சதுர்புஜ உருவைத்தரிசிக்கும் பொருட்டுத்தான். சாஸ்திர ஆராய்ச்சி செய்வதும் அதன் ஸித்தாந்தத்தின் ஸித்தி வரும் பொருட்டுத்தான் யக்ஞங்கள் செய்வதும் இந்த உருவதரிசன பலப்பிராப்தியின் பொருட்டுத் தான். ஸகல தீர்த்தயாத்திரை செய்வதும் இதன் பொருட்டுத் தான் தான புண்ணியங்கள் எல்லாம் இந்த சதுர்புஜ தரிசனத்துக்காகவே என் இதயத்தில் இந்த உருவைத்தரிசிக்கும் ஆசையே அதிகம் நிரம்பியிருக்கிறது. அதனால் அதைத்தரிசிக்க ஆவல் கொள்ளுகிறேன். இப்பொழுது எனது இந்த ஆசையைச் சீக்கிரம் பூர்த்தி செய்யுங்கள். இதயத்தை அறிபவனே, எல்லா உலகங்களுக்கும், ஆதாரமே, தேவாதிதேவ, பிரசன்ன மாகுங்கள். (45)

किरीटिनं गदिनं चक्रहस्तमिच्छामि त्वां द्रष्टुमहं तथैव ।
तेनैव रूपेण चतुर्भुजेन सहस्रबाहो भव विश्वमूर्ते ॥ ४६ ॥

கிரீடிநம் கதிநம் சக்ர ஹஸ்த
மிச்சாமி த்வாம் த்ரஷ்டுமஹம் ததைவ।
தேநைவ ரூபேண சதுர்புஜேந
ஸஹஸ்ர பாஹோ பவ விச்வமூர்த்தே ॥

யாதொரு சரீரம் நீலக்கமலங்களுக்கு உவமையாகிறதோ எந்த சரீரத்தின் காந்தியால் ஆகாசம் நீலநிறமாகத் தோன்றுகிறதோ, எந்த சரீரம் இந்திர நீலமணிக்கு ஒளிஊட்டுகிறதோ, மரகதமணிக்கு வாசனையூட்டுகிறதோ, பிரும்மானந்தமே புஜங்களாக உருக்கொண்டு வருகிறதோ யாருடைய மடியில் அமர்ந்தால்தான் மன்மதன் அழகுள்ளவனுவானே, யாருடைய சிரஸினுல் கிரீடம் சோபையுள்ளதாகிறதோ, அலங்காரத்துக்கும் அலங்காரம் செய்யும் வல்லமை எங்கிருக்கிறதோ, அந்த சரீரம். ஆஹா! ஹே சாரங்கபாணி! ஆகாயம் இந்திர தனுஸுடன் விளங்குவதுபோல் தங்கள் மார்பில் வைஜயந்தி

மாலே புரளுகிறது. அசுரர்களுக்கும் மோக்ஷம் கொடுக்கும் தங்களுடைய உதாரத்தை என்னவென்று கூறுவது? தங்களுடைய சக்ரத்தின் சோபையை எவ்விதம் வர்ணிப்பேன்? இவைகளுடன்கூடிய தங்கள் ஸ்வரூபத்தைக்காண விரும்புகிறேன். ஆகையால் அதே உருவை எடுத்துக் கொள்ளுங்கள் பிரபு, இந்த விசுவரூபத்தைப் பார்த்த கண்கள் களேத்துவிட்டன. இப்பொழுது நாராயணமூர்த்தியின் தரிசனத்தைக்காண விழைகின்றன. இந்தக்கண்கள் அதைத்தவிற இனி வேறென்றையும் காண விரும்பாது. அதை இப்பொழுது நான் காணவிட்டால் விசுவரூபத்தைககண்ட மதிப்பே இருக்காது. போகம் மோக்ஷம் இரண்டையும் கொடுக்கக்கூடியது அவ்வுருவைத்தவிற வேறு இல்லே. அதனுல் தாங்கள் இவ்வுருவை மறைத்து ஸௌம்யமான சதுர்புஜ உருவை எடுத்துக் கொள்ளுங்கள். (46)

श्रीभगवानुवाच—

मया प्रसन्नेन तवार्जुनेदं रूपं परं दर्शितमात्मयोगात् ।
तेजोमयं विश्वमनन्तमाद्यं यन्मे त्वदन्येन न दृष्टपूर्वम् ॥ ४७ ॥

ஸ்ரீபகவானுவாச

மயா ப்ரஸந்நேந தவார்ஜுநேதம்
ரூபம் பரம் தர்சிதமாத்ம யோகாத்।
தேஜோமயம் விச்வமநந்தமாத்யம்
யன்மே த்வதந்யேந ந த்ருஷ்ட பூர்வம்॥

அர்ஜுனனுடைய இந்த வார்த்தைகளினுல் விசுவரூபம் எடுத்த பகவானுக்கு ஆச்சர்யமுண்டாயிற்று. ஐயோ! உன்னேப் போல் ரஸிகத் தன்மை இல்லாதவர்களே நான் பார்த்ததில்லேயே? இப்படிப்பட்ட அரிதான பொருளேப் பார்க்கும் பாக்யத்தை அடைந்தாய். ஆனுல், அதை நீ ஆனந்தமாகவே ஒப்புக்கொள்ள வில்லே போலும்? பயந்து நடுங்கிக்கொண்டு ஏதோ உளறுகிருயே? நான் ஸந்தோஷப்படுவதெல்லாம் வெளிப்படையாகத் தானே? உன்னுக்கு நான் ஒன்றிலும் ஒட்டுவதில்லே. தன் உயிரைத் தானே அழித்துக்கொள்வானு? ஆனுல், நான் உனது விருப்பத்தைப் பூர்த்திசெய்வதற்காக எனது உயிரையே அர்ப்பணிக்கிற மாதிரி இந்த விசுவரூபத்தை எடுத்து உனக்குக்

காட்டினேன், உனது ப்ரேமையையும் மகிழ்ச்சியையும் பார்த்து ஆனந்தமடைந்து உனக்காக மறைந்து கிடந்த எனது விசுவ ரூபத்தைக் கொடிகட்டிப் பறக்கவிட்டேன். இது எனது பராத் பரமான ஸ்வரூபம். இதிலிருந்துதான் எனது ஸகல அம்ச அவதாரங்களும் உண்டாயின. இந்த ஸ்வரூபம் கேவலம் ஞான ஒளியினுலேயே ஆக்கப்பட்டது. விசுவமயமானது. அசலமானது. ஆனந்தமானது. எல்லாவற்றிற்கும் ஆதி காரணமானது. இதை உன்னைத்தவிர, வேறு ஒருவரும் பார்த்ததும் இல்லை. கேட்டதும் இல்லை. ஏனென்ருல், இது ஸாதனங்களால் அடையக்கூடியதல்ல. (47)

न वेदयज्ञाध्ययनैर्न दानैर्न च क्रियाभिर्न तपोभिरुग्रैः ।
एवंरूपः शक्य अहं नृलोके द्रष्टुं त्वदन्येन कुरुप्रवीर ॥ ४८ ॥

ந வேத யஜ்ஞாத்யயனைர் ந தானைர்
ந ச க்ரியாபிர் ந தபோபிருக்ரை: ।
ஏவம்ரூப: சக்ய அஹம் ந்ருலோகே
த்ரஷ்டும் த்வதந்யேந குருப்ரவீர ॥

இவ்வுருவத்தை ஆராய்ச்சி செய்து செய்து வேதமும் வாயை மூடிக்கொண்டது. யக்ஞமும் இதைத்தேடித்தேடி ஸ்வர்க்கம்வரை சென்று திரும்பிவிட்டது. ஸாதகர்கள் யோகாப்யாசத்திஞல் ஆராய்ச்சிசெய்து ஆயாஸமடைந்துவிட் டார்கள். இந்த ஸ்வரூபத்தை அடையவேண்டிய யோக்யதை சாஸ்த்ராப்யாசத்தாலோ அத்யயனத்தாலோ கிடைக்கக்கூடிய தல்ல. பூர்ணத்தன்மையடைந்த ஸத்கர்மங்கள் தங்களது கீர்த்தியைப் பரப்பிக்கொண்டு ஓடுகின்றன. ஆயினும் அவைகள் மிக்க சிரமப்பட்டு ஸத்யலோகம்வரைதான் செல்லுகின்றன. தபசு இவ்வுருவத்தின் ஐசுவர்யத்தைப்பற்றிக் காதால் கேட்டு விட்டு திடீரென்று தனது தீவிரத்தன்மையை இழந்து கோழை யாகிவிடுகிறது. இப்படித் தபஸுக்கும் ஸாதனத்துக்கும்கூட அப்பால்பட்டிருக்கும் இவ்வுருவை நீ அநாயாஸமாகப் பார்த்தாய் மனிதவுலகில் இந்த பாக்யம் உன் ஒருவனைத்தவிற வேறு யாருக்கும் கிடைக்கவில்லை. இன்று இந்த ஸம்பத்தைப் பெற்ற பாக்யம் உன் ஒருவனுக்கே உரித்தாகும். இந்த பரம பாக்யம் பிரும்ம தேவனுக்குக்கூடக் கிடைக்கவில்லை. (48)

मा ते व्यथा मा च विमूढभावो दृष्ट्वा रूपं घोरमीदृङ्ममेदम् ।
व्यपेतभीः प्रीतमनाः पुनस्त्वं तदेव मे रूपमिदं प्रपश्य ॥ ४९ ॥

மா தே வ்யதா மா ச விமூட பாவோ
த்ருஷ்ட்வா ரூபம் கோரமீத்ருங்மமேதம் ।
வ்யபேதபீ: ப்ரீதமநா: புநஸ்த்வம்
ததேவ மே ரூபமிதம் ப்ரபச்ய ॥

அதனால் இந்த விசுவரூபத்தின் லாபத்தை அடைந்த உன்னை தன்யனாகக் கருது. பயத்தை அகற்றிவிடு. இதைத்தவிர வேறு ஒன்றை மனதில் உத்தமமென்று கருதாதே. அம்ருதம் நிரம்பிய கடல் நமது கண்களுக்கு அகஸ்மாத்தாகத்தென்பட்டதானால், அதில் மூழ்கி இறந்துவிடுவோமோ என்று பயந்து எவனாவது ஓடுவானா? தங்கத்தினாலான பருவதம் மிகப்பெரியது அதைத் தூக்க முடியாது என்று யாராவது அதை தியாகம் செய்வார்களா? சிந்தாமணியினாலான அலங்காரப் பொருள்கள் ஒருவனுக்குப் பாக்யவசத்தால் கிடைத்ததானால் அது வெறும் சுமை என்று எறிந்துவிடுவானா? காமதேனுவை வளர்க்க ஸாமர்த்தியம் இல்லை என்று எவனாவது அதை அவிழ்த்து விட்டு விடுவானா! சந்திரன் நம்மைத்தேடி நமது வீட்டுக்கு வந்தானானால் நீ வர வேண்டாம் போ, குளிர்தாங்கவில்லை என்று எவனாவது கூறுவானா? அல்லது ஸூர்யனிடம் நீ விலகிச்செல் உஷ்ணம் தாங்கவில்லை என்று எவன் கூறுவான்?

அதைப்போல் இந்த ஈசுவர ஸம்பந்தமான தேஜஸ் உன் கையில் கிடைத்துள்ளது. இதற்காக யாராவது வருத்தப்படுவார்களா? ஹே தனஞ்ஜய! நீ அக்ஞானி! உனக்கு ஒன்றும் தெரியவில்லை. உன்னைக் கோபித்துக்கொண்டு என்ன பயன்? நீ சரீரத்தை விட்டுவிட்டு நிழலை ஆலிங்கனம் செய்து கொள்ள விரும்புகிறாய். இந்த உருவத்தை விட்டுவிட்டு எனது சதுர்புஜ உருவத்தை விரும்புகிறாய். அது எனது ஸத்ய ஸ்வரூபமல்ல. அதனால் ஹே அர்ஜுன! இப்போதாவது இந்த ஆசையை விட்டுவிடு. இந்த விசுவரூபத்தை வெறுக்காதே. இந்த ரூபம் கோரமானது. பயங்கரமானது. விசாலமானது. இருந்தாலும் இதுவே உலகின் கடைசி எல்லையாகிய நிச்சய ஸ்தானம் என்று அறி,

ஒரு கிருபணன் பணத்தை மோகிப்பதுபோலவும், அதே எண்ணத்துடன் அவன் உலகில் மற்ற வ்யவஹாரங்களை நடத்துவதுபோலவும். பக்ஷி தனது இறகு முளைக்காத குஞ்சுகளை காட்டில் விட்டுவிட்டு அதே நினைவாக இறை தேட ஆகாசத்தில் பறப்பதுபோலவும், மலையில் மேயச்சென்ற பசுக்கள் வீட்டில் கொட்டிலில் கட்டியிருக்கும் தங்கள் கன்றை நினைத்துக் கொண்டு மேய்வதுபோலவும் நீ இந்த உருவத்தை மனதில் இடைவிடாமல் தியானித்து பிறகு உலக வ்யவஹாரங்களில் ஈடுபடுவாயாக. மேலெழுந்தவாரியாக பஹிர்முகமாக எனது சதுர்புஜ உருவை நாடுவாயாக.

பாண்டவ! இந்த விஷயத்தை ஒருக்காலும் மறக்காதே. உனது ஸத்பாவம் இந்த உருவத்தை ஒருநாளும் மறக்க வேண்டாம். இதற்கு முன் நீ இவ்வுருவைப் பார்த்ததில்லை. இதனால் ஏற்பட்ட பயத்தை அறவே நீக்கிவிட்டு இதை நேசிப்பாயாக இத்தனையும் கூறிவிட்டு கிருஷ்ணன் பின்னும் கூறுவார் நல்லது அப்பனே, இப்பொழுது உனது விருப்பப்படியே செய்கிறேன். நிர்ப்பயமாக எனது சதுர்புஜ உருவைப்பார். (49)

सञ्जय उवाच—

**इत्यर्जुनं वासुदेवस्तथोक्त्वा स्वकं रूपं दर्शयामास भूयः ।**
**आश्वासयामास च भीतमेनं भूत्वा पुनः सौम्यवपुर्महात्मा ॥ ५० ॥**

ஸஞ்ஜய உவாச :—

இத்யர்ஜுநம் வாஸுதேவஸ் ததோக்த்வா
ஸ்வகம் ரூபம் தர்சயாமாஸ பூய: ।
ஆச்வாஸயாமாஸ ச பீதமேநம்
பூத்வா புந: ஸௌம்ய வபுர் மஹாத்மா ॥

இப்படிச் சொல்லிவிட்டுப் பகவான் மனுஷ்ய ரூபமாக ஆகிவிட்டார் அதில் என்ன ஆச்சரியம்! என்றால் அவருடைய ப்ரேமையே இதில் ஆச்சர்யம். ஸ்ரீ கிருஷ்ண ஸ்வரூபமே பரபிரும்மம். அவர் தம்முடைய விசுவரூபம் போன்றுள்ள ஸகல ஐசுவர்யத்தையும் அர்ஜுனனுக்குக் கொடுத்து விட்டார். ஆனால் அதை அவன் ரஸிக்கவில்லை. தானம் வாங்கிய பொருளைத் தூர

எறிவது போலவும், ரத்னத்தை நிந்திப்பது போலவும், ஒரு பெண்ணைப்பார்த்து விவாஹம் செய்ய நிச்சயித்து விட்டுப் பிறகு பிடிக்கவில்லை என்பது போலவும் நிலைமை இவ்வாறாகிவிட்டது.

விசுவரூபத்தைக் காண்பிக்கும் போது அவருடைய ப்ரேமை எப்படிப் பெருகியது! தேவாதிதேவன் அர்ஜுனனுக்கு உத்தம உபதேசம் செய்தான். ஆனால் பொன்னை உருக்கி ஆபரணம் செய்து பிறகு அது பிடிக்கவில்லை என்று மறுபடி உருக்குவது போல், அருமை சிஷ்யனிடம் இருக்கும் பிரேமையினால் காட்டப் பட்ட விசுவரூபம் அவனுக்கு ரஸிக்கவில்லை என்றதும் அவர் திரும்பவும் கிருஷ்ண ரூபமாக ஆகிவிட்டார். சிஷ்யனுடைய பிடிவாதத்தை ஸகித்துக் கொள்ளும் இத்தகைய குருவை எங்காவது நீங்கள் பார்த்ததுண்டா? ஆனால் ஸஞ்ஜயன் கூறு கிறான். கிருஷ்ணனுடைய பிரேமையை அளவிடமுடியாது என்று.

அதன் பிறகு பகவான் விசுவரூபியாகப் பாவித்து யாதொரு தேஜஸை வெளிப்படுத்தினாரோ, அதை க்ரஹித்துக்கொண்டு திரும்பவும் கிருஷ்ணரூபமாக ஆகிவிட்டார். ஸம்பூர்ண ஜீவ ரூபமான துவம்பதார்த்தம் பிரும்மரூபமான தத்பதார்த்தத்தில் அடங்கிவிட்டது. அகண்ட விசுவாகாரமான வ்ருக்ஷம் விதையில் அடங்கிவிட்டது. ஸ்வப்ன நிலையில் உள்ள விஸ்தாரமான உலகம் விழிப்பின் எல்லைக்குள் அடங்கிவிட்டது. இவ்விதமாக கிருஷ்ணன் தன் யோக நிலையை ஒடுக்கிக்கொண்டான். பிரபை பிம்பத்தில் அடங்கிவிட்டது. மேகம் ஆகாசத்தில் லயித்தது. அலைகள் கடலில் அடங்கின' கிருஷ்ண ஸ்வரூபமான உருவத்தில் அழகாக மடித்து வைக்கப்பட்டிருந்த விசுவரூபமான வஸ்த்ரம் அர்ஜுனன் விரும்பியதால் விரித்துக் காட்டப்பட்டது. ஆனால், அதை வாங்குபவனான அர்ஜுனனுக்கு அதன் வர்ணமும் நூலும் தரமும் பிடிக்கவில்லை. அதனால் அது திரும்பவும் மடித்து வைக்கப்பட்டுவிட்டது.

இவ்விதமாக எந்த விசுவரூபம் தன் விசாலத் தன்மையின் ஆதிக்கத்தால் த்ரிபுவனங்களையும் ஜயித்திருந்ததோ, அது திரும்பவும் அழகிய கிருஷ்ண ரூபமாக ஸௌம்யமாகி விட்டது. அதிகம் கூறுவானேன் ஸ்ரீ கிருஷ்ணன் திரும்பவும் தன்அழகான உருவை எடுத்துக் கொண்டான். பயத்தால் அர்ஜுனன் நடுங்கி விட்டான். அவ்விதம் நடுங்கும் அர்ஜுனனைப் பகவான் ஆசுவாசப் படுத்தினார். ஒருவர் ஸ்வர்கத்துக்குப் போவதாகக் கனவுகாண

கிருன். திடீரென்று விழித்துக் கொள்கிருன். அது போன்ற ஆச்சர்யம் அர்ஜுனனுக்கு உண்டாயிற்று. குரு கிருபையால் சிஷ்யனுக்கு ஸம்பூர்ண பிரபஞ்சஞானம் லயமடைந்து பிரும்ம தத்வம் பிரகாசிப்பதைப்போல் ஸ்ரீகிருஷ்ணன் தோற்றமளித்தார்

அர்ஜுனன், நன்ருயிற்று இந்த அழகான மூர்த்திக்குப் பின்னல் தோன்றிய விசுவரூபக்காக்ஷி திரையிட்டு மூடப்பட்டது. ஆனல் அந்த விசுவரூபமே ஸகுண பிரும்மமாக இதோ எனக்கு முன் தோன்றுகிறது. என்று நினைத்த மாத்திரத்தில் காலனை அவன் ஜெயித்து வந்தது போலவும், மகா வாயுவை ஓட்டப் பந்தயத்தில் ஜயித்து விட்டது போலவும், தவழ்ந்து சென்று ஏழு சமுத்ரங்களையும் தாண்டியது போலவும் இருந்தது. விசுவ ரூபத்தைப் பார்த்து விட்ட பிறகு கிருஷ்ண ரூபத்தைப்பார்க்கும் போது அவனுக்கு என்ன பேரானந்தமாக இருந்தது என்று நினைக்கிறீர்கள்? ஸூர்யன் அஸ்தமித்தவுடன் ஆகாயத்தில் நக்ஷத்திரங்கள் பிரகாசிப்பது போல், பூமியில் பிராணிகள் நிரம்பி இருப்பதைக் கண்டான். இப்பொழுது அதே குருக்ஷேத்ரமும் இருபக்கங்களிலும் அதே கோத்ர தாயாதிகளும் நின்று அஸ்திரங்களை வர்ஷித்துக் கொண்டிருக்கிருர்கள். இதன் மத்தியில் ரதம் முன்போல் நின்று கொண்டிருக்கிறது. நுகத்தடியில் ஸ்ரீ கிருஷ்ணன் உட்கார்ந்திருக்கிருர் அர்ஜுனன் பின்னல் நிற்கிருன். இந்த வீரனை அர்ஜுனனுக்கு அவன் விரும்பிய கிருஷ்ண தரிசனம் கிடைத்து விட்டது. (50)

अर्जुन उवाच—

दृष्ट्वेदं मानुषं रूपं तव सौम्यं जनार्दन ।
इदानीमस्मि संवृत्तः सचेताः प्रकृतिं गतः ॥ ५१ ॥

அர்ஜுந உவாச:—

த்ருஷ்ட்வேதம் மாநுஷம் ரூபம் தவ ஸௌம்யம் ஜநார்தன ।
இதாநீமஸ்மி ஸம்வ்ருத்த: ஸசேதா: ப்ரக்ருதிம் கத: ॥

அவன் கூறுவான்: மஹராஜ்! இப்பொழுதுதான் எனக்கு உயிர் வந்தது. புத்தியை விட்டுவிட்டு அறிவு எங்கோ

நுழைந்துகொண்டிருந்தது. மனம் அஹங்காரத்துடன் தூர தேசம் சென்றிருந்தது. இந்திரியங்கள் தங்கள் விருத்திகளை மறந்திருந்தன. வாக்குப் பேசுவதை மறந்துவிட்டது. இவ் விதமாக இச்சரீரமாகிய கிராமத்தில் பஞ்சம் ஏற்பட்டிருந்தது. இப்பொழுது அவைகள் நீங்கி இயற்கை நிலை வந்துவிட்டது. இந்தப் புண்யமூர்த்தியிடமிருந்து புனர்ஜீவனைப் பெற்று விட்டேன். இவ்விதமாக அர்ஜுனனுடைய ஹ்ருதயம் பரம ஸுகத்தில் ஆழ்ந்தது. பகவன், இந்த மானுஷ ரூபத்தைப் பார்த்துவிட்டு எனக்கு எப்படியிருக்கிறது தெரியுமா? குற்றம் செய்துவிட்டு பயத்தால் நடுங்கும் ஒரு குழந்தையை அதன் தாய் பரிவுடன் அணைத்து பால் கொடுப்பதுபோல் இருக்கிறது. பகவன் நான் இதுவரைதான் விசுவரூப ஸமுத்திரத்தில் கரைகாணமல் நீந்திக் கொண்டிருந்தேன். இப்பொழுது ஸகுண ரூபமான கரையை அடைந்துவிட்டேன். த்வாரகாதீச, நான் உலர்ந்து பட்டுப்போன ஒரு மரம். தாங்கள் விசுவரூப தரிசனமான ஒரு மேகம். அது தயையாகிற மழையைப் பொழிந்தது தாகத்துக்கு ஒரு வாய் தண்ணீர் கேட்டேன். அமிருதக் கடலே கிடைத்து விட்டது. என்னுடைய இதயமாகிய பூமியில் ஸந்தோஷம் என்னும் கொடி வீசிப் படர்கின்றது. ஆனந்தம் அடைந்தேன் ஸமாதானம் அடைந்தேன். (51)

श्रीभगवानुवाच—

सुदुर्दर्शमिदं रूपं दृष्टवानसि यन्मम ।
देवा अप्यस्य रूपस्य नित्यं दर्शनकाङ्क्षिणः ॥ ५२ ॥

ஸ்ரீ பகவானுவாச:—

ஸுதுர்தர்சமிதம் ரூபம் த்ருஷ்டவானஸி யன்மம ।
தேவா அப்யஸ்ய ரூபஸ்ய நித்யம் தர்சன
காங்க்ஷிண: ॥

பகவான் ஸந்தோஷமடைந்து கூறலானர். நீ விசுவ ரூபத்தையே நேசி. ஆனல் ஸகுண உருவமான என்னை ஆலிங்கனம் செய்ய இச் சரீரத்துடன் வா, இவ்வாறு சற்றுமுன் நான் கூறியதை மறந்து விட்டாயா! குருடன் கையில் மேருகிரி அகப்பட்டாலும் அது சிறிதாகத்தான் தெரியும். எனது பிரிய நண்பர் சங்கரபகவான் இத்தனை தபம் செய்தும் இந்த விசுவரூபம்

அவருக்குக் கிடைக்கவில்லை. யோகிகள் அஷ்டாங்க யோகங்களாகிய ஸங்கடங்களை ஏற்று ஸாதனம் செய்து வருகின்றனர் இன்னும் அவர்களுக்கு இதை காணும் நிலைவரவில்லை. என்ருவது ஒருநாள் இந்த விசுவரூபத்தின் ஒரு சிறு பாகத்தையாவது பார்க்கமாட்டோமா என்று ஏங்கி தேவர்கள் காலம் தள்ளுகிருர்கள். பக்தர்களாகிய சாதகபக்ஷி ஹ்ருதயம் என்னும் தலையின் மேல் கைகளைத் தூக்கி நம்பிக்கை என்னும் அஞ்சலி செய்து கொண்டு இதைப் பார்க்கக் காத்திருக்கின்றது. இந்திரன் அறுபது நாழிகையும் இதைக் காணத் துடித்துக் கொண்டிருக்கிருன். ஆனுல் விசுவரூபத்தின் ஒரு திவலையைக் கூட அவன் கனவில்கூடக் காணவில்லை. அவ்வித ரூபத்தை நீ எவ்வளவு எளிதாகப் பார்த்துவிட்டாய். (52)

नाहं वेदैर्न तपसा न दानेन न चेज्यया ।
शक्य एवंविधो द्रष्टुं दृष्टवानसि मां यथा ॥ ५३ ॥

நாஹம் வேதைர் ந தபஸா ந தாநேந நசேஜ்யயா ।
சக்ய ஏவம்விதோ த்ரஷ்டும் த்ருஷ்டவானஸி
மாம் யதா ॥

இந்த உருவை அடைவதற்கு ஸாதனு மார்க்கங்கள் கிடையாது. நான்கு வேதங்களும் ஆறு சாஸ்திரங்களும் இதில் தோல்வியடைந்திருக்கின்றன. எந்தவிதமான தவமாயினும் சரி அவைகளுக்கு விசுவரூபத்தின் அருகில் செல்லும் யோக்யதை கூடக் கிடையாது. தானபுண்யங்களினுல் இதை அடைவது கடினம். நீ இவ்வளவு எளிதாக என்னைப் பார்த்தமாதிரி யக்ஞங்களாலும் என்னைப்பார்க்க முடியாது என்னைப்பார்ப்பதற்கு ஒரே ஒரு வழிதான் இருக்கிறது. பக்தியென்னும் பெண் வந்து சித்தராஜனுக்கு ஜயமாலை அணியும்போது நான் காணப்படுவேன். (53)

भक्त्या त्वनन्यया शक्य अहमेवंविधोऽर्जुन ।
ज्ञातुं द्रष्टुं च तत्त्वेन प्रवेष्टुं च परंतप ॥ ५४ ॥

பக்த்யா த்வநந்யயா சக்ய அஹமேவம் விதோऽர்ஜுந ।
ஞாதும் த்ரஷ்டும் ச தத்த்வேந ப்ரவேஷ்டும் ச
பரம்தப ॥

இந்த பக்தி எப்படி இருக்கவேண்டும் தெரியுமா உனக்கு? பூமியைத்தவிர, வேறு ஒன்றும் அறியாத வர்ஷதாரையைப்போல் இருக்கவேண்டும். ஸகல ஜலராசியையும் தன்னிடம் சேர்த்துக் கொண்டு ஸமுத்ரத்தை நோக்கி ஓடும் கங்கை நதியைப்போல் இருக்கவேண்டும். அந்த பக்தி ஸகல பாபஸமூகங்களையும் ஹ்ருதயம் கொள்ளாமல் ததும்பிக்கொண்டு என் ரூபமாகவே மிகுந்த ப்ரேமையுடன் என்னிடம் பிரவேசிக்கவேண்டும், நான் ஒரு பாற்கடல். க்ஷீரஸாகரம் கரையிலும் மத்தியிலும் எங்கும் பால்மயமாகவே இருக்கும். என்னிலிருந்து சிறு எறும்பு வரையுள்ள சராசரங்களில் வேறு ஒரு வஸ்துவே இருக்கக் கூடாது. இவ்வித பக்தியை அடைந்த அந்தக்ஷணத்திலேயே எனது ஸ்வரூபஞானம் அவனுக்கு ஏற்படுகிறது. தரிசனமும் எளிதாகக் கிடைக்கிறது. தீயிலிட்ட விறகு தன் உருவத்தை இழந்து அக்னிமயமாக ஆவது போல் அவனும் எனது ஸ்வரூப மாகவேயாகிருன். ஸூர்யன் உதயமாகிறவரை ஆகாயம் இருள் நிரம்பியிருக்கிறது. உதயமானதும் எங்கும பிரகாசமாக ஜ்வலிக் கிறது. அதுபோல் எனது ஸாக்ஷாத்காரம் ஏற்பட்டவுடன் அகங்காரம் வருவதும் போவதும் நின்றுவிடுகிறது. அகங்காரம் போனதும் துவைதபாவம் நாசமடைந்துவிடுகிறது. அப்பொழுது அந்தப் பக்தனும் நானும் இந்த ஸம்பூர்ண உலகமும் இயற்கை யாகவே ஒன்றிவிடுகிரோம். (54)

मत्कर्मकृन्मत्परमो मद्भक्तः सङ्गवर्जितः ।
निर्वैरः सर्वभूतेषु यः स मामेति पाण्डव ॥ ५५ ॥

மத்கர்மக்ருத் மத்பரமோ மத்பக்த: ஸங்க வர்ஜித: ।
நிர்வைர: ஸர்வபூதேஷு ய: ஸ மாமேதி பாண்டவ ॥

எவன் எல்லாக் கர்மங்களையும் என்னிடம் அர்ப்பணித்து விடுகிருனே, உலகில் என்னைத்தவிற வேறு நல்லது இல்லை என்று எவனுக்குப் படுகிறதோ, எவனுக்கு இகலோகமும் பரலோகமும் நானேயாகின்றேனே, எவன் தன் வாழ்வின் பயனை எனக்கு அர்ப்பணித்துவிட்டு நிச்சிந்தையாக இருக்கிருனே, எவனுக்கு பிராணிகளிடமும் பிராணிகளுக்கு அவனிடமும் ஸமபாவனை ஏற்படுகிறதோ, எவன் நிர்வைரியாகப் பகைமையை விட்டு என்னையே பஜிக்கிருனே அவனுக்கு இந்தக் கபவாத பித்த ரூபமான சரீரம் விழும்போது என் ரூபமே ஏற்படுகிறது.

ஸஞ்ஜயன் கூறுவார்: வயிற்றில் ஸகல ஜகத்தையும் அடக்கிக்கொண்டிருப்பதால்தான் கிருஷ்ணனுக்குச் சிறு தொந்தி ஏற்பட்டிருக்கிறது என்று நினைக்கிறேன். கருணாரஸம் பெருகிய இந்த வார்த்தையைக் கிருஷ்ணன் கூறியதும் அர்ஜுனன் அப்படியே ஆனந்தலக்ஷ்மியைத் தழுவிக்கொண்டான். உலகில் ஸ்ரீ கிருஷ்ண சரணங்களில் பக்திபண்ணுவதில் அர்ஜுனன் ஒருவனே ஸமர்த்தன். அவன் ஸ்ரீகிருஷ்ணனுடைய இருவித உருவங்களையும் மனதில் நிறுத்தி ஆராயும்போது, விசுவரூபத்தைவிட கிருஷ்ணரூபத்திலேயே அதிக லாபத்தை அடைந்தான். ஆனால் அவனுடைய ஞானத்தை ஸ்ரீகிருஷ்ணன் புகழவில்லை. ஏனெனில், வ்யாபக உருவைவிட ஸகுணரூபம் சிரேஷ்டமானதல்ல. இதை நிரூபிப்பதற்கு வேண்டியே, ஸகுண நிர்குண உருவங்களைப்பற்றி ஸ்ரீ கிருஷ்ணன் இவ்வளவுதூரம் கூறினார். இதைக்கேட்டு அர்ஜுனன் பின்வருமாறு மனதில் எண்ணிக்கொண்டான். இவ்விரு உருவங்களில் எது சிரேஷ்டமானது என்பதைப்பற்றி நான் ஒரு முடிவுக்கும் வரவில்லை. இதைப்பற்றி நான் பின்னால் கேட்டுக்கொள்வேன். இவ்விதமாக நிச்சயித்து அவன் எந்தக் கேள்வியைக் கேட்கப் போகிறானோ அந்தக் கதையை இனி கேளுங்கள்.

ஞானதேவர் கூறுகிறார்: அந்தக் கதையைக் காவிய உருவில் நான் மிக்க அழகாக வர்ணிக்கிறேன். நீங்கள் ஆனந்தமாகக் கேளுங்கள். பிரேமையினால் அஞ்ஜலி செய்து விட்டு இந்தக் கவிதாரூபமான மலர்ந்த புஷ்பத்தை விசுவரூபத்துக்கு ஸமர்ப்பிக்கிறேன். (55)

பதினொன்றும் அத்யாயம் முற்றும்.

# பன்னிரண்டாவது அத்யாயம்

ஹே நிர்மலனே! உதாரனே! பிரஸித்தமாக எப்பொழுதும் ஆனந்தத்தை வர்ஷிக்கும் குருமாதா! தங்களுக்கே ஜயம் உண்டாகட்டும். விஷயரூபியான ஸர்ப்பம் சுற்றி வளைக்கும் போது தங்களுடைய கிருபையினால் விஷம் தலைக்கேறுமல் மூர்ச்சையடையாமல் இருக்கிறேன். தங்களுடைய அருளாகிய அலைகள் என்மேல் பாயும்போது ஸம்ஸார தாபம் என்னை எவ்வாறு எரிக்கும்? சோகம் என்னை எவ்வாறு பீடிக்கும்? ஹே கிருபாளோ! தங்களுடைய சிஷ்யர்களுக்கு யோக

ஸுகத்தின் ஆனந்தம் என்றும் கிட்டுகிறது. பிரும்மப்ராப்தி அடையவேண்டுமென்று அவர்கள் சிறுவர்களைப்போல் பிடிவாதம் பிடிக்கும்போது தாங்கள் அதை நிறைவேற்றுகிறீர்கள். நீங்கள் அவர்களை வாஞ்சையினால் மூலாதார சக்திரூபமான மடிமேல் ஏற்றி லாலனை செய்கிறீர்கள். ஹ்ருதயாகாச ரூபமான தொட்டிலிலிட்டுத் தாலாட்டுகிறீர்கள். அவர்களிடம் இருக்கும் ஜீவாத்மபாவத்தை வேருடன் களைந்துவிட்டு அவர்களுக்கு மனம் பிராணன் என்னும் விளையாட்டுப் பொருள்களைக் கொடுத்து ஆத்மஸுகமான அலங்காரத்தைச் செய்கிறீர்கள். அமிருதகலா ரூபமான பாலைப் புகட்டுகிறீர்கள். அநாஹத கீதம் பாடித் தூங்கவைக்கிறீர்கள். ஸமாதி மெத்தையை விரிக்கிறீர்கள். அதனால் தாங்கள் ஸாதகர்களுக்கு ஸாக்ஷாத் மாதாவாகவே ஆகிறீர்கள். தங்களுடைய சரணங்களிலிருந்து எல்லா வித்யைகளும் உற்பத்தியாகின்றன. அதனால் நான் நிழலைப்போல் தங்களைச் சரணடைவேன்.

கிருபா திருஷ்டி அளிக்கும் ஸத்குருவே! தங்கள் கருணை யாருக்கு அடைக்கலம் அளிக்கிறதோ, அவர்கள் அகில வித்யைகளையும் சிருஷ்டிக்கும் பிரும்மதேவனாகிறார்கள். ஹே அம்மா! பக்தர்களின் கற்பகத்தருவே! எனக்கு முடிச்சுகளை சிக்கல்களை நுட்பங்களை அவிழ்க்கும் வித்யையைக் கற்றுக் கொடுங்கள். என்னுள் நவரஸமான ஸமுத்ரத்தை நிரப்புங்கள். உத்தம ரத்னங்களின் களஞ்சியமாக என்னை ஆக்குங்கள். பாவார்த்தத்தின் பர்வதமாக என்னை நிலைநிறுத்துங்கள். பாஷாரூபமான பூமியில் ஸ்வர்ணரூபமாக என்னை ஆக்குங்கள். விவேகரூபமான செடி கொடி படர்ந்த சிங்காரத் தோட்டமாக ஆக்குங்கள். என்னை எப்போதும் ஸாதுக்கள் ஸங்கம் ஸம்வாதம் என்னும் ஸித்தாந்த ரூபமான பழத்தோட்டமாக்குங்கள். பாஷண்டிகளாகிய குகைகளும், வாக்வாதிகளாகிய கோணல் மாணல் நிறைந்த கரடுமுரடான பாதையுள்ள காட்டை அழியுங்கள். குதர்க்கமென்ற துஷ்டர்கள் அனவரதமும் நிற்கும் நாற்சந்திகளை அழியுங்கள்.

அம்மா! என்னை எப்போதும் ஸ்ரீ கிருஷ்ண குணங்களை வர்ணிக்கும்படி ஆக்குங்கள். சுரோதாக்களின் சிரவணமான ஸிம்மாசனத்தில் என்னை இருத்துங்கள். இந்த பாஷாரூபமான நகரத்தில் பிரும்மவித்யையாகிய அரசை எனக்கு அளியுங்கள். ஸம்ஸாரத்தில் பிரும்மானந்தமான லேவாதேவி செய்யும்

ஸேட்டாக என்னை ஆக்குங்கள். தங்கள் கிருபையாகிய மூந்தானையால் என்னை அணைத்துக்கொள்ளுங்கள். பிறகு என்னால் ஆகாத காரியம் என்ன இருக்கிறது என்று பாருங்கள். என்னுடைய இந்த விண்ணப்பத்தைக் கேட்டதும் எனது குரு கிருபையினால் என்னைக் கடாக்ஷித்தார். இப்பொழுது அதிகம் கூறியாகிவிட்டது. இனி கீதார்த்தத்தைக் கூற ஆரம்பித்துவிடு என்றார். ஞானேசுவராருக்குண்டான ஆனந்தத்தைக் கூற வேண்டுமா? 'ஆக்ஞைப்படி மகராஜ்' என்று கூறிவிட்டுக் கதையைத் தொடர்ந்தார்.

अर्जुन उवाच —

एवं सततयुक्ता ये भक्तास्त्वां पर्युपासते ।
ये चाप्यक्षरमव्यक्तं तेषां के योगवित्तमाः ॥ १ ॥

அர்ஜுன உவாச—

ஏவம் ஸதத யுக்தா யே பக்தாஸ்த்வாம் பர்யுபாஸதே ।
யே சாப்யக்ஷரமவ்யக்தம் தேஷாம் கே யோகவித்தமா:॥

ஹே பகவன், ஸோம வம்சத்தின் தோன்றலே, கொடியே என்று அடிக்கடி கூறும் பாண்டுபுத்ரன் பார்த்தன், ஹே பகவன், ஹே கிருஷ்ணா என்று ஆரம்பித்துக்கூறத் தொடங்கினான். தாங்கள் எனக்கு விசுவரூபத்தைக் காண்பித்தீர்கள். இந்த அத்புதரூபத்தைக் கண்டு நான் பயந்துவிட்டேன். எனக்கு அந்த ஸகுணமூர்த்தியான கிருஷ்ணனிடம் அதிகப் பரிசயம் உண்டு. அதனால் என் அந்தக்கரணம் அவனையே யாசிக்கிறது. ஆனால் தாங்கள் என்னைப் பலவந்தப்படுத்தி இந்த உருவத்தினால் பயமடையச் செய்துவிட்டீர்கள். ஆனால் அவ்யக்தமும் வ்யக்தமும் தாங்களே என்று அறிந்தேன். பக்தியினால் வ்யக்தரூபத்தை அடைகிறோம். யோகத்தால் அவ்யக்தத்தை அடைகிறோம். ஹே வைகுந்தா, இரு மார்க்கங்களும் தங்களை அடைய உபாயம்தான் கூறுகின்றன. இரண்டும் தங்களிடம்சேர்ப்பிக்கின்றன. ஆனால் தங்கக்கட்டியிலிருந்து ஒரு அரிசி எடை வெட்டி எடுத்தாலும் அது தங்கக்கட்டிதானே! அதனால் வியாபகமும் அம்சமும் தகுதியில் ஸமமாகவே இருக்கின்றன. அமிருதக் கடலுக்கு எத்தனை மகிமையுண்டோ அத்தனை அதிலிருந்து கிளம்பும் அலைகளுக்கும் உண்டல்லவா! அந்த

அலைகளுக்குள் மகிமை கரையில் இருக்கும் சிறு குழிகளில் தங்கியிருக்கும் துளிகளுக்கும் உண்டல்லவா! இதுவே உண்மை என்பதை எனது அந்தக்கரணம் கூறும்.

ஆனால் ஹே யோகபதி, தங்களிடம் எதற்காகக் கேட்கிறேன் என்றால் தாங்கள் க்ஷணநேரத்துக்குள் விசுவரூபத்தை எடுத்துக் கொண்டு விட்டீர்கள். அதுவே உண்மை ஸ்வரூபமா, அல்லது என்னைக் குதூகலிக்கச்செய்யும் பொருட்டு எடுத்த கற்பனை ஸ்வரூபமா? அதனால் எந்த பக்தன் தன் கர்மபலன்களைத் தங்களுக்கு அர்ப்பணம் பண்ணுகிறானோ அவனுக்கு தாங்கள் கிருபை புரிகிறீர்கள், எவன் தன் மனோ தர்மங்களை விலையாகக் கொடுத்துத் தங்கள் பக்தியை வாங்கிக்கொண்டிருக்கிறானோ இவ்விதம் தங்களைத் தன் அந்தக்கரணத்தில் கட்டிப்போட்டு எவன் தங்களை உபாஸிக்கிறானோ, எவன் ஓங்காரத்துக்கும் அப்பால் செல்லுகிறானோ, வைகரீ வாணியினால் தங்கள் மகிமைகளை வர்ணிக்கமுடியாதிருக்கிறானோ யார் ஒருவருக்கும் நிகரில்லாமல் இருக்கிறானோ அந்த அக்ஷர அவ்யக்த நிர்மல வ்யாபக ஸ்வரூபஞானி தங்களை ஸோஹம்பாவத்தினால் உபாஸிக்கிறான். அப்படிப்பட்ட யோகி, ஞானி, பக்தன் இவர்களில் ஹே அனந்த, ஒருவரைவிட ஒருவர் யோகத்தில் முந்தியவனாக் இருக்கிறான் என்பதை நான் அறிகிறேன். அர்ஜுனன் இவ்வாறு கூறியதும் ஜகந்நாதன் ஸந்தோஷமடைந்தார். அப்பனே, நீ நல்ல வார்த்தைகளைக் கூறினாய் என்று ஸந்தோஷித்தார். (1)

श्रीभगवानुवाच —

मय्यावेश्य मनो ये मां नित्ययुक्ता उपासते ।
श्रद्धया परयोपेतास्ते मे युक्ततमा मताः ॥ २ ॥

ஸ்ரீ பகவானுவாச—

மய்யாவேச்ய மநோ யே மாம் நித்யயுக்தா உபாஸதே।
ச்ரத்தயா பரயோபேதாஸ்தே மே யுக்ததமா மதா:॥

பகவான் கூறுகிறார்:— ஹே கிரீடி, ரவி அஸ்த்தாசலத்தை அடைந்தவுடன் அவனுடைய பிம்பத்துக்குப் பின்னால் கிரணங்கள் தோன்றுகின்றன. வர்ஷாகாலத்தில் நதி வெள்ளப்பெருக் கெடுத்து ஓடுகிறது. அதுபோல் பக்தர்களின் பஜனையும் தபசும்

நித்யம் நவநவமாகப் பெருக்கெடுத்து ஓடுகின்றன. நதிகள் கடலை அடைந்த பின்னும் மேலும் மேலும் பெருக்கெடுத்து வந்துகொண்டே இருக்கின்றன. அதுபோல் பக்தர்களின் பிரேமை பிரவாகமாகப் பெருக்கெடுத்து ஓடுகிறது. அதனுல் எவர்கள் இந்திரியங்களை ஒடுக்கி அந்தக்கரணத்தில் என்னை இரவும் பகலுமாக உபாஸிக்கிருர்களோ, எந்த பக்தர்கள் பூரணமாகத் தன்னை எனக்கு அர்ப்பணிக்கிருர்களோ அவர்களையே நான் பரம யுக்தர் என நினைக்கிறேன். (2)

**ये त्वक्षरमनिर्देश्यमव्यक्तं पर्युपासते ।**
**सर्वत्रगमचिन्त्यं च कूटस्थमचलं ध्रुवम् ॥ ३ ॥**

*யே த்வக்ஷரமநிர்தேச்யம் அவ்யக்தம் பர்யுபாஸதே ।*
*ஸர்வத்ரகமசிந்த்யம் ச கூடஸ்தமசலம் த்ருவம் ॥*

ஹே பாண்டவ! மற்றும் எவர்கள் ஸோஹம்பாவத்தில் ஆழ்ந்து நிராகாரமான அக்ஷரத்தில் ஊஞ்சலாடுகிருர்களோ, எங்கு மனதை உருவகப்படுத்திலுைம் அதன் நகத்தைக்கூட உருவகப்படுத்த முடியாதோ, எங்கு புத்தியின் அறிவும் எட்டாதோ, அதை இந்திரியங்களினுல் எவ்வாறு அறிய முடியும்? தியானத்துக்கு துர்லபமானதும் உருவகப்படுத்த முடியாததுமான அதை எவ்வாறு ஸ்பர்சிக்க முடியும்? அதற்கு உருவம் இருந்தால்தானே தொட முடியும்? அது எங்கும் எப்பொழுதும் எல்லா ரூபமாகவும் இருக்கிறது. அதை அடைந்ததும் சிந்தனை சக்தி ஸ்தம்பித்து விடுகிறது. அதற்கு உத்பத்தி நாசம் கிடையாது. அது இருக்கிறது இல்லை என்பது கிடையாது. எவ்வித உபாயத்தாலும் அதையடைய முடியாது. அது நடமாடாது. ஒரு இடத்திலிருந்து இன்னெரு இடம் பெயராது. அதற்கு முடிவும் கிடையாது. அதைத் தூஷணை செய்யவும் முடியாது. அப்படிப்பட்ட அந்தப் பொருளை ஆத்ம பலத்தினுல் எவர்கள் அடைகிருர்களோ, அதாவது ... ... (3)

**संनियम्येन्द्रियग्रामं सर्वत्र समबुद्धयः ।**
**ते प्राप्नुवन्ति मामेव सर्वभूतहिते रताः ॥ ४ ॥**

*ஸந்நியம்யேந்த்ரியக்ராமம் ஸர்வத்ர ஸமபுத்தய: ।*
*தே ப்ராப்நுவந்தி மாமேவ ஸர்வபூதஹிதே ரதா: ॥*

எவர்கள் வைராக்யமென்னும் ஆக்நேயாஸ்த்ரத்தால் விஷய ரூபமாகிய சேனைகளை எதிர்த்துத் தபிக்கும் இந்திரியங்களை தைர்யத்தினால் வசப்படுத்துகிறார்களோ, அவைகளை நிக்ரக மாகிய சுருக்குக் கயிற்றினால் இழுத்துக் கட்டிச் சுருட்டி ஹ்ருதயமாகிய குகையில் அடைத்துவிடுகிறார்களோ, அவர்கள் அதை அடைவார்கள். மேலும், எவர்கள் அபானத்வாரத்தை அடைத்து உத்தமமான ஆஸன முத்திரையில் அமர்ந்து மூல பந்தனம் செய்கிறார்களோ, அவர்கள் ஆசையாகிய கட்டை அறுத்துவிடுகிறார்கள். அதைர்யமாகிய மார்க்கத்தை சுத்தி செய்கிறார்கள். நித்திரையாகிய அந்தகாரத்தை அழிக்கிறார்கள். வஜ்ராக்னியாகிய உலோகத்தின் ஜ்வாலையால் ஸப்த தாதுக் களையும் எரித்து கோலி விளையாடி, வியாதிகளாகிய அரக்கர் களின் தலைகளை யோக பலத்தால் பிளக்கிறார்கள். ஆதார ஸ்தானத்தில் குண்டலினியாகிய திரியை ஏற்றிவைத்து அதன் பிரகாசத்தால் ஸஹஸ்ராரமாகிய சிகரத்தை அடைகிறார்கள்.

அவர்கள் நவத்வாரங்களையும் இந்திரிய நிக்ரகமென்னும் தடைகளினால் மூடிவிட்டு தசமத்வாரமாகிய ஜன்னலைத் திறந்து வைககிறார்கள். அவர்கள் ஸங்கல்பமென்னும் ஆட்டை பலி யிட்டு பிராண சக்தி ரூபமான சாமுண்டாதேவிக்கு ஆராதனை செய்து மனரூபமான மகிஷத்தையும் பலியிடுகிறார்கள். அவர்கள் சந்திர சூரிய நாடிகளை ஒன்று சேர்த்து அநாஹதத்வனியை உண்டாக்கிக்கொண்டு சீக்கிரமாக ஸஹஸ்ராரத்திலுள்ள அமிருத ஸரோவரத்தில் உள்ள ஜலத்தைப் பருகுகிறார்கள். மேலும் அவர்கள் ஸுஷும்னநாடியின் மத்யத்வாரமாகிய குகை வழியே சென்று பிரும்மரந்திரமென்னும் இடத்தை அடைகிறார்கள்.

இவ்விதமாக அவர்கள் எல்லாவற்றிற்கும் மேலான தசம துவாரத்தின் ஏணி வழியே ஏறி ஆகாசத்தைப் புறம் காட்டிவிட்டு பிரும்மத்தில் போய்ச் சேருகிறார்கள். இவ்விதமாக ஸமபுத்தி யுள்ள அவர்கள் என்னை அடையும் பொருட்டு யோகரூபமான பெரிய பெரிய துர்க்கங்கள் வழியே சென்று ஸோஹம் என்னும் ஸித்திப்பெண்ணை வசமாக்கிக்கொள்கிறார்கள். பிறகு அந்த ஸோஹம் ஸித்தியையும் ஸமர்ப்பணம் செய்து அதற்குப் பதில் நிராகாரமான பிரும்மத்தை அடைகிறார்கள். இவ்விதமாக நிராகார பிரும்மமான என்னையே அவர்கள் அடைகிறார்கள். இவ்விதமாக யோக பலத்தால் அவர்களுக்குப் பக்தர்களைவிட அதிகம் கிடைத்துவிட்டதாக எண்ணிவிடாதே. அப்படி அல்ல. அவர்களுக்குப் பக்தர்களைவிடக் கஷ்டம்தான் அதிகம். (4)

क्लेशोऽधिकतरस्तेषामव्यक्तासक्तचेतसाम् ।
अव्यक्ता हि गतिर्दुःखं देहवद्भिरवाप्यते ॥ ५ ॥

க்லேசோ அதிகதரஸ்தேஷாம் அவ்யக்தாஸக்த
சேதஸாம் ।
அவ்யக்தா ஹி கதிர் து:கம் தேஹவத்பிரவாப்யதே ॥

ஸகல பிராணிகளுக்கும் மங்களத்தைக் கொடுப்பதும் ஒரு வித ஆசிரயமும் இல்லாததுமான அவ்யக்தபதத்தில் பக்தியின் துணை இல்லாமல் எவர்கள் ஆசைவைக்கிருர்களோ அவர்களுடைய மார்க்கத்தில் இந்திரபதவி முதலியன இடையூருக வருகின்றன. ருத்தி, சித்தி முதலிய பர்வதங்கள் மார்க்கத்தைத் தடைபடுத்துகின்றன. காமக்ரோதமான அநேக இடையூறுகள் நேர்கின்றன. சரீரத்திலிருந்துகொண்டே சூன்ய வஸ்துவுடன் போராடவேண்டி இருக்கிறது. தாகத்தை தாகத்தாலேயே தணிக்கமுடியுமா? பசியால் பசியை ஆற்ற முடியுமா? இரவும் பகலும் கையால் வாயுவை முழம்போட முடியுமா? விழித்துக் கொண்டே தூங்குபவனும் கட்டுப்பட்டு விளையாடுபவனும் விருக்ஷங்களிடம் மனிதரைப்போல் நட்புக்கொள்பவனும் குளிரை உடையைப்போல் உடுத்துபவனும், உஷ்ணத்தைப் போர்வையைப்போல் போர்த்துபவனையும மழையாகிய வீட்டில் வசிப்பவனையும் நீ எங்காவது பார்த்திருக்கிருயா? இத்தனையும் செய்ய முடியுமானுல் அதற்குப் பெயர் யோகம். பதியில்லாமலேயே நித்யம் ஸதியாக இருபபதைப்போல் இது.

இதில் யஜமானனுக்கு ஒரு வேலையும் இல்லை குல பரம்பரையும் இல்லை. மரணத்துடன் போராடவேண்டி இருக்கிறது. இது மரணத்தைவிட பயங்கரமானது. பாம்பு உமிழ்ந்த விஷத்தை உண்பதுபோன்றது. பர்வததனை விழுங்கினுல் வாய் பிளந்து போகாதா? அதனுல் ஹே அர்ஜுனு, யோக மார்க்கத்தில் செல்பவர்களுக்குத துக்கததைப் பெரும்பாலும் அநுபவிக்க வேண்டி இருக்கிறது. பொக்கை வாயை உடையவன் இரும்புக் கடலையைச சுவைததுச் சாப்பிடவேண்டுமென்ருல் அவன் வயிறு நிறையுமா? அல்லது மரணம் ஏற்படுமா? கைகளால் நீந்தி கடலைக் கடக்க முடியுமா? ஆகாசத்தைக் கால்களால் தாண்டி நடக்கமுடியுமா? ரணபூமியை அடைந்தவனுக்குக் காயம் படாமல் இருக்குமா? வெயில்படாமல் சூர்ய உலகையுடைய

முடியுமா? நொண்டியால் வாயுவுடன் போட்டி போட்டுக் கொண்டு ஓடமுடியுமா? அதனால் தேகத்துடன் கூடிய ஜீவர்களுக்கு அவ்யக்த பிரும்மத்தையடைவது கடினம். அப்படி இருந்தும் தைர்யத்தால் ஆகாசத்தில் ஊஞ்சல் ஆடுவதுபோல் அவ்யக்த பிரும்மத்தை அடைய யத்தனிப்பானுனல் அவன் கிலேசத்தை அடைவான். அதனுல் பார்த்தா, எவர்கள் பக்தி மார்க்கத்தைக் கடைப்பிடிக்கிருர்களோ அவர்களுக்கு இவ்வித துக்கம் ஏற்படாது. (5)

ये तु सर्वाणि कर्माणि मयि संन्यस्य मत्पराः ।
अनन्येनैव योगेन मां ध्यायन्त उपासते ॥ ६ ॥

யே து ஸர்வாணி கர்மாணி மயி ஸந்யஸ்ய மத்பரா: ।
அநந்யேநைவ யோகேந மாம் த்யாயந்த உபாஸதே ॥

எவர்கள் வர்ணுசிரம தர்மங்களை அனுசரித்துத் தத்தமக்குரிய கர்மாக்களை இந்திரியஙகளினுல் செய்து ஸுகமடைகின்ருர்களோ, விதிப்படி நடக்கிருர்களோ, நிஷித்த கர்மங்களை தியாகம் செய்தும் கர்மபலன்களை எனக்கு அர்பணித்தும் எவர்கள் நிஷ்கர்மிகளாகின்ருர்களோ, மனதாலும் வாக்கினுலும் செய்கையினுலும் அவர்கள் வேறு ஒன்றையும் நினைககமாட்டார்கள். உபாசனை தியானம் ஜபங்களால் அவர்கள் என் இதயத்தில் குடிகொள்கிருர்கள். அந்தக்கரணத்தையும் சரீரத்தையும் மனதையும் எனக்கு அற்பணம் செய்கிருர்கள். அவர்கள் எதை விரும்புகிருர்களோ அதை அவர்களுக்கு நான் எப்பொழுதும் கொடுக்கக் காத்துக்கொண்டிருக்கிறேன். (6)

तेषामहं समुद्धर्ता मृत्युसंसारसागरात् ।
भवामि नचिरात्पार्थ मय्यावेशितचेतसाम् ॥ ७ ॥

தேஷாமஹம் ஸமுத்தர்த்தா ம்ருத்யு ஸம்ஸார ஸாகராத் ।
பவாமி நசிராத் பார்த்த மய்யாவேசித சேதஸாம் ॥

வேறு என்ன கூறவேண்டும்? தாயின் வயிற்றில் பிறந்தவனுக்கு தாயைவிட வேறு யார் அதிக உறவு? அதுபோல் அந்த மனிதர்களுக்கு நான் உறவாகிறேன். கலிகாலத்தையும் ஜயிக்கச்செய்து அவர்கள் பக்ஷத்துக்காக உழைக்கிறேன். பிறகு அவர்களுக்கு உலகச்சிந்தை என்ன இருக்கப்போகின்றது?

தனவானின் மனைவி கந்தையை விரும்புவாளா? என் பக்தர்களை என்னுடைய குடும்பத்தைச் சேர்ந்தவர்களாக எண்ணு. அவர்களுக்காக எந்தக் காரியத்தையும் செய்வதற்கு நான் லஜ்ஜை அடையமாட்டேன். ஜனனமரண ரூப ஸம்ஸார அலைகளைப் பார்த்துவிட்டு நான் கூறுகிறேன். எவன் இந்த ஸம்ஸாரரூப அலைகளுக்குப் பயப்படுவதில்லையோ? ஏன்! என் பக்தர்களும் இந்த அலைகளுக்குப் பயப்படத்தான் செய்கிறுர்கள். அதனுலேயே நான் விதவிதமான ஸகுண உருவங்களாக என்னை மாற்றிக் கொண்டு என் பக்தர்கள் ஒவ்வொருவருடைய வீட்டிலும் மனதிலும் உறைகிறேன். உலகில் பலபல நாமரூபங்களாகிய படகுகளாகி அவர்களை கரைசேர்க்கிறேன்.

என்பக்தன் பிரும்மசாரியானுல் அவனை தியானமார்க்கத்தில் ஈடுபடச்செய்கிறேன். குடும்பிகளை என்னுடைய இந்தப் படகுகளில் சௌக்யமாக உட்கார்த்தி வைத்துக்கொள்கிறேன். இப்படகுகளில் பிரேமரூபமான நங்கூரத்தைப் பாய்ச்சி ஸாயுஜ்யமாகிய கரையில் அவர்களை இறக்குகிறேன். இது மாத்திரமா? எனது பக்தன் என்னும ஒரே காரணத்திற்காக அவனுடைய பசுபக்ஷிகளையும் இப்பதவியில் சேர்க்கிறேன். அதனுல் பக்தர்களுக்குக் கவலைப்படத் தேவையில்லை. எப்பொழுதும் எங்கும் அவர்களை உத்தாரணம் செய்ய நான் தயாராக இருக்கிறேன். பக்தர்கள் தம் சித்தவிருத்தியை எனக்கு அற்பணம் செய்ததும் அவர்களை எனது சித்தவிருத்தியில் ஈடுபடுத்துகிறேன். அதனுல் என்னுடைய பக்தனுன பார்த்தா, நீ இந்த மந்திரத்தையே ஜபித்து என்னை உபாசனை செய். (7)

मय्येव मन आधत्स्व मयि बुद्धिं निवेशय ।
निवसिष्यसि मय्येव अत ऊर्ध्वं न संशयः ॥ ८ ॥

மய்யேவ மந ஆதத்ஸ்வ மயி புத்திம் நிவேசய |
நிவஸிஷ்யஸி மய்யேவ அத ஊர்த்வம் ந ஸம்சய: ||

மனம் புத்திகளை நிரந்தரமாக என்னை அப்யஸிக்கப்பழக்கப் படுத்து. இரண்டும் ஒன்றுபட என்னிடம் ஈடுபடுத்தி என்னை அடைந்ததாகவே கருது. மனம் புத்திகள் என்னிடம ஈடுபட்டால் நீ நான் என்ற பேதம் எவ்விதம் ஏற்படும்? விளக்கை அணைத்ததும் பிரகாசமும் அத்துடன் அழிந்து விடுவது போலவும் ஸூர்ய பிம்பத்துடன் அதன் கிரணங்களும் மறைவதைப்

போலவும், பிராணனுடன் இந்திரிய சக்திகளும் செல்வது போலவும் மனம் புத்திகள் என்னுள் லயிக்கும்போது அகங் காரமும் என்னிடம் லயித்துவிடுகிறது. அதனால் மனம் புத்திகளை என் உருவமாக்கு. இதனால் நீ ஸர்வவ்யாபகனை என்னுடைய உருவமாகவே ஆகிறாய். (8)

अथ चित्तं समाधातुं न शक्नोषि मयि स्थिरम् ।
अभ्यासयोगेन ततो मामिच्छाप्तुं धनञ्जय ॥ ९ ॥

அத சித்தம் ஸமாதாதும் ந சக்நோஷி மயி ஸ்திரம் ।
அப்யாஸ யோகேந ததோ மாமிச்சாப்தும் தநஞ்ஜய ॥

ஆனால் இவ்விதமாக மனம் புத்திகளை எனக்கு அர்ப்பணம் செய்ய முடியவில்லையானால் இருபத்திநான்கு மணிநேரத்தில் கேவலம் ஒருமணிநேரமாவது என்னை நினை. ஒவ்வொரு விநாடியும் என் சிந்தனை ஏற்படும் போதெல்லாம் விஷய வாசனைகளில் அருசி ஏற்படும். சரத்காலம் சென்ற பிறகு நதிகளில் நீர்வற்றுவது போலவும் சீக்கிரமாக அவன் மனதி லிருந்து பிரபஞ்சஸுகம் வற்றிவிடும். பௌர்ணமிக்குப் பிறகு தினம் தினம் சந்திரபிம்பம் தேய்ந்துகொண்டே வந்து கடைசியில் அமாவாஸையன்று முற்றும் மறைந்துவிடவில்லையா! அதுபோல் உலகிலிருந்து மனதைத்திருப்பி மெல்ல மெல்ல என்பால் செலுத்தினாயானால் என் உருவேயாகிவிடுவாய். இதன்பெயர்தான் அப்யாஸயோகம் இந்த யோகத்தால் கிடைக்கக்கூடாத வஸ்துவே இல்லை. இந்த அப்யாஸ்யோகத் தால் ஆகாசத்தில் ஸுகமாக ஸஞ்சரிக்கலாம். பாம்பு புலிகளை வசப்படுத்தலாம், விஷத்தை புஜிக்கலாம் ஸமுத்திரத்தில் பாதை வகுத்து அதன்மேல் நடந்து செல்லலாம். சப்தபிரும்மத்தையும் இந்த அப்யாச யோகத்தால் ஜயித்துவிடலாம். அப்பியாசத்தால் அடையக்கூடாதது ஒன்றுகூட இல்லை. அதனால் நீ அப்யா ஸத்தால் என்னை அடைவாயாக (9)

अभ्यासेऽप्यसमर्थोऽसि मत्कर्मपरमो भव ।
मदर्थमपि कर्माणि कुर्वन्सिद्धिमवाप्स्यसि ॥ १० ॥

அப்யாஸேऽப்யஸமர்த்தோஸி மத்கர்மபரமோ பவ ।
மதர்த்தமபி கர்மாணி குர்வன் ஸித்திமவாப்ஸ்யஸி ॥

ஆனால் இந்த அப்யாஸமும் உன்னால் செய்யமுடியாவிட்டால் நீ இருந்த இடத்திலிருந்து கூட நகரமுடியாதபடி சரீரம் அவ்வளவு துர்பலமாகி விட்டால், நீ இந்திரியங்களை வசப்படுத்த சிரமப்படவேண்டாம். போகங்களைத் தியாகம் செய்ய வேண்டாம். உன் ஜாதி அபிமானம் கர்வம் இவைகளை விட வேண்டாம். உனது குலதர்மத்தைச் செய்து கொண்டிரு. விதி நிஷேதங்களை அனுசரித்து நட. இவ்விதமாக ஸுகமாக உனது கர்மங்களைச் செய்வதற்கு நான் அனுமதி தருகிறேன். ஆனால் மனம் வாக்குச் செயல்களினால் சரீரமாகிய நான் செய்கிறேன் என்ற எண்ணம் எழுந்தால் அதை அந்தக்ஷணமே விட்டுவிடு செய்வதும் செய்யாததும் அந்தப் பரமாத்மாவே அறிவார். அவர் விசுவநியந்தா. கர்மத்தின் நிறைவையும் குறைவையும் மனதிலிருந்து அகற்றிவிடு. உனது வாழ்வை பரமாத்மாவுக்கு அர்பணித்துவிடு.

தோட்டக்காரன் செடிகளுக்கு தண்ணீர் பாய்ச்ச வாய்க்கால் வெட்டுகிறான். தண்ணீர் அவன் வெட்டிய வழியில் பாய்கிறது. அந்த தண்ணீரைப்போல் நீ நடந்து கொள்ளவேண்டும். பிரவிருத்தி நிவிருத்தி இரண்டு சுமைகளையும் புத்திக்குத் தலைப் பாரமாக வைக்காதே. சித்தவிருத்தியைத் தங்குதடையில்லாமல் என்பால் செலுத்து. ரதம் தான் செல்லும் வழி வழ வழ வென்றிருக்கிறது. அல்லது காடுமுரடாக இருக்கிறது என்று நினைத்துப் பார்ப்பதுண்டா? எந்த கர்மத்தைச் செய்தாலும் அது குறைவு அல்லது நிறைவு என்று கருதாதே. அதை அப்படியே என்னிடம் அர்ப்பித்துவிடு. இவ்வித எண்ணத்துடன் இருப்பாயானால் உனது இந்த சரீரம் நசித்தவுடன் எனது சாயுஜ்ய பதவியை அடைவாய்? (10)

अथैतदप्यशक्तोऽसि कर्तुं मद्योगमाश्रितः ।
सर्वकर्मफलत्यागं ततः कुरु यतात्मवान् ॥ ११ ॥

அதைததப்யசக்தோऽஸி கர்தும் மத்யோகமாச்ரித: ।
ஸர்வ கர்ம பல த்யாகம் தத: குரு யதாத்மவான் ॥

உனக்குக் கர்மபலன்களை எனக்கு ஸமர்ப்பணம் பண்ணக்கூட முடியவில்லை என்றால். நீ கர்மஸேவை செய்யலாம், புத்தியின் ஆரம்பத்திலும் முடிவுறும்போதும், கர்மம் ஆரம்பிக்கும்போதும்

முடிவிலும் என்னை நினைக்கக்கூட முடியவில்லை என்றால், பரவா யில்லை. எனது மகத்வத்தைக்கூட நீ எண்ண வேண்டாம். ஆனால் புக்தியுடன் இந்திரியங்களைச் சேரவிடாதே. அவைகளை நிக்ரகம் பண்ணு. எந்த ஸமயத்தில் எந்தக்கர்மம் பண்ணி னாலும் சரி, அதன் பலனை தியாகம் செய்துவிடு. பழம் கையில் கிடைத்ததும் ஜனங்கள் விருக்ஷத்தையோ கொடியையோ பிடித்துக்கொண்டா நிற்கிறார்கள்? அதுபோல் கர்மம் முடிவடைந்த வுடன் அதன் பலனைப் புறக்கணித்துவிடு. அப்படிச் செய்தா யானால் கர்மம் ஆரம்பித்தவுடன் என்னை நினைப்பதும் என்பிரீதி யாக அர்ப்பணம் செய்வதும்கூட வேண்டுவதில்லை. எல்லா வற்றையும் சூன்யத்தில் ஸமர்ப்பித்துவிடு. பாறையில் பெய்த மழையும், அக்னியில் விழுந்த விதையும் உருப்படாததுபோல் உனது கர்மங்களும் உருப்படாமல்போய்விடும். எல்லாம் கனவு போல் ஆகிவிடும். கன்னிகையை விவாகம் செய்து கொடுத்தபின் பிதா எப்பொழுதாவது அவளைப்பற்றிக் கவலைகொள்ளுகிறாரா? அதுபோல் கர்மவிஷயத்தில் நீயும் உதாஸீனமாக இரு. அக்னி ஜ்வாலை ஆகாசத்தில் வீணாகத்தானேபோகிறது? அதுபோல் உனது கர்மங்களை நீயும் வீணாக்கிவிடு.

இவ்விதம் செய்யும் பலத்யாகம் மிக மிக ஸுலபமானது. ஆனால் எல்லாவற்றையும்விட இது மேன்மையானதும்கூட. எண்ணை விதைகளிலிருந்து ஒருதரம் எண்ணை எடுத்துவிட்டால் அது சக்கைதானே? அதுபோல கர்மபலத்யாகத்தில் மனதைச் செலுத்திச் செய்யும் கர்மத்தின் பலன்கள் யாவும் நாசமடை கின்றன. இச்சரீரத்துக்குப்பிறகு மற்றொரு சரீரம் எடுக்கவும் ஸந்தர்ப்பம் நேராது. அவனைப்பொறுத்தவரை ஜனன மரணப் பாதை அடைத்துவிடும். இவ்விதமாக அப்யஸித்து ஞானத்தை அடைவாய் அப்பா? இந்த ஞானத்தினால் தியானம் நிச்சய மாகக் கைகூடும். இந்தத் தியானத்தை தழுவுகிறவன் ஸம்பூர்ணக் கர்மாக்களிலிருந்தும் விலகி நிற்கிறான். கர்மம் விலகும்போது கர்மபலன் ஏன்விலகாது? கர்மபலத்யாகத்தினால் மேலான சாந்தி கிட்டுகிறது. அதனால் பார்த்தா சாந்தியை, அடைய இதுவே வழி. இதனால் இந்த வழியை உடனேயே அப்யஸி. (11)

श्रेयो हि ज्ञानमभ्यासाज्ज्ञानाद्ध्यानं विशिष्यते ।
ध्यानात्कर्मफलत्यागस्त्यागाच्छान्तिरनन्तरम् ॥ १२ ॥

ச்ரேயோ ஹி ஞாநமப்யாஸாத் ஞாநாத் த்யாநம்
விசிஷ்யதே ।
த்யாநாத் கர்மபலத்யாகஸ் த்யாகாத் சாந்திரநந்தரம் ॥

ஹே பார்த்த! அப்யாசத்தைவிட ஞானம் கடினம் ஞானத்தைவிட த்யானம் விசேஷமாகச் சொல்லப்படுகிறது. கர்மபலத்தின் இச்சையை த்யாகம் செய்வது தியானத்தைவிட உத்தமம் என்று கருதப்படுகிறது. தியாகத்திலே சாந்திகிட்டு கிறது. இவ்விதமாகப் படிப்படியாக இந்த மார்க்கத்தில் தங்கித் தங்கி செல்பவர்களுக்கு சாந்தியாகிய ஸ்வர்க்கம் கிடைக்கிறது.

अद्वेष्टा सर्वभूतानां मैत्रः करुण एव च ।
निर्ममो निरहंकारः समदुःखसुखः क्षमी ॥ १३ ॥

அத்வேஷ்டா ஸர்வ பூதாநாம் மைத்ர: கருண ஏவ ச ।
நிர்மமோ நிரஹங்கார: ஸமதுக்கஸுக: க்ஷமீ ॥

சைதன்யம் அடைந்தவனுக்கு ஜீவராசிகளிடத்தில் ராகத் வேஷம் இருப்பதில்லை. சைதன்யன் தனது பிறருடையது என்ற பேதஸம்பந்தம் வைத்துக்கொள்ள மாட்டான் பூமி எப்படித் தான் விரும்பிய பொருளுக்குத்தான் இடம் கொடுப்பேன் விரும்பாத தற்குக் கொடுக்கமாட்டேன் என்பதை நினைப்பதில்லையோ, அது போலவே சைதன்யனும் நினைப்பதில்லை. மூச்சுக் காற்று ராஜாவின் சரீரத்தில்தான் வசிப்பேன் தரித்ரனிடம் வசிக்க மாட்டேன் என்று கூறுகிறதா? தண்ணீர் எங்காவது பசுவின் தாகத்தைத்தான் தணிப்பேன் புலியின் தாகத்துக்கு விஷமாக இருந்து நாசம் செய்வேன் என்று கூறுகிறதா? அதுபோல் சைதன்யன் சகல ஜீவராசிகளிடத்தும் பேதமின்றி கிருபைக்கு இருப்பிடமாக விளங்குகிறான். அவனுக்கு அகங்காரம் என்பது என்னவென்றே தெரியாது. தனது சொந்த விஷயத்தைக் குறித்தும் கவலைகொள்ள மாட்டான். ஸுகம் துக்கம் இவை களைச் சிறிதும் பாராட்டமாட்டான் பொறுமைக்கு பூமியை ஆதாரமாகக் கொண்டு ஸந்தோஷத்தையும் திருப்தியையுமே தனது தோழர்களாகக் கொண்டு விளங்குகிறான். (13)

संतुष्टः सततं योगी यतात्मा दृढनिश्चयः ।
मय्यर्पितमनोबुद्धिर्यो मद्भक्तः स मे प्रियः ॥ १४ ॥

ஸந்துஷ்ட: ஸததம் யோகீ யதாத்மா த்ருடநிஸ்சய:
மய்யர்பிதமநோ புத்திர்யோ மத்பக்த: ஸ மே ப்ரிய: ||

மழையில்லாவிட்டாலும் கடல்நிரம்பிப் பூர்ணமாக இருக்கும். அதுபோல் ஒருவிதமான ஆசிரயமும் ஆதாரமும் இல்லாமலேயே ஞானி ஸுகமாக இருப்பான். அந்தக்கரணத்தை த்ருடபுத்தியாகிய ஆணைக்குக் கட்டுப்படுத்தி தன் வசத்தில் வைத்திருக்கிறான். உறுதியுடன் மகிழ்ச்சியடைகிறான். அவனுடைய இதய பீடத்தில் ஜீவாத்மாவும் பரமாத்மாவும் ஒரே ஆசனத்தில் விளங்குகிறார்கள். இவ்வித மனோநியோகத்துடன்கூட இருந்தாலும் மனதையும் புத்தியையும் எனக்கே அவன் அற்பணித்திருக்கிறான். உள்ளும் வெளியும் யோகஸித்தனாக இருந்தாலும் என்னிடம் அவனுக்கு இருக்கும் பிரேமையை வர்ணிக்கமுடியாது. அவனே எனது பக்தன் அவனே யோகி அவனே முக்தன் அவன் எனது மனைவிபோலும் நான் அவனுடைய கணவன் போலும் இருக்கிறோம். அவன் எனது பிராணனைவிடமேலானவன் என்றுதான் கூறினாலும் அதுகூட அற்பமாகவே எனக்குப் படுகிறது. ப்ரேமபக்தனின் கதை இந்திரஜாலம் நிறைந்தது.

இவ்விஷயங்கள் பிறருக்குக் கூறத்தரமுடையதல்ல. இருந்தாலும் பிரேமவசத்தால் கூறவேண்டியிருக்கிறது. இவ்வித உவமைகளைக் கூறினால்தான் ஓருவாறு அவனைப்புரிந்துகொள்ள முடியும். இல்லாவிட்டால் பிரேமை என்பது வர்ணிக்கத்தகுந்ததா என்ன? இது இருக்கட்டும் பிரேமிகளுடைய வர்ணனையினால் பிரேமை இரட்டிப்புமடங்காகப்பெருகுகிறது. ஹே பாண்டுஸுத, நீ என் பிரேமைக்குகந்தவன். நீ ஆதுரத்துடன் கேட்கவும் செய்கிறாய். அதனால் பிரேமையை வர்ணிக்க ஸந்தர்ப்பமும் வாய்த்தது இப்படியாவது சொல்லக்கிடைத்ததே என்று நானும் உத்ஸாகத்துடன் கூறுகிறேன். இன்னும் கூறுகிறேன் அத்தகைய சைதன்யனை ஞானபக்தனை என் இதயத்தில் வைத்து எப்படிப்போற்றுகிறேன் என்பதைப்பற்றிப் பின்னும் கூறுவேன். (14)

यस्मान्नोद्विजते लोको लोकान्नोद्विजते च यः ।
हर्षामर्षभयोद्वेगैर्मुक्तो यः स च मे प्रियः ॥ १५ ॥

யஸ்மாந்நோ த்விஜதே லோகோ லோகாந்நோ
த்விஜதே ச ய: |

ஹர்ஷாமர்ஷ பயோத் வேகை: முக்தோ ய: ஸ ச
மே ப்ரிய: ||

கடல் அலைக்கரங்களைக்கொட்டி கர்ஜிப்பதால் அதனுள் அடங்கிய ஜீவராசிகள் எங்காவது பயப்படுகிறதா? இத்தனை ஜீவராசிகளைத் தன்னுள் அடக்கிக்கொண்டிருக்கிறேமே என்று கடல் தன்னை வெறுத்துக்கொள்ளுகிறதா? அதுபோல் இந்த வெறிபிடித்த ஜகத்தை எவன் வெறுப்பதில்லையோ அவனுடைய ஸகவாசத்தால் உலகம் தன்னை வெறுத்துக்கொள்வதில்லை. சரீரம் தனது அவயவங்களை எவ்விதம் வெறுப்பதில்லையோ. அவ்விதமே அவனும் ஜீவராசிகளை வெறுப்பதில்லை. ஜகமே தனது தேகம் என்று கொண்டவனுதலால் அவனுக்கு அதனிடம் சத்ருபாவமோ மித்ரபாவமோ இருப்பதில்லை. இந்த அத்வைத பாவத்தினுல் ஸந்தோஷம் சோகம் என்ற துவைதபாவத்தை அவன் தாண்டி நிற்கிருன். பயம் என்பது அவனை அண்டுவதில்லை. இத்தனைக்கும்மேல் அவன் என்னை நேசிப்பதால் நானே அவனிடம் அசாத்யமோகம் அடைந்திருக்கிறேன். அவன் எனது பிராணனுக மூச்சுக் காற்ருக விளங்குகிருன். ஆத்மானந்தத்தில் திருப்தியுறும் அவன் பிரும்மத்தின் அவதாரமே. பூர்ணம் என்னும் பெண்ணின் காந்தனே அவன். (15)

अनपेक्षः शुचिर्दक्ष उदासीनो गतव्यथः ।
सर्वारम्भपरित्यागी यो मद्भक्तः स मे प्रियः ॥ १६ ॥

அநபேக்ஷ: சுசிர்தக்ஷ உதாஸீநோ கதவ்யத: |
ஸர்வாரம்ப பரித்யாகீ யோ மத்பக்த: ஸ மே ப்ரிய: ||

அவனிடம் இச்சை அண்டவே பயப்படும். தான் என்னும் அகம்பாவத்துக்கு அங்கு அஸ்திவாரமே கிடையாது. காசி க்ஷேத்ரம் முக்திகொடுக்கும் ஸ்தலம என்பது பிரசித்தமானது, ஆனுல் அங்கு சரீரத்தை விடுபவனுக்கே அந்த மோக்ஷம் கிட்டும். ஹிமகிரி பாபங்களை நாசம் செய்கிறது ஆனுல் சில சமயம் அங்கும் ஜீவராசிகளுக்குத் தீங்கு நேரிடுகிறது. ஆனுல் பக்தனின் தூய்மை இவை இரண்டுக்கும் மேல். அவனுடைய பவித்ரத் தன்மையில கங்கையின் தூய்மை அடங்கி இருக்கிறது. கங்கையில் ஸ்னனம் செய்தால் பாபங்கள் அகன்று விடுகிறது என்பது பிரசித்தம், ஆனுல் அதில் மூழ்கி இறந்தால்! தற்கொலை செய்துகொண்டால்! ஆனுல் பக்தி கங்கையின்

ஆழத்தை அளவிடவல்லார் யாரே? ஆனாலும் அதனுள் மூழ்கி ஒருவரும் இதுவரை இறந்ததில்லை. இதில் மூழ்கி இறப்பதற்கு முன்னாலேயே அவனுக்கு முக்தி கிட்டுகிறது. கங்கை தன் பாபத்தை (அதாவது கங்கையில் மூழ்குபவர்களின் பாபத்தை அது வாங்கிக்கொள்கிறதல்லவா! அந்த பாபத்தை) ஸாது மகாத்மாக்கள் தன்னிடம் நீராடுவதால் போக்கிக்கொள்ளுகிறது. அப்படியிருக்க, ஸாது ஸங்கத்தில் எப்பொழுதும் வாழும் பக்தர்களைப்பற்றிக் கூற என்ன இருக்கிறது? இவ்விதமாக அவன் தூய்மைக்கும் மகிழ்ச்சிக்கும் இருப்பிடமாக விளங்குகிறான். மனதின் அழுக்கை அவன் நாலுதிசைகளுக்கும் அப்பால் விரட்டி விடுகிறான். கதிரவனைப்போல் அவன் உள்ளும் வெளியும் பிரகாசிப்பவன் சலங்கையைப்போல் அவன் தத்ரூபத்தை பிரதித்வனி செய்துகொண்டே இருப்பவன். ஆகாசம் எங்கும் நிறைந்தும் உதாஸீன பாவத்துடனும் இருப்பதைப்போல் அவன் விளங்குகிறான். அவன் ஸம்ஸார துக்கததிலிருந்து விடுதலை பெறுகிறான். நிராசை எனும் அணிகளால் அலங்கரிக்கப்பட்டு விளங்குகிறான.

வேடன் கையிலிருந்து விடுபட்ட பறவைபோல் ஆனந்தமாக அவன் சிதாகாசத்தில் சஞ்சரிக்கிறான். ஸுகமாகிய அமிருதத்தால் நிரம்பிய குடம் போல இருக்கும் அவன் துக்கமாகிய ஜலத்தை எவ்விதம் மொண்டுகொள்வான்? இறந்தவன் லஜ்ஜையடைவதில்லை அல்லவா! அதுபோல் இவனைப் பொறுத்தவரை லஜ்ஜை இறந்துவிட்டது. கர்மத்தை ஆரம்பிப்பதற்கு முன்பேயே இவன் அகங்காரத்தை விட்டு விடுகிறான். விறகு இல்லாத அக்னிபோல் இவனுடைய அகங்காரம் அவிந்துவிடுகிறது. மோக்ஷமாகிய சரீரத்துக்குச் சாந்தியாகிய சந்தனப் பூச்சாக விளங்குகிறான். இவ்விதம் ஸோஹம்பாவத்தில் ஆழ்ந்திருப்பவன் துவைதபாவத்தை மறந்தே விடுகிறான். ஆனால் பக்தி ஸுகத்தை அனுபவிக்கும் பொருட்டுத் தன்னை இரண்டுவிதமாக ஆக்கிக்கொள்கிறான். ஒரு பாகத்தால் அவன் ஸேவார்த்தியாகிறான். தன் மற்றொரு பாகத்தை எனது பெயரிட்டு அழைக்கிறான். பக்தி செய்யாதவர்களுக்கு அவன் தனது நடத்தையினால் பக்தியை உபதேசிக்கிறான். இவனே யோகி இவனே எனக்குப் பிரியமானவன். இவனே எனது ஆத்ம ஸ்வரூபம். அவனை நிரந்தரமாக என்னுள் லயிக்கச்செய்தால்தான் எனக்கு சாந்தி கிட்டுகிறது. அவனுக்காகவே நான் பல உருவங்களை எடுக்கிறேன். அவனுக்காகவே நான் இந்தப் பூமிக்கு வருகிறேன். அவனுக்கு இவ்வுயிரையும் உடலையும் நான் அற்பணிக்கிறேன்.

योन हृष्यति न द्वेष्टि न शोचति न काङ्क्षति ।
शुभाशुभपरित्यागी भक्तिमान्यः स मे प्रियः ॥ १७ ॥

யோ ந ஹ்ருஷ்யதி ந த்வேஷ்டி ந சோசதி ந காங்க்ஷதி ।
சுபாசுப பரித்யாகீ பக்திமாந் ய: ஸ மே ப்ரிய: ॥

அவன் ஆத்ம லாபத்துக்கு ஸமமாக வேறு ஒன்றையும் நினைப்பதில்லை. அதனால் அவனுக்கு ஒரு போகத்தினாலும் ஸந்தோஷம் கிட்டுவதில்லை. அவனே விசுவமயமாக இருக்கிறான். பேதபாவம் அவனுக்கு எளிதாக நஷ்டமடைந்து விடுகிறது. த்வேஷம் அகன்றுவிடுகிறது. எந்த வஸ்து நம்முடையதோ அது கல்பாந்த காலம் வந்தாலும் நம்மைவிட்டு விலகாது. இதை எண்ணி அவன் இழந்த பொருளை நினைத்து ஒருபொழுதும் வருத்தமடைவதில்லை. சூர்யன் இரவு பகலை அறிவதில்லை. அது போலவே இவன் நன்மை தீமையை அறிவதில்லை. இவ்விதமாக இவன் ஞானமயமாகத் திகழ்ந்தாலும் என்னை பஜிப்பதில் ஒரு பொழுதும் தவறுவதில்லை. உன்மேல் ஆணையிட்டுக் கூறுகிறேன். அவனுக்கு ஸமமான ப்ரேமி எனக்கு மூவுலகிலும் இல்லை. (17)

समः शत्रौ च मित्रे च तथा मानापमानयोः ।
शीतोष्णसुखदुःखेषु समः सङ्गविवर्जितः ॥ १८ ॥

ஸம: சத்ரௌ ச மித்ரே ச ததா மாநாபமாநயோ: ।
சீதோஷ்ண ஸுக து:கேஷு ஸம: ஸங்கவிவர்ஜித: ॥

எங்கு ஏற்றத்தாழ்வில்லையோ, சத்ருவையும் மித்ரனையும் ஸம நோக்குடன் பார்க்கிறார்களோ, அவர்களே ஞானிகள். வீட்டில் ஏற்றிவைத்த தீபம் வீட்டுக்காரர்களுக்குத்தான் வெளிச்சம் காட்டுவேன் அந்யர்கள் வந்தால் இருட்டாகிவிடுவேன் என்று கூறுகிறதா? விதை நட்டவனுக்கும் விதை மரமானதும் அதை வெட்டுபவனுக்கும் மரம் ஸமமாகத்தான் நிழல் கொடுக்கிறது. கரும்பு தன்னைக் காவல் காக்கிறவனுக்கு இனிப்பு ரஸத்தையும் சாறு பிழிகின்றவனுக்கு கசப்பு ரஸத்தையும் கொடுக்கிறதா என்ன? அதுபோல் எவன் சத்ருமித்ரர்களிடம் ஸமபாவனையாக இருக்கிறானோ மானாபிமானத்தையும் ஸமமாக ஸகித்துக் கொள்கிறானோ அவனே ஞானி. ஆறு ருதுக்களிலும் ஆகாசம் மாறுவதில்லை. சீதோஷ்ணங்கள் ஆகாசத்தைப் பாதிக்கிறதில்லை. தக்ஷிண திக்கிலிருந்து வரும் காற்றையும் உத்தரதிக்கிலிருந்து

வரும் காற்றையும் மேரு பர்வதம் ஸமமாகத்தான் ஏற்றுக்கொள்கிறது. நிலவு அரசனுக்கும் தரித்ரனுக்கும் ஸமமாகத்தான் ஸந்தோஷம் அளிக்கிறது. அதுபோல் ஞானியும் ஸர்வ ஜீவ ராசிகளுக்கும் ஸமமானவன் தண்ணீர் எல்லா உயிர்களுக்கும் எல்லா தேசங்களுக்கும் ஏற்றத்தாழ்வு இல்லாமல் ஸமமாகவே தேவை உள்ளதாக இருக்கிறது. ஞானி உள்ளும் புறமும் ஏற்படும் வைஷம்யங்களினுல் மாருமல் ஆத்மாவில் ஸ்திரமாக ஏகாந்தமாக இருக்கிருன். (18)

तुल्यनिन्दास्तुतिर्मौनी संतुष्टो येन केनचित् ।
अनिकेतः स्थिरमतिर्भक्तिमान्मे प्रियो नरः ॥ १९ ॥

துல்யநிந்தாஸ்துதிர்மௌநீ ஸந்துஷ்டோ யேநகேநசித் ।
அநிகேத: ஸ்திரமதிர் பக்திமாந் மே ப்ரியோ நர: ॥

அவன் நிந்தையை லக்ஷயம் செய்வதில்லை. ஸ்துதியினுல் அகமகிழ்வதும் இல்லை. ஆகாசத்துக்கு வர்ணம் பூசமுடியுமா? நிந்தையையம் ஸ்துதியையும் ஞானி சமவரிசையில் ஏற்கிருன். உலகில் அவன் வனத்தில் ஸஞ்சரிப்பதுபோல் நடமாடுகிருன். அவன் உண்மை பொய் இரண்டையும் கூறுவதில்லை. மௌனமாக இருக்கிருன். உன்மத்தமாக இருக்கும் தனது உள்நிலையில் அவன் ஒருபொழுதும் வெறுப்படைவதில்லை. மழை இல்லாவிட்டாலும் கடல் வற்றுகிறதில்லை. ஞானி கிடைத்ததைக்கொண்டு ஸந்தோஷப்படுகிருன். கிடைக்காததைக் குறித்துக் கவலைகொள்வதில்லை. காற்று ஒரு இடத்தில் ஸ்திரமாக இருக்காதல்லவா! அதுபோல் ஞானியும் ஒருவரையும் அண்டியிருப்பதில்லை. வாயு நிரந்தரமாக ஆகாசம் முழுவதும் வியாபித்திருப்பதுபோல் ஞானியும் உலகம் முழுவதும் தன்னுடையதாகக் கொண்டு வியாபித்திருக்கிருன். உலகமே அவன் வீடு. அவனே சராசர உருவில் தன்னைக் காண்கிருன். இத்தனைக்குப் பிறகும் அவன் என்னை பஜிப்பதை மாத்திரம் விடுவதில்லை. அவனை எனது கிரீடம் மாதிரி நான் எப்பொழுதும் சிரஸில் தாங்குகிறேன். உத்தமர்களின் முன் தலை வணங்குவதில் என்ன ஆச்சர்யம் இருக்கின்றது?

இந்த பக்தனின் சரணுமிருதத்துக்கு மூன்று உலகமும் ஆசைப்படுகிறது. சிரத்தை வேறு, பிரேமை வேறு. சிரத்தைக்குரிய பொருளிடம் பிரேமை செலுத்துவது என்பது குரு கிருபை

யிருந்தால்தான் முடியும். சங்கரரே லோககுரு. குருவைத் துதிப்பது என்பது ஆத்மாவைத் துதிப்பதுபோலாகும். இவ்வித பக்தனை நான் சிரஸில் ஏற்றி வணங்குகிறேன். அதுபோதும் அவன் மோக்ஷ ரூபமான நான்கு புருஷார்த்தங்களையும் வசப் படுத்திக்கொண்டு பக்திமார்க்கத்தில் பிரவேசித்து பக்தியை உலகுக்கு அள்ளி அள்ளி வீசுகிறான். அவன் முக்தியளிப்பதற்கு அதிகாரியே. ஆனாலும் ஜலத்தைப்போல் மிகவும் பணிவுள்ள வனாக இருப்பான். அதனால் அவனை நான் வணங்குகிறேன். அவன் சரணங்களை எனது இதயகமலத்தில் பதித்துவைத்துக் கொள்ளுகிறேன். அவன் குணங்களை வர்ணித்து வர்ணித்து எனது சொற்களை அலங்காரப்படுத்திக் கொள்ளுகிறேன். அவனுடைய கீர்த்தியை எனது காதுகளுக்குக் குண்டலமாக அணிந்துகொள்ளுகிறேன். நான் எங்கும் நிறைந்தவன். எனக்குக் கண்கள் இல்லை. ஆனாலும் எனது பக்தனைப் பார்ப் பதற்காக ஊனக்கண்களை சிருஷ்டித்துக்கொள்ளுகிறேன். என் கையில் அலங்காரமாக நான் வைத்துக்கொண்டிருக்கும் கமலத் தினால் அவனுக்குப் பூஜை செய்கிறேன். அவனை ஆலிங்கனம் செய்வதற்கு எனக்கு இரண்டு கைகள் போதவில்லை. அதற்காக இன்னும் இரண்டு கைகளை சிருஷ்டித்துக்கொண்டு சதுர்புஜனாக விளங்குகிறேன். நான் சரீரமில்லாத விதேஹனாக இருந்து கொண்டிருக்கிறேன் என்றாலும் அவனுடன் அளவளாவவேண்டி அவனுக்காகவே சரீரம் எடுக்கிறேன். அவனிடம் நான் வைத் திருக்கும் பிரேமைக்கு உவமை கூறமுடியாது. அவனுக்கும் என்மேல் பிரேமை இருப்பதில் ஆச்சர்யம் என்ன இருக்கிறது? அவனுடைய சரித்திரத்தைக் கூறுபவர்களும் கேட்பவர்களும்கூட எனக்கு உயிரினும் இனியவர்கள். இப்பொழுது இந்த யோக ரூபமான பக்தி யோகத்தைப்பற்றி உனக்குக் கூறினேன். அவனுடைய நிலை அசாத்ய மகிமை பொருந்தியது. (19)

ये तु धर्म्यामृतमिदं यथोक्तं पर्युपासते ।
श्रद्दधाना मत्परमा भक्तास्तेऽतीव मे प्रियाः ॥ २० ॥

யே து தர்ம்யாம்ருதமிதம் யதோக்தம் பர்யுபாஸதே ।
ச்ரத்ததாநா மத்பரமா பக்தாஸ் தேऽதீவ மே ப்ரியா: ॥

இந்த ரம்யமான கதையை, தர்மானுகூலமானதை, அமிருத தாரையை அனுபவித்துப் பருகவேண்டும். சிரத்தையுடனும் மரியாதையுடனும் தன்னை யோக்யமான அதிகாரியாக்கிக்

கொண்டு ஸ்திதப்ரக்ஞனுக இந்த பக்தி வாழ்க்கையை அனுஷ்டித்துக்கொண்டு வரவேண்டும். மேற்கூறியவாறு எவனுடைய மனேபாவம் இருக்கிறதோ அது உத்தமமான நிலத்தில் விதை விதைத்ததைப்போல் ஆகும். என்னையே மேலாகக் கருதி என்னிடம் பிரேமைவைத்து நானே எல்லாம் என்று கருதி வாழ்பவனை நானும் என்னுடையவனுகக் கருதுகிறேன். அவனைப் பற்றிய கவலையே எனக்கு எப்பொழுதும் இருந்துகொண்டிருக்கிறது. எவர்களுக்கு பக்த சரித்திரத்தில் பிரியம் உள்ளதோ அவர்களே புண்ய தீர்த்தங்கள். அநேக புண்ய க்ஷேத்ரங்களும் அவர்களே. தூய்மையானவர்களும் அவர்களே. அவர்களை நான் எப்பொழுதும் தியானித்துக் கொண்டிருக்கிறேன். இதுவே நான் செய்யும் தேவ பூஜை. இதைத் தவிற நான் செய்யும் நன்மையான காரியம் வேறு ஒன்றும் இல்லை. அவர்களே என் நிதி. அவர்களுடைய ஸகவாசத்தால்தான் நான் மனசமாதானமாக இருக்கிறேன். எனது ப்ரேமிகளைப்பற்றிப் பேசுபவர்களையும் நான் தெய்வத்துக்கொப்பாக கருதுகிறேன். பக்தநந்தனனை ஜகத் கர்த்தா இவ்வாறு கூறினர். இதை ஸஞ்சயன் கூறுகிருர். ஹே அரசே! நிஷ்களங்கனும், நிர்மலனும், சரணமடையத் தகுந்தவனும், தேவ சகாயனும், உலகை ஆக்கி அளித்துக் காப்பவனும், அதையே தன் விளையாட்டாகக்கொண்டவனும், தர்மம் கீர்த்தி இவைகளினல் தவளமானவனும், தானசீலனும், ஸரளமான ஸ்வபாவம் உடையவனும், அளவிட முடியாத பலம் பொருந்தியவனும், பிரேமை வலையில் தன்னைச் சிக்கவைத்துக் கொண்டவனும், பக்த ஜனங்களின் பிராண நாடியும், பக்தர்களுக்கு அநாயாசமாகக் கிடைக்கக் கூடியவனும், சகல கலைகளுக்கும் களஞ்சியமானவனும், வைகுண்டபதியும், பக்தராஜனுமான ஸ்ரீ கிருஷ்ணன் அர்ஜுனனுக்கு இவ்வாறு கூறிக்கொண்டிருக்கிருர். அரசே! இன்னும் இவ்வைபவத்தைத் தொடர்ந்து கூறுகிறேன்; கேளும் என்று ஸஞ்சயன் கூறுவார். இந்த ரஸமான வர்ணனையை என் வாக்காகிய பாதையில் சரளமாகச் செலுத்த அவனே அருள்புரியட்டும். அதைக் கேளும். ஞானதேவர் கூறுகிருர் :— எனது குரு நிவிருத்திதேவர் இவ்வாறு கூறும்படி எனக்குக் கற்பித்திருக்கிருர். நான் தங்களைப்போன்ற சாது மகாத்மாக்களின் சரணங்களில் வணங்கி அப்பாததூளியை சிரஸில் தரித்துக்கொண்டு நான் கற்றதைக் கூறுகிறேன். (20)

பன்னிரண்டாவது அத்தியாயம்

முற்றும்.

# ஸ்ரீ சங்கரஸேவா ஸமிதீ வெளியீடுகள்

குருராஜ ஸூக்தி மாலிகா — ஸ்ரீ சந்திர சேகர பாரதீ ஸ்வாமிகள் அருளிய ஸ்தோத்ரங்கள் தமிழுரையுடன்

| | | |
|---|---|---|
| | முதல் பாகம் | 2 00 |
| ஷை | இரண்டாம் பாகம் | 3 00 |

குருகிருபா விலாஸம் — ஸ்ரீ சந்திரசேகர பாரதீ ஸ்வாமிகளின் மகிமையை விளக்கும் பல கட்டுரைகள் அடங்கியது.

| | | |
|---|---|---|
| | முதல் பாகம் | 2 50 |
| ,, | இரண்டாம் பாகம் | 2 50 |
| ,, | மூன்றும் பாகம் | 2 00 |

ஜகத்குரு சரிதாம்ருதம்—ஸ்ரீ சந்திரசேகர பாரதீ ஸ்வாமிகளின் சரிதம் (தமிழ் உரையுடன்) ஸ்ரீ பாஷ்ய ஸ்வாமிகள் இயற்றியது. 4 பாகங்கள் 6 00

குருராஜஸ்மரணம் -by R. கிருஷ்ணஸ்வாமி அய்யர் 1 00

ஸச்சிதானந்த பாரதீ விஜயம் — (சிருங்கேரி ஸ்ரீ சாரதா பீடாதிபதி 25வது பட்டம்) 2 பாகங்கள் 3 00

விஷ்ணுகவி கண்ட ஜகத்குருக்கள் - (ஸ்ரீ நரஸிம்மபாரதீ —புருஷோத்தமபாரதீ சரித்திரம்) 1 00

पञ्चीकरणवार्तिकम् - श्रीसुरेश्वराचार्यकृतं अभिनवनारायणेन्द्रसरस्वती-कृतवार्तिकाभरणव्याख्यासहितम् 1 50

MINOR UPANISHADS — Text in Devanagari with English Translation

| | | | |
|---|---|---|---|
| | Vol I | containing 20 Upanishads | 4 25 |
| Do | Vol. II | ,, 21—30 ,, | 4 25 |

KALAḌY-Birth place of Sri Sankara—By K. R. Venkataraman Dy. 8 vo pp 150 containing XXXIII. Plates 2 00

भक्तिप्रसूनानि —FLOWERS OF DEVOTION 1 00

SRINGERI VIGNEETTES — a collection of ten papers on Sri Sankaracharya, H. H. the present Jagadguru and the Sringeri Mutt—also includes tributes and messages from the President of India, His Majesty the king of Nepal and others. 1 00

SAMKARA & HIS SARADA PITHA IN SRINGERI —by K. R. Venkataraman with an introduction by the Hon'ble Justice P. B. Mukharji. 2 00

விஜயதசமி விசேஷ மலர்—1970 2 00

,, —1971 5 00

,, —1974 7 00

Sri Suresvaracharya Adhishtana Jirnoddharana Kumbhabhishekam: Sringeri, May 10–1970—SOUVENIR 5 00

श्रीसुरेश्वराचार्यजीवितसरणम् — (प्रबन्धमाला) —Sri Suresvaracharya (a Commemoration Volume of Essays.) 5 00

DEVI KAMAKSHI IN KANCHI-(A short Historical study)–by K R. Venkataraman 2nd Edn. 2 00

संस्कृतपाठमाला முதலாவது மலர் 2 00

,, இரண்டாவது மலர் 2 00

,, மூன்றுவது மலர் 2 00

,, நான்காவது மலர் 2 00

,, ஐந்தாவது மலர் 2 00

,, ஆருவது மலர் 2 00

உபநிஷத் நாடகமாலா — V. S. மணி அய்யர் எழுதியது ஸம்பாஷணைகள் மூலமாகவும் கதைமூலமாகவும் உபநிஷத் மந்திரங்களின் கருத்துக்கள் நன்கு விளக்கப்பட்டுள்ளன.

Vol. 1 ஈசம், கேனம் (இரண்டும் சேர்ந்தது) 2 25

2 கடோபநிஷத் 3 00

3 பிரச்நோபநிஷத் 2 75

4 முண்டகம், மாண்டுக்யம் 2ம் சேர்ந்தது 4 25

5 தைத்திரீய உபநிஷத் 3 75

6 ஐதரேயோபநிஷத் 1 75

ஒரேசமயத்தில் 6 வால்யூம்களும் சேர்த்து மொத்தவிலை 15 00

दशोपनिषत् (मूलम्) अकाराद्यनुक्रमणिकासहितम् 3 00

---

*For Copies apply to:*–SRI VANI VILAS PRESS, SRIRANGAM TRICHY-6

## அபிநவவித்யாதீர்த்த விஜயம்

இப்போதைய சிருங்ககிரி ஜகத்குரு ஸ்ரீ மஹாஸந்நிதானம் அவர்களின் பால்யம் முதல் திவ்ய சரித்ரம், எல்லா விஜயயாத்ரா விபரங்களும் அடங்கியது. விலை ரூ, 6—00

## பக்திஸுதாதரங்கிணீ

சிருங்ககிரி 33-வது பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ ஸச்சிதானந்த சிவாபிநவநரஸிம்மபாரதீ ஸ்வாமிகள் அருளியது. முதல் பாகம். விலை. ரூ. 3—00.

## ஸ்ரீ சங்கரரும் காசியும்

ஸ்ரீ சங்கரபகவத்பாதர் காசிக்கு விஜயம் செய்தபோது நடை பெற்ற ஸம்பவங்களும், காசி, கங்கா, மஹிமையும், காசீபஞ்சகம், அன்னபூர்ணாஷ்டகம், காலபைரவாஷ்டகம், கங்காஷ்டகம், மணிகர்ணிகாஷ்டகம் இவைகள் தமிழ் உரையுடனும் சேர்க்கப் பட்டுள்ளன. விலை. 75 பை

## சப்தமஞ்ஜரீ

280 பக்கங்களில் 251 சப்தங்களுக்கு விபக்திரூபங்களும், 15 தாதுக்களின் ரூபங்களும், ஸமாஸங்களின் பிரிவுகள், உதாஹரணங் களும் காட்டப்பட்டுள்ளன. ஸம்ஸ்கிருத பாஷை பயில்பவர்களுக்கு மிகவும் உபயோகமானது. விலை. ரூ. 5—00

**பகவத்கீதை** (மூலம் மட்டும்) ஸில்க் பௌண்ட் பாராயணத்திற்கு உபயோகமானது. விலை. ரூ. 1—00

**ஞானேச்வரி** (தமிழாக்கம்) இரண்டாம் பாகம். அத்யாயங்கள் 13 முதல் 18 முடிய. (அச்சில்)

## தபால் செலவு தனி

கிடைக்குமிடம்: **ஸ்ரீ வாணீ விலாஸ் பிரஸ், ஸ்ரீரங்கம்.**